# அறிமுகம்

புதுக் குடித்தனம் என்ற இந்த நாவல், மணமான புதிய தம்பதிகள் தொடங்கும் இல்லறத்தைப் பற்றிக் கூறும் கதை யன்று. நாட்டின் சரித்திரத்தைப் போலவே குடும்ப வாழ்வின் சரித்திரமும் காலத்துக்குக் காலம் மாறி வருகிறது. அந்த மாறுதலில், நவீன காலத்துக் குடும்பத்தைப் பற்றிய புதுமைகளைக் கூறும் அழகிய நெடுங்கதை இது.

கடந்த முப்பது ஆண்டுகளாக நமது நாட்டில் பெண் கல்வி வளர்ந்திருக்கிறது. வாழ்வின் பல துறைகளிலும் பொறுப்பேற்று, தங்களையும் தங்கள் குடும்பத்தையும் தாங்கிக் கொள்ளும் அளவுக்கு மங்கைநல்லார் முன்னேற்ற மடைந்திருக்கிறார்கள். பொருளாதாரத்தை அடிப்படையாகக் கொண்ட இக்காலக் குடும்பத்துக்கு அவர்கள் எல்லா வகையிலும் உதவி செய்தே வாழ்கிறார்கள். வீட்டையாள் வது முதல் விவாக ரத்து வரைக்கும் அவர்களுக்கு எல்லா உரிமைகளும் கிடைத்திருக்கின்றன. விடுதலையே அவர்களுடைய வீர மந்திரம். ஆனால் இந்தப் பொருளாதாரச் சுதந்தரத்தினால் என்ன பயன்?

புதிய குடித்தனத்தில் துணிச்சலும் பொறுமையும் தாங்கி, எந்த இடுக்கணையும் எதிர்த்துக் கடக்கும் அறிவோடுதான் ஒவ்வொரு பெண்ணும் நடந்துகொள்கிறாள். என்னதான் அவள் தன்னைத் தானே நம்பி ஜீவனம் செய்ய முடியும் என்றாலும், குடும்பத்தில் அவள் கணவனையும் மக்களையும் உறவினரையும் சாராமல் வாழ முடியாது. உழைத்துப் பொருள் பெற்று ஜீவிக்கலாம்; ஆனால் வாழ்க்கை என்பது பிறருக்குக் கொடுத்து மகிழ்வது.

பழைய குடும்ப நிலை இன்று எங்கும் மாறி வருகிறது. பழைய நிலையில், இன்று நாம் சொல்லும் காதல் என்பது இல்லாமலிருக்கலாம்; ஆயினும் உறுதியான நம்பிக்கை இருந்தது. புதிய குடித்தனத்திலோ காதலும் இல்லை, உறுதியும் இல்லை, நம்பிக்கையும் இல்லை. இந்தப் புதிய குடித்தனம் நல்ல வகையில் உருவாகி நிலைக்க என்ன செய்ய வேண்டுமென்பதே இந்த நாவலின் விஷயம். இந்த நாவல் இன்றைய வாழ்க்கையின் விளக்கம்; வருங்கால வாழ்வை வளப்படுத்த உதவுவது.

—கா. ஸ்ரீ. ஸ்ரீ.

# புதுக் குடித்தனம்

## 1

"மஞ்சு, மஞ்சு!"

சேகரன் வாசற்கதவின் சங்கிலியைக் கலகலவென்று ஓசைப்படுத்திக்கொண்டே இப்படிக் கூப்பிட்டான்; பிறகு சைக்கிளில் கட்டியிருந்த நோட்டுப் புத்தகங்களின் கட்டை அவிழ்க்கலானான்.

அவன் கட்டை அவிழ்த்து எடுத்து வந்தான்; இன்னமும் கதவு திறககவிலலை.

அவன் சங்கிலியைப் பின்னும் வேகமாகக் குலுக்கி, "மஞ்சு, மஞ்சு!" என்று மறுபடியும் கூப்பிட்டான்.

"இதோ வந்தேன்."

உடனே வாசலறையில் மின்சார விளக்கைப் போட்ட சப்தம் கேட்டது. மஞ்சு கதவைத திறந்து அவன் கையிலிருந்த கட்டை வாங்கிக்கொள்ள முன்வந்தாள.

ஆனால் அவன் அந்தக் கட்டிலிருந்த பிடியை விடாமல், அவளைக கூர்ந்து கவனித்து, "கதவைத திறக்க இவ்வளவு நேரம் என்ன? உள்ளே என்ன செய்துகொண் டிருந்தாய்?" என்றான்.

மஞ்சு புடைவையை இழுத்துக் கட்டியிருந்தாள். சிவப்பான அவளுடைய கையில் மின்சார ஒளியில் தண்ணீர்த் திவலைகள் மிளிர்ந்தன. முழங்கால் வரைககும் ஈரமாக இருந்தது கை வேலையை அப்படியே போட்டுவிட்டு அவசரமாகக் கதவைத் திறக்க வந்ததனால் அவளுக்கு மூச்சு வாங்கியது. அதனால் அவளுடைய மார்பின் அசைவு தெளிவாகத் தென்பட்டது

கலைந்த கருங்குழல் அவளுடைய அகன்ற நெற்றியின் இரு புறத்திலும் வளைந்து சென்றது.

"நான் சமையலறையில் இருந்தேன். அதனால் உங்கள் குரல் காதிலே விழவில்லை. உள்ளே வாருங்களேன்! குளிரில் நடுங்கிக்கொண்டு இங்கேயே நிற்பானேன்?" என்று அவள் மென்னகையோடு மொழிந்து அவன் கையிலிருந்த கட்டை எடுத்தாள்.

அவனுடைய கவனம் அவள் பேச்சில் இல்லை. அதனால் அந்தக் கட்டை அவள் எடுத்துக் கொள்வதை அவன் தடுக்கவில்லை. அவளுடைய முத்துப்போன்ற முறுவலிலும் களைப்புத் தோன்றியது. அது அவன் நெஞ்சைச் சுடுவதுபோல இருந்தது. ஓய்ந்து வீட்டிற்கு வந்திருந்த அவன் முகத்தில் அந்த வருத்தத்தின் நிழல் பரவியது.

அவனுடைய மனநிலையை மஞ்சு தெரிந்துகொண்டாள். அவன் கண்ணோடு தன் கண்ணிணையை இணைத்துக்கொண்டே உற்சாகமாகப் பேச முயன்றாள். "இன்று நீங்கள் அரை மணி முன்னாலேயே வந்துவிட்டீர்களே. ஹெட் மாஸ்டர் குஷியாக இருக்கிறாரோ? உம், சைக்கிளை உள்ளே வையுங்கள். சூடான சாப்பாடு வழி பார்க்கிறது. சில்லென்று காற்றுப் பட்டால் அது ஆறிவிடும்"

"நான் அரை மணி முன்னால் வந்ததனால்தான் உன்னுடைய இந்த வேஷத்தை இன்று பார்க்க முடிந்தது" என்று சொல்லியபடி அவன் சைக்கிளை உள்ளே இழுத்து வந்தான்.

"நீ துணி துவைத்தாயா, பாத்திரங்கள் கழுவினாயா; என்ன செய்துகொண்டிருந்தாய்?"

"வீட்டு வேலை என்றால் எல்லாந்தான் இருக்கும். மனைவி எப்பொழுது பார்த்தாலும் ரமணியாக இருக்க வேண்டுமென்று தான் ஆண்கள் விரும்புகிறார்கள். ஆனால் பெண்ணை 'மதிவதனி'யாக வாணித்த கவிகளே, 'வீட்டின் உழைப்பாளி' என்றும் அவளைச் சொல்லவில்லையா?"

"நீ பள்ளிக்கூடத்தில் வேலை செய்வதே போதும். வீட்டில் வேறு இந்தக் கூலிவேலை செய்ய வேண்டாம்!"

"நீங்கள் இனி இலக்கணம் கற்றுக்கொள்ளத்தான் வேண்

டும், சேகர்! கூலி பெற்றுக்கொண்டு வேலை செய்பவளுக்குக் கூலிககாரி என்று பெயர். பெண் தன் சொந்த வீட்டில் ஒரு காலும் கூலிக்காரி ஆக மாட்டாள்"

"நீ எதற்கு உடமபை இப்படி அலட்டிககொள்கிறாய், மஞ்சுளா? நாம இரண்டு பேருமே இப்போது வேலைக்குப் போகிறோமே!"

"இரண்டு பேர் சமபளமும சேர்ந்து எவ்வளவு வருகிறது? நூற்றைம்பது ரூபாய் கூடக் காணவில்லை."

"ஏதோ கிடைததது போதும். நாளையிலிருந்து நீ ஒரு வேலைககாரி வைத்துககொள்"

"எதை நம்பி வேலைககாரி வைத்துககொள்வது? இருபது ரூபாய்க்குக குறைநது வேலைககாரி கிடைக்க மாட்டாள் நான் உததியோகத்துககுப போனதால் நம வருமானம் வளர விலலையே. நீஙகள் டியூஷன சொல்லிககொண் டிருந்த போது கிட்டத்தட்ட இருநூறு ரூபாய வநதது ஆனால் அந்த ஹெட் மாஸ்டர், 'வாததியார்கள் டியூஷன் வைத்துக்கொள்ளக் கூடாது' என்று உததரவு போட்டதனால் நீஙகள் டியூஷனை விட வேண்டியதாயிற்று. நானும் வேலைக்குப போனேன். இருநதும முன்னைவிடப் பணம் குறைவாகவே வருகிறது."

"ஆனாலும் இவவளவு சிரமப்பட்டுச் சிககனம் செயது நமககு என்ன ஆக வேணடும்."

"ஏன? ரஞ்சிதத்துககும நந்துவுககும் இனிமேல்தானே எலலாம நடக்க வேணடும? நமமுடைய இந்த வேலை என்ன திலே?"

"பக்கத்து வீட்டு அத்தை, குழந்தைகளைப் பார்த்துக் கொள்கிறாள் என்று நீ சொன்னாயே."

"என்னத்தைப் பார்ததுககொள்கிறாள்? அது மூன்று மணி நேர சமாசாரம்."

"குழந்தைகள பள்ளிககூடததிலிருந்து வந்ததும் உனக்காக வாசலில் காததிருபபதாக நீதானே நேற்றுச சொனனாய?"

"குழநதைகள் காததுககொணடுதான இருப்பார்கள். ஆண்களுக்கு இளமையில பெண்பிட்டுப் பித்து இருபபது போலக குழநதைகளுககுச சிறு பிராயததில் தாய்ப் பித்து

இருக்கத்தான் இருக்கும். சரி, கால் அலம்பிக்கொண்டு சீக்கிரம் உள்ளே வாருங்கள். சமையல் ஆறிப்போகிறது.''

''ஆனால் மஞ்சு, நாளையிலிருந்து நீ வேலைக்காரி வைத்துக் கொள்ளத்தான் வேண்டும்'' என்று சொல்லியபடி சேகரன் அவளுடைய இரு கைகளையும் பிடித்து அணைக்க முயன்றான்.

''ஸ்ஸ்......இப்போது என்ன! துணியெல்லாம் அழுக்காக இருக்கிறது!''

''அதனால்தான் சொல்லுகிறேன்; வேலைக்காரி வைத்துக் கொள். நான் அலுத்துச் சலித்து வீட்டுக்கு வரும்போது உன்னுடைய இந்த மாதிரி வேஷத்தை இனிமேல் பார்க்கக் கூடாது!''

''இன்று நீங்கள் சீக்கிரம் வந்ததனால் இது கண்ணில் படுகிறது. சாப்பிட ஆரம்பித்ததும் இந்த என் வேஷத்தை மறந்துவிடுவீர்கள். நீங்கள் போய்க் கால் அலம்புவதற்குள் நான் புடைவையை மாற்றிக்கொண்டு வந்துவிடுகிறேன்'' என்று சொல்லி, அவன் கையிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டு மஞ்சு விர்ரென்று உள்ளே சென்றாள்.

நாகபுரியில் பிரம்மாண்டமான பழைய பங்களா ஒன்றின் மூலையிலிருந்த மோட்டார் ஷெட்டில் மஞ்சுவும் சேகரனும் தங்கள் சிறு குடும்பத்தை நடத்தி வந்தார்கள்.

முன்னாள் டிபுடி கமிஷனர் ஒருவருடைய பங்களா அது. ராவ் பகதூர் பட்டம் வாங்கிய அவருடைய பிள்ளைகளுக்குச் சர்க்கார் வேலை கிடைக்காமையால் அடுத்த தலைமுறையில் குடும்ப நிலை தாழ்ந்து போய், பங்களாவின் சில பகுதிகளையும் அதைச் சுற்றியிருந்த அவுட்–ஹவுஸ்களையும் வாடகைக்கு விடவேண்டிய தாயிற்று. ராவ் பகதூரின் இரண்டு கார்களை விட்டிருந்த ஷெட்டுக்கு இப்போது ஜன்னல்கள் வைத்து அதைக் குடி வீடாக மாற்றிவிட்டார்கள்.

அகலம் குறைந்தும், நீண்டும் இருந்த ஷெட்டின் மூன்று அறைகளை மஞ்சு தன்னால் முடிந்த வரைக்கும் கெட்டிக்காரத் தனமாக அலங்கரித்து வைத்திருந்தாள். வெளியே இருந்த அறையை அவர்கள் 'டிராயிங் ரூமா'க அமைத்திருந்தார்கள். அந்த அறையில் ஒரு சிறு வட்ட மேஜையும் அதைச் சுற்றி

நான்கு நாற்காலிகளும் போட்டிருந்தன. மூலையில் ஓர் அழகிய மேஜையும் நாற்காலியும் இருந்தன. அந்த மேஜையில எழுது வதற்கு வேண்டிய கருவிகள் இருந்தன. மற்றொரு மூலையில் உயரமான அலமாரி இருநதது. சேகரனுககுப் பிடிதத புதத கங்கள் இந்த அலமாரியில ஒழுங்காக வைததிருந்தன புது மாதிரியான அழகிய ஜப்பான கடிகாரம 'டிக டிக' என்று ஓசை செய்தது. அறையின் இரு பககமும இருந்த ஜன்னல் களில் வான நீல நிறமான திரைகள் தொங்கின.

இதை விடச் சிறிது பெரியதாக இருநத நடு அறையைத் தூஙகுவதற்கும் சொந்த அலுவல்களுக்கும் பயன்படுததினர் கள் இந்த அறையில் இரணடு கட்டில்களில படுக்கை போட் டிருந்தது. ஒரு கட்டிலில அவர்களுடைய ஐந்து வயதுப பெண் ரஞ்சிதமும் மூன்று வயதுப் பையன் நநதுவும் ஆனந்தமாகத் தூஙகினர்கள். அநத அறையின் ஒரு பக்கத்தில் சுவரில் மாட்டியிருந்த நிலைககண்ணுடியின முன்னல் நின்று மஞ்சு தலை வாரிக்கொள்வாள். அவள் மாம்பழக் கட்டு உடுத்துவது தான அவனுக்குப பிடிககும். வீட்டில் வேலை செய்யும்பொழுது மட்டும அவள் கச்சம வைத்து உடுத்துககொள்வாள. சாப் பிடும்போதும எஙகாவது வெளியே போகுமபோதும் அவள் மாம்பழக் கட்டே உடுத்துவாள்.

மஞ்சு வேறு சேலையை அணிநதுகொண்டாள். தலையை வாரினுள. முகத்திலும கழுத்திலும லேசாகப் பவுடர் ஒற்றிக் கொண்டாள். வெட்சிச் செண்டைப பிச்சோடாவில் சொருகிய அணிநதுகொண்டு அவள சமையலறையில புகுந்தாள்

சமையலறை சிறியதாகத்தான் இருந்தது. ஆனுல அந்தச் சின்ன அறையையும் கவர்சசிகரமாக வைததிருநதாள் மஞ்சு. இரண்டு எவர்சிலவர் தட்டுகளைப் போட்டு, ஒரு கிண்ணததில் அவள தக்காளி, எலுமிசசம்பழம, முளளஙகி, காரெட் ஆகிய வற்றினுல செயத பசசடியை வைத்தாள். சாம்பார், ரசம் முதலியவைகளைப் பக்கத்தில் வைததாள

அவர்கள் இருவரும எதிரும் புதிருமாக உட்கார்ந்திருந் தார்கள். மஞ்சு இரண்டு தட்டுகளிலும் பண்டஙகளைப் பரி மாறிய பிறகு சாப்பாடு ஆரம்பமாயிற்று.

முதல் கவளத்தை உண்டதும், "அப்படியானல் நாளையி லிருந்து வேலைக்காரி வைத்துக்கொள்வதாக இன்று நாம் தீர்மானம் செய்துவிட்டோம்; இல்லையா?" என்றான் சேகரன்.

"யார் தீர்மானம் செய்தது?"

'நீயும் நானும்'

"வேலைக்காரிக்குத் தேவை என்ன? நாலே பேர்கொண்ட நம குடும்பத்துக்கு வேலைக்காரி எதற்கு?"

'என் கணவனை மனைவி கூலிக்காரி போல உழைப்பதை நான் பார்த்துக்கொண்டு இருக்க முடியாது! தெரிகிறதா?" என்று சேகரன் சிறிது கோபத்தோடு சொன்னான்.

'மாதம் பிறந்தால் அவளுக்கு இருபது ரூபாய் எங்கிருந்து கொடுப்பது?"

"அதற்கு ஏற்பாடு செய்யாமலா உன்னிடம் நான் இவ்வளவு வற்புறுத்திச் சொல்வேன்?"

"ஹெட்மாஸ்டர் மறுபடி டியூஷனுக்கு உத்தரவு கொடுத்து விட்டாரா என்ன?" என்று மஞ்சு ஆவலோடு கேட்டாள்

"அவரா தம் உத்தரவை வாபஸ் வாங்குகிறவர்? வாத்தியார்களுடைய முழு அறிவும் ஆற்றலும் பள்ளிக்கூடத்தின் நன்மைக்கே பயன்பட வேண்டும் என்ற நல்ல எண்ணத்தோடு தான் அவர் அந்த உத்தரவைப் போட்டிருக்கிறார்!"

"அப்படியானல் வயிற்றை நிரப்பப் போதுமான சம்பளமாவது கொடுக்க வேண்டும். பி.ஏ பாஸ் செய்தவருக்கு எண்பது ரூபாயைக் கொடுத்துவிட்டு மாதம் பூராவும் வேலை வாங்குவது வெகு அழகாகத்தான் இருக்கிறது!"

"நீ அவரை எதற்காகக் குற்றஞ் சொல்லுகிறாய், மஞ்சு? திலகர், தேசீயக் கல்விச் சாலையை ஸ்தாபித்து சுயநலத் தியாகம் என்ற பழக்கத்தை ஏற்படுத்தினாரே; அதனுடைய பயன் அம்மா இது!"

"பெரியவர்களை எதற்காகப் பழிக்கிறீர்கள்? வாத்தியார்களை அரைப் பட்டினி போடுவதற்காக அவர் தேசீயக் கலாசாலை வைக்கவில்லை."

"அவருடைய நோக்கம் நல்லதுதான் என்றாலும் இன்று அதனுடைய உருவம் மாறிவிட்டது. பள்ளிக்கூடம் என்றால்

பெரிய கட்டிடம் வேண்டும். விளையாட்டு மைதானம் வேண்டும் விசாலமான சோதனைக் கூடங்கள் வேண்டும். ஆனல் வாததியார்கள் மட்டும் அரை வயிற்றோடு பாடம் சொல்ல வேண்டும். சுயநலத் தியாகம் என்ற தத்துவத்தை வைத்துக் கொண்டு பள்ளியை நடத்தும் அதிகாரிகளுக்கு, 'கட்டிடமும சோதனைக் கூடமும் விளையாட்டு மைதானமும் இரண்டாந்தர விஷயங்கள் வாத்தியார்களிடம் செயல் திறமை இலலை யென்றல இந்தச் சாதனங்கள் எவ்வளவு உயர்ந்தவையாக இருந்தாலும் நாட்டுக்கு நல்ல கல்வி அளிக்க முடியாது' என்பது புரிந்தால்தானே? அதிலும் தனிப்பட்டவர்கள் நடத்தும் பள்ளிகள் என்றல், பட்டதாரிகளான கெட்டிககார இளைஞர்களைப் பிழிநது எடுக்கும் ஆலை என்று அர்த்தம், மஞ்சு! இந்த அறிவாளி இளைஞர்களை உறிஞ்சும் ஸ்தாபனங்கள் ஏற்பட்டதற்குத் திலகர், கர்வே முதலிய பெரியோர்களே பொறுப்பாளிகள்" என்று சேகரன் ஆவேசத்தோடு பேசினன். அவனுககுச சாப்பாட்டில் இருந்த கவனம் போய்விட்டது.

அதைக் கண்ட மஞ்சு சிரித்துக்கொண்டே, "நீங்கள் அந்தத் தககாளிப் பச்சடியைத் தொடவேயில்லையே! சாப்பிடும் போது ஏனே நான் பள்ளிக்கூடப் பேச்சை எடுத்தேன்?" என்றள்.

"இதெல்லாம் நம்முடைய ஜன்மத்தோடு பிறந்த தொல்லை. அது இருககட்டும். இன்று உனக்கு ஒரு முக்கியமான விஷயம் சொல்லப் போகிறேன், மஞ்சு!"

பச்சடியைப் பரிமாற எடுத்த பாத்திரத்தைக் கீழே வைத்துவிட்டு அவள் ஆவலோடு "அது என்ன?" என்றள்.

"இன்று நாங்கள் ஏழெட்டு வாத்தியார்களாகச் சேர்ந்து தீர்மானம் செய்திருக்கிறேம் அடுத்த முதல் தேதியிலிருந்து கட்டைத் தொட்டியும கரி டிப்போவும் வைக்கப் போகிறேம்."

"கரி டிப்போவா? என்ன இப்படிப் பேசுகிறீர்களே!"

"இது பரிகாசமல்ல, மஞ்சு. உண்மையைச் சொல்லுகிறேன். இன்று மாலையில் நான் எப்போதும் போல அதிகப்படி வகுப்பை நடத்தவில்லை. நாங்கள் ஏழெட்டுப் பேராகச் சேர்ந்து தாமு வாத்தியார் வீட்டுக்குப் போய்க் கூட்டம்

போட்டு, கரி டிப்போ வைப்பதாக முடிவு கட்டினேம்."

"வாத்தியார் வேலேக்குச சரியான ஜோடிதான் இது!"

"பின்னே என்ன செய்வது? ஹெட்மாஸ்டரோ டியூஷன் சொல்லாதே என்கிருர். சமபளமோ பஞ்ச காலத்தில் வயிற் றுக்குப் போதவில்லே. டியூஷனேத் தவிர வேறு தொழில் செய்வதை அவர் தடுக்கவில்லே. ஆகவே—"

"அப்படியாளுல ஏதாவதொரு கண்ணியமான தொழில் செய்யக் கூடாதோ?"

"பணம் கொடுக்கும் தொழில்கள் எல்லாமே கண்ணிய மான தொழில்களதாம், மஞ்சு! கடை வாசலில் 'லெதர் மார்ட்' என்று பலகையைத தொங்க விட்டால் செருப்புத் தைக்கும் தொழில கணணியமாகி விடுகிறது. வாசலில 'கபே' என்ற போர்டு மாட்டிளுல் காபிக கடைக்குப் பெருமை வந்து விடுகிறது 'பாரிஸ் பின்மென்' என்று விளம்பரம் செய்தால் துணி வெளுககும் தொழிலுககு ஏற்றம் வந்துவிடுகிறது."

"ஆளுல் கரி டிப்போ எனபது கரி டிப்போதானே! 'சேகர் கபே' என்றே, 'பிலிமோரியா ரெஸ்டாரனட்' என்றே அதற்குப் பெயர் வைக்க முடியுமோ?"

"பிலிமோரியாவின் மதிப்பு அதற்கு வராதுதான! நம் ஊர்ப் பெரிய மனிதர்களின் கார்கள் சாயந்தரத்திலிருந்து நள் ளிரவு வரைககும் பிலிமோரியாவின் வாசலில காததிருககின் றனவே. அந்தப் பாககியம் எங்கள் கரி டிபபோவுக்குக் கிடைக்காதுதான்!"

"நீங்கள் இப்படிக் கிண்டலாகப் பேச வேண்டாம். அந்த ஆடம்பரத்தின் உண்மையான மதிப்பும், போலித் தன்மையும், வெறுக்கத் தக்க அந்தரங்க விஷயஙகளும் எனக்குத் தெரியா தவையல்ல. ஆளுல சமூகத்தின் மதிப்பை நாம் அசட்டை செய்தால் அந்தச சமூகத்தில் வாழ்வது லேசல்ல. நாளேக்கு நீங்கள் கரி டிப்போவில போய் உட்கார்ந்தால்—"

"அப்போது உன் பணககாரத் தோழிகள் நாககை வளேப் பார்கள். 'என் புருஷனுக்கு ஒரு கண்ணியமான வேலே வாங் கிக் கொடுங்களேன்! அவர் பி. ஏ. பாஸ் செய்திருககிருர். எம். ஏ. பரீட்சைக்கு இந்தத் தடவை போகிருர். குறுக்கு

எழுத்து, டைப்பிங் தெரியும். ஆங்கிலத்திலும் தாய்மொழியி லும் நன்ருகப் பேசுவார், எழுதுவார்' என்று அவர்களிடம் சொல்லேன், பார்க்கலாம்!''

''போதும், போதும். இன்றைகடு வந்ததிலிருந்து ஏன் இப்படி வெறுப்பாகப் பேசுகிறீர்கள்? வேறு ஏதாவது நல்ல வேலை செயயக கூடாதா என்றுதானே நான் கேட்கிறேன்?''

''பள்ளிககூடததில் எட்டு மணிகாலம் மாரடித்து விட்டு வேறு வேலை செய்வதற்குப் பொழுது ஏது, மஞ்சு? இந்தக் கரி டிப்போ இருக்கிறதே, அதற்குச் சொற்ப முதல் போதும். காலையிலும மாலையிலும உட்கார்ந்தால் வியாபாரம் நடநது விடும. வேலைககாரர்களை நம்பி விடுவதனுல் ஒரு நஷ்டமும் வராது. அதோடு விறகாகட்டும், கரியாகட்டும், ஜனங் களுககு அன்ருடம் வேண்டிய பொருள். அதன் வாடிககைக் காரர்களுக்கு ஒரு நாளும் அழிவு கிடையாது வீட்டு அடுப்பி லிருந்து இடுகாட்டுச் சிதைவரைக்கும் எஙகும் அதற்குச் சரி யான தேவை இருக்கிறது. எங்கள் பள்ளிக்கூடத்திலேயே அதற்குத் தேவையான வாடிக்கைககாரர்கள் கிடைப்பார்கள்'' என்று வேடிக்கையும் விளையாட்டுமாக அவன் பேசியதை அமைதியாக அவள் கேட்டுக்கொண்டாள்.

''நீ ஏன் வாய் திறவாமல இருக்கிருய், மஞ்சு? உனக்கு இந்த யோசனையே பிடிக்கவில்லையா?'' என்று சேகரன் அவள் கையைப் பிடித்துககொண்டு கேட்டான்.

அப்பொழுதும் அவள் வாய் திறக்கவில்லை. தலையைத் தொங்கப் போட்டுக்கொண்டு சாப்பாட்டிலே முனைந் திருந்தாள்

''பினனே நான என்னதான் செய்வது, கண்ணே! இந்த நூற்றைம்பது ரூபாயில் நம் குடிததனம் எப்படி நடக்கும்? குழநதைகள் இனிமேல்தான் படிக்க வேண்டும். நம்முடைய வாழ்ககை முழுவதும் இனிமேல்தான் இருக்கிறது. உண்மை யில் இநத விந்தையான நிலைமையை நினைத்துககொண்டால் எனககு ஒன்றுமே தோனறவில்லை என் காலேஜ் படிபபு வீண் என்று தோன்றுகிறது. கல்யாணம் ஆனதிலிருந்து நம்முடைய எந்த ஆசையாவது நிறைவேறி யிருக்கிறதா?

இன்டர் வரைக்கும் படித்த அறிவாளிப் பெண்ணை நீ வீட்டில் உடம்பைப் பிழிந்து வேலை செய்யும்பொழுது என் உயிர் துடிக்கிறது. இதையெல்லாம் சிந்தித்துத்தான் இன்று நான் கரீடிப்போ திட்டத்துக்கு ஒப்புக்கொண்டேன். உனக்கு அது பிடிக்கவில்லையென்றால் இப்போதே தெளிவாகச் சொல்லிவிடு. நாளைக்குப் பள்ளிக்கூடம் போனதும் 'எங்கள் எசமானியம்மாவின் உத்தரவு இல்லை' என்று கூறிவிடுகிறேன்.''

''உங்கள் திட்டத்தை நான் ஒப்புக்கொள்ளுகிறேன்'' என்று சொல்லி மஞ்சு தலைநிமிர்ந்து பார்த்தாள். பிறகு பேச்சை மாற்றுவதற்காக, 'வருகிற ஞாயிற்றுக்கிழமை சரளா நம்மை விருந்துக்கு அழைத்திருக்கிறாள். அவளுடைய கிராமத்தில் இப்போது அறுவடைக் காலம். அன்று சாயந்தரம் நான்கு மணிக்குக் கார் அனுப்புகிறாளாம்'' என்றாள்.

''குழந்தைகளை அழைத்துக்கொண்டு நீ போ. நான் வர முடியும் என்று தோன்றவில்லை.''

''நீங்கள வராவிட்டால் சரளாவுக்கு வருத்தமாக இருக்கும்.''

''அது சரி. எனக்கு ஞாயிற்றுக்கிழமை பகலில் வேலை இருக்கிறது. மேலும் அங்கே பெரிய பெரிய மனிதர்கள் வருவார்கள். அவர்களின் நடுவே நான் எங்கே போய் உட்காருவது? உன் தோழிகளெல்லாம் வருவதால் உன் வளைக்கும் தொந்தரவு இராது. அவர்களோடு நீ ஆனந்தமாக அரட்டையடிக்கலாம் ''

மஞ்சு ஒன்றுமே பேசவில்லை. அவனுடைய மறுப்பின் ரகசியம் அவளுக்குத் தெரிந்துவிட்டது. ஆனால் அதன் இனிமை மட்டும் முன்னமே மாறிவிட்டது. அவள் மறுபடி விஷயத்தை மாற்ற முயன்றாள். ''இன்று நீங்கள் 'புதிய சமூக அமைப்பின் விளைவுகள்' என்ற அந்தக் கட்டுரையை முடிப்பதாகச் சொன்னீர்களே!''

''நீ அதைப் பார்த்தாயா மஞ்சு?'' என்று அவன் உற்சாகத்தோடு கேட்டான். அவனுடைய அகன்ற கண்களில் உல்லாசம் விளையாடியது. அவன் நெற்றியில் இருந்த சுருக்கங்கள் மறைந்தன.

"உலகப் போருக்குப் பிறகு ஏற்படப்போகிற பண்பாட்டையும் சமூக அமைப்பையும் பற்றி நான் எழுதிய சொற்சித்திரம் எப்படி இருக்கிறது?"

"ஜோராகத்தான் இருக்கிறது. ஆனால் ஜனநாயகம் வெற்றி பெற்றாலதான் உங்கள மனககோட்டை நிலைககும்."

"ஜனநாயகத்தின் வெற்றியில் எனக்குச் சந்தேகமே இல்லை" என்று அவன் ஆவேசத்தோடு பேசினான்.

அப்போது வாசற்கதவின் சங்கிலி பலமாக ஓசைப்பட்டது. உரத்த குரலில், 'மஞ்சு மஞ்சு!' என்ற கூக்குரல் காதில் விழுந்தது.

"அண்ணா வந்திருக்கிறான்போல் இருக்கிறதே!" என்று சொல்லிக்கொண்டே மஞ்சு சட்டென்று எழுந்தாள்.

"வந்தால் என்ன? அவன் சற்று நேரம் நிற்கட்டுமே! சாப்பாட்டின் நடுவில் எழுந்து கதவைத் திறககப் போகாதே. நம் சாப்பாட்டு வேளை தவிர்த்து அவன் இங்கு வருவதற்கு வேறு முகூர்த்தமே கிடைக்கவில்லையோ!" என்று சேகர் கோபத்தோடு கூறினான்.

ஆயினும் அவள் மௌனமாக எழுந்து கதவைத் திறக்க வெளியே போனாள்.

## 2

"ஒரு வாய்ச் சோறு போடுங்களேன் எனக்கு! இன்றைக்குக்கூட மஞ்சு, உன் அண்ணி சாப்பாட்டு வேளையில் என்னைத் துரத்திவிட்டாள்!"

மஞ்சுவின் பின்னால் உள்ளே வந்த ராமநாதன் இப்படி வெண்கலக் குரலில் சொன்னான். கழுத்திலிருந்து கால் வரைககும் அவன் நீண்ட காவி நிற அங்கி அணிந்திருந்தான். நெற்றியின் நடுவிலே சிந்துரப் பொட்டு இட்டிருந்தான். கழுத்தில் ருத்திராட்ச மாலை துலங்கியது.

சேகர் சிறிது கோபத்தோடு அவனைப் பார்த்து, "நீ அண்ணியிடம் ஏதாவது கண்டபடி பேசி இருப்பாய். அவள் சும்மா உன்னை வீட்டை விட்டுத் துரத்தி விடுவாளோ?" என்றான்.

"அவள் இப்போது இரண்டு காசு சம்பாதிக்கிறாள் அல்-

லவா? அதனால், தான் சொன்னபடி கணவன் நடக்க வேண்டு மென்று நினைக்கிறாள். ஆனால் இந்தக் கணவன் அப்படிப்பட்ட சோற்றுக்கு வீங்கி அல்ல!'' என்று மஞ்சு போட்ட இலையின் அருகில உட்கார்ந்துகொண்டே ராமநாதன் சொன்னான்.

''ஊரிலேயே இந்தக கோடியில் தங்கை இருக்கும் வரைக் கும் உனக்கு எந்தக் கவலையும் இல்லை, ராமு! பெண்டாட்டி யிடம் சண்டை போட்டுவிட்டுத் தங்கையிடம வரவேண்டியது; தங்கையிடம் சண்டை போட்டுவிட்டுப் பெண்டாட்டியிடம் போக வேண்டியது! தினமும் உன் விருப்பப்படி சாப்பிடு வதற்கு இது சரியான வசதிதான்!''

சேகரனுடைய பேச்சைக் கவனிக்காமலே மஞ்சு மீதி இருந்த பண்டங்களை இலையில் பரிமாறி விட்டு, ''சீக்கிரம் சாப்பிட்டு முடி, அண்ணா. உனக்கு எங்கேயாவது போக வேண்டி இருக்குமே!'' என்றாள்.

''ஆமாம்; இன்றைக்கு டவுன் ஹாலில் காங்கிரஸ் கூட்டம்.....''

ராமுவின் பேச்சு வெள்ளம் பெருகுவதற்குள், ''நீ இன்னும் சாப்பிட வேண்டாமா, மஞ்சு?'' என்றான் சேகரன்.

''நான் கதவைத் திறக்கப் போனபோதே என் சாப்பாடு முடிந்துவிட்டதே!''

சேகரன் ஏதோ பேச நினைத்தான். ஆனால் எச்சிலை விழுங்கிக்கொண்டு கோபத்தோடு எழுந்தான்.

''இதென்ன? நீங்கள் மோருஞ் சாதம் சாப்பிடவே இல்லையே?'' என்றாள் மஞ்சு

''வேண்டாம்; என் சாப்பாடும் முடிந்துவிட்டது. நீங்கள் இரண்டு பேரும் ரகசியமாகப் பேசும் வரைக்கும் நான் வெளியே உட்கார்ந்து படிக்கப் போகிறேன்.''

மஞ்சு ஒன்றும் பேசவில்லை. செல்லப் பெட்டியை எடுத்து அவனிடம் கொடுத்தாள். அதிலிருந்து கொஞ்சம் பாக்குப் பொடியை எடுத்துக்கொண்டு அவன் வெளியே சென்றான்.

அவன் போனதும் மஞ்சு நாற்காலியில் உட்கார்ந்து, வேக மாய்ச் சாப்பிட்டுக்கொண் டிருந்த ராமுவைப் பார்த்து, ''தின மும் அண்ணியோடு என்ன சண்டை, அண்ணா?'' என்றாள்.

"பள்ளிக்கூடத்தில் வேலை கிடைத்ததிலிருந்து அவளுக்கு மண்டைக் கிறுக்கு ஏறி விட்டது. இன்றைக்கு ஏகாதசியாத லால் ஆண்டவனுக்கு அபிஷேகம் செய்ய அவளைப் பணம் கேட்டேன். அதற்கு அவள் சொல்லுகிருள்: 'குழந்தை குட்டி களுக்கு ஒரு வாய்ச் சோறு போட வீட்டில் பணமில்லையாம்! தெய்வத்தின் தலையில் கொட்டுவதற்கு நான் எங்கிருந்து பணம் கொண்டுவருகிறது?' என்று. இதுவா பேசுகிற முறை, மஞ்சு? நான் ஒவ்வோர் ஏகாதசிக்கும் அபிஷேகம் செய்யவேதானே இவளுக்கு வாத்தியார் வேலை கிடைத்தது? கணவனை அவள் ஒரு பொருட்டாக நினைப்பதே இல்லை. மனைவி சம்பாதித்தால் கணவனை இப்படியா நடத்துவது?"

"அண்ணியினுடைய பேச்சில் தப்பு என்ன இருக்கிறது, அண்ணு? பாவம், அவளுக்கு நாற்பது ரூபாய் கிடைக்கும். அதில் மூன்று குழந்தைகளையும் உன்னையும் சேர்த்து அவள் எப்படிப் போஷிப்பது? குடும்பத்தை நடத்தவே அவளுக்குப் போதும் போதும் என்று ஆகிவிடும். போதாக்குறைக்கு உன் ஏகாதசிககும் பொது வேலைக்கும் அவள் எங்கிருந்து பணம் கொடுப்பாள்? நீ ஏதாவது வேலை செயவதற்கு என்ன?"

"என்ன வேலை செய்வது? நீயே சொல்லேன், பார்க்க லாம்!"

"நல்ல அநுபவமுள்ள ஓவர்சியர் நீ. வீடு கட்டக் கன்ட் ராக்ட் எடுத்துக்கொள்வதற்கு என்ன?"

"எனக்கு யார் வேலை கொடுப்பார்கள்? நான் கன்ட் ராக்ட் எடுத்துக்கொள்வதாகத் தெரிந்ததும் முனிசிபாலிடியார் ஆயிரம் தடைகள் செய்வார்கள். முன்னெல்லாம் நான் வீடு களுக்குப் பிளான் போட்டுக் கொடுத்தேனே; அப்போது நான் போட்ட பிளான் என்பதற்காக என்ஜினீயர் அதை ஒப்புக் கொள்ளவில்லை. இந்த நிலையில் எனக்கு யார் வேலை கொடுப் பார்கள்?"

கேள்வியில் முடிந்த இந்தப் பதிலைக் கேட்டதும் மஞ்சு ஒரு கணம் அசந்துபோனுள். ஆயினும் உடனே, "உன்னுல் ஒரு வேலையும் செய்ய முடியவில்லை என்ருல் சும்மா இரு; ஆனுல் அண்ணியின் துன்ப வாழ்க்கையைப் பின்னும் துன்ப மயமாகச்

செய்யாமல் இருப்பது உன் வசத்தில் இருக்கும் வேலைதானே? நீ எதற்காக அவனைப் பணம் கேட்கிறாய்? ஊர் முழுவதும் எதற்காக அவனைப்பற்றிப் பேசித் திரிகிறாய்?''

'ஊர் முழுவதுமா? போயும் போயும் உன் வீட்டிற்கு வருகிறேன். சொந்தத் தங்கையிடங் கூட மனத் துயரத்தை மறைத்து வைக்க வேண்டுமா, என்ன? சரி சரி. நான் செய்தது தப்புத்தான்!'' என்று சொல்லிவிட்டு அவன் கோபத்தோடு எழுந்தான்.

அப்போது மஞ்சு அவனிடம் சமாதானமாக, ''அண்ணா! நான் சொல்வதால உனக்கு இவ்வளவு கோபம் வருவதாக இருந்தால் இனி என்னிடம் வரவேண்டாம். இப்போது வந்தாயிற்று. வயிறு நிறையச் சாப்பிட்டுவிட்டுப் போ'' என்றாள்.

ராமு மறுபடியும் உட்கார்ந்தான். மஞ்சு அவனுடைய இலையில, மீதி இருந்த சோற்றைப் போட்டு மோரை ஊற்றினாள். அவன் பேசாமல் சாப்பிட்டான். அவள் நாற்காலியில் உட்கார்ந்து சிந்தனையில் ஆழ்ந்தாள்.

அவளுடைய அண்ணனும் கணவனும் பட்டம் பெற்றவர்கள். தங்கள் தொழிலில கை தேர்ந்தவர்கள். இருவரும் ஓரே வயதுடையவர்கள். படிக்கும்போதே அவர்கள் நண்பர்களாக இருந்ததனால்தான் மஞ்சுவுக்குச் சேகரனிடம் பழக்கம் ஏற்பட்டது. அது மணத்தில் முடிந்தது. ஓவர்சீயர் பரீட்சை கொடுத்ததும் ராமுவுக்கும் முனிசிபாலிடியில் வேலை கிடைத்தது. தன் அறிவைப்பற்றியும் தொழில் திறமையைப் பற்றியும் அவனுக்கு இருந்த அளவுக்கு மிஞ்சிய தன்மதிப்பே அவனிடம் இருந்த ஒரு பெரிய குறை.

தனமதிப்புடையவர்களில் சிலர் உள் ஆழத்தோடு இருப்பார்கள். 'ஆமாஞ் சாமி' போடும் மனித இயல்பைப் பயன்படுத்திக் கொண்டு, அவர்கள் தங்கள் மேலதிகாரிகளைச் சந்தோஷப்படுத்துவார்கள்; பிறகு மெதுவாக அவர்களைத் தங்கள் வசத்தில் சிக்க வைப்பார்கள். தம்மைத் தவிர அவர்களுக்குப் போக்கு இல்லாதபடி செய்துவிடுவார்கள். ஆனால் ராமுவின் தன்மதிப்பு இத்தகையதல்ல. அவன் வாயாடி. சீமைக்குப் போய்வந்த தன் மேலதிகாரிகள் லாயக்கில்லாத

வர்கள் என்று பிறருக்கு வெட்ட வெளிச்சமாகக் காண்பிப்பதை அவன் பெருமையாக நினைத்தான். மேலதிகாரியைப் பார்க்கச் சந்தர்ப்பம் ஏற்பட்டபோது, நாலு பேருக்கு முன்னால் அந்த அதிகாரியின் பிழையைச் சுட்டிக் காட்டவோ, அவர் வாங்கிய லஞ்சத்தை வெளிப்படுத்தவோ, அவன் சற்றும் தயங்கியதில்லை. அதனால் கட்டிட இலாகா என்ஜினீயருக்குத் தம்மை இழிவுபடுத்தும் இத்தகைய ஓவர்சீயர் வேண்டி இருக்கவில்லை.

ஆனால் அவனை வேலையிலிருந்து நீக்குவது எளிதாக இல்லை. அதிகாரிகள் எல்லாருமே அவனுடைய வாய்க்குப் பயந்தார்கள். பட்டவர்த்தனமான பேச்சுப் போலவே மற்றொரு குறையும் ராமுவிடம் இருந்தது. அதாவது ஒழுங்கின்மை; பகல் வேலையை இரவில் செய்வதும் இரவுத் தூக்கத்தைப் பகலில் தூங்குவதும் அவனுடைய தலைகீழ் முறையாதலால், ஆபீஸுக்கு எப்பொழுதும் நேரம் கழித்தே போவான். முனிசிபாலிடியின் தலைமைப் பதவி ஒரு கடுமையான அதிகாரியின் கைக்கு வந்ததும், அந்தக் கட்டிட என்ஜினீயர் ராமுவினுடைய ஒழுங்கின்மையைப் பயன்படுத்திக்கொண்டு அவனை வேலையிலிருந்து நீக்கினார்.

தனக்கு நேர்ந்த அநீதியைக் கண்ட ராமுவின் மண்டை கொதித்தது. ஜெனரல் கமிட்டியினிடம் அவன் நியாயம் கோரினான். கமிட்டியில் இருந்த பெரும்பான்மையான அங்கத்தினர்கள் அவனுக்கு எதிராகத் தீர்ப்பளித்தார்கள்.

ராமுவின் இடத்திலே உலக அநுபவம் அறிந்த வேறொருவன் இருந்தானானால் இந்தக் கசப்பான சம்பவத்திற்குப் பிறகு அவன் முனிசிபாலிடித் தொல்லையை விட்டுத் தனியாக ஒரு வழியைக் கடைப்பிடித்திருப்பான். ஆனால் ராமு ஒரு விடாக்கண்டன். இந்த அநீதிக்காக முனிசிபாலிடியைப் பழி தீர்ப்பது என்று அவன் ஒரு நாள் அயோக்கிய மேலதிகாரிகளைக் குறித்துக் கோர்ட்டில் வழக்குத் தொடுத்தான்.

வீட்டில் மனைவியும் மூன்று குழந்தைகளும் அடங்கிய குடும்பம் அவன் பொறுப்பில் இருந்தது. மறுபுறம் வழக்கை நடத்த வேண்டி இருந்தது. இதற்காக அவன் வேறு ஏதாவது

தொழில் செய்யத்தானே வேண்டும்?

ஆனால் அவன் அதற்காக அதிக முயற்சி ஏதும் எடுத்துக் கொள்ளவே இல்லை. நடுநடுவே வேலைக்குப் போவான். முனிசிபல் அதிகாரிகள் அவன் நிலைக்க ஒட்டாதிருக்கப் பெரு முயற்சி செய்தார்கள்.

சேகரன் அவனுக்குச் சிறிது காலம் உதவி செய்தான். பிறகு சேகரனுடைய நிலையும் அதுபோலவே ஆகிவிட்டதால், அவன் தன் கையை இழுத்துக்கொண்டான்.

சேகரனும் ராமுவைப் போலவே அறிவாளி. அவனுடைய இயல்பில் அறிவைவிட உணர்ச்சி மிஞ்சி யிருந்தது. உயர்ந்த எழுத்தாளனாகவோ பேராசிரியனாகவோ விளங்க வேணடும் என்பது அவனுடைய ஆசை. அதனால் சம்ஸ்கிருதம, தாய் மொழி ஆகிய இரணடிலும அவன் எம். ஏ. படித்தான். பிறகு டாக்டர் பட்டம் பெறுவதற்காக ஓர் ஆராய்சசிக் கட்டுரையும் எழுதலானன். அவனுககு உபகாரச் சம்பளம் கிடைத்தது. இதனோடு அவன் ஒரு காலேஜில் ஆசிரியராகவும் இருந்தான். தன் வாழ்க்கை இனி நிலைத்து வெற்றி பெறும் என்று தோன் றியதும் அவன் மஞ்சுவை மணந்துகொண்டான். அவள் அப் போது இன்டர் வகுப்பில் படித்துக்கொண் டிருநதாள். பரீட்சை முடிந்ததும் மணம் செய்துகொள்வதாக அவள் கூறினள். சேகரன் அதை ஒப்புக்கொள்ளாததால் மணம் நிகழ்ந்தது. ஓர் அழகிய சிறு பங்களாவில் அவன் தன் குடித் தனத்தைத் தொடங்கினன்.

ஆனால் சேகரனுக்கு அதிருஷ்டம் சரியாக இல்லை.

பல்கலைக் கழகத்தில் ஒரு சூழ்ச்சிக்கார அதிகாரியின் தலைமையில் அவன் ஆராய்ச்சி வேலை செய்ய வேண்டியிருந் தது. படிப்புக் குறைவாக இருந்த போதிலும் அந்த அதிகாரி ஒரு பெரிய எழுத்தாளர் என்று புகழ் பெற்றிருந்தார். சேக ரனைப் போன்ற அறிவாளி தம்மிடம் வேலை செய்ய வந்ததும் ஒரு பெரிய மொழி நூலை இயற்றும் ஆவல் அவருக்கு உண்டா யிற்று. 'நம் இருவருடைய பெயராலும் இந்த நூல் வெளிவரும்' என்று அவர் சேகரனுக்கு ஆசை காட்டினர். அவருடைய பேசசைக் கேட்டுக்கொண்டு அவன் முழு நூலையும் மிகுந்த

உழைப்போடு எழுதி முடித்தான். அந்தப் பெரிய மனிதர் கையெழுத்துப் பிரதியை வாங்கிக்கொண்டு சேகரனுக்கு இருநூறு ரூபாய் கொடுத்து ரசீதும் பெற்றுக்கொண்டார்.

நான்கு மாதங்கள் கழித்து ஒரு நாள் சேகரன் புதிதாக வந்த புத்தகங்களைப் பார்க்க வேண்டுமென்று கடைக்குப் போன போது 'மொழி நூல்' என்ற புதிய புத்தகத்தைக் கண்டான்; ஆவலோடு அதைப் புரட்டினுன் முதல் பக்கத்தில் அந்தப் பெரியவருடைய பெயர் கொட்டை எழுத்தில் அச்சிட்டிருந்தது. முன்னுரையில், 'என்னிடம் இருந்து ஆராய்ச்சி செய்த மாண வர் ஸ்ரீ சேகரன் நான் இந்த நூல் எழுதும்போது எனக்குப் பெரிதும் உதவி செய்தார்' என்று குறித்திருந்தது. சேகரன் கவலையோடு ஓவ்வோர் எழுத்தாக அந்த நூலைப் படித்தான். அவன் கொடுத்த கையெழுத்துப் பிரதியில் இங்குமங்கும் சில பகுதிகளை மாற்றிவிட்டு, அதைத் தமது நூலாக அவர் வெளி யிட்டிருப்பதை அவன் அறிந்தான்.

சேகரனுடைய நெஞ்சம் கொதித்தது. அவன் நேராக அந்தப் பெரியவருடைய பங்களாவுக்குப் போனுன்.

அவர் தாழ்வாரத்தில் மனைவியோடு சாந்தமாகப் பேசிக் கொண்டிருந்தார். சேகரன் தோட்ட வாசலில் தன் சைக்கிளை நிறுததிவிட்டு உள்ளே வருவதைக் கண்டதும், அவர் சாய்வு நாற்காலியில் அழுந்தியிருந்த தமது ஊதிய உடலைச் சிறிது அசைத்துக்கொண்டே, மென்னகை பூத்து, "வாருங்கள், வாருஙகள். நான் நேற்றே உங்களுக்குச் சொல்லி அனுப்பு வதாக இருந்தேன். நேற்றுத்தான் பிரதிகள் வந்தன. —அடி, இவருக்குக் கொஞ்சம் காபி போடு!" என்ருர்.

"என்னை மன்னிக்க வேண்டும். எனக்குக் காபி வேண் டாம். எந்த நூலின் பிரதிகள் வந்திருக்கின்றன?"

"நம்முடைய புத்தகந்தான்!"

"நம்முடைய புத்தகம் என்ருல் நான் உங்களுக்குக் கையெழுத்துப் பிரதி எழுதிக் கொடுத்தேனே, அதுதானே?"

"ஆமாம், ஆமாம்; இதோ பாருங்கள்!" என்று சொல்லி, அவர் மேஜையிலிருந்து ஒரு பிரதியை எடுத்துத் தந்தார்.

"இதில் உங்கள் பெயர் மட்டும் இருக்கிறதே!"

"உங்கள் பெயரை முகவுரையில் குறிப்பிட்டிருக் கிறேனே!" என்று கூறியபடி அவர், நூலில் அந்தப் பகுதியைப் படித்துக் காட்டினர்.

"இந்தப் புத்தகம் நம் இருவருடைய பெயராலும் வெளி வரும் என்று நீங்கள் சொன்னீர்களே."

"அப்படி ஒன்றும் சொன்னதாக எனக்கு ஞாபகமில்லையே; நீங்கள் எனக்கு உதவி செய்தீர்கள்; அதற்குப் போதிய ஊதியம் நான் கொடுத்தேன். பார்க்கப் போனல் உங்களுடைய பெயரை முகவுரையில் குறிப்பிடுவதற்குக் கூடக் காரணம் ஒன்றுமில்லை."

அவருடைய கடைசி வாக்கியம் சேகரனுடைய அடங்கியிருந்த கொதிப்பைக் கிளறிவிட்டது. அவன் ஆத்திரத்தோடு, "நீங்கள் இவ்வளவு போககிரித்தனமாக நடநதுகொள்வீர்கள் என்று நான் நினைக்கவில்லை" என்றுன்.

ஆனல் அந்தப் பெரியவர் தன்னம்பிக்கையோடு அமைதியாகப் பதில் சொன்னர்: "இதோ பாருங்கள், மிஸ்டர் சேகர்! என்னைப் போன்றவனைப் பற்றி இப்படி அவதூருகப் பேசியதற்காக நான் வழக்குத் தொடுக்க முடியும் என்பது தெரியுமா?"

"என்னை ஏமாற்றியதுமன்றி வழக்குத் தொடுப்பதாகவும் பயமுறுத்துகிறீர்களா? சற்றுப் பொறுங்கள்; நானே உங்களைக் கோர்ட்டுக்கு இழுக்கிறேன்!"

அந்தப் பெரியவர் இதைக கேட்டுக் கலகலவென்று நகைத்தார். சேகரன் உடனே அங்கிருந்து அகன்றுன். மஞ்சு, 'வேண்டாம், வேண்டாம்' என்று சொல்லியும் அவன் அன்றிரவே ஒரு பிரசித்த பாரிஸ்டரிடம் சென்றுன்.

பாரிஸ்டர் அவனது பேச்சை அமைதியாகக் கேட்டுக் கொண்டு, "இந்த நூல் எழுதியது சம்பந்தமாக அந்தப் பெரியவர் உங்களுக்கு ஏதாவது கடிதமோ சீட்டோ கொடுத்திருக்கிருரா?" என்று கேட்டார்.

"இல்லை."

"இந்த நூல் எழுதியது சம்பந்தமாக அவர் வேறு யாரிடமாவது உங்களைப் பற்றிப் பேசியதாக நிரூபிக்க முடியுமா?"

"முடியாது."

"இந்த நூல் விஷயமாக நீங்கள் எப்போதாவது அவரிடம் விவாதித்தது உண்டா?"

"ஐந்தாறு தடவை விவாதித்தது உண்டு. ஆனால் அப்போது நாங்கள் இருவரும் பல்கலைக் கழகத்தில் அவருடைய அறையில் பேசினோம்."

"சரி; நீங்கள் இந்த நூலை எழுதியது சம்பந்தமாக அவரிடம் ஏதாவது ஆதாரம் இருககிறதா?"

"அப்படி ஒன்றுமில்லை. நான் கையெழுத்துப் பிரதியை அவரிடம் கொடுத்ததும் அவர் எனக்கு இருநூறு ரூபாய் தந்தார். அந்த ரசீது அவரிடம் இருக்கிறது."

"அந்த ரசீதில என்ன எழுதியிருக்கிறது?"

"நான் திருபதிகரமாக வேலை செய்ததற்கு இருநூறு ரூபாய் தந்திருப்பதாக அதில் கண்டிருக்கிறது."

"எந்த வேலைககாக? அதைப் பற்றி ஏதாவது குறிப்பிட்டிருக்கிறதா?"

"அப்படி ஏதும் அதில் இல்லை. அவர் என்னை எப்படி ரசீது எழுதிக் கொடுக்கச் சொன்னாரோ, அப்படி எழுதிக கொடுத்துவிட்டேன்!"

அவன் பேச்சைக் கேட்டதும் பாரிஸ்டர் தமது மூக்குக் கண்ணாடியை எடுத்துத் துடைத்துககொண்டே மெதுவாக, "மிஸ்டர் சேகர், இதில் ஏதும் செய்ய முடியுமென்று எனக்குத தோன்றவில்லை!" என்றார்.

ஒரு நோயாளியை முற்றும பரிசோதித்த பிறகு, அது தீராத நோய என்று டாக்டர் தெளிவாகச் சொல்லிவிடுவது போல இருந்தது அவருடைய பதில். அதைக் கேட்டுச் சேகரன் பிரமித்து நின்றான். உடனே ஆவேசத்தோடு, "ஏன், அந்த நூல் நான்-எழுதியதுதான். கையெழுததுப் பிரதி முழுவதும நான் எழுதியது!" என்றான்.

"அந்த நூலை எழுதியதற்கு உங்கள் பேச்சைத் தவிர வேறு என்ன அத்தாட்சி இருக்கிறது? கையெழுத்துப் பிரதியை நீங்கள் எழுதியிருப்பதனால் 'அச்சுக்குப் போகும் பிரதியை அவர் உங்களைக் கொண்டு தயார் செய்தார்' என்றுதான்

தேறும்; தவிர, உங்கள் கையெழுத்துப் பிரதியைத்தான் அவர் அச்சுக்குக் கொடுத்தார் என்று எப்படிச் சொல்ல முடியும்?''

''அந்த நூலுக்காக நான் சிரமப்பட்டு எழுதிய குறிப்புக்கள் என்னிடம் இருக்கின்றன.''

''இந்த நூலை எழுதுவதற்கு நீங்கள் அவருக்கு உதவி செய்தீர்கள் என்பதுதான் அதிலிருந்து நிரூபணமாகும். அதைத்தான் அவர் முகவுரையிலேயே குறிப்பிட்டிருக்கிறாரே!''

''அப்படியானால் நீங்கள் இதில் ஒன்றுமே செய்ய முடியாதா?''

''உங்களிடம் எந்த ஆதாரமும் இல்லாதவரையில், நான் அவருக்கு எதிராக ஒன்றும் செய்ய முடியாது.''

''நான் பத்திரிகையில் இந்தச் செய்தியை வெளியிட்டால் என்ன?''

''அதனால் என்ன பயன்? போதாக்குறைக்கு அவர் உங்கள்மேல் அவதூறு வழக்குத் தொடர முடியும்.''

''எனக்குப் பதில் சொல்லும் துணிச்சல் அவருக்கு இராது!''

''அதுதான் தப்பு, மிஸ்டர் சேகர்! இம்மாதிரி விஷயங்களில் அவர் இதுவரைக்கும் எத்தனையோ யானைகளை ஜீரணம் செய்திருப்பார்!'' என்று பாரிஸ்டர் புன்னகையோடு பேசினார்.

சேகரன் ஒரு கணம் அசைவற்று நின்று ஒரு பெருமூச்சு விட்டு, ''இப்படிப் பெரும் பூசனிக்காயைச் சோற்றில் மறைப்பது விந்தையல்லவா?'' என்று கேட்டான்.

''இதில் என்ன விந்தை? அநீதியாக இருந்தாலுங்கூட, கோர்ட்டில் அதை நிரூபித்தாக வேண்டும்!'' என்று சொல்லிக் கொண்டே பாரிஸ்டர் கொட்டாவி விட்டார்.

சேகரன் அவருக்கு மௌனமாக வணக்கம் செலுத்தி விட்டு அங்கிருந்து புறப்பட்டான்.

அவன் வாசலுக்குப் போவதற்குள் பாரிஸ்டர் அவனிடம் மிகவும் அநுதாபத்தோடு, ''மிஸ்டர் சேகர், உங்களுக்கு ஏமாற்றம் தருவதைப்பற்றி நான் மிகவும் வருந்துகிறேன்; யூனிவர்ஸிடி யூனியனில் உங்கள் வாதத் திறமையை நான் பல முறை

பார்த்திருக்கிறேன். உங்களுக்கு நான் உதவி செய்ய முடிந் திருந்தால் எனக்கு மிகவும் மகிழ்ச்சி உண்டாகியிருக்கும்'' என்று சொல்லிவிட்டு அவர் சிறிது கனைத்துக்கொண்டார்.

பிறகு, ''நண்பர் என்ற முறையில் நான் உங்களுக்கு ஓர் ஆலோசனை கூற விரும்புகிறேன். அந்த மனிதர் பெரிய இடத் துப் பழக்கம் உள்ளவர். சுயநலத்துக்காக எந்தத் தீச்செயலைச் செய்யவும் தயங்கமாட்டார். நீங்கள் அவர் வழிகுப் போக வேண்டாம். ஒழுக்கக் குறைவான பல பேருக்கு அவர் கடன் கொடுத்திருக்கிறார். அவர்களை உங்களுக்கு எதிராகச் சாட்சி சொல்ல வைத்து, உஙகள்மேல் வழககு நடத்துவார். நான் அன்போடு உங்களுக்குச் சொல்லுகிறேன்: சாமானிய மனிதர்களுக்குப் பிரபலஸ்தர்களை எதிர்க்கும் ஆசை எப் போதும் இருககக்கூடாது. அப்படி எதிர்த்தால் சாதாரண மனிதன் பொடி சூரணமாகி விடுவான'' என்றார்.

சேகரனுக்கு இந்த யோசனை அப்போது பயங்கொள்ளித் தனத்தின் அடையாளமாகத் தோன்றிற்று; ஆயினும, அந்தக் கசப்பான உண்மை சீக்கிரமே பலித்தது.

அந்தப் பெரிய மனிதர் சேகரனுடைய வேலை திருப்திகர மாக இல்லையென்று சொன்னதனால், அவனுடைய உபகாரச சம்பளம் நின்றது. டாக்டர் பட்டமும் கிடைக்காமல் போயிற்று. அவன் வேறு வேலை தேடவேண்டியதாயிற்று.

நகரத்தில் இருந்த காலேஜிலும் முக்கியமான பள்ளிக் கூடங்களிலும ஆலோசனைக் கமிட்டிகளில் அந்தப் பெரிய மனிதர் அஙகத்தினராக இருந்தார். அதனால் அவனுக்கு வாத்தியார் வேலை கிடைப்பதும கஷ்டமாக இருந்தது. கடைசி யில் சர்க்கார் அங்கீகாரம் பெற்ற தனி நிர்வாகப் பள்ளி ஒன்றில் அவனுக்கு வேலை கிடைத்தது. சம்பளம் எண்பது ரூபாய்தான். ஆனால் அவன் பாடம் சொல்லும் திறமை ஊரா ருக்கு நன்கு தெரிந்திருந்ததனால் நிறைய டியூஷன்கள் கிடைத் தன. சம்பளத்தைவிட அதிகமாக இந்த வருமானம் வந்தது. ஊராருக்கு அவனிடமிருந்த அன்பையும் இந்த வருமானத்தை யும் தலைமை உபாத்தியாயரால் பொறுக்க முடியவில்லை.

ஒரு நாள் அவர், 'பள்ளிக்கூடத்து வாத்தியார் எவரும்

சொந்த டியூஷன்கள் வைத்துக்கொள்ளக் கூடாது. அதனால் வாத்தியார்களின் திறமை குறைந்து, பரீட்சைக்குக் குந்தகம் விளைகிறது' என்று சுற்றறிக்கை விடுத்தார். சேகரன் இந்த அறிக்கையை எதிர்த்து அவரிடம் வாதாடினான். அவனுக்கு வேறு போக்கு இல்லை என்பது நன்றாகத் தெரிந்திருந்ததனால் தலைமை உபாத்தியாயர் கண்டிப்பாக, "உங்களுக்கு இந்தப் புது உத்தரவு பிடிக்கவில்லை யென்றால் ராஜீநாமா கொடுத்து விடுங்கள்" என்றார்.

நடந்த ஐந்தாறு ஆண்டுகளில் நிகழ்ந்த இந்தச் சம்பவங்கள் யாவும் மஞ்சுவின் கண்ணெதிரே தோன்றின. 'என் அண்ணனும் கணவரும் நற்குணமும் நல்லறிவும் வாய்ந்திருந்தும் அவர்களுடைய வாழ்க்கை ஏன் இப்படிப் பாழாக வேண்டும்? இந்தச் சமூக அமைப்பில் இன்பமாக வாழ முடியாதபடி அவர்களிடம் என்ன குறை இருக்கிறது?

'அண்ணன் பிடிவாதக்காரன்; வாய்ப் பதற்றமுடையவன்; அவனுடைய பதறும் நாக்கு அவனைக் கெடுத்திருக்கலாம். ஆனால் இவர்! ஒழுக்கமும், நல்ல எண்ணமும், கொழுந்து விடும் சிறந்த கற்பனைகளும் கொண்ட இவரைப் போன்ற இளைஞரைக் காண்பது அரிது. இவ்வளவு இருந்தும் சரியான இள வயதில் இவருடைய வாழ்க்கை மலர் வாடியதேன்? பாசாங்கையும் ஏமாற்று வித்தைகளையும் கண்டாலே இவருக்குப் பிடிக்காது என்பது ஒன்றுதான் இவரிடம் உள்ள குறை.

'ஆனால் இது ஒரு குறையா? நல்ல எண்ணமும் நாணயமும் வாய்ந்தவன் எங்குமே நிலைகொள்ள முடியாதபடி, பாசாங்கையும் ஏமாற்று வித்தையையும் கொண்டுதான் உலக விவகாரங்கள் நடக்கின்றனவா? புகழ் பெற்றவர்களின் சுய நலந்தான் இந்த உலகைத் தாங்குகிறதா? அந்தச் சுயநலம் இல்லாமையினால்தான் இவர் எங்கும் நிலைக்க முடியவில்லையா?' என்று அவள் நினைக்கலானாள்.

கடந்த வருஷம் நடந்த ஒரு சம்பவம் அவளுக்கு ஞாபகம் வந்தது :

சேகரனுக்கு அப்போதுதான் காலேஜ் வேலை போய் மேலே என்ன செய்வது என்ற சிந்தனையில் அவன் ஆழ்ந்திருந்

தான். அப்போது ஒரு நாள் சாயந்தரம் பல பள்ளிக்கூடங்களில் சசசரவு செய்துவிட்டு வெளிவந்த ஒரு சண்டைக்காரப் பேர்வழி அவனிடம் வநதார். "நீங்களும் உங்கள் மனைவியும் முன் நின்று பிள்ளைகளுக்கும் பெண்களுக்குமாக இரண்டு பள்ளிக்கூடங்கள் நடத்துங்கள். அதற்கு வேண்டிய முதலை நான் கொடுக்கிறேன்" என்றார்.

"வாத்தியார்களின் சம்பளத்திற்கு நீங்கள் என்ன திட்டம் போடுகிறீர்கள்?" என்று சேகரன் கேட்டான்.

"ஆரம்பத்தில் நம்மால் அதிகச் சம்பளம் கொடுக்க முடியாது. பள்ளிக்கூடம் நிலைத்ததும் பி. ஏ.க்களுக்கு ஐம்பது ரூபாயும், எம். ஏ.க்களுக்கு எழுபது ரூபாயும் கொடுக்கலாம்."

"இந்தச் சம்பளத்தில் வாத்தியார்கள் எப்படி வாழ முடியும்?"

"அது நம்முடைய பிரச்னையல்ல. பள்ளிக்கூடம் ஓங்குவதற்குத் தேவையான பணத்தைச் சேம நிதியாக வைத்து விட்டு மீதியை வாத்தியார்களுக்குச் சம்பளமாகக் கொடுத்து விடுவோம்."

"இந்தக் குறைந்த சம்பளத்தில் வாத்தியார்கள் மனமுவந்து வேலை செய்வார்களா?"

"செய்யாமலென்ன? வெற்றுப் பட்டம் பெற்றவர்களுக்கு வெளியே இந்தச் சம்பளந்தான் எங்கே கிடைக்கிறது?"

"பட்டதாரிகளை இவ்வளவு குறைந்த சம்பளத்தில் வேலை செய்யச் சொல்வதனால் நீங்கள் கல்வியின் தரத்தையும் மனிதத்தன்மையின் மேன்மையையும் குறைத்துவிடுவதாகத் தோன்றவில்லையா?"

"வேலையில்லாத் திண்டாட்டத்தினால் அவை தாமாகக் குறைகின்றன, ஐயா! நம்முடைய நாட்டின் நிலை இது. இதற்கு நாம் என்ன செய்வது?"

"பள்ளிக்கூடம் முன்னுக்கு வந்த பிறகுகூட நீங்கள் இதே சம்பளந்தான் கொடுப்பீர்களோ?"

"ஒரு தரம் திட்டம் போட்டால் அதன்படி ஸ்திரமாக நடக்க வேண்டியதுதான்!"

"அந்தத் திட்டத்தை யார் போடுவது?"

"நீங்களும் நானும்! நாம் ஓர் ஆலோசனைக் கமிட்டியை நியமிப்போம். அந்தக் கமிட்டியார் நம்மை எதிர்த்துப் போய் விடுவார்களோ என்ற அச்சம் வேண்டாம். பணம் போடுகிற வன் நான். நீங்கள் இருவரும் உங்கள் அறிவைச் செலவழிக்கப் போகிறீர்கள். நம்முடைய இந்த மூலதனத்திற்கு வட்டி கிடைக்க வேண்டாமா? அதனால்தான் சொல்கிறேன்: பள்ளியின் முன் னேற்றத்துக்கும் நம்முடைய முதலீட்டுக்கும் தேவையான பணத்தை ஒதுக்கிவிட்டு மிஞ்சுவதை வாத்தியார்களுக்குச் சம்பளமாகக் கொடுப்போம்."

"இவ்வளவு குறைநத சம்பளம் கொடுக்கும் பள்ளிக்குச் சர்க்கார் அங்கீகாரம் எப்படிக் கிடைக்கும்?"

"அடடா! அது ரொம்பச் சுலபமாச்சே! வெவ்வேறாக இரண்டு கணக்குகள் வைத்துக்கொள்ள வேண்டும். ரொக்கச் சம்பளம் வேறு; பட்டியலிலுள்ள சம்பளம் வேறு. இது எங்கும் நடக்கும் விவகாரந்தானே!"

"இந்த விவகாரத்தில் நான் கலந்துகொள்ள முடியாது. என்னை மன்னியுங்கள்!"

மஞ்சுவுக்கு இந்தப் பழைய சம்பவம் ஞாபகத்துக்கு வந்ததும், 'உலக விவகாரம் தெரியாததனால்தான் இவர் வாழ்வு தடைப்படுகிறதா? அப்படியானால் கரி டிப்போ மாத் திரம் எப்படி நடக்கும்?' என்று சிந்திக்கலானாள்.

அதே சமயத்தில் ராமு சாப்பாட்டை முடித்துத் தண்ணீர் குடித்துக்கொண்டே, "உனககு வேலை கிடைத்திருக்கிறதாமே மஞ்சு?" என்று கேட்டான்.

"உனக்கு யார் சொன்னது, அண்ணா?"

"உன் அண்ணிதான் சொன்னாள். மேலும் அவள் சொல் கிறாள்; 'பணத்துக்காக நீங்கள் என்னைத் தொந்தரவு படுத் துவது போதும். நம் இருவருக்குந்தான் ஜன்மத்துக்கும் தீராத பிணைப்பு இருக்கிறது. அவளைப் போய் வேறு இம்சிக்க வேண் டாம்' என்கிறாள். ஏன் மஞ்சு, உன்னை நான் பணத்துக்காக எப்போதாவது தொல்லைப்படுத்தியது உண்டா?"

மஞ்சு ஒன்றும் பேசவில்லை. தன் கண்முன்னால் புகை சூழ்ந்திருப்பதாக அவளுக்குத் தோன்றியது.

பல மாதங்களாக ராமு தலைமயிரை வெட்டிக்கொள்ளாத தனால் காடாக வளர்ந்திருந்தது. விளக்கு ஒளியில் இரண்டொரு நரைமயிர் பளபளத்தது. கறுத்து வறண்டுபோன அவன் முகத்தில், பள்ளமாக ஆழ்ந்திருந்த அவன் கண்ணில், வெகு தொலைவிலிருந்து ஓர் ஆனந்தம எட்டிப் பார்த்தது.

இன்னொரு வாய்த் தண்ணீர் குடித்துவிட்டு அவன் இலையிலிருந்து எழுந்தான்.

"மஞ்சு, நீ சேகரனிடம் சொல்லு என்னிடம் அவன் கோபித்துக்கொள்ள வேண்டாம். இந்தக் கேஸ் ஜயித்ததும் நஷ்ட ஈடாக எனக்குப் பத்தாயிரம் ரூபாய் கிடைக்கப் போகிறது. அதில் உனக்குப் பாதிப் பணம் கொடுக்கிறேன்!" என்று சொல்லிக்கொண்டே அவன் கையலம்பப் போனான்.

மஞ்சு வாயைத் திறக்கவில்லை.

கண்ணில் பொங்கிவந்த நீரை அவள் தன் சேலைத் தலைப்பினால் ஒற்றிக்கொண்டாள்.

## 3

"மஞ்சு, கொஞ்சம் பாக்கு இருந்தால் கொடேன்!" என்று ராமு குழாயில் கையை அலம்பிவிட்டு, வேஷ்டித் தலைப்பில் கையைத் துடைத்துக்கொண்டே சொன்னான்.

மஞ்சு பேசாமல் செல்லப் பெட்டியை எடுத்து வந்து, அவன் போதும் என்று சொல்லும் வரைக்கும் ஸ்பூனால் பாக்குப் பொடியை எடுத்து அவனிடம் கொடுத்தாள்.

கைநிறைய இருந்த பாக்குப் பொடியை வாயில திணித்துக் கொண்டு, "முன்னெல்லாம் போல இதில் ஏலமும் லவங்கமும் இல்லையே, மஞ்சு?" என்று கேட்டுவிட்டு, ராமு நடு அறைககு வந்தான்.

மஞ்சு சட்டென்று முன்னால் வந்து அந்த அறையின் வெளிக கதவைத் திறந்தாள்.

அவள் இப்படி நடந்துகொள்வதன் கருத்தை அவன் புரிந்துகொண்டான். வாசலை விட்டு வெளியே போனபோது மெதுவாக, "உனக்குங்கூட என்மேல் கோபம்போல் இருக்கிறது, மஞ்சு!" என்றான்.

அவள் பேசாமல் கதவைப் போட்டுக்கொண்டு உள்ளே

வந்து, பற்றுப் பாத்திரங்களைக் குழாயண்டை வைத்தாள்.

பாத்திரங்களைத் துலக்கிவிட்டுச் சமையலறையை அலம்பிய பிறகு அவள் நன்றாகக் கையைக் கழுவிக்கொண்டு வெளியறைக்கு வந்தாள்.

சேகரன் சாய்வு நாற்காலியில் கண்ணை மூடியவண்ணம் படுத்திருந்ததை அவள் பார்த்தாள்.

அவள் மெதுவாகப் பின்னால் சென்று மேஜை விளக்கைப் போட்டாள்.

உடனே சேகரன் எழுந்து உட்கார்ந்து, "போனானா உன் அண்ணன்?" என்று கேட்டான்.

"அவன் அப்போதே போய்விட்டானே! நீங்கள் இவ்வளவு நேரமாக எதைப் பற்றிச் சிந்திக்கிறீர்கள்?"

"ஒரு சிந்தனையுமில்லை, நான் இளைப்பாறினேன்."

"ஏன்? இன்று பள்ளிக்கூடத்தில் வேலை அதிகமோ?"

"அப்படி ஒன்றுமில்லை. வேலை செய்யாமலே மனிதனுக்குச் சில சமயம் ஓய்ச்சலாக இருப்பதில்லையா?"

அவள் அரைக்கணம் மௌனமாக இருந்தாள். பிறகு, "இன்று நீங்கள் உங்கள் கட்டுரையை முடிக்கப் போவதாகச் சொன்னீர்களே!" என்றாள்.

"ஆமாம். அந்தக் கட்டை எடுத்துக் கடைசி அத்தியாயத்தைப் படி, பார்க்கலாம்!"

நீல நிறக் காகிதத்தில் குண்டு குண்டாக எழுதியிருந்த அந்த நீண்ட கட்டுரையில் அவள் ஏழெட்டு வரிகளைப் படிப்பதற்குள், நடு அறையிலிருந்து அழுகைச் சத்தம் வந்தது

அவள் அந்தக் கட்டை அப்படியே மேஜைமேல் வைத்துவிட்டு, நாற்காலியிலிருந்து எழுந்து, "நந்து தூக்கத்தில் விழித்துக்கொண்டான்போல் இருக்கிறது. நான் அவனைத் தட்டித் தூங்கப் பண்ணிவிட்டு வந்து மேலே படிக்கிறேன்" என்றாள்.

அவள் நந்துவைத் தூங்க வைத்துவிட்டு வெளியே வந்தபோது, சேகரன் மறுபடி கண்ணை மூடிக்கொண்டு அசையாமல் படுத்திருந்தான்.

மேஜைமேல் இருந்த கட்டைக் கையில் எடுத்துக்கொண்டு, "மேலே படிக்கட்டுமா?" என்று அவள் கேட்டாள்.

அவளுடைய கேள்விக்குப் பதில் சொல்லாமலே அவன் திடுமென்று எழுந்து, "இன்று இந்த இரண்டு குழந்தைகளின் பாரம் நமக்கு இல்லாமலிருந்தால், நாம் அடியோடு கவலையற்று இருப்போம் அல்லவா, மஞ்சு?" என்ருன்.

"குழந்தைகளின் பாரமா?" என்று அவள் திகைப்போடு கேட்டாள். பாரம் என்ற சொல் அவள் மனத்தைச் சுட்டிருப்பது, அவளுடைய அந்தக் கேள்வியில் நன்ருகத் தெரிந்தது. அந்த இரண்டு வார்த்தைகளோடு அவள் தன் பேச்சை நிறுத்திக்கொண்டாள்.

"மஞ்சு, நீ என் பேச்சை அப்போது கேட்டிருந்தால், கல்யாணமாகி நாலு வருஷங்களுக்குள் இந்த இரண்டு குழந்தைகளின் பளு நம்மேல் விழுந்திருக்காது!"

"பாவம்! அவர்கள் அப்படி என்ன பளுவாக இருக்கிருர்கள்?"

"ஏன் அப்படிச் சொல்கிருய், மஞ்சு? குழந்தைகளை வளர்க்கும் பொறுப்பு, பெரியவர்களைப் பராமரிக்கும் பொறுப்பைக் காட்டிலும் பெரிதாகும். நாகபுரியில் நம்மால் நிலைக்க முடியாவிட்டால் வேறு எந்த ஊருக்காவது போய் நம் தலையெழுத்தைப் பார்த்துவிடலாம் என்று எத்தனையோ தடவை நான் நினைப்பதுண்டு. ஆனல் சிலந்தி வலையில் சிக்கிய ஈயைப் போல, இந்தக் குழந்தைகளின் பாசத்தில் நாம் கட்டுண்டிருக்கிருேம். இந்த மாய வலை நம்மை எந்தத் துணிச்சலான செயலுக்கும் போக விடுவதில்லை. மணமானதும் நான் உன்னிடம் பல தடவை வற்புறுத்திச் சொன்னேன். ஆனல் உனக்குக் குழந்தைகள் வேண்டுமென்று மிகுதியான ஆசை!"

"பின்னல் நமக்கு இப்படிக் கஷ்ட காலம் வரப் போகிறது என்று நான் கண்டேனு என்ன? நீங்கள் டாக்டர் பட்டம் பெற்றுப் புரொபஸர் ஆகிவிடுவீர்கள் என்றுதானே நாம் அப்போது மனக்கோட்டை கட்டினேம்? அந்த மகிழ்ச்சிப் பெருக்கில் நீங்களேதான் குழந்தைக்கு ரஞ்சிதம் என்று பெயர் வைத்தீர்கள். இரண்டு வருஷங் கழித்து நந்து பிறந்தபோது கூட, நமக்கு இவ்வளவு தொந்தரவு வரும் என்று நாம் எதிர் பார்க்கவில்லை. இன்று காலம் மாறிவிட்டது. பெற்ற குழந்தை

களே உங்களுக்குப் பாரமாகத் தோன்றுகிறார்கள்!" என்று சொன்னபோது, மஞ்சுவின் குரலில் இருந்த நடுக்கத்தை அவன் உணர்ந்தான். தனக்குள் அடங்கிப் போய் அவன் பேசாதிருந்தான்.

"குழந்தைகளுக்காக நாம் அதிகமாக என்ன செய்து விடுகிறோம்? பழங்காலத்தில் வருமானம் எவ்வளவுதான் குறைவாக இருந்தாலும், 'கொடிக்குக காய் கனமா என்ன?' என்று பெற்றோர்கள் சொல்லி வந்தார்கள்" என்றாள் மஞ்சு.

அவள் பேசியதும் சேகரனுக்குச் சிறிது உற்சாகம் உண்டா யிற்று. அவனும் மனம் விட்டுப் பேசலானான்: "பழங் காலத் தவர்கள் அப்படிச் சொன்னதற்குக் காரணம் உண்டு. குழந்தை வளர்ப்பைப் பற்றி அவர்க்ளுடைய கொள்கைகளே வேறு. சாப்பாடு போடுவதும், பள்ளிக்கு அனுப்புவதும் தவிர, அவர்கள் குழந்தைகளுக்கு வேறு ஒன்றும் செய்ய மாட் டார்கள். ஆகையால் எத்தனை குழந்தைகள் பிறந்தாலும் அவர் களுக்கு அது பாரமாக இருந்தது. ஆனால் நம்முடைய விஷயம் அப்படி இல்லையே? நமக்கு இரண்டே குழந்தைகள் இருந் தாலும், அவர்களுடைய துணிகளும் பொம்மைகளுமே ஓர் அறை முழுகக நிறைந்து கிடக்கின்றனவே!"

"அப்படிச் சொல்லாதீர்கள்; பழங்காலத்து மனிதர்களுக் கும் மட்டான ஆசை இருக்கவில்லை!"

"நீ சொல்வது சரி. ஆனால் அந்த ஆசை அவர்களுக்குச் சொந்த விஷயத்தில் இருந்தது. குழந்தைகளின் ஆசை என்ன, அவர்களின் விருப்பு வெறுப்புகள் யாவை என்று ஆராய்ந்து குழந்தைகளை வளர்க்கும் கொள்கையே பழங் காலத்தவர் களுக்கு அடியோடு தெரியாது. தங்கள் சொந்த ஆசையைக் குழந்தைகளின்மேல் சுமத்தி, அவர்கள் குழந்தைகளைத் துன் புறுத்தி வந்தார்கள்."

"சேச்சே, நீங்கள் சொல்வது சரியல்ல! சிறு வயதிலேயே நீங்கள் பெற்றோரை இழந்து விட்டமையால் பழங் காலத்தவர் களைப் பற்றி உங்களுடைய எண்ணமே விசித்திரமாகத்தான் இருக்கிறது!"

"என் சிறு பிராயத்தில் தாய் தந்தையர் போய்விட்டத

ஞலே என்ன, மஞ்சு? எங்கள் மாமா சொந்தக் குழந்தைகளைப் போலவே என்னையும் வளர்த்தார். நீ காலையில் எழுந்ததுமே குழந்தைகளுக்குப் பிஸ்கட்டும் ஓவல்டின்னும் கொடுக்கிருயே. எங்கள் பாட்டி எங்களுக்குக் காலையில் பழையதுதான் போடுவாள்!''

''பழையது உடம்புக்கு எவ்வளவோ நல்லதாசசே!''

''அப்படியாளுல் நாளை முதல் ஓவல்டின்னை நிறுத்திவிட்டு, நம் குழந்தைகளுக்குப் பழையது போடு! பணமும் மிசச மாகும். எங்கள் மாமா மாதம் ஐம்பது ரூபாயில் எட்டுக் குழந்தைகளை வளர்த்தார். அது எப்படி, தெரியுமா? முதல் வகுப்புக்குப் பையன் போகும்போது தைத்த சட்டைகளையும் வாங்கிய துணிகளையும், கடைசி வகுப்பு வரைக்கும் அவன் வைத்துக்கொள்ள வேண்டும். முக்கால் வாசிப் புத்தகங்களை இரவல் வாங்கிப் படிக்க வேண்டும். நோட்டுப் புத்தகம் வாங்குவதென்ருல் மூக்கால் அழுவார். இரவில் சில நாளைக்குப் பால் கிடைக்கும், சில நாள் அதுவும் இல்லை. பிஸ்கட் என்னும் பொருளை எஙகள் வாய் தீண்டியதே இல்லை. பையன் காலேஜுக்குப் போகும் வரைக்கும் காலில் செருப்புப் போடக் கூடாது. இந்த லட்சணத்தில் குழந்தைகளை வளர்த்ததற்காக அவரிடம் அவர்கள் அன்போடும் நன்றியறிவோடும் இருக்க வேண்டுமாம்; அவருக்கு மாதந்தோறும் பணம் அனுப்ப வேண்டுமாம்!''

''உங்கள் கொள்கையை உறுதிப்படுத்துவதற்காக நீங்கள் மிகைப்படுத்திப் பேசுகிறீர்கள். இந்த உயர்வு நவிற்சி எனக்குப் பிடிக்கவில்லை!''

''இதுவா உயர்வு நவிற்சி, மஞ்சு? நான் உண்மையைச் சொல்கிறேன்: அவ்வளவு சங்கடத்திலும் அவருடைய அதிகாரத்திலும் வளர்ந்தமையிளுல்தான் என் கண்பார்வை கெட்டுப் போயிற்று. எனக்கு எந்த விளையாட்டும் தெரியவில்லை. பயங்கொள்ளித்தனமும், மனிதர்களைக் கண்டால் வெறுப்பதும் என் இயல்புகளாயின. என் மன வளர்ச்சி குன்றியது.''

''உங்கள் பேச்சை யாராவது உண்மையென்று நம்பு

வார்களா? மன வளர்ச்சி குன்றிப் போயிருந்தால், நீங்கள் பி. ஏ.யில தொடர்ச்சியாக இரண்டு விஷயங்கள் எடுத்துக் கொண்டு முதல் வகுப்பில் தேர்ச்சி பெற்றிருக்க முடியுமா? புளுகினாலும் பொருந்தப் புளுக வேண்டும்!''

''நான் முதல் வகுப்பில் பாஸ் செய்தது வாஸ்தவம்; அதிலிருந்தே பாரேன்! இப்போது நீ ரஞ்சிதத்தையும் நந்துவை யும் வளர்ப்பதுபோல மாமா என்னை வளர்த்திருந்தால், நான் ஒரு ரானடேயாகவோ ஒரு ராதாகிருஷ்ணனாகவோ வந்திருப் பேனே! எம். ஏ க்குப் படித்துங்கூட இன்று நான் பள்ளிக்கூட வாத்தியாராகக் கிடப்பதற்குக் காரணம், சிறு வயதில் என்னை யாரும் சரியாக வளர்க்காமையேதான்! நீ தினந்தோறும் சாயந்தரம் குழந்தைகளைப் பார்க்குக்கு அழைத்துப் போகிறாய். தெருப் புழுதியில் கோலி விளையாடியும், அயலாரிடம் அடி பட்டுமே என் சிறு பருவம் கழிந்தது. குழந்தை வளர்ப்பைப் பற்றிய புதிய விஞ்ஞானக் கொள்கைகள் இப்போது அமலுக்கு வந்திருப்பதனால், இநதக் காலத்தில் ஒரு குழந்தை பெறுவ தென்பது மிகுந்த செலவும் பொறுப்பும் வாய்ந்த விஷயமாகி விட்டது!''

''அதனால் என்ன, குழந்தைகளே பெற்றுக்கொள்ளக் கூடாது என்கிறீர்களா? இங்கிலாந்தில் பண்பாடு மிகுந்த உயர் வகுப்பினர் கர்ப்பத்தடை செய்வதனால்தான் நோஞ்சல் குழந்தைகள் பிறக்கின்றன என்று ரஸஸல் கூச்சல் போடு கிறார். நம்முடைய நாட்டிலோ, படித்துப் பட்டம் பெற்ற அறிவாளியான உங்களுக்கு இரண்டு குழந்தைகளே பாரமாக இருக்கின்றன. நல்ல வேடிக்கைதான் இது!''

''இதில் என்ன வேடிக்கை, மஞ்சு? பொறுப்பு உணர்ச்சி யினால்தான் குழந்தைகள் வேண்டாம் என்று தோன்றுகிறது. நாம் இரண்டு பேரும் இப்போது விட்டேற்றியாக இருந்தால் எங்கே வேண்டுமானாலும் போக முடிந்திருக்கும். உன்னுடைய அந்தத் தோழி அம்புஜம், கான்பூரில் நல்ல வேலை கிடைப்ப தாகத் தோன்றியதும் கணவனோடு நாகபுரியிலிருந்து போய் விடவில்லையா? நீ இங்கிருந்து அப்படிப் போக முடியுமா? இதற்காகவே குழந்தைகள் வேண்டாம் என்றேன்.''

"எதையாவது கண்டபடி பேசாதீர்கள்! மாமா வீட்டில் நீங்கள் பல தொந்தரவுகளிலும் தனிமை மனப்பான்மையிலும் வளர்ந்திருக்கிறீர்கள். குழந்தைகள் நிறைந்த வீட்டின் ஆனந்தத்தைப்பற்றி உங்களுக்கு அடியோடு ஒன்றுமே தெரியாது!"

"உன் பிடிவாதத்தினாலதான் இப்போது அந்த ஆனந்தத்தை வீட்டில் நான் அநுபவிக்கிறேனே!" என்று அவன் சிரித்துகொண்டே சொல்லிவிட்டு, அன்போடு அவளுடைய இரு கைகளையும் பற்றினான்.

"எந்த விஷயத்தை நான் பேசக்கூடாதோ அதையே இப்போது பேசிவருவது எனக்குத் தெரியும், மஞ்சு! ஆனாலும் நான் என்ன செய்வது! மனிதனுக்குச் சில சமயம் பைத்தியம் பிடித்தாற்போல ஆகிவிடுகிறது. சற்று நேரம் முன்பு ராமு வந்ததனால் எனக்குச் சோறே கசந்துவிட்டது; இப்போது நீ படிக்க ஆரம்பித்ததும் நந்து எழுந்துவிட்டான். மனிதன் எவ்வளவுதான் பொறுப்பது? – ராமு என்ன சொல்கிறான்?"

"என்னத்தைச் சொல்வது! எப்போதும் உள்ள பேச்சுத்தான்! அண்ணியைப் பற்றிய குறைகளும், வழக்கைப் பற்றிய செய்தியும்!"

"இந்திரா வெகு நாளாக நம் வீட்டுக்கு வரவே இல்லையே?"

"எப்படி வர முடியும்? ஆறுமணி நேரம் பள்ளியில் பாடஞ் சொல்ல வேண்டும்; வீட்டில் மூன்று குழந்தைகளைக் கவனிக்க வேண்டும்; போதாக் குறைக்கு இவ்வளவு அழகான என் அண்ணன் வேறு இருக்கிறான்! சனி, ஞாயிறுகளில் கொஞ்சம் ஓய்வு கிடைக்கும். அவள் இப்போது மெட்றிகுலேஷனுககுப் படிப்பதனால் அந்த ஓய்வில்கூட எங்கும் போக முடியாது."

"அவள் ஏதுக்கு மெட்றிகுலேஷனுக்குப் படிககிறாள்?"

"பின்னே என்ன செய்வது? லோயர் செகண்டரி தேறின வாத்தியாரம்மாளுக்குச் சம்பளம் என்ன புரண்டுவிடும்? மெட்றிக் பாஸானால் மேல் வகுப்புக் கொடுப்பார்கள்; சம்பளமும் கொஞ்சம் உயரும்."

"அவளுடைய துன்பங்களைப் பற்றி இந்த ராமு ஒன்றுமே நினைப்பதில்லையோ?"

"வீட்டு விஷயங்களையே கவனிக்காமல் திரியும் பிடிவாதக் காரனான அவன் இதைப்பற்றி ஏன் நினைக்கப் போகிறான்? அவள் எதற்காக வேலை செய்கிறாள் என்பதே அவனுக்குத் தெரியாது. உங்களுக்குக் கூட ஐயாயிரம் ரூபாய் கொடுப்ப தாக அவன் என்னிடம் சொல்லிப் போயிருக்கிறான்!"

"எனக்குக் கொடுக்க ஐயாயிரம் ரூபாய் அவனிடம் எங்கி ருந்து வந்தது?"

"கோர்ட்டில் நஷ்ட ஈடாகப் பதினாயிரம் ரூபாய் கிடைத் ததும் அதில் ஐயாயிரம் ரூபாய் உங்களுக்குக் கொடுக்கப் போகிறானாம்!" என்று சொல்லி, மஞ்சு சிரித்தாள்.

இவ்வளவு நேரமாகப் பேசிய அவளுடைய தாமரை முகத் தில் இப்போதுதான் முதல் முதலாகச் சிரிப்பு மலர்ந்தது. ஆனால், நிலவை மறைத்த முகில் விலகி நிலா வீச ஆரம்பித் ததுமே மற்றொரு மேகம் அதை மறைப்பது போல, அவளு டைய வதனத்தை வருத்தம் கவ்வியது.

அவள் ஒரு பெருமூச்சு விட்டு, "அவன் மூளை எப்போது தான் வழிக்கு வரப்போகிறதோ! அவன் எப்படித்தான் உருப் படப் போகிறானோ, தெரியவில்லை. பாவம், அண்ணிதான் அந்த வீட்டில் தாயும் தகப்பனுமாகப் பொறுப்பு ஏற்றுக்கொள்ள வேண்டியிருக்கிறது!" என்றாள்.

"ஆமாம், அந்த வீட்டில் மூன்று குழந்தைகளோடு இவன் நாலாவது குழந்தை!"

"குழந்தையாக இருந்தாலும் சமாளிக்கலாமே. அண்ணா குழந்தையிலும் சேர்த்தி இல்லை; புருஷனிலும் சேர்த்தி இல்லை! அவளாக இருக்கவே அவனோடு தைரியமாகக் குடித் தனம் நடத்துகிறாள்."

"இத்தனை பேருக்கு, அவள் கொண்டுவரும் ஐம்பது அறுபது ரூபாய் எப்படிப் போதும்?"

"எப்படியோ அவள் சமாளிக்கிறாள். நமக்கு நூற்றைம் பது ரூபாய் வந்தும் இரண்டு குழந்தைகள் உங்களுக்குப் பார மாக இருக்கின்றன. மனிதர்களுக்கு எவ்வளவுதான் பணம் கிடைத்தாலும், அது போதுமா என்ன? முந்தாநாள் சரளா என்னிடம் சொன்னாள்—இந்தப் பஞ்ச காலத்தில் அவர்களுக்கு

வாழ்வதற்கே கஷ்டமாக இருக்கிறதாம்! கணவனும் மனைவியு மாகச் சேர்ந்து மாதம் எண்ணூறு ரூபாய் சம்பாதிக்கிறார்கள். அப்படி இருந்தும்—''

''உன்னுடைய அந்தச் சரளாவின் பேச்சை என்னிடம் சொல்லாதே. அவர்கள் வீட்டில் எவ்வளவு பணம் வந்தாலும் போதாது. பெரிய சர்க்கார் அதிகாரிகள் எப்போதும் இப் படித்தான அழுகிறார்கள். பள்ளிக்கூட இன்ஸ்பெக்டிரெஸான அவளுக்கு இப்போது முந்நூறுக்கு மேல் சம்பளம் இருக்கும். பப்ளிக பிராசிக்யூடர் ஆனதிலிருந்து கோவிந்தனுக்கும் வக்கீல் தொழில் பிரபலமாக நடக்கிறது. அவர்கள் இருவரும் நாற்பதி னாயிரத்துக்கு இன்ஷ்யூரென்ஸ் எடுத்துக்கொண் டிருக்கிறார்க ளாம். தவிர மாதந்தோறும் காஷ் சர்ட்டிபிகேட்டுகள் வாங்கிய வண்ணமாக இருக்கிறார்கள். வருமானம் எப்படித்தான் போதும்? இவ்வளவு பணம் வருகிறதே; பொது நலத்துக் காகக காலணா செலவழிக்கிறார்களா என்று கேட்டுப் பார்! காரும பங்களாவும், சோலையும் கோடை வாசஸ்தலமும் தவிர அவளுக்கு வேறு உலகமே தெரியாது.''

''அதிருஷ்டம் இருக்கிறது; சுகபோகங்களை அநுபவிக்கி றார்கள்! நாம் ஏன் பழிக்க வேண்டும்?''

''நான் ஒன்றும் உன் தோழியைப் பழிக்கவில்லையே! இவ் வளவு கேளிக்கையில் வாழ்ந்து பிறருக்குப் பயன்படாமலிருந் தும் அவர்கள் எப்போதும் கமயூனிஸத்தைப் பற்றிப் பேசுகிறார் களே, அதுதான் எனக்கு ஆத்திரமாக இருக்கிறது. அவர்களை விட எங்கள் பம்பு ஸேட் எவ்வளவோ தேவலை. அவன் ஏராள மாகச் சமபாதிக்கிறான்; ஏராளமாகச் செலவழிக்கிறான். கூட நான்கு நண்பர்கள் இருந்தாலொழிய அவனுக்கு எதுவும் ரஸிக்காது.''

''சரளாவும் தன் தோழிகளிடம் தாராளமாகத்தான் நடந்துகொள்கிறாள்; தெரியுமா?''

''தாராளம் என்றால் என்ன அர்த்தம், மஞ்சு? வருஷத் துக்கு ஒரு முறை எல்லாரையும் ஊருக்கு அழைத்துப்போய்ச் சாப்பாடு போடுகிறாள். குழந்தைகளின் ஆண்டு நிறைவுக்கு

டிபார்ட்டி வைக்கிறாள். இவ்வளவுதானே? அந்த ஊர் விருந்தில் அவர்கள் எவ்வளவு வேலைகளைச் சாதித்துக்கொள்கிறார்கள், தெரியுமா? கலை, கம்யூனிஸம், முற்போக்கு இலக்கியம் – இவையெல்லாம் மேலுக்குப் பேச்சோடு சரி. உள்ளூறத் தங்கள் காரியங்களைச் சாதித்துக்கொள்வதில் கணவன் மனைவி ஆகிய இருவருமே நிபுணர்கள்!"

தன் தோழியைப்பற்றிச் சேகரன் செய்த இந்த விமரிசனம் மஞ்சுவுக்குப் பிடிக்கவில்லை.

சரளா அவளுடைய உயிர்த் தோழி. மஞ்சு காலேஜில் படித்தபோது நவராத்திரி விழாவில் சரளாவை முதல் முதலாகத் தெரிந்துகொண்டாள். சரளா அப்போது பி. ஏ. வகுப்பில் இருந்தாள். இருவருக்கும் வயதிலும் அந்தஸ்திலும் வேற்றுமை இருந்தபோதிலும், அவர்களுடைய நட்பு வேகமாக வளர்ந்தது. காலேஜில் ஒவ்வொரு கொண்டாட்டத்திலும் அவர்கள் இணையாகப் பங்கெடுத்துக்கொள்வார்கள்.

ஒரு தடவை நாடகத்தில் அவர்கள் மகாசுவேதையாகவும் காதம்பரியாகவும் நடித்தார்கள். அவர்களுடைய நடிப்பு காலேஜ் முழுவதும் புகழ்பெற்றது.

பி. ஏ பாஸானதும் சரளா உபாத்திமைப் பயிற்சிக்காக இங்கிலாந்துக்குப் போனாள் அங்கிருந்து திரும்பியதும், எஸ். எஸ். எல். ஸி போர்டின் செக்ரெடரியாக இருந்து வேலையிலிருந்து ரிடையரான தகப்பனாரின் சிபாரிசினால், உதவி இன்ஸ்பெக்டிரஸ் வேலைக்குப் போனாள்.

பெண்கள் கல்வி, குழந்தைகள் கல்வி முன்னேற்றங்களில் அவள் முக்கியப் பங்கு கொண்டாள். கோவிந்தனோடு மணமானதும் அரசியலிலும் அவள் கவனம் செலுத்தினாள். 'முற்போக்கு' என்ற புரியாத, ஆனால் நவ நாகரிகமான சொல்லை அவள் அடிக்கடி உபயோகித்தாள். அதை அவள் ஒரு பெருமையாக நினைத்தாள். பள்ளியில் படித்த நாளிலிருந்தே அவளுக்குக் கவிதை பாடும் பழக்கம் உண்டு. அவளுடைய முற்போக்குக் கொள்கைகள் யாவும் கவிதையாக வெளிவந்தன. நுண் கலைகளிலும் அவளுக்கு மிகுந்த விருப்பம் உண்டு. நாகபுரியில் நாட்டியமோ சங்கீதக் கச்சேரியோ எங்கே நடந்தாலும்

அங்கே முதல் வரிசையில் அவளைக் காணலாம். கோவிந்த னுக்கு இலக்கியத்திலோ சங்கீதத்திலோ துளியும் பிடித்தம் கிடையாது ஆனால் மனைவியின் கலைப் பித்தினால் தமது பெருமை சிறப்பாகச் சோபிக்கும் என்று அவர் எண்ணிய தனால் அவளுடைய முயற்சிகளைப் பெரிதும் தூண்டி வந்தார்.

சரளாவின் சிபாரிசினால்தான் மஞ்சுவுக்குப் பெண்கள் பள்ளியொன்றில் பாதிநாள் வேலை கிடைத்தது. அவர்கள் இரு வரின் அந்தஸ்திலும் மிகுந்த வித்தியாசம் இருந்தபோதிலும், சரளா நாகபுரிக்கு வரும்போதெல்லாம் மஞ்சுவைப் பார்க்கா மல் போகமாட்டாள். அவர்கள் இருவரும் ஒன்றாகச் சேர்ந்து சினிமாவுக்கோ, குழந்தைகளை அழைத்துக்கொண்டு வன போஜனத்துக்கோ செல்வார்கள்.

சரளாவின் செயற்கையான வேஷமும், ஆடம்பரமும், எதற்கும் கணக்குப் பார்க்கும் தன்மையும் மஞ்சுவின் கண் ணில் படவில்லை என்று சொல்ல முடியாது. ஆயினும் நட்பும் நன்றியறிவும் நிரம்பியவளாதலால், சரளாவை எதிர்த்து யார் பேசினாலும் அதை அவள் விரும்பமாட்டாள்.

ஆனால் சேகரனுக்கோ, தம்மையே எப்போதும் நினைத்துக் கொண்டு சுயநலத்தோடு வாழ்ந்த அந்தத் தம்பதிகளிடம் உள் ளூற வெறுப்பு ஏற்பட்டிருந்தது. கோவிந்தனுடைய அரசியல் நடவடிக்கை எத்தகையது என்று மஞ்சுவுக்கு அடியோடு தெரி யாது. காங்கிரஸ் மந்திரி சபையின் திருவருளால் பப்ளிக் பிரா ஸிக்யூடர் ஆனதிலிருந்து சர்க்கார் வழக்குகளை அதிகப்படுத்தி அவற்றைக் கூடியவரைக்கும் ஒத்திப் போடுவதற்கு அவர் செய்த முயற்சிகளும், தம் பதவியினால் வழக்கை வெல்ல முடியும் என்று ஆசைகாட்டிக் கட்சிக்காரர்களிடம் அவர் வாங்கிய லஞ்சங்களும், மேலதிகாரிகளிடம் அவர் எப்போதும் காக்காய் பிடிப்பதும் ஆகிய அனைத்தும் சேகரனுக்கு நன்றாகத் தெரியும். சரளாவின் அழகும் கலையறிவும் பேச்சு வல்லமை யும் பெரிய அதிகாரிகளிடம் தம் செல்வாக்கைப் பெருக்கிக் கொள்ள மறைமுகமாக உதவுகின்றன என்பதை அறிந்ததும் கோவிந்தனிடம் உண்டான கலை வேட்கையை அவன் கூர்ந்து கவனித்தான்.

கோவிந்தனுடைய நடவடிக்கையிலாவது செயற்கைத் தன்மையும் வேஷமும் நன்றாகப் புலப்பட்டுவிடும்; ஆனால் சரளா உள்ளாழமும் சாதுரியமும் வாய்ந்தவளாக இருந்தாள். இந்த ஜனநாயக யுகத்தில் தன் கவர்ச்சியை நிலைக்கவைக்க வேண்டுமானால் பேச்சிலும் செயலிலும் மேலுக்குத் தாராளத் தன்மையை நிறைய அள்ளி விடவேண்டும் என்பதை அவள் நன்கு அறிந்திருந்தாள். கலையைப் பற்றி ஆழ்ந்த நுணுக்க மான விமரிசனம், முன்னேற்றக் கொள்கைகளைப் பற்றிய பிரசங்கம், சினிமா நடிகையைப் போன்ற மோகன அலங் காரங்கள், இளம் பெண்ணைப் போன்ற சிரிப்பு விளையாட் டுக்கள், அழகான ஆங்கிலப் பேச்சு ஆகியவற்றில் கணவனை விட அதிகமாக அவள் மக்களை மயக்கி வந்தாள்.

அவள் கோவிந்தனைக் காதல் மணம் புரிந்துகொண்டதாக எங்கும் ஒரே வதந்தியாக இருந்தது. ஆனால், மிதமிஞ்சிய மது பானத்தினால் கன்னம் ஒட்டி உடல் வற்றிப்போன கோவிந் தனைக் கண்டதும் சேகரன், 'அந்தக் கெட்டிக்காரியான அறி வாளிப் பெண்ணுக்கு இந்தப் பயங்கொள்ளியான கஞ்சப் பேர் வழியிடம் உண்மையில் காதல் இருக்குமா?' என்று பல தடவை நினைத்தது உண்டு.

பம்பு ஸேட் ஒரு நாள் வேடிக்கையாகத் தன்னிடம் சொன்ன சம்பவமும் சேகரனுக்கு ஞாபகம் வந்தது. பம்பு ஸேட்டும் கோவிந்தனும் நெருங்கிய நண்பர்கள். அவன் பணத் தைக் கொண்டு தாம் இனமாகக் கேளிக்கைகளை அநுபவிக்க முடிகிறது என்று கோவிந்தன் அவனிடம் சந்தோஷமாகப் பழகி னார்; அவரால் பெரிய அதிகாரிகளிடம் தான் பழக முடிகிறது என்று பம்பு ஸேட் அவரிடம் தொடர்பு கொண்டிருந்தான்.

இப்படித்தான் ஒரு நாள் ராஜாத் தோட்டத்தில் ஒரு விருந்திலிருந்து பம்பு ஸேட் திரும்பி வரும் வழியில் சேகரனைத் திடீரென்று சந்தித்தான். அவன் உடனே காரை நிறுத்திச் சேகரனை வலுக்கட்டாயமாக உள்ளே உட்கார வைத்தான். பம்பு ஸேட்டுக்கு இந்த நிமிஷத்தில் யாராவது வேண்டும் என்று தோன்றினால் உடனே அந்த ஆசாமியை, அவன் எங் கிருந்தாலும் சரி, அழைத்து வந்து காரில் உட்கார வைத்து

விடுவான். அன்று சேகரனோடு அவன் உலாவப் போனான்.

காருடன் அவன் வாய்ப்பேச்சும் ஓடியபடி இருந்தது. சேகரன் பேச்சுவாக்கில், "இன்று எப்படிக் கோவிந்தன் உங்களோடு வராமற் போனார்?" என்று கேட்டான். பம்பு ஸேட் குடிவெறியில் கோவிந்தனைப் பற்றித் தான் எண்ணியிருந்த அவ்வளவையும் கக்கிவிட்டான். சாதாரணமாக அவரைப் பற்றி அவன் சொல்ல விரும்பாதவற்றைக் கூட இப்போது சொல்லிவிட்டான்.

அப்போது அவருடைய காதல் மணத்தைப் பற்றிப் பேசிய அவன், "என்ன ஐயா வேண்டியிருககிறது, காதல் மணம்? பெண்ணுக்கு எவனாவது ஓர் ஆணிடம் உண்மையில் அன்பு இருக்கிறதா என்று கண்டுபிடிப்பது மிகவும் சிரமமான செயல். ஒருவேளை கடலின் ஆழத்தைக் கண்டுபிடித்துவிடலாம்; கண்டு பிடித்தும் இருக்கிறார்கள். ஆனால் பெண் மனத்தை ஆழம் காண முடியாது. துரோபதைக்குக் கர்ணனிடம் ஆசை இருந்த விஷயம் அவள் உயிரோடு இருந்தபோது யாருக்காவது தெரியுமா? இந்தச் சரளா அந்த விகாரமான கோவிந்தனை விட எவ்வளவோ அழகாக இருக்கிறாள். அந்தச் சிகண்டியிடம் அவளுக்குக் காதல் இருக்கும் என்று எனககுத் தோன்றவில்லை. சீமையில் இருந்தபோது அவள் ஒரு வங்க இளைஞனைக் காதலித்ததாக நான் கேள்வியுற்றேன் அவன் அங்கே அப்போது ஐ. ஸி. எஸ். படித்தானாம். இருவரும் சில காலம் ஒரே இடத்திலகூட இருந்தார்களாம். அவன் இவளை மணந்து கொள்ளத் தயாராக இருந்தான். ஆனால் இவளுடைய கிழத் தகப்பன் அந்தக் கல்யாணத்தைத் தடுத்துவிட்டான். கடைசியில் கோவிந்தனை இவள் காதல் மணம் புரிந்தாள்!" என்றான்.

அத்தகைய தம்பதிகளைப் பற்றி இப்போது தான பேசிய விமரிசனத்தைக் கேட்டு மஞ்சு முகம் சிறுத்துக்கொண்டதைச் சேகரன் கவனித்தான். அவன் பேச்சை மாற்ற எண்ணி, "அப்படியானால் என் கட்டுரையை மேலே படிக்கிறாயா?" என்று கேட்டான்.

"நான் தயார்தான். நீங்கள்தாம் எதை எதையோ நடுவில் பேசுகிறீர்கள்!"

அவள் அந்தக் கட்டை எடுத்து மறுபடி படிக்கலானாள்.

அந்த அத்தியாயம் முடிந்ததும் அவள் அவனைக் கூர்ந்து கவனிததாள். அவள் படித்த விஷயத்தில் அவன் கவனம் செல்லவில்லை என்று தெரிந்தது.

அவள் அந்தக் கட்டை மேஜைமேல் வைத்துவிட்டு அவனருகில வநதாள். அவன் கையைத் தன் கையில் ஏந்திக் கொண்டு, "என்ன இவ்வளவு யோசனை? நான படித்தேனே தவிர நீங்கள் அதை அடியோடு கவனிக்கவில்லையே?" என்றாள்.

"புதிய சமூக அமைப்பைப் பற்றி எழுத எனக்கு என்ன தகுதியோ உரிமையோ இருககிறது என்று சிந்தித்தேன."

"ஏன்! இந்த விஷயத்தைப் பற்றி எழுத நீங்கள்தாம் சரியான தகுதி வாய்நதவர்கள். பழைய சமூக அமைப்பில் இடம் கிடைக்காதவர்களுககுத்தான் புதிய சமூக அமைபபைப் பற்றிச் சிந்திககும் உரிமை உண்டு."

"அதாவது, தகுதியின்மையே உரிமைதான் என்று நீ சொல்கிறாய்!"

"இக்காலத்துச் சமூக அமைப்பில் இடங் கிடைக்காதது உங்களுடைய குற்றமல்ல; தகுதியினமையும் அல்ல. இது சமூகத்தின் குறை; இது சமூகத்தின் ஆற்றலின்மை. தன்னை விட முன்னேற்றமும் மேன்மையும் கொண்டவனுடைய குணங்களையும் லட்சியத்தையும் மதித்துப் போற்றும் பெருந்தன்மை இன்றைய சமூகத்தினிடம் இல்லை. சமூகத்தின் இந்தக் குறையைத் தீர்க்கும் நோககத்தோடு, அதன் அமைப்பை மாற்றச் சிந்தனை செய்வது உங்கள் கடமையாகும்."

இதற்கு அவன் ஏதும் பதிலே சொல்லவில்லை. அவனுடைய மோனத்தை அவளால் பொறுக்க முடியவில்லை. அவள் அவனை நெருஙகி அமர்ந்திருந்து அவன் கையைத் தாங்கியிருந்தும், அவளைப் பற்றிய உணர்வே அவனுக்கு இல்லை. அவன் மனம் அப்படி எங்கே லயித்துவிட்டது என்று அவள் அறிய எண்ணினாள்.

அவள் ஏதோ பேசத் தொடங்குமுன், அவன் அவளுடைய கண்ணைக் கூர்ந்து நோக்கி, "நான் இவ்வளவு காலம் படித்தது

கரி டிப்போவில் உட்காருவதற்குத்தானா மஞ்சு?" என்றான்.

லட்சியவாதியான அவனுடைய அந்த நீண்ட கண்களில் நீர் துளும்புவதாக அவளுக்குத் தோன்றியது.

## 4

அடியோடு விருப்பமில்லாதிருந்தும், சேகரன் அன்று அந்தக் கிராம விருந்துக்குப் போக வேண்டியதாயிற்று.

சரளாவின் கார் குறித்த நேரத்துக்கு அரை மணி முன்னமே வந்துவிட்டது. சேகரன் அப்போது எங்கேயோ வெளியே போக ஆயத்தம் செய்துகொண்டிருந்தான். வாசலில் காரைப் பார்த்த மஞ்சு, "இப்போது என்ன உங்களுக்கு அவ்வளவு அவசர வேலை? இன்றைய வேலையை நாளைக்குத்தான் செய்யலாகாதா? நீங்கள் இன்று விருந்துக்கு வந்தால் சரளா மகிழ்ச்சியினால் துள்ளிக் குதிப்பாள். கோவிந்தன் நேற்று நேரில் வந்து வேறு அழைத்திருக்கிறார். இதற்கு முன்பெல்லாம் அவர்கள் வீட்டுக்கு வரச் சொல்லி உங்களை நான் வற்புறுத்தியதில்லை. இன்று நீங்கள் என்னோடு வரத்தான் வேண்டும்" என்றாள்.

"உன் ஆவலை நிறைவேற்றுவது என் கடமை. ஏழை நண்பர்களின் கிராமத்துக்குப் போய் நான் எத்தனையோ தடவை விருந்து சாப்பிட்டிருக்கிறேன். உன்னுடைய இந்தப் பணக்காரத் தோழியின் விருந்து எப்படி இருக்கிறதோ பார்க்கலாமே!" என்று சேகரன் சிரித்துக்கொண்டே சொன்னான்.

அவன் ஒருவேளை கிண்டலாகப் பேசுகிறானோ என்ற சந்தேகத்தினால் மஞ்சு அவனைக் கூர்ந்து கவனித்தாள். களிப்புற்ற அவன் கண்ணில் நேர்மையான பரிகாசமே தென்பட்டது.

ரஞ்சிதமும் நந்துவும் புதுச்சட்டை யணிந்து வெகு நேரமாகவே தயாராக இருந்தார்கள். 'சரளா அத்தையின் காரில் இன்று நாம் உலாவப் போகிறோம்' என்ற எண்ணம் விடிகாலையிலிருந்தே அவர்களைக் கும்மாளம் போட வைத்தது.

மஞ்சு, சிவப்பு நிறமுள்ள அழகிய சேலையை அணிந்திருந்தாள். அதே நிறமுள்ள பருமனான வளையல்கள் அவள் கரங்களில் கிலுகிலுத்தன. அவள் கூந்தலில் சூடிக்கொண்ட கனகாம்பரத்திலும் லேசான செந்நிறம் தோன்றியது.

கண்ணைக் கவர்ந்த அவளுடைய எழிலைக் கண்டு சேகரன்

மென்னகை பூத்து, "விருந்துக்கு வருகிறவர்கள் உன்னுடைய இந்த அலங்காரத்தைப் பார்த்ததும், 'நாம் பசும் வயலுக்கு வராமல் வெட்சி மலர்கள் குலுங்கும் உபவனத்துக்கு வந்திருக்கிறோம்' என்றுதான் நினைப்பார்கள்" என்றான்.

உவகை பொங்கிய தன் துணைக் கண்களை விரித்து மஞ்சு அவன்மீது ஒரு பார்வையை வீசினாள்.

"நீ ஏன் உன் கம்பளிக் கோட்டை எடுத்துக் கொள்ளவில்லை? சாயந்தரமானதும் அங்கே குளிரெடுக்குமே!" என்றான் சேகரன்.

"குளிர்ந்தால் குளிரட்டுமே! நாம் எப்படியும் காரில் திரும்பி விடப்போகிறோம்" என்றாள் மஞ்சு.

அந்தச் சிவப்பு நிறச் சேலைமேல் காபிக் கலருள்ள கோட்டை அவள் அணிய விருமபாததை அவன் தெரிந்துகொண்டான். பெரிய மனிதர் வீட்டுப பெண்கள் அங்கே விதம் விதமான கம்பளிச் சட்டைகளை அணிந்துகொண்டு வரப்போகிறார்கள். மஞ்சுவுக்கு மட்டும அவளுடைய உடுப்புக்குத் தகுந்த சட்டை இல்லையே என்று சேகரனுக்கு வருத்தமாக இருந்தது. வருஷந்தோறும் அவளுக்குப் புதுப் புதுச் சட்டைகளை வாங்க அவனிடம் பணம் ஏது?

இந்த வருத்தம் நீண்ட நேரம் நிலைக்கவில்லை; ஏனென்றால் காரின் முன்பக்கத்தில் போய் உட்கார்ந்த குழந்தைகள் இருவரும் ஹாரனை அமுக்கிக் கூச்சல் போட்டார்கள்.

நாகபுரியிலிருந்து ஐந்து மைல் தொலைவில் புளியூர் என்ற கிராமத்தில் கோவிந்தன் புதிதாக ஓர் அழகிய மாளிகை கட்டியிருந்தார். அதைச் சுற்றிலும் பெரிய தோப்பு. அந்த மாளிகையில்தான் இன்று விருந்துக்கு ஏற்பாடு நடக்கிறது.

மாளிகையின் முன் வாசலில கார் வந்து நின்றதுமே, உயர்ந்த குதிகால் செருப்புப் போட்டிருநத சரளா ஓடி வந்து மஞ்சுவை வரவேற்றாள்.

காரிலிருந்து இறங்கிய மஞ்சுவின் கையை அவள் அழுத்திப் பிடித்துக்கொண்டு, மூக்குக் கண்ணாடியின் கறுப்பு விளிமபின் பின்னால் மறைந்திருந்த தன் புருவத்தை உயாத்தி, "இவ்வளவு நேரமென்ன மஞ்சு? நீ சீக்கிரம் வந்து எனக்கு உதவி செய்ய

வேண்டும் என்றுதானே முன்னதாகவே கார் அனுப்பினேன்! நீயும் விருந்தாளிபோல மெதுவாக வந்திருக்கிருயே!'' என்ருள்.

அதற்குள் ரஞ்சிதமும் நந்துவும், ''அத்தை, அத்தை!'' என்று அவளை இருபுறமும அணைத்துககொண்டார்கள்.

அவள் மஞ்சுவின் கையை விடுததுத் தன் இரு கைகளா லும் அநதக் குழந்தைகளின் முகத்தை உயர்த்தி அன்போடு முத்தமிட்டாள்.

''உள்ளே வாருங்கள். ஓவல்டின்னும் சாக்லேட்டும் உங் களுக்குத் தயாராக வைத்திருக்கிறேன். விருந்துக்கு இன்னும் ஒரு மணி நேரம் இருக்கிறது. அது வரைக்கும் நீங்கள் சமர்த் தாக இருக்க வேண்டும்!'' என்று சொல்லி, அவள் இரண்டு குழந்தைகளையும் கையைப் பிடித்து உள்ளே அழைத்துப் போனுள்.

அவளுடைய அன்பு கனிந்த வரவேற்பைக் கண்டு சேகரன் வியந்தான். 'மஞ்சுவின் துயர வாழ்வில் நம்மால் இவ்வள வாவது மகிழ்சசியைத் தர முடிகிறதே' என்ற எண்ணத்தினுல் தான் அவள் இவ்வளவு அன்பாக இருக்கிருளோ என்று அவன் நினைத்தான்.

வண்டியின் பின்புறத்திலிருந்து இறஙகிச் சந்தடி செய்யா மல் ஒதுங்கி நின்ற அவனை முதலில் சரளா கவனிக்க முடிய வில்லை. உள்ளே புறப்பட்டபோது திடீரென்று அவனைப் பார்த்ததும் அவள் சிறிது ஆச்சரியத்தோடு நின்ருள்; முறுவல் மலர, ''ஏது, எங்களிடம இவ்வளவு அருள் சுரந்துவிட்டீர்கள்! உங்களை அழைத்து வந்ததற்காக நான் மஞ்சுவைத்தான் பாராட்ட வேண்டும்'' என்ருள்.

சேகரன் அவளைப் பார்த்து லேசாக நகைத்தான். 'இவ ளுடைய' வரவேற்பில் செயற்கையும் இயற்கையும் எவ்வளவு விந்தையாக இவளை அறியாமலே கலந்திருக்கின்றன! மொததத்தில் இனறைய பண்பாடே இப்படித்தானே இருக் கிறது? இவர்களுடைய சிரிப்பிலும் பரிவிலும் அன்பிலும் வெளி வேஷந்தான் மிகுதியாக இருக்கிறது. இந்தப் பகட்டு நாகரிக வடிவத்தின் ஓர் அழகிய அடையாளந்தான் இந்தச் சரளா!' என்று அவன் கருதலானுன்.

சரளா ரஞ்சிதத்தையும் நந்துவையும் தன் குழந்தைகள் விளையாடும் இடத்தில் கொண்டு விடும்படி வேலைக்காரியிடம் சொன்னாள். பின்பு மஞ்சுவையும் சேகரனையும் பங்களாவின் பின்னால் இருந்த விஸ்தாரமான மைதானத்துக்கு அழைத்துக் கொண்டு போனாள்.

அந்த மைதானத்தின் ஒரு புறத்தில் நீண்ட வாவியும் பெரிய துரவும் இருந்தன. மறுபுறத்தில் வயல்களிலிருந்து அப் போதுதான் அறுவடையாகி வந்த நெற்கதிர்கள் குவிந் திருந்தன.

ஓர் இடத்தில் கிச்சிலிப் பழங்களும், கொய்யாக் கனிகளும், வேறு பழங்களும் குவியல குவியலாக இருந்தன. வாழை யிலைகள் கட்டுக் கட்டாக இருந்தன. மைதானத்தின் ஒரு மூலையில் பந்தல் போட்டு, அங்கே சமையற்காரர்கள் எண் ணெய்க் கததிரிக்காயும், கோசும்பரியும், லட்டும், வயலிலிருந்து புதிதாக வந்த மக்காச்சோளத்தின சுண்டலும் இன்னும் பல வகைப் பணியாரங்களும் சமைத்தனர்.

வாவிக்குச் சற்றுத தூரத்தில் நடுவே இடம்விட்டு இரண்டு புறமும் நீல ஜமக்காளங்கள் விரித்திருந்தன. அதன் அருகில் இரண்டு மூன்று மேஜைகளும் அவற்றைச் சுற்றி இருபது இருபத்தைந்து நாற்காலிகளும போட்டிருந்தன.

மஞ்சுவையும் சேகரனையும் அழைத்துக்கொண்டு சரளா மைதானத்துக்கு வந்ததும கோவிந்தன் முன்வந்து அவர்களை வரவேற்றார். "வாருங்கள், சேகர்! இன்று மஞ்சு உங்களை இங்கே இழுத்து வந்திருக்கிறாள்போல் இருக்கிறது!" என்றார்.

சமையற்காரனிடம ஏதோ பேசிககொண் டிருந்த பம்பு ஸேட் உடனே அருகில் வந்து, "என்ன சேகர், மஞ்சு உங்களை அழைத்து வநதாற்போல, திரும்பிப் போகும்போதும் அழைத் துப் போவாள். முன் காலத்தில் பெண்கள் கணவன்மாரோடு வருவது வழக்கம்; இந்தக் காலத்தில் ஆண்கள் மனைவிக ளோடு வருகிறார்கள்!" என்று, தான் ஏதோ வேடிக்கையாகப் பேசிவிட்டதாக எண்ணிக் கலகலவென்று சிரித்தான்.

பம்பு ஸேட் ஒரு பெரிய பேர்வழி. அமராவதிப் பக்கத்தில் அவனுக்குச் சொந்த நிலங்கள் இருந்தன. சேகரன் மாரிஸ்

காலேஜில் இருந்தபோது அவனுக்கு ஸேட்டுடன் பழக்கம் ஏற்பட்டது. பம்பு ஸேட் தன்னை ஒரு மராட்டியன் என்று பெருமையோடு சொல்லிக்கொள்வான. வெகு நன்ருக மராட்டியில் பேசுவான் மாரிஸ் காலேஜ் இலக்கியக் கழகத்தில் அவன் ஒரு தடவை தலைவனுகவும் இருந்து உழைத்தான்.

சட்ட மறுப்பின்போது ஜூனியர் பி. ஏ.யில் இருநத அவன் கலாசாலையை விட்டுவிடடான். சில நாள் அமராவதியில் இருநது நிலம் நீசசைப் பார்த்த பிறகு நாகபுரிகரு வந்தான். அங்கே முதலில் ஒரு சைக்கிள் கடை ஆரம்பித்தான். ஐந்து வருஷஙகளுக்குள் அவனுடைய வியாபாரம் நனருக ஓங்கியது. நாகபுரியில சைக்கிளும், மோட்டார் சைக்கிளும் வேண்டு மானுல அவன் கடைகருத்தான் போவார்கள். இதைத் தவிர எத்தனேயோ வெளிநாட்டுச சரக்குகளுக்கு அவன் ஏஜென்ஸி எடுத்துக்கொண்டான்.

பம்பு ஸேட்டின் கையில் பணம் புரளுவதற்கு ஏற்றபடி அவனுடைய ஆசையும் வளர்ந்தது; மாறியது. முனிஸிபாலிட்டியிலும சட்ட சபையிலும் அங்கத்தினனுகி, பிறகு தொழில் மநதிரியாக விளங்க வேண்டும் என்று அவன் விரும்பினுன். ஆதலால் தன் பழைய கலாசாலே நண்பரான கோவிந்தனேடு சேர்ந்து அவன் ஒருபுறம பெரிய சர்ககார் அதிகாரிகளோடும், மறுபுறம் காஙகிரஸ் தலைவர்களோடும் பழக ஆரமபித்தான். சட்ட மறுப்பின்போதே அவன் கதர் உடுத்தத் தொடங்கினுன். ஆஙகிலேயர்களைப் போலச் சமூகததில் வாழ்ந்த பெரிய அதிகாரிகளுடன் பழகுவதற்கு வேணடிய நடை முறைகளையும், ரகசிய மந்திரஙகளையுமு அவன் கோவிந்தனிடம் கற்றுக் கொண்டான்.

சிறிது காலத்துக்குள்ளே தொழிலில் எளிதாகக கிடைத்த பணமுமு, பண பலத்தினுல் மேலதிகாரிகளிடம் பெற்ற செல்வாககும், கேளிக்கைக்கு ஏங்கிய நாகரிக மனிதர்களிடம உண்டான பணமுடையும் சேர்ந்து பம்பு ஸேட்டை நாகபுரியில் பிரமுகனுக்கிவிட்டன. தன வலேயில் சிக்காமல் உறுதியாகவும் பற்றற்றும் இருப்பவனே ஸேட் தன்னைச் சுற்றி எப்போதுமுள்ள கூட்டத்தின் நடுவே பரிகசிப்பான். அவன் எப்போதும் வாய்க்கு

வந்தபடி பேசுவான். உதடுகளின் இரு முனையிலும் காவி படிந்திருந்த அவன் முகத்திலிருந்து வெற்றிலைச் சாறும் சிகரெட் புகையும் வெளிவருவது போலவே கிராமியப் பேச்சும் அஸப்பிய வார்த்தைகளும் வெளிவரும். ஆனால் கேளிக்கைக்காக அவனைச் சுற்றியிருக்கும் பெரிய மனிதர்கள் அவனுடைய வண்டைப் பேச்சை விகடமென்று நினைத்துக் களிப்பார்கள்.

தினமும் சாயந்தரம் தன்னுடைய பிரம்மாண்டமான கடையை மூடும்போது பக்கத்தில் இருக்கும் நண்பர்களையும், தான் விரும்பினால் தனக்குத் தோன்றிய நண்பனை அவன் வீட்டிலிருந்து அழைத்து வந்தும், எல்லாரையும் காரில் உட்கார வைத்துக்கொண்டு பிலிமோரியா அல்லது மவுண்ட் ஹோட்டலுக்குப் போவான். வாயைப் போலவே அவன் கையும் தாராளம். ஆகையால் அவனுடைய வள்ளன்மையைப் பயன் படுத்திக்கொண்ட போக்கிரி நண்பர்கள் அவனுடைய தீய குணங்களைப் பெருமையாகவும் ஒழுங்காகவும் பிரசாரம் செய்திருந்தார்கள்.

ஸேட்டின் வியாபாரத் திறமையிலும் துணிச்சலிலும் சேகரனுக்கு மதிப்பு உண்டு; ஆனால் அவன் அசட்டுப் பிசட்டென்று பேசுவது கட்டோடு பிடிக்காது.

இப்போது அவன் சொன்ன வேடிக்கைப் பேச்சும் சேகரனுக்குப் பிடிக்கவில்லை; ஆயினும் அதற்கு ஒன்றும் பதில் சொல்லாமல், "இன்று இங்கே எல்லா ஏற்பாடுகளும் உங்கள் பொறுப்பில்தானா?" என்றான்.

கோவிந்தனுடைய பங்களாவில் நிகழும் இந்த விருந்து ஸேட்டின் செலவில்தான் நடக்கும் என்று பம்பு ஸேட்டைப் பார்த்ததுமே சேகரனுக்குத் தோன்றிற்று.

"அதைப் பற்றி உங்களுக்கு என்ன? ஆனால் ஒன்று மட்டும் சொல்லிவிடுகிறேன், சேகர்! எங்கள் நிகழ்ச்சி முழுவதும் முடிந்தாலொழிய, இன்று நான் உங்களை மனைவியோடு வீட்டுக்குப் போகவிட மாட்டேன்."

"அதை அப்புறம் பார்க்கலாம்! விருந்துக்கு இன்னும் வெகு நேரம் பிடிக்கும்போல் இருக்கிறதே?"

"அதெல்லாம் இல்லை. கோவிந்தன் எல்லாரிடமும் ஐந்து

மணிக்கு என்று சொல்லியிருந்தார். பெரும்பாலான பெரிய மனிதர்கள் இனிமேல்தான் வரவேண்டும். சோளச் சுண்டல் கூடத் தயாராகிவிட்டது. நீங்கள் ஜமக்காளத்தில் உட்காருங்கள்'' என்று சேகரனை உட்கார வைத்துவிட்டு, பீர் குடித்துக் குடித்துப் பருத்த தன் தொந்தியை முன்னால் தள்ளிக்கொண்டு ஸேட், கோவிந்தனருகில் போய் நின்று, எதிரே வரும் விருந்தினர்களை வரவேற்கலானான்.

விருந்தினர்கள் தாமாக இரண்டு கோஷ்டிகளாகப் பிரிந்தார்கள். நம் நாட்டு வழக்கப்படி உடையணிந்த நடுவகுப்பினர் ஜமக்காளத்தில உட்கார்ந்திருந்தார்கள. மேல்நாட்டு உடையணிந்த பெரிய அதிகாரிகளும், வேட்டியுடுத்திய பெரிய வக்கீல்களும் நாற்காலிகளில் வீற்றிருந்தார்கள்.

பெண்கள் உட்காரும் இடம் சற்றுத் தள்ளி இருந்தது. பல நிறமுள்ள கம்பளிக் கோட்டும் பர் கோட்டும் அணிந்தவர்களும, தலையில் மப்ளர் சுற்றியவர்கள் சிலரும், விதம் விதமான சேலை உடுத்தியவர்களும, மேலநாட்டு முறையில் தமமை அலஙகரித்துக் கொண்டவர்களுமாகப் பெண்கள் வரிசையாக வந்தார்கள். சரளாவும் மஞ்சுவும் அவர்களை உட்கார வைத்தனர்.

செல்வத்தில் திளைத்த பெண்களின் மேல்நாட்டு வேஷத்தைக் கண்ட சேகரன், 'இவர்களில் எத்தனை பேர் வீட்டில் சுதேசிப் பொருள்கள் இருககும்? இந்த நாகரிகப் பெண்களுக்குச் சுதேசிப் பற்று என்பது கனவிலாவது உண்டா? இவர்களில் சிலர் சட்ட சபையிலும், ஹிந்து மகா சபையிலும், மாதர் சங்கத்திலும், மற்றும் வேறு சமூக இயக்கங்களிலும் முக்கியப் பங்கு வகிக்கிறார்கள். அந்தச் சமயத்துக்கு ஏற்றபடி வெள்ளை, சிவப்பு அல்லது கேசரிவர்ணச் சேலையை இவர்கள் உடுத்துக்கொண்டால் அது தேச சேவையாகிவிடுகிறது! சினிமா நடிகைகளைப் போலத் தம்மைச் சிங்காரித்துக் கொண்டு மேல்நாட்டு உடையில் திகழ்கின்றன, இந்த உயிருள்ள பொம்மைகள்! ஒவ்வோர் ஊரிலும், ஒவ்வொரு வயலிலும், ஒவ்வோர் ஏழை வீட்டிலும் இன்று வாழ்க்கைக்காகக் கடுமையான போராட்டம் நடக்கிறதே, அதைப் பற்றித் துளி

யாவது இவர்களுக்குத் தெரியுமா? பங்களா, மோட்டார் கார், ஏராளமான இன்ஷ்யூரென்ஸ், பாங்கில் பண மூட்டை இவற்றைத் தவிர இவர்களுக்கு வேறு பெரு நோககம் இல்லை. கிளப், சினிமா, பிக்னிக், பிலிமோரியா இவற்றைத் தவிர இவர்களுக்கு வேறு வாழ்வு இல்லை. ஏழை நாட்டுடனும் அதன் கடுமையான வாழ்க்கையுடனும் இந்தச் சிங்காரப் பொம்மைகளுககுத் தொடர்பு ஏது?' என்று நினைக்கலானன்.

சமையலறையிலிருநது வந்த பணியாரஙகளின் மணமும், விருந்தினர்களான பெரிய மனிதர்களை வியப்போடு பார்த்த மேல்துணி யில்லாத சமையற்காரர்களும், ஒருத்தியின் நகைகளையும் உடையையும் மற்றொருத்தி ஆசையோடு பார்க்கும் அந்த நாகரிக மங்கையரும், சமையலறைப் புகையும் சிகரெட் புகையும் கலந்த விந்தை வாசனையும் ஆகிய இவையெல்லாம் சேகரனுடைய மனத்தில் பல்வேறு சிந்தனைகளைக் கிளப்பி விட்டன.

மஞ்சுவும் தானும் ஒரு குடியானவன் வீட்டுக்கு ஒரு தடவை மாம்பழம் சாப்பிடப் போனது அவனுக்கு ஞாபகம் வந்தது. வயலில் ஓயாமல் உழைககும் அந்தக் குடியானவன் மனைவி, "அம்மா, உங்கள் வீட்டுககாரர் உத்தியோகம் செய்கிறாரே. அவருக்கு என்ன கிடைககிறது? நீங்களும் உத்தியோகம் செய்கிறீர்களே. உங்களுக்கு என்ன கிடைக்கிறது?" என்று மஞ்சுவைக் கேட்டாள்.

"இரண்டு பேருக்கும் சேர்ந்து நூற்றைம்பது ரூபாய்க்கு வருகிறது" என்று மஞ்சு சொன்னபோது அந்தப் பெண் தன் கையில் இருந்த அரிவாளைக் கீழே வைத்துவிட்டு ஆச்சரியத்தோடு, "இவ்வளவு பணத்தையும் நீங்கள் என்ன அம்மா செய்கிறீர்கள்?" என்றாள்.

நகரத்தில் ஒரு சாதாரண விருந்துக்குக் கூட இந்தப் பணம் காணாது என்பது அந்த அப்பாவிப் பெண்ணுக்கு எப்படித் தெரியப் போகிறது?

இந்தச் சம்பவம் ஞாபகத்துக்கு வந்ததும் சேகரனுக்கு என்னவோ போல இருந்தது. அதற்குள் மென்மையும் இனிமையுமான குரல் அவன் காதில் விழுந்தது. "இந்த எண்

ணெய்க் கத்திரிக்காயில் காரம் அதிகம் இல்லை; சாப்பிட்டுப் பாருங்கள்!''

அவன் நிமிர்ந்து பார்த்தபோது சரளா வாழையிலையில் கத்திரிக்காய்க் கறி பரிமாறினாள்.

கொய்யா, கிச்சிலி முதலிய கனிவகைகளும் சித்திரான்னங்களும் ஏற்கனவே பரிமாறியாகி விட்டன. பம்பு ஸேட் சமையலறையில் இருந்த ஒரு பையனைக் கூப்பிட்டு, சோளச் சுண்டல் பரிமாறச் சொன்னான். சரளாவும் மஞ்சுவும் மற்றத் தோழிகளும் கோசுமபரி முதலிய வேறு பண்டங்களை எடுத்துக் கொண்டு வந்தார்கள்.

பமபு ஸேட் ஒவ்வொரு நாற்காலியாகத் தாவிச சென்று, "பாருங்கள் ஸார்! இந்தமாதிரி மககாச சோளம் அமராவதியில் தவிர, பூமண்டலததில் கிடைககாது!'' என்று சொல்லி, சோளத்தின் பல வகைகளைப்பற்றி வர்ணிக்கலானான்.

ஒரு முறை அவன் சேகரனருகில் வந்து இலையிலிருந்து நான்கு சுண்டலை வாயில் போட்டுககொண்டு, "அடடா! இநதப் படுபாழான சோளமா உஙகளுககுக கிடைததது? இதை எறிந்துவிடுஙகள். என வயலில விளைநத பால் சோளத்தையும் முத்துச்சோளத்தையும் இதோ கொணடு வருகிறேன்'' என்று வேறு சோளச் சுண்டல் கொண்டு வந்தான்.

சமையற்காரர்கள் இஙகுமஅஙகும் ஓடாதபோது, "என்ன அப்பனே! அடுப்படியில் குளிர் காயகிறீர்களா? சீக்கிரம் இங்கு வந்து பரிமாறுங்கள், கழுதைகளா!'' என்று அவன் கத்துவான்.

சர்க்கரை போட்ட தயிர் வநதது. ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு தொன்னை நிறையக் கொடுததார்கள்.

நாற்காலியில் உட்கார்நதிருந்தவர்களுக்கு எவர்சில்வர் கிண்ணங்களும் ஸ்பூன்களும் வைத்தார்கள். சரளாவும் மஞ்சுவும் தயிர் ஊற்றினார்கள்.

"தயிர் எப்படி இருக்கிறது சேகர்? பால்கோவாவைப் போல இனிப்பாக இலலையா? இன்னும் வேண்டுமானாலும் சர்ககரை போட்டுக்கொள்ளுங்கள், ஸார். வெண்ணெய்ச் சோளத்துக்கும் இந்த இனிப்புத் தயிருக்கும் எப்படி ஜோடி!''

என்று பம்பு ஸேட் எல்லாரையும் ஓயாமல் விசாரித்தான.

கோவிந்தன் ஒரு சாய்வு நாற்காலியில் அமர்ந்து பெரிய அதிகாரிகளோடு ஆங்கிலத்திலும் ஹிந்தியிலும் பொழிந்து தள்ளினூர். அடுத்தபடி மந்திரிசபையில் யார் வரப்போகிருர்கள், உலக யுத்தம் வருமா வராதா, காந்தியினூல் இந்தியாவுக்கு எல்லாம் நன்மைதானு, எந்தப் படத்தில் எந்த நடிகை இப்போது நன்ருக நடித்திருக்கிருள், குதிரைப் பந்தயததில் போன தடவை யாருக்கு வெற்றி கிடைத்தது-இப்படிப் பல முக்கியமான விஷயங்களைப் பற்றிச் சிரிப்பும் விளையாட்டுமாக அவர்கள் பேசினூர்கள். மாஜிஸ்டிரேட், ஸப்ஜட்ஜ், தாசில்தார் முதலிய இரண்டாந்தர உததியோகஸ்தாகளும வேறு அதிகாரிகளும இன்னெரு புறத்தில் நாற்காலியில் அமர்ந்து தஙகளுககுள் ஏதோ வேடிக்கையாகப் பேசிக்கொண்டார்கள்.

ஜமக்காளத்தில் உட்கார்ந்திருந்தவர்களுக்குள் ஒரு கதர்க் காரருக்கும் ஒரு ஹிந்து மகாசபைக்காரருக்கும் கடுமையான விவாதம் வந்துவிட்டது. வழுவழுப்பான தலையும கொழு கொழுப்பான உடலும் வாய்ந்த அந்தக் கதராடைச் சாமியாரை எல்லாருமே கவனித்தார்கள். சேகரன் அவரைப் பற்றிப் பம்பு ஸேட்டைக் கேட்டபோது அவன் காதோடு, "அடேயப்பா! இவர் கோவிந்தனுக்கு உயிர் நண்பர். நாங்கள் எல்லாரும் இவரை மகாதமா என்கிருேம். பக்த ராமதாஸ் ஊரூராகக் கல்லுக்குச் சிந்தூரத்தைப் பூசி அநுமார் கோயில்களை ஏற்படுத்திறைற்போல, இப்போது காந்தியின் அருளினுல் ஊருக்கு ஊர் மகாத்மாக்கள தோன்றிவிட்டார்கள்! அவர்களில் ஒரு சிந்தூர அநுமார்தான் எங்களிடம் வந்திருக்கிருர்" என்ருன்.

பொழுது போய்விட்டதால் மகாத்மா தயிர் மட்டுமே சாப்பிட முடிந்தது. பொழுது போனபிறகு அவர் சாப்பிடும் வழக்கமில்லை. கையில் இருந்த தக்ளியால் நூல் நூற்றுகொணடே, மேலுக்கு வணக்கமாகவும் இனிமையாகவும ஆனுல் உள்ளூறக குத்தலாகவும் கிண்டலாகவும் இருந்த பேச்சினுல அவர் ஹிந்து மகாசபைக்காரரான இளம் வக்கீலுக்குப் பதில சொன்ஞர். காந்தியடிகளை எதிர்த்த இளைஞரை அவர் விரட்டி விரட்டியடித்தார்.

இந்த விவாதம் நடந்தபோது, கோவிந்தன் சாய்வு நாற்காலியிலிருந்து எழுந்து ஜமக்காளக்காரர்களை விசாரிக்க வந்தார்.

"ஸார் கோவிந்தன், நீங்கள் எப்போது சத்தியாக்கிரகம் செய்யப் போகிறீர்கள்?" என்று ஹிந்து மகாசபை வக்கீல் அவரைக் கேட்டார்.

"அவர் எப்படிப் போக முடியும்? அவருக்கு 'லிவர்' கோளாறு ஆச்சே!" என்றார் மகாத்மா.

"பேஷ் மகாத்மாஜி! கோர்ட்டு வழக்குகளை நடத்துவதற்கு இவர் வர்தாவுக்கும் சாந்தூருக்கும் வாரந்தோறும் போய் வருகிறாரே; அப்பொழுது மட்டும் லிவர் தகராறு இல்லையோ? சத்தியாக்கிரகம் மட்டும் என்ன பாவம் செய்துவிட்டது? மேலும், பப்ளிக் பிராசிக்யூடராதலால் இவருக்கு ஏ வகுப்புத்தான் கிடைக்கும்!"

"ஆனால் நாங்கள் இவரைப் போக விட்டால்தானே!"

"நீங்கள் சொல்வது இவருக்குச் சௌகரியமாகத் தான் இருக்கும் ஆனால் இவர் இப்போது சத்தியாக்கிரகத்துக்குப் போகாவிட்டால் அடுத்த மந்திரி சபையில் பப்ளிக் பிராசிக்யூடராக இருக்க முடியாது. சத்தியாக்கிரகத்துக்குப் போனாலோ, அட்வகேட் ஜெனரல் பதவி இவருக்கு நிலையான மாதிரிதான்!"

மகாத்மா தக்ளியை ஆட்டிச் சிரித்துக்கொண்டே, "நீங்கள் இப்போது லாபநஷ்டங்களைக் கோவிந்தனிடம்சொல்லியாயிற்று. உங்கள் யோசனையைப் பற்றி அவர் இனி ஆலோசித்து முடிவு செய்வார்!" என்றார். கோவிந்தன் தமக்கு மிகவும் வேண்டியவராதலால் எப்படியும் அந்த வக்கீலை வீழ்த்திவிடுவது என்ற கருத்தோடு அவர் பேசினார்.

"மகாத்மாஜி, உண்மையில் இந்த லாப நஷ்டங்களை நீங்கள்தான் இவருக்குச் சொல்ல வேண்டும். உங்கள் புண்ணியத்தையும் செலவழித்து, காங்கிரஸ் தலைவர்களிடமிருந்து இவருக்கு அநுமதி வாங்கித் தருவது உங்கள் கடமை. உங்களுடைய நூற்பு வேள்வியினால் பிரசன்னமான தரித்திர நாராயணன்,

4

கோவிந்தனுக்கு இவ்வளவு அருளாவது புரியத்தான் வேண்டும்!''

''அதெல்லாம் இருக்கட்டும், வக்கீல் ஐயா! சத்தியாக்கிர கத்துககு யார் போனல் உஙகளுக்கு என்ன, போகாவிட்டால் உங்களுக்கு என்ன? அந்தப் பார்க்கில் வந்து வாரநதோறும் 'ஹிந்து, ஹிந்து' என்று நீங்கள் கூச்சல் போடுகிறீர்களே; ஹைதராபாத் சத்தியாக்கிரகததில் நீஙகள் சேர்ந்தீர்களா?'' என்று மகாத்மாவை ஆதரித்துப் பம்பு ஸேட் வககீலைத் தாக்கினன்.

''ஸேட்ஜீ, சத்தியாக்கிரகம் என்ற சொல்லே ஹிந்து மகா சபைக்காரர்களுக்குப் பிடிக்காது. 'ஆயுதமற்ற எதிர்ப்பு' என்று சொல்லுங்கள்!''

''எந்தப் பெயராவது இருக்கட்டுமே, மகாத்மாஜி! உல கத்தையெல்லாம் இழித்துப் பேசும் இநத வேலையற்ற வெட்டி வக்கீல் அந்த இயக்கத்தில் சேர்ந்தாரா என்று கேட்கிறேன். மற்றவர்களைப் பற்றிப் பேச இவருக்கு உரிமை ஏது!''

அந்த இளம் வககீல் இதற்கெல்லாம் அசைகிறவராக இல்லை. லேசாகச் சிரித்துக்கொண்டே, ''ஸேட்ஜீ, என்னிடம் உங்களைப் போலவும், கோவிந்தனைப் போலவும் கொஞ்சம் சொத்து மட்டும் இருந்திருந்தால் நானும் சத்தியாக்கிரகத்துக் குப் போயிருப்பேன்!'' என்றார்.

''அடடா! நீங்கள் இவ்வளவு அஷ்ட தரித்திரம் என்று தெரிந்திருந்தால் நானே உங்களுக்கு ஐயாயிரத்துக்கு ஒரு செக் கொடுத்திருப்பேனே! இப்போது மாத்திரம் என்ன? நீங்கள் என் கடையில் வந்து உட்கார்ந்தால் உங்கள் இரவுச் சாப் பாட்டுக்கு நான்தான் பணம் தொலைக்கிறேன்.''

''என்ன ஸேட்ஜீ, கோவிந்தனை ஏதோ விசாரித்தால் உங் களுக்கு இவ்வளவு கோபம் வருகிறதே? நீங்கள் சத்தியாக்கிர கத்துக்குப் போவீர்கள், வியாபாரிகளின் சார்பில் அசெம்பிளித் தேர்தலுக்கு நின்று வெற்றி பெறுவீர்கள். பிறகு இந்த மாகா ணத்தின் கைத்தொழில் மந்திரியாவீர்கள் என்பதெல்லாம் எனக்குத் தெரியும்.''

இந்தப் புகழ்ச்சியினல் மகிழ்ந்த ஸேட், ''இந்த மாதிரி

ஆனந்தமான வேளையில் கண்டபடி பேசாதீர்கள், வக்கீல் ஐயா! இவருக்கு இன்னும் கொஞ்சம் தயிர் போடுங்கள். சும்மா இருப்பார்" என்று சொல்லிவிட்டு, சரளாவின் கையி லிருந்து தானே தயிர்ப்பாத்திரத்தை வாங்கி அந்த வக்கீலுக்கும் மகாத்மாவுக்கும் இனிய வெண்தயிரை ஊற்றினான்.

தொன்னை நிரம்ப இருந்த அந்தத் தயிரைக் குடிக்க ஆரம் பித்ததும் அவர்களின் வாய் அடங்கிவிட்டது. ஆனால் சேகர னுக்கோ இந்த விருந்தினால் ஏற்பட வேண்டிய பயன் இன்னும் பாக்கியாகவே இருந்தது.

## 5

விருந்து முடிந்து, வந்தவர்கள் ஒவ்வொருவராகக் கலைய லானார்கள். அடுப்புகள் மட்டும் இன்னமும் 'தகதக'வென்று எரிந்துகொண் டிருந்தன. இனிமேல் சமையற்காரர்களும் வேலையாட்களும் சாப்பிடுவார்கள் என்று சேகரன் நினைத்தான்.

அதற்குள் விருந்தாளிகளை வழி யனுப்பிவிட்டு வந்த கோவிந்தன் அவனை அணுகி, "சேகர், நீங்கள் இப்பொழுதே போய்விடாதீர்கள். இன்னும் நமமுடைய திட்டங்கள் இருக் கின்றன. நீங்கள் பட்சணமே சாப்பிடவில்லையே!" என்றார்.

அவன் சிரித்துக்கொண்டே, "இனிமேல் பட்சணம் வேறு எப்படிச் சாப்பிடுவது, மிஸ்டர் கோவிந்தன்? ஒட்டகத்தைப் போல் அதிக உணவைச் சேமித்து வைத்துக்கொள்ளும் வசதி மனிதனுக்கு இல்லையே!" என்றான்.

"உங்களுக்கு இஷ்டமானவரைக்கும் எடுத்துக்கொள் ளுங்கள். ஆனால் நீங்கள் இருக்கத்தான் வேண்டும்."

இப்படி அவர் பேசி முடிப்பதற்குள் சரளாவும் மஞ்சுவும் வந்து சேர்ந்தார்கள். அவர்களோடு கூட அழகிய ஓர் இள நங்கையும் அங்கே வந்தாள்.

"இவர்களை மிஸ்டர் சேகருக்கு அறிமுகம் செய்து வையுங் கள். இவருக்கு இப்போதே போகவேண்டுமாம்!" என்று சரளா கோவிந்தனைப் பார்த்துக் கூறினாள்

"அடடா, நான் மறந்தே போனேனே? மிஸ்டர் சேகர், இவர் ரஜனி. நான் ஒரு தடவை இந்தூருக்கு ஏதோ வேலை யாய்ப் போயிருந்தேன். அங்கே இலக்கியக் கழகத்தில் நான்

'மண வாழ்க்கை' என்பது பற்றிப் பிரசங்கம் செய்தேன். அப்போது இவர் தலைமை வகித்தார். உங்களைப் பார்க்க வேண்டும் என்று மிகவும் ஆர்வப்பட்டார். 'வெண்ணிலா' வில வெளிவரும் உங்கள் கட்டுரைகளும் கதைகளும் இவருக்கு நிரமபப் பிடித்திருக்கின்றன.''

இதற்குச் சேகரன் பதில் சொல்வதற்குள் பம்பு ஸேட் வாயைக் குதப்பிக்கொண்டு, ''துரதிருஷ்டம் என்றால் இதைத் தான் சொல்லவேண்டும்! நம்முடைய நாகபுரியில் இவ்வளவு பெரிய எழுத்தாளர் இருந்தும் அது நமக்குத் தெரியவில்லையே? உங்களால் சேகரனுடைய பெருமையை நாங்கள் தெரிந்து கொணடோம், ரஜனியம்மா!'' என்றான். புகையிலைச் சாற்றை உமிழ்ந்துவிட்டு அவன் கலகலவென்று நகைத்தான்.

மகாத்மா தக்ளியை ஒரு சுழற்றுச் சுழற்றி, லேசாகச் சிரித்துககொண்டே, ''அப்படித்தான் நடக்கிறது, ஸேட்ஜி! புழைக்கடைப் பசிலை மருந்துக்கு உதவுவதில்லை. நம் ஊரில் பறிதது நாளாகி வறண்டுபோன கிச்சிலிப்பழங்களை மெல்லிய காகிதத்தில் சுற்றி, பம்பாய் கிராபோர்டு மார்க்கெட்டில் விற்று விடுகிறார்கள்! இங்கே இன்றுதான் பறித்த பழங்களைக் குவியலாகக் கொட்டியிருந்தும் கவனிப்பாரில்லை!'' என்றார்.

ரஜனிக்கு இந்தப் பேச்சு எல்லாமே விந்தையாக இருநதது. அவள் ஸேட்டையும் மகாத்மாவையும் கவனிக்காமல் சேகரனைப் பரிவோடு பார்த்து, ''நான் இங்கு ஏதோ வந்த இடத்தில் உங்களை அறிமுகமாக்கிக்கொள்ள நேர்ந்தது. இதற்கு என்னை மன்னிக்க வேண்டும். இங்கே நீங்கள் வந்திருப்பதைத் தோழி சரளா சொன்னதுமே, உங்களைப் பார்க்காமல் போகத் தோன்றவில்லை'' என்றாள்.

சேகர் அவளை அநுதாபத்தோடு பார்த்தான்.

மீதிப் பேர் யாவரும் ஒரு கணம் சும்மா இருந்தார்கள்.

பம்பு ஸேட் மட்டும் ஓர் ஆங்கிலக் காதற் பாட்டை லேசாக முணுமுணுத்தான்.

ஏதாவது பேசவேண்டுமே என்று நினைத்த சேகரன், ''நீங்கள் இங்கே எத்தனை நாள் தங்கியிருப்பீர்கள்?'' என்று கேட்டான்.

"அவர் இனி நாகபுரியிலேயேதான் இருக்கப்போகிருர். சாரதா உயர்தரப் பள்ளியில் அவர் தலைமை யாசிரியை."

"சரி, நான் போய் வருகிறேன். ஞாபகம் இருக்கட்டும். மஞ்சு அம்மா, சாவகாசமாக ஒரு நாள் உங்கள் வீட்டுக்கு வருகிறேன்" எனறு சொல்லிவிட்டு ரஜனி சரளாவோடு சென்று அந்த இருட்டில் வேகமாக மறைந்தாள்.

ஆனல், அவள் தலையில் சுற்றியிருந்த வான நிற மப்ளரின் விளிம்பிலே அவனைப் பார்த்து அறிவு ஒளி வீசிய அவளுடைய அந்தக் கண்கள்!—வைகறைப்பொழுதில் மிளிரும் சுக்கிர தாரகையைப் போன்ற அந்தக் கண்களின் ஒளி இன்னமும் தன் மனத்திலும் உடலிலும் பரவி இன்பமளிப்பதைச் சேகரன் உணர்ந்தான்.

அதற்குள் பம்பு ஸேட் அவன் முதுகை ஓங்கித் தட்டி, "பேஷ்! ஒரே ஓர் இளம் பெண்ணுவது உங்கள் எழுததுககு மசிந்துவிட்டாளே! ஐயா, அந்த 'வெண்ணிலா' இதழ்களை நாளைக்கு எனக்கு அனுப்பி வையுஙகள், பார்ககலாம். அதைப் படித்து எனக்கும் ஏதாவது பயன் உண்டாகலாம்" என்று கூறி நகைக்கலானுன்.

ஸேட்டின் அந்தப் பரிகாசமும் விகாரப் பேச்சும் சேகரனுக்கு வெறுப்பை மூட்டின.

அவனுககு ஏதாவது சூடான பதில் கொடுக்க வேண்டுமென்று சேகரன் நினைப்பதற்குள், மஞ்சு அவனிடம் அவசர அவசரமாக வந்து, "என் சாப்பாடு முடிந்ததுமே நாம் புறப்பட வேண்டியதுதான். குழந்தைகளுக்குத் தூக்கம் வந்துவிட்டது" என்ருள்.

"நீ புறப்படுவதாயிருந்தால் இப்போதே நான் வரத் தயார்!"

அவன் பேச்சில் இருந்த அலுப்பைத் தெரிந்துகொண்ட மஞ்சு, "இவ்வளவு நேரம் இருந்தவர் இன்னும் சற்று நேரம் இருங்கள். அவசரப்பட்டுப் போனல்-சரளா ஏதாவது நினைத்துக்கொள்வாள்" என்ருள்.

இந்த இரண்டாம் முறைச் சாப்பாட்டுக்கு, கோவிந்தனுக்கு மிகவும் வேண்டியவர்கள் மட்டுமே இருந்தார்கள். அவர்களில்

மகாத்மா, பம்பு ஸேட், இரண்டொரு வக்கீல்கள் ஆகியவர்களைத் தவிர மற்றவரைச் சேகரனுக்குத் தெரியாது. தயிர்வடையும் ஜாங்கிரியும் ஜோராகத்தான் இருந்தன. அவை என்னதான ருசியாக இருந்தாலும் ஏற்கனவே ஒரு தடவை சாப்பிட்டவர்களுக்கு எப்படி வேண்டியிருக்கும்? மகாத்மா தகளியைச் சுழற்றிக்கொண்டு பந்தியில் சும்மா உட்கார்ந்திருந்தார். பம்பு ஸேட் மட்டும் வயிறார உண்டான். அவனுடைய குறும்புப் பேச்சைக் கேட்டு எல்லாரும் சிரித்தார்கள்.

சாப்பாடு முடிந்ததும் சேகரன் உடை யணிந்துகொண்டான். பம்பு ஸேட் கொடுத்த வெற்றிலைபாக்கை வாங்கிக்கொண்டு அவன் மஞ்சுவின் வரவை எதிர்பார்த்தான். ஹாலில் உட்கார்ந்திருந்த மற்றவர்கள் புகை பிடித்தார்கள்; வம்புப் பேச்சுப் பேசினார்கள் ஆனால் சேகரன் தனியாக ஒரு புறத்தில் நாற்காலியில் அமர்ந்திருந்தான். சற்று நேரத்துக்கெல்லாம் மஞ்சு குழந்தையைத் தோளில் சாய்த்தபடி வெளியே வந்தாள். ரஞ்சிதம் சரளாவின் கையைப் பிடித்திருந்தாள். அவர்களைப் பார்த்ததும் சேகரன் எழுந்து நின்றான்

உடனே பம்பு ஸேட் வந்து, "இன்று நாங்கள் சேகரனைக் கொஞ்ச நேரம் எங்களோடு உலாவ அழைத்துப்போனால் உங்களுக்கு ஒன்றும் தடை இல்லையே, மஞ்சு அம்மா?" என்றான்.

மஞ்சு ஒரு கணம் திகைத்தாள். பிறகு முல்லைநகை பூத்து, "எனக்கு என்ன தடை? அவர் உங்களோடு வரத் தயார்தானோ?" என்றாள்.

"அது எங்களுக்குள் முன்னமே தீர்மானமாகிவிட்டது. சேகர், நீங்கள் எங்களோடு வெகு நேரம் தங்க வேண்டாம். காரில் சுற்றிவிட்டு ஒரு மணி நேரத்திற்குள் நான் உங்களை வீட்டில் கொண்டு விடுகிறேன்" என்று கோவிந்தன் இடைமறித்துப் பேசினார்.

சேகரன் ஸ்தம்பித்து நின்றான்.

"வெகு நேரம் ஆக்காதீர்கள். வீட்டில் நான் ஒண்டியாக இருக்கிறேன்" என்று மொழிந்த மஞ்சு அவனைக் குறிப்பாய்ப் பார்த்துவிட்டு வாசல் வளைவில் நின்ற காரில் போய் உட்கார்ந்தாள்.

சேகரனுக்கு அங்கே தங்க அடியோடு விருப்பமே இல்லை. ஆயினும் கோவிந்தன் சொன்ன பிறகு தட்டிப் பேசவும் இடமில்லை.

மஞ்சுவை வீட்டில் கொண்டு விட்டு, வண்டி அரை மணிககுள் திரும்பி வநதது. பம்பு ஸேட்டின் காரும் வெளி முற்றத்தில நின்றது. கோவிநதனின் கார் திரும்பி வந்து வளைவுககுள் நின்றதுமே, "என்ன கோவிந்தன், புறப்பட வேண்டியதுதானே? இந்தச் சேகரன உங்கள் தாட்சிணியத் துக்காக வீட்டுககுப் போகாமல் இங்கே இருகக ஒப்புக்கொண் டார்! நான் நேரமாககிறுல அவர் உடனே நடந்துவிடுவார்" என்ருன் ஸேட்.

"புறப்படலாமே! நான் தயார். நீயும் எங்களோடு வரு கிருயா?" என்று நாற்காலியில் உட்கார்ந்திருந்த சரளாவைக் கோவிந்தன் கேட்டார்.

"ஏதுக்கு வீணுக்கு? இனறு நான் மிகவும் களைத்துப் போயிருககிறேன்" என்று கருத்து நிரம்பிய பார்வையோடு அவள் பேசினுள்.

"அப்படியாஞல் நீங்கள் கட்டாயம் வரத்தான் வேண்டும், சரளா அம்மா! சற்று உலாவியதும் உஙகளுக்குத் தெம்பாக இருககும். புறபபடுஙகள்; கமபளிக்கோட்டு அணிந்துகொண்டு எங்களோடு வாருங்கள்!"

சரளா கம்பளிக் கோட்டை அணிந்து வந்ததும் கோவிந்தன் அவளோடு தமது காரில் முன்பக்கத்தில் உட்கார்ந்தார். பின் புறத்தில் ஒரு டிபுடி தாசில்தாரும் ஓர் இன்ஷ்யூரன்ஸ் ஏஜெண் டும் அமர்ந்தார்கள். சேகரன் பம்பு ஸேட்டின் காரில் அவரரு கில் இடங்கொண்டான். ஸேட் மகாத்மாவை வற்புறுத்தியும் அவர் வரவில்லை.

இரண்டு கார்களும் ராஜாத் தோட்டத்தைச் சுற்றிக் கொண்டு ஸிவில் லைன்ஸ் சாலைக்கு வந்ததும், 'இவர்கள் சிறிது நேரம உலாவத்தான் போகிருர்கள்' என்று சேகரன் நினைத் தான். ஆஞல் வண்டிகள் மவுன்ட் ரோடில் திரும்பியதும் அவ னுக்குத் திகைப்பாகிவிட்டது.

இனிமேல் அவன் சிந்திக்கவே வேண்டியதில்லை.

மவுனட் ரோட் ஹோட்டலில் அழகிய வெளிமுற்றத்தில் கார் வந்து நின்றதுமே நிலைமையைச் சட்டென்று அவன் புரிந்து கொண்டான்.

ஸேட்டின் கார் முன்னால் இருந்தது. வண்டி நின்றதுமே, பட்டை போட்டிருந்த வேலையாள் ஓடிவந்து சலாமிட்டு வண்டியின் கதவைத் திறந்தான்.

"ரூம் தயாராக இருக்கிறது, ஸார்" என்று அவன் மரியாதையாய்ப் பணிந்து கூறினான்.

அவனைத் தொடர்ந்து ஸேட்டும் கோவிந்தனும் சரளாவும் சேகரனும் இன்ஷ்யூரன்ஸ் ஏஜெண்டும் டிபுடி தாசில்தாரும் அறைக்குள் நுழைந்தார்கள்.

அந்த ஹோட்டல் அறை சாதாரணமாக அலங்கரிக்கப் பெற்றிருந்தது. இருபுறத்துக் கதவுகளிலும் திரைகள் தொங்கின.

நாற்காலியில அமர்ந்ததும் பம்பு ஸேட் வேலையாளிடம் சொல்ல வேண்டியதை மெதுவாகச் சொன்னான். வேலையாள் உடனே வெளியில் சென்றான்.

நாம் எங்கே எதற்காக வந்திருக்கிறோம் என்பது இப்போது தான் சேகரனுக்கு விளங்கியது. சரளா அஙகு வந்ததுதான் அவனுககு விநதையிலும் விந்தையாக இருந்தது.

ஸேட் தன் சட்டைப்பையிலிருந்து ஒரு சிகரெட் பெட்டியை எடுத்து மேஜையின் நடுவே வைததான். எல்லாரும் ஒவ்வொரு சிகரெட் எடுத்துக்கொண்டார்கள். ஸேட் பற்றவைத்த நெருப்பில் தமது சிகரெட்டை நீட்டிக்கொண்டே, "நீ எடுத்துக் கொள்ளவில்லையா?" என்று கோவிந்தன் சரளாவைக் கேட்டார்.

ஸேட் சிகரெட் பெட்டியை அவள் முன்னால் நகர்த்தி, "இந்தச் சேகரன் எடுத்துக்கொள்ளாததால சரளா அம்மாளுக்குக் கூச்சமாக இருக்கிறது போலும்!" எனறான்.

"சேச்சே, இதில் கூச்சமென்ன?" என்று சொல்லிவிட்டு, சரளா ஒரு சிகரெட்டை எடுத்துக்கொண்டாள். உடனே கோவிந்தனுடைய சிகரெட்டோடு அதைப் பற்ற வைத்து ஓர் இழுப்பு இழுத்தாள். அப்போது அவளுடைய விரல் நகங்களின் செம்மை பவழம்போல் மின்னியது.

"நீங்கள் எப்போதுமே புகை பிடிப்பதில்லையா, சேகர்?" என்று கேட்டார் கோவிந்தன்.

"இல்லை."

"மஞ்சுவுக்கு அது பிடிக்காது என்று எண்ணுகிறேன்; அப்படித்தானே?"

"அதுமட்டுமல்ல காரணம். இந்தப் பழக்கங்களெல்லாம் காலேஜில படிக்கும்போது ஏற்பட்டால்தான் ஏற்பட்டது; இல்லாவிட்டால் பிறகு பெரும்பாலும ஏற்படுவதில்லை"

"நமமுடைய சேகரனுக்கு எவவிதமான பழக்கமும் இல்லை என்று நீஙகள் ஏன் நினைக்கிறீர்கள், கோவிந்தன? அவர் இலக்கிய ஆசிரியர். அவரிடம் பல இளம பெண்களும இளைஞர்களும் மிகவும் மதிப்புடன் வருகிறார்கள். சற்று நேரம் முந்தி அநதக் காட்சியை நீங்கள் பார்க்கவில்லையா? மனிதனுக்கு ஏதாவது ஒரு தீவிரப் பழக்கம் இருந்தால் அதை அவன் ஜனங்களிடமிருந்து மறைத்து வைதது, தூயவனாக வேஷம போடத்தான் வேண்டியிருக்கிறது என்பது என் கொள்கை."

ஸேட்டின் இநத வார்த்தை சேகரனுக்கு மிகுந்தகொதிப்பை விளைவித்தது. மேஜை மேல் இருந்த புட்டியை எடுத்து அவன் தலையில் உடைக்கலாமா என்றுகூடத் தோன்றிற்று.

ஆனால் அவன் மிகவும் சிரமப்பட்டுத் தன் மனத்தை அடக்கிக்கொண்டு, "ஸேட்ஜி! மனிதன தனனைப்போலவே பிறரையும் நினைத்துவிடுகிறான். நான பள்ளிக்கூடத்தில் ஆசிரியனாக இருக்கிறேன. ஏதோ கொஞசம எழுதவும் எழுதுகிறேன். அதனால என்னிடம பல இளைஞர்களும பெண்களும வருகிறார்கள் என்பது உணமை. நான் அவர்களிடம் அன்பு வைப்பது குற்றம் என்பதை இன்றுதான் முதல்முதலாக அறிந்துகொண்டேன்!" என்றான்.

"அது சரிதான், சேகர்! எங்களைப் போன்றவர்களோடு நீங்கள் ஏன் கலந்துகொள்வதில்லை? அந்த இள மக்களின் சகவாசம் உங்களுக்கு ஏன் இனிமையாக இருக்கிறது?"

"வயதில் சமமான உங்களைப் போன்றவர்களோடு சேர்ந்தால் இப்படிப்பட்ட தொழிலைத்தானே செய்யவேண்டியிருக்கும்? முற்போக்கு என்ற பகட்டான பேச்சும், பிறருடைய

குணங்களைப் பொறுமை கொண்டு இகழ்வதும், மனிதத்தன் மையின எல்லையை மறக்கச் செய்யும கேளிக்கையும் தவிர உங்கள் சகவாசத்திலே வேறு என்ன இருக்கிறது? உண்மையில் உங்களோடு குலாவுவதைவிட, என் குணங்களில் ஆசை கொணடு என்னிடம் வரும் இளைஞர்களோடும் இளம் பெண்க ளோடும் பழகுவது அதிக இன்பத்தைத் தருகிறது. அலுத்துப் போன வலிமையை யெல்லாம் மலர்விக்கும் அந்தப் புதுமை யும் நேர்மையும் அன்பும் அவர்களுடைய சகவாசத்தில் கிடைப்பதுபோல வேறெஙகுும காணபது அரிது. ஆகவே அதற்காக நீங்கள் எனனைப் பததுப் பேரோடு பழகாத பயங் கொள்ளி என்று சொன்னாலும் சரி, வேறு ஏதாவது பழி சுமத் தினாலும் சரி, நான அதைப பொருட்படுத்த மாட்டேன்!''

சேகரன் இப்படி ஆவேசத்தோடு பேசினான். அந்த ஆவே சப் போக்கில் நாம் இன்ன இடத்தில் இன்னது செய்கிறோம், இன்ன குரலில் பேசுகிறோம என்ற உணர்வே அவனுக்கு இருக்கவில்லை.

''நாங்கள் எதற்காக உங்களைப் பழிக்கப் போகிறோம்? நீங் கள்தான் கிறுக்குத்தனமாகப் பேசுகிறீர்கள். ஆனால் பிறன் மனைவியை நீங்கள் உங்கள் வீட்டில் அழைதது வந்து வைத்திருந்ததற்காகப் போலீசில் உங்களைப்பற்றி ஒரு வழக்கு வந்ததே, அது மட்டும் ஞாபகம் இருக்கட்டும்!''

''நீங்கள் எதையாவது பேசாதீர்கள், ஸேட்ஜி! ராமநாதன் ஏதோ சினத்தில் வந்த ஆத்திரத்தால், அப்படிப் பிராது கொடுத்துவிட்டான். மஞ்சுவின் அண்ணியை அவன் மிகவும் துன்புறுத்தவே, இவர் ஒரு நாள் அவளைத் தம் வீட்டுக்கு அழைததுவந்தார். உடனே அவன் தன் மனைவியை இவர் இழுத்துச் சென்றதாகப் போலீசில் பிராது செய்தான்!'' என்று சரளா நடுவில் பேசினாள். ஸேட்டின் பேச்சில் இருந்த கசப்பை அவளால் பொறுக்க முடியவில்லை.

''நடந்த செய்தியெல்லாம் ஸேட்ஜிக்குத் தெரியாது என்று நினைக்கிறீர்களா, சரளா அம்மா? இன்று அவர் சிறிது நேரமாக வாய்க்கு வந்தபடி பேசுகிறார். அதிலும் எதிரே புட்டிகள் இருக் கின்றன! அவர் என்ன அசங்கியமாய்ப் பேசினாலும் அதைப்

பாராட்ட உங்கள் குழு இருக்கவே இருக்கிறது. அப்படியிருக்க ஏழையான என்னை அவர் ஏன் பரிகாசம் செய்யமாட்டார்? மதுபானக் கொண்டாட்டததில், பொழுது போக்குக்கு ஏதாவது விஷயம் வேண்டும என்றே அவர் என்னை வற்புறுத்தி அழைத்து வநதிருககிறுர்.''

சரளா இதற்கு ஏதும் பதில் சொலலவில்லை. ஆனுல் கோவிந்தன் சமாதானக் குரலில், ''மிஸ்டர் சேகர், இந்த இன்பத்தில் கலந்துகொள்ள உஙகளைச் சகஜமாகவே அழைத்து வந்திருககிறேம். உங்களை அவமானப்படுத்த வேண்டும் என்பதோ உஙகளுக்குச் சினமூட்ட வேண்டும் என்பதோ எங்களுடைய நோக்கமல்ல. நான் உங்களை வற்புறுத்தவில்லை. ஆனுல் இந்தக் கூட்டததோடு நீஙகளும் சிறிது அருந்துவதில் தீமை இல்லை என்று எனக்குத் தோனறுகிறது'' எனறு இதமாக உரைத்தார்.

''எதற்காக இந்த விவாதம், சேகர்? உங்களுக்கு வேண்டிய அளவு மட்டும் எடுத்துகொள்ளுங்களேன்!'' என்ருள் சரளா.

சேகரன் தன் கிண்ணத்திலிருந்து பாதி மதுவைக் கோவிந்தனுடைய கிண்ணத்தில் ஊற்றிவிட்டு, முகத்தைக் கோணிக் கொண்டு எப்படியோ அந்த அரைக் கிண்ணத்தைக் குடித்து முடித்தான்.

சரளா ஓவ்வோர் வாயாக அதைச் சுவையுடன் அருந்தியபடி அவனை உற்றுப் பார்த்தாள்

அவன் கிண்ணத்தைக் கீழே வைத்ததும், பம்பு ஸேட் பரிசாரகனை அழைத்து, உண்ண ஏதாவது கொண்டு வருமபடி உத்தரவிட்டான்.

பரிசாரகன் பிரியாணியும் கட்லெட்டும் நிரம்பிய தட்டுகளைக் கொண்டுவந்து மேஜைமேல் வைத்தான்.

கோவிந்தன் ஒரு தட்டு பிரியாணியை எடுத்துக்கொண்டு, ''நீங்களும் கொஞ்சம் ருசி பாருங்களேன், சேகர்!'' என்ருர்.

''எனக்கு அடியோடு பசியில்லை!''

''பசி எனக்குக் கூடத்தான் இல்லை! நான் எடுத்துக் கொண்டதுபோல ஏதோ கொஞ்சம் சாப்பிடுங்களேன்!''

"என்னை மன்னிக்க வேண்டும், கோவிந்தன்! எனக்கு இந்த உணவெல்லாம் பிடிக்காது."

"ஏன்? நீங்கள் மாமிச உணவை எதிர்ப்பவரா?"

"இல்லை, நான் கொள்கையளவில் மாமிச உணவை எதிர்ப்பவன் அலல, சரளா அம்மா! ஆயினும என் மட்டும் மாமிசம் உண்ணுவதில்லை என்று தீர்மானித்திருக்கிறேன்."

"கொள்கையளவில் எதிர்ககாமல், உண்ணமல் இருப்பது என்பது முரணக இல்லையா?"

"முரணக இருக்கலாம். ஆனல் அதற்கு வேறு வழியில்லை. மாமிச உணவு இன்றியமையாதது என்று எனக்குத் தெரியும். ஆனல் ஷா சொன்னதுபோல, பிற உயிரைக் கொன்று அதன் பிணத்தைத் தின்னும் எண்ணம் அநாகரிகமாகத்தான் தோன்றுகிறது."

"நீங்கள் உணர்ச்சிக் கண்ணல் உலகத்தைப் பார்க்கிறீர்கள், மிஸ்டர் சேகர்!"

"அறிவுக் கண்ணல் உலகைப் பார்க்க ஆரம்பிததால் இங்கே பார்க்கத் தக்கதும் விருமபத் தக்கதுமான பொருள் எதுவுமே இராது, சரளா அம்மா! நாம ஒவ்வொரு விஷயத்தையும் அறிவினல் ஆராய்ந்தால் நம்மைச சுற்றியிருக்கும் எத்தனை பேரிடம் நமககு அன்பு மிஞசியிருக்குமா?" என்று அவன் பொதுவாகப் பேசினன். ஆயினும சரளாவின் முகம் உடனே இறங்கிவிட்டது.

அந்தக் கணமே தன் பிழையை அவன் உணர்ந்து சமாளித்துக்கொண்டு பேசலானன்: "நீங்கள் என் முரண்பாட்டைக் காண்பித்ததை நானும் ஒப்புக்கொள்கிறேன். ஆனல் மனித வாழ்க்கை முழுவதுமே மொத்தத்தில் முரணகவும் தர்க்கத்தைக் கடந்ததாகவுந்தானே இருக்கிறது? நீங்கள் என்னைவிட மிகுதியாக உலகத்தைப் பார்த்திருககிறீர்கள்; அநுபவமும் பெற்றிருக்கிறீர்கள். உங்களுக்கு இந்த முரண்பாடு விநதையாகத் தோன்ற வேண்டியதில்லை!"

"எனக்கு விந்தையாகத் தோன்றியது இந்த முரண்பாடு அல்ல; மஞ்சுவின் மனத்தை வருத்தக்கூடாது என்று இவ்வளவு ஜாக்கிரதையாக நீங்கள் இருப்பதுதான் எனக்கு விந்தை

யாகப் படுகிறது. மதுபானம், மாமிசம், சிகரெட்டு முதலி யவை அவளைப் பொறுத்த வரைக்கும் விலக்கானவை; வெறும் துர்ப்பழக்கங்கள்! உங்களுக்குப் பிடித்த அல்லது உங்கள் அறிவுக்கேற்ற விஷயங்களைவிட அவளுடைய அன்பையும் மன அமைதியையுமே நீங்கள் பெரிதும் விரும்புகிறீர்கள். அதனால் தான் உங்கள் நடவடிக்கையில் இந்த முரண்பாடு தோன்றி யிருக்கிறது. இது உண்மைதானே? மனைவிக்குப் பிடிக்காது என்று உலகில் இவ்வளவு ஜாக்கிரதையாக நடந்துகொள்ளும் ஆண்களைப் பார்ப்பது அருமை!"

கடைசி வாக்கியத்தைச் சொன்னபோது அவள் முகத்தில் வருத்தத்தின் நிழல் பரவியது. ஆனால் அது ஒரு கணப் பொழுதுதான். எச்சிலை விழுங்கிக்கொண்டு, கிண்ணத்தில் எஞ்சியிருந்த மதுவை அவள் அருந்தினாள்.

"என் நடவடிக்கையில் என்ன புதுமை இருக்கிறது, சரளா அம்மா! குடும்பம் என்றால் ஒரு கலவை; ஆணுக்கும் பெண் ணுக்கும் ஓர் உடன்படிக்கை. கணவனும் மனைவியும் ஒருவருக் காக மற்றவர் உழைப்பதனாலும், ஒருவருடைய இன்பத்துக்காக மற்றவர் பாடுபடுவதனாலும் குடித்தனம் இன்பகரமாக இருக் கிறது. குடும்ப இன்பம் முழுவதுமே, ஒருவருக்கு மற்றவர் போட்டி போட்டுக்கொண்டு துன்புறுவதிலும், தியாகம் செய் வதிலும், ஒருவருடைய உணர்ச்சிகளையும் கொள்கைகளையும் மற்றவர் மதித்து நடந்துகொள்வதிலுந்தான் இருக்கிறது. குடும்ப சுகம் என்பது அதுதான். சாமானிய நிலையிலுள்ள ஏழையான நான் என் கற்பனைக்குத் தகுந்தபடி என் மனைவிக்கு ஒரு சுகமும் தர முடியாது. அப்படியிருக்க அவள் மனம் வருந் தாமல் இருக்கும்படியாவது நடந்துகொள்ள முயலக்கூடாதா? வாழ்க்கையை நிலைக்கவைக்கும் பொருள்களில், நான் குடும்ப இன்பத்துக்கு முதல் இடம் அளிக்கிறேன். குடும்ப இன்பம் மனைவியின் களிப்பைப் பொறுத்ததாகையால் அவளுடைய உள்ளம் வருந்தும்படியான எந்தச் செயலையும் விலக்குவதற்கு நான் பாடு படுகிறேன்."

உணர்ச்சி கலந்த ஆவேசத்தோடு சேகரன் இதைப் பேசி னான். களைத்துப்போன அவனுடைய சோர்ந்த கண்களில் அப்

பொழுது தென்பட்ட மென்மையான ஒளியும், புலனடக்கத்தின் வேகத்திலை உண்டான அவனுடைய மென்மையான முகதின் விரிவும் சரளாவின் நெஞ்சத்தைக் கவர்ந்தன.

“புட்டிகளை உடைத்து முன்னால் வைத்திருக்கும்போது, பெரிய விஷயங்களைப்பற்றிச் சொற்பொழிவைக் கேட்கும் சந்தர்ப்பம் இப்போதுதான் முதல்முதலாக என் வாழ்க்கையில் ஏற்பட்டிருக்கிறது. மனிதர்கள் இங்கே குடிப்பதற்கு வருகிறார்கள்; நிறையக் குடித்துவிட்டால் சில சமயம் அவர்கள் நிறையப் பேசுவதும் உண்டு. ஆனால் இங்கே வந்து குடிக்காமலே நிறையப் பேசுகிறவராக உங்களைத்தான் முதலில் காண்கிறேன், சேகர்!” நீண்ட பிரசங்கத்தினால் அலுத்துப்போன ஸேட் இப்படிச் சொன்னான்.

“இந்தச் சந்தர்ப்பம் நீங்களாக வைத்துக்கொண்டது தானே! என்னை இங்கே அழைத்து வருவதில் பயனில்லை என்று உங்களுக்கே தெரியும்.”

“இன்று எங்கள் மதத்தில் உங்களுக்குத் தீட்சை செய்விக்க வேண்டும் என்று நினைத்திருந்தேன். ஆனால் நீங்கள் பெரிய பிடிவாதக்காரராகவும் சநாதனியாகவும் இருக்கிறீர்கள். போதாக்குறைக்கு உபதேசம் வேறு செய்கிறீர்கள்!”

“அவருடைய உபதேசத்தில நீங்கள் எடுத்துக்கொள்ள வேண்டியது நிறைய இருக்கிறது, ஸேட்ஜி!”

“கோவிந்தன் விஷயம் என்ன?”

“அவரும் எடுத்துக்கொள்ள வேண்டியதுதான்!” என்று சரளா சிரித்துக்கொண்டே சொல்லிக் கைக்கடிகாரத்தைப் பார்த்தாள்; “நாம் இனி எழுந்திருக்க வேண்டும். மணி பதினொன்று ஆகப்போகிறது, தெரியுமோ?” என்றாள்.

“அடடா! இவ்வளவு நேரமாகிவிட்டதா? நான் போயே தீரவேண்டும்” என்று துடித்தான் சேகரன்.

“சரி, புறப்படுவோமா கோவிந்தன்?” என்று ஸேட் ஒரு புட்டியில் மீதியிருந்த மதுவைத் தன் கிண்ணத்தில் ஊற்றிய வண்ணம் கேட்டான்.

“ஆமாம், புறப்படலாம் என்று தோன்றுகிறது. இவர் வேறு அவசரப்படுகிறார்.”

ஸேட் ஒரே வாயில் குடித்தானதும், அந்தக் கூட்டம் அங் கிருந்து கிளம்பியது.

கோவிந்தனிடமும சரளாவிடமும் விடைபெற்றுக்கொண்டு சேகரன் ஸேட்டின வண்டியில் அமர்ந்தான்.

ஸேட் பில் பணத்தைக் கொடுத்துவிட்டு வெளியே வந்து வண்டியை ஓட்டிககொணடே மெதுவாக, "இன்று நீங்கள் இஙகே வநது எல்லாவற்றையும் விரசமாககிவிட்டீர்கள்! ஆனல் இனறு உங்களைப் பார்த்ததும், 'என் கணவர் நான் நினைப்பதுபோல அவ்வளவு நல்லவரல்ல!' என்று உஙகள் மனைவிககுத் தெரிந்துவிடும்" எனருன்.

"அதாவது? அவள் மனத்தில, என்னைப் பற்றிச சந்தேகம் எழ வேணடும் என்பதற்காகத்தான், எனனை இங்கு அழைத்து வந்தீர்களா?"

"பின்னே என்ன? நீங்கள் எப்போது பார்த்தாலும் தத்துவ ஞானிபோல முகத்தை உப்ப வைத்துக்கொண்டு உட் கார்ந்திருககிறீர்கள். உங்கள் அறிவை விளமபரப்படுத்துகிறீர் கள். அதனுல்தான் இளைஞர்களும இளம் பெணகளும் உஙகளி டம் ஆசை கொள்கிருர்கள். 'என் கணவர் சாகரெடிஸைப் போன்ற ஞானி' என்று உங்கள் மனைவி எண்ணுகிருள். இன்று நீங்கள் என்னுேடு வந்ததனுல் சரளாகூட வழக்கம்போலக் குடிக்கவில்லை; கோவிந்தனே மடிமியாக உட்கார்ந்திருநதார்."

"உங்கள் நாக்கு மட்டும் சும்மா இல்லையே?"

"ஒருத்தனுடைய நாக்கு மட்டும் உண்பதனுல் என்ன பயன்? எல்லாருடைய நாக்கும் இன்பம் அடைந்தால்தான் இம் மாதிரியான கூட்டத்தில் குஷியாக இருக்கும்!"

"நீங்கள் ஏன் ஸேட்ஜி, உஙகள் மனைவியை இந்தச் சமூகக் கூட்டத்துக்கெல்லாம் அழைத்து வருவதிலலை? உங்கள் ஜாதியில் அவளைப் போல நிறையப் படித்தவளே இல்லையாமே!"

"மனைவியோடு எப்போதும் குலாவுவதற்கும், அவளைத் தலையில் வைத்துக்கொண்டு கூத்தாடுவதற்கும் நான் உங்களைப் போலத் தத்துவ ஞானியா என்ன? என்னதான் மனைவி நமக்கு அன்புடையவளாக இருந்தாலும் சில சமயம் அவளிட

மும் வெறுப்புத் தோன்றுகிறது. இப்படி வெளியே நம்மோடு மனைவியை அழைத்துக்கொண்டு திரிவது நம் வாய்க்கு நாமே கடிவாளம் பூட்டிக்கொள்வது போல! நீங்கள் கவனிக்கவில்லையா, சற்று நேரம் முன்பு சரளா கோவிந்தனைப் பற்றிக் குறிப்பிட்டதை? பெண்கள் எவ்வளவுதான் படித்தவர்களாக இருந்தாலும் கணவனிடம் தனக்குள்ள உரிமையை விடுவதற்குத் துளியும் தயாராவதில்லை!''

''ஆண்கள் மட்டும் மனைவியிடம் தமக்குள்ள உரிமையை விடத் தயாரா?''

''அப்பனே! நான் உங்களைத் தொலைவிலிருந்தே வணங்குகிறேன். உங்கள் புலமையினால் சாயந்தரத்திலிருந்து என்னைத் தொந்தரவுபடுத்திவிட்டீர்கள். கீழே இறங்குங்கள். இதோ உங்கள் வீடு வந்துவிட்டது. உங்கள் மனைவி உங்களோடு எப்படித்தான் குடும்பம் நடத்துகிறாளோ, ஆண்டவனுக்குத்தான் வெளிச்சம்! இமயமலையில் பனிப் படலங்கள் வெயிலில் பொன்போலப் பளிச்சிடுவதைக் கண்டு மனிதன் தன்னை மறந்து அங்கே நின்றுவிட்டால், குளிரில் உறைந்து சாக வேண்டியதுதான். அப்படித்தான் உங்கள் சகவாசமும். உங்கள் கட்டுரைகளும் கதைகளும் படிக்க ஒருவேளை நன்றாக இருக்கலாம். அந்த ஆரணங்கு உங்களிடம் ஆசைகொண்டது சும்மா அல்ல ஆனால் உங்கள் பிரசங்கம் இருக்கிறதே! அப்பப்பா! எனக்குப் போதும் போதும் என்று ஆகிவிட்டது.''

ஸேட்டின் பேச்சையும் அபிநயத்தையும் கண்டு சேகரனுக்கு உள்ளூறச் சிரிப்பு வந்தது. ''நீங்கள் இன்று வெறியில் இருக்கிறீர்கள், ஸேட்ஜி! இல்லாவிட்டால் என்னை இமயமலையோடு ஒப்பிட்டிருக்க மாட்டீர்கள்!'' என்றான்.

''அதற்காகத்தான் ஐயா மதுபானம் செய்யவேண்டும்! அந்தச் சமாதி நிலையிலே இமயமலையும் சிறு குன்றமும், ரம்பையும் கூனியும், தன் மனைவியும் பிறன் மனைவியும் சமமாகத்தான் தோற்றுவார்கள். மனிதனைச் சமத்துவம் பேசச் செய்யும் அமுதம், மதுவைத் தவிர வேறு ஏதுமில்லை. சரி, உங்களுடைய கட்டுரைகள் வந்த இதழ்களை எனக்கு நாளைக் காலையில் தவறாமல் அனுப்பிவிடுங்கள்'' என்று சொல்லி,

ஸேட் சேகரனின் கையைக் குலுக்கினான். வண்டி வேகமாகப் போய்விட்டது. சேகரன் முன்வாசலைத் தாண்டி வந்ததுமே, தன் அறையில் விளக்கு எரிவதைக் கவனித்தான்.

மஞ்சு அவன் வரவை எதிர்பார்த்துக காத்திருக்கிறாள்!

அவன் கதவில் கையை வைத்தான். அது தானாகத் திறந்துகொண்டது. கதவருகில் நின்ற மஞ்சு திடீரென்று திடுக் கிட்டுப பின்வாங்கினாள். "இன்று நீங்கள் என்ன செய்துவிட்டு வந்திருககிறீர்கள்?" என்று அவள் கோபத்தோடு கேட்டாள்.

"இன்று நீ என்மேல் கோபித்துக்கொள்ள முடியாது, மஞ்சு! உனனுடைய வற்புறுத்தலினால்தான் நான் விருந்துக்கு வந்தேன்; அதன் விளைவு இது!"

"நான் உங்களை அந்தப் பம்பு ஸேட்டோடு திரியச் சொல்லவில்லையே? கோவிந்தனைப் போலவே, உங்களிடமும் அவன் அருள் விழியைப் பரப்பிவிட்டானா?"

'உன் தோழி மட்டும் எதிலும் குறைந்தவளல்ல; கோவிந் தனுக்கும் ஸேட்டுக்கும் அவள் தோற்றவளல்ல' என்று மனத்தில் இருந்ததைச் சேகரன் சொல்லிவிட விரும்பினான். ஆயினும் அந்த ஆவலை அடக்கிக்கொண்டான்.

"மஞ்சு, இன்றைய உலகம் பம்பு ஸேட்டைப் போன்ற வனுக்குத்தான் உரியது என்பதை மறந்துவிடாதே!" என்று அவன் அமைதியாகப் பேசினான்.

மஞ்சு அரைக்கணம் திகைத்துப்போனாள்; ஆத்திரத்துடன் உதட்டைப் பல்லால் அழுத்திக்கொண்டாள். தன்னையும் மீறிய குரலில், "அப்படிப்பட்ட உலகில் வாழ்வதைவிட நான் சாவை மேலாக மதிக்கிறேன்!" என்றாள்.

## 6

ரஜனி இள வெயிலில் தன் கூந்தலை ஆற்றிக்கொண் டிருந்தாள். அவளுடைய கன்னங்கரிய நீண்ட கூந்தல் முதுகை மறைத்தது. கூந்தலில் இளவெயில் பட்டு, கருமை பின்னும் சுடர் வீசியது.

அவள் பள்ளிக்கூடத்துக்குப் போக இன்னும் இரண்டு மணி நேரம் இருந்தது. அதற்குள் தலையை ஆற்றிப் பின்னிக்

கொள்ள வேண்டுமாகையால், ஸ்நானம் செய்ததுமே வெயி லில் வந்து உட்கார்ந்தாள்.

காலை நேரத்தில் அவள் வெயிலில் வந்து உட்கார இன்னு மொரு காரணமும் இருந்தது. அவள் மனம் ஒரு நிலையில் இல்லை என்பதுதான் அந்தக் காரணம்.

முதல் நாள் இரவு சேகரனைச் சந்தித்ததிலிருந்து அவ ளுடைய மனம் அமைதியை இழந்தது. பிறருக்குத் தன்னிடம் மதிப்பையும் அநுதாபத்தையும் உண்டாக்கும் அவனுடைய அந்தக் கம்பீரமான, ஆனால் சிறிது சோர்வுற்ற, வடிவம் அவள் கண்ணிலிருந்து அகலவில்லை. ஒளி வீசும் அந்தக் கண்கள், சிவந்த அந்த இதழ்கள், அகன்ற நெற்றிக்கு எல்லையாக வளைந்த புருவங்கள், பேசும்போது அசைந்து துடித்த மூக்கு, அடிக்கடி முன்னால் வந்து விழுந்த தலைமயிரைப் பின்னால் தள்ளிய அவனுடைய உறுதியான தடக்கைகள்! அவனிடம் விடை பெற்றபோது அவன் கையைக் குலுக்க முயன்றிருக் கலாமே என்று அவள் பல தடவை நினைக்கலானாள்.

நாலைந்து நிமிஷ நேரந்தான் அவள் முன்னால் அவன் நின்றான். அதற்குள் அவன் கருங்கூந்தலைப் பின்புறம் தள்ளிய போது, அவனுடைய புஷ்டியான சிவந்த கைத்தலத்தையும் விரல்களையும் அவள் அதிருப்தியோடு பார்த்தாள்.

ஒரு கலைஞனுடைய கை அது. வாத்தியத்தையோ, பேனா வையோ, உடலையோ தொட்டதுமே உணர்ச்சி நாதத்தை எழுப்பும் மாயசக்தி அந்த நீண்ட விரல்களுக்கு உண்டு இவ் வளவும் அப்பொழுதே தெரிந்தும் அவள் கைகுலுக்கவில்லை.

கனிவோடு அவளைப் பார்த்த அவனுடைய கண்களைவிட, 'துறுதுறு'வென்று இருந்த அவன் விரல்கள் அழகானவையா, அல்லது அந்த விரல்களைவிடக் கண்கள் கவர்ச்சிகரமான வையா என்பது அவளுக்குப் புரியவில்லை. அந்தக் கண்கள் கூர்மையாக இருந்தன; அவளுடைய உள்ளத்தை ஊடுருவிப் பார்த்தன. செங்காந்தள் போன்ற அந்த மெல்விரல்களின் அசைவிலே, ஸ்பரிச இன்பத்தைப் பற்றிய உணர்ச்சிகளையும் எண்ணத்தையும் கிளறும் தன்மை இருந்தது. மழைகாலத் தின் தொடக்கத்தில் நிறைமுகில் கவிந்து வந்ததும் மரங்களின்

இளங்கிளைகள் காற்றில் அசைந்து துடிக்குமே; அந்தத் துடிப் பிலும், வறண்ட நிலத்தின் உள்ளத்திலும் எந்த வேட்கை தோன்றுகிறதோ அந்த வேட்கையைப் போன்ற ஒரு மாய ஆவலை உண்டாககும் வல்லமை அந்த விரல்களின் அசை விலே இருந்தது.

அவனிடம் இப்படி விந்தையான கவர்ச்சியும் பரிவும் அவளுக்கு ஏன் ஏற்பட்டன? அவன் எழுதியதைப் படித்த தலைதான் அவனைப் பார்க்கவும் தெரிந்துகொள்ளவும் அவ ளுககு ஆவல் ஏற்பட்டது. ஆனால் இப்பொழுது அவளுககு அவனிடம் ஏற்பட்ட கவர்ச்சிககுக் காரணம அவனுடைய எழுத்து அல்ல; அவனுடைய வடிவந்தான.

இந்தக் கவர்சசி எந்த வகையைச் சேர்ந்தது? பெண் ணுக்கு இயற்கையாக ஆணிடம் தோன்றும் கவர்ச்சியா இது? அல்லது இது வேறு வகையானதா?

இந்தக் கேள்வி அவள் மனத்தில் ஓயாமல் சுழன்றது; கூத்தாடியது. சேகரனிடம் தனக்குத் தோனறிய ஆசையின் வேரை அவள் ஆராய்ந்தாள். உள்ளமென்னும் ஆழ்ந்த சுரங் கத்திலிருந்து அதைப் பெயர்த்தெடுகக முயனறாள்.

அவள் அன்று வரைக்கும் தன்னை விதவையாகவே எண்ணி நடந்து வந்தாள். ஆனால் சேகரனைக் கண்டதும் அவளிடம் தோன்றிய மன எழுச்சி இதற்கு மாறாக இருந்தது. அதனால் அவள் குழம்பியும பயந்தும் போயவிட்டாள்.

நம்மைப் பொறுத்தவரைக்கும் நாம ஓர் உறுதியான கொள்கையை வைத்துக்கொண்டு அதன்படி நடப்பதிலே பெரும்பாலும் இன்பமும் பெருமிதமும் கொள்கிறோம. ஆனால் ஒரு நாளைக்கு அந்தக் கொள்கை, வலுவான அநுபவத்தினால மோதுண்டு, புளியங்கொட்டையைச் சூழ்ந்த ஓட்டைப் போலவோ, தெய்வ பிம்பத்தின் மார்பில் அப்பிய சந்தனக குழம்பைப் போலவோ திடீரென்று பெயாந்து விழுந்து விடுகிறது.

இன்று ரஜனியின் மனமும் அந்த நிலையில்தான் இருந்தது.

தெய்வத்தின் மார்பில் இருந்த சந்தனம் விழுந்ததும பக்தனான பூசாரி அதை அபசகுனம் என்று நினைத்துக் கலங்கு

வதுபோல, தான் விதவை என்ற கொள்கைக்கு மாறுன இந்த எண்ணம் தோன்றியதும் அவள் கலங்கிப்போனுள்.

முதல் நாள் அவனைப் பார்த்ததுமே ஒரே கணத்தில் அந்தத் தீவிர ஆவல் அவளுக்கு உண்டாகிவிட்டது. அவனுடைய அகன்ற செங்கரத்தைக் கெட்டியாகப் பிடித்தும், தன்னை ஆவலோடு பார்த்த அந்தக் கண்களின் வழியே அவனது உள்ளத்தில் புகுந்தும் அவனுடைய சோர்வை அறவே அகற்றிவிட வேண்டும் என்று அவளுக்குத் தோன்றிற்று. ஆனுல் அவன் கையைப் பிடிக்கும் துணிச்சல் அவளுக்கு உண்டாகவில்லை அந்த எண்ணம் மட்டும் இரவு முழுவதும் அவளை வருத்தியது.

அவனைத் தொட வேண்டும் என்ற இந்த விந்தையான மோகம் அவளுக்கு ஏன் ஏற்பட்டது? இந்தக் கேள்விக்குப் பதிலைத்தான் அவள் தன் உள்ளத்துக்குள் தேடினுள்.

ஆற்றுமடுவிலே விலையுயர்ந்த பொருள் ஒன்று விழுந்து விட, அதைத் தேட முயலும்போது ஒரு சுழலிலே அகப்பட்டுக்கொண்டாற் போன்ற நிலையில் அவள் இப்பொழுது இருந்தாள். தான் கணவனை இழந்தவள் என்ற கொள்கையே குடிகொண்டிருந்த அவள் மனத்தை இந்தப் புதிய எண்ணங்கள் கலங்க அடித்தன.

ரஜனி, ஜபல்பூருக்குப் பக்கத்தில் கௌரி குன்றிலுள்ள ஒரு பௌராணிகருடைய பெண். அவள் தந்தை ஒரு ஜமீன்தாரிடம் இருந்தார். ஜமீன்தாரிடமிருந்து தினமும் கிடைக்கும் அரிசி, பருப்பு, காய்கறிகளையும், மாதக் கடைசியில் கிடைக்கும் ஐந்து ரூபாயான குருதட்சிணையையும் வைத்துக்கொண்டு அவர் தம் குடும்பத்தை நடத்தி வந்தார்.

ரஜனியும் ஜானுவும் அவருக்கு இரண்டு பெண்கள். இந்தச் சிறு குடும்பத்தில் அவருக்கு ஒருபொழுதும் பணமுடை ஏற்பட்டதில்லை. பெண்களுக்கு நாள்தோறும் புராணக் கதைகளைச் சொல்லுவார்; ஜமீன்தார் வீட்டில் தினசரி பூஜை முதலிய வேலைகள் முடிந்ததும் பஜனை செய்வார். இப்படி அவர் பொழுது போக்கி வந்தார். மூத்த பெண்ணுக்குப் பத்து வயதாகியும் அவளைப் பள்ளிக்கு அனுப்ப வேண்டும் என்று

அவர் நினைக்கவே இல்லை. ரஜனியின் மாமா இந்தூரில் இருந்தார். ஒரு தடவை ஜபல்பூருக்கு வந்தபோது, அம்மா தன் பெண்ணை அவரிடம் ஒப்படைத்து இந்தூருக்கு அனுப்பினாள்.

ரஜனியின் மாமாவுக்கு இந்தூரில் நடுத்தரச் சம்பளத்தில் சர்க்கார் வேலை. அவர் வீட்டில் சொந்தக் குழந்தை குட்டிகளுக்கு ஒன்றும் குறைச்சல் இல்லை. அதில் நாதநியின் பெண்ணும் வந்து சேரவே, ரஜனியின் மாமிக்கு ஒன்றுமே பிடிகக வில்லை. மேலும், ரஜனி புத்திசாலியாகவும் கெட்டிக்காரியாகவும் இருந்து எல்லாருடைய உள்ளத்தையும் கவர்ந்ததனாலும், மாநிறமாக இருந்தும் கச்சிதமாக நடந்துகொண்டதனாலும் வீட்டிலும் வெளியிலும் அனைவரும் அவளைப் புகழ்வது மாமிக்கு அடியோடு பொறுக்கவில்லை. மாமி அவளை எப்போதும் இறக்கியே பேசுவாள்; தன் சிறு குழந்தைகளை வளர்க்கும் வேலைகளை அவளிடம் வாங்கிக்கொள்வாள். வீட்டு வேலைகளைச் செய்து அவள் கால் தேய்ந்தாலும் இரண்டு வேளைச் சோறுகூடச் சரியாகப் போடமாட்டாள். அவளுடைய குழந்தைகள் சாப்பிட்டுப் பள்ளிக்கூடம் போனதும் எச்சிலைப் புரட்டிய பிறகுதான் ரஜனி சாப்பிட உட்கார வேண்டும். அதனால் முக்கால்வாசி நாளும் அவளுக்குப் பள்ளிக்கு நேரமாகிவிடும். ஆகையால் பாதி வயிறு சாப்பிட்டோ சாப்பிடாமலேயோ அவள் புறப்படுவாள்.

இவ்வளவு கஷ்டத்திலும் ரஜனி மனம் தளரவில்லை. அவளுடைய தந்தை அவளிடம், "அம்மா, நம்முடைய திருப்தி, நமது இன்பம், நமது சுகம் இவையெல்லாம் நம் உள்ளத்திலே தோன்ற வேண்டும். பிறரிடம் சுகத்தை எதிர்பார்த்தால் ஏமாற்றமே நேரும் . கூடல்வாயில் கொட்டும் தண்ணீர் மழை நின்றதுமே வறண்டுவிடும்; கண்ணுக்குத் தெரிந்தும் தெரியாமலும் பூமிக்குள் சுரக்கும் ஊற்றோ ஒரு நாளும் குறைவதில்லை. மனிதர்களின் அங்கங்களை வெட்டினால் அவை மீண்டும முளைப்பதில்லை. ஆனால் மரக்கிளையை வெட்டினால் மீணடும தளிர்க்கிறது. அதுபோல இருக்க வேண்டும் நம்முடைய மனம். இன்பம் அகமனத்திலிருந்து ஊற்றெடுத்துப் பாய வேண்டும்; அகத்திலிருந்து அது மலர வேண்டும். எவ்வளவு தரம் வெட்

டிலும் மறுபடி முளைக்கின்ற, மறுபடி பூக்கின்ற உயிர்ச் சக்தி அதில் இருகக வேண்டும்.

''சிலந்தி வலையை எவ்வளவு தடவை கலைத்தாலும் அது தன் உள்ளேயிருந்து நூல் நூற்று மீண்டும் வலை கட்டுகிறது. நூலுக்காக அது பிறரை எதிர்பார்ப்பதில்லை; ஆதலால் அதை யாரும் அகதியாக்க முடியாது; அதன் வலையைப் பிறர் பறித்துக்கொள்ள முடியாது. மனிதனுடைய தன்மையும் அதுபோல இருக்க வேண்டும். அப்போதுதான் துயரமும் ஏமாற்றமும் நிரம்பிய உலகத்தில் அவன் நிலைக்க முடியும். பிறரிடம் அன்பு வைத்தால் அதற்குப் பிரதிபலனை எதிர்பாராதே. பிறருக்கு உதவி செய்தால் கைம்மாறு கருதாதே.

''நாம் பிறரிடம் அன்பு வைப்பதும் பிறருக்காக உழைப்பதும் நம்முடைய மன ஆறுதலுக்காகத்தான்; நமது மன ஆசையைத் தணிக்கத்தான். இந்த எண்ணம் எப்போதும் இருந்தால் ஏமாற்றம் என்கிற பயமே இல்லை. ரஜனி, உன் ஆத்மா உலக மோகங்களிலிருந்தும் மூன்று வகைத் தாபங்களிலிருந்தும் விடுபட்டிருக்க வேண்டும்'' என்று அடிக்கடி சொல்லுவார்.

சிறு வயதிலிருந்து அவள் காதில் ஓயாமல் விழுந்த இந்த உபதேசங்கள் அவளிடத்தில நன்ருகப் பதிந்துவிட்டன. அவள் எப்போதும் போதுமென்ற மனத்தோடும் அச்சமற்றும் இருந்தாள். நர்மதையாற்றைப் பிரதட்சிணம் செய்ய வரும் தவசிகளும் சாமியார்களும் அந்த ஜமீன்தாருடைய சத்திரத்தில் தங்குவார்கள். பண்டிதர் அவர்களோடு அல்லும் பகலும் வேதாந்த விஷயங்களை விவாதிப்பார்.

அந்தச் சாமியார்களின் அருகில் அமர்ந்து, கஞ்சா வெறியில் அவர்கள் பேசும் பரமார்த்தங்களையும் யோக ரகசியங்களையும் கேட்டுக் கேட்டு, ரஜனிக்கு அச்சமும் சுகத்தில் ஆசையும் இல்லாமற் போயின. நர்மதைக் கரை வழியே பிரதட்சிணம் செய்யும் அந்த வீர பக்தர்களுக்கு நேரும் விபத்துக்களையும் கோரச் சாவுகளையும் அவள் கேள்வியுற்றிருந்தாள். அதனல், சாவையும் துச்சமாக மதித்து, ஐம்புலன்களுக்கும் அப்பாற்பட்ட வீரத்தையும் இன்பத்தையும் நுகர்வதிலே புகலரிய பேரின்பம் இருப்பதை அவள் அறிவு உணர்ந்தது.

நர்மதைக் கரையிலுள்ள காடுகளிலும் நகரங்களிலும் இருந்த பல க்ஷேத்திரங்களுக்கு அவள் தன் தந்தையோடு நடந்தே போயிருக்கிறாள். அப்பொழுது மாலையிலும் நள்ளிரவிலும் வைகறையிலும் நிலவொளியிலும் மங்கிய நட்சத்திர வெளிச்சத்திலும் அவள் எத்தனையோ வகையான அற்புத இயற்கைக் காட்சிகளைப் பார்த்தாள். அதனால் அழகைப்பற்றிச் சாமானிய மனிதர்கள் கொண்டிருந்த ஒரு மோகம் அவளிடம் இருக்கவில்லை. அதற்கு மாறாக, 'சாவையும் திருணமாகக் கருதும் பேரானந்தம் உலகில் இருப்பதுபோலவே, சிங்காரக் கருவிகள் அனைத்தும் துச்சமாகத் தோன்றும்படியான தெய்விக அழகும் உலகில் இருக்கிறது' என்ற எண்ணம் அவளிடம் வலுத்தது.

பண்டிதருக்கு நர்மதை நதியிடம் அபார ஆசை. அமர கண்டகத்திலிருந்து படோச் வரையில் அவர் மூன்று தடவை அவளை வலம் வந்திருந்தார். அவருடைய தேய்ந்த கால் ஒன்றே இதிலுள்ள சிரமத்திற்கு அத்தாட்சியாகும். ஆயினும் அவர் அடிக்கடி, "மனிதனை மூன்று வகைத் தாபத்திலிருந்தும் விடுவிக்கும் வல்லமை மூவுலகத்திலும் திரியும் கங்கைத் தாய்க்குத் தான் உண்டு; நம்முடைய இந்த நர்மதையிடம் அந்தச் சக்தி இல்லை" என்று சொல்வார்.

"அப்படியானால் நர்மதையிடம் உங்களுக்கு ஏன் இவ்வளவு பக்தி, அப்பா?" என்று அவள் கேட்பாள்.

"அம்மா ரஜனி, இந்த நர்மதைக் கரையில் நான் வாழ்ந்தேன். ஒரு நாளைக்கு இதன் வெள்ளத்தில் இந்த வாழ்வு கரைந்து விடும். உலகத்தின் தூசி தன் சிகரம் வரைக்கும் எட்ட முடியாத ஒரு மலையிலே கங்கைத் தாய் பிறந்தாள். அவள் என் வழிபாட்டுக்கு உரியவள். ஆனால் நம்முடைய இந்த நர்மதைத் தாய் இருக்கிறாளே, இவளைப்போல் எனக்கு வேண்டியவர்கள் உலகில் வேறு யாருமில்லை. நம்மைப்போன்ற சாதாரணமான குடித்தனக்காரருடைய துயர வாழ்க்கைக்கு அடையாளமாக விளங்குகிறது இந்த ஆறு. சாமானியமான ஓர் இடத்தில் இது பிறந்தது. விந்திய மலைப் பாறைகளை உடைத்துக்கொண்டு இது தனக்கு வழி செய்துகொண்டது. கடலில் கலக்கும்போதும்

இது பயங்கர வடிவம் கொள்ளவில்லை. இதனுடைய பிறப்பும் முடிவும் மனித வாழ்வைப்போல மிகவும் சாதாரணமானவை. இதில் கங்கையின் எட்டாத் தன்மையும் பயங்கரமும் பெரும் பரப்பும் பிரம்மாண்டமான எழிலும் இல்லை. அதனால்தான் இது எனக்குப் பிடிக்கிறது.

"இது பாயும் பாறைப் பிரதேசங்களையும் இதன் பசுநீல நீரையும் ஆழ்ந்த மடுக்களையும் உயரமான நீர்வீழ்ச்சிகளையும் அச்சம் தரும் முதலைகளையும் பார்த்தால், 'மனித வாழ்க்கையும் இப்படித்தான் துயரம் நிரம்பியும் ஆழ்ந்தும் ஆழமில்லாமலும் மேடு பள்ளங்களோடும் நெஞ்சைக் கலக்கும் பற்றுகள் சூழ்ந்தும் இருக்கிறது. கங்கையின் ராஜ வைபவம் நம்மைத் திகைக்க வைக்கிறது. இந்த நர்மதையிடமோ சில சமயம் எனகுப் பயம் உண்டாகிறது. ஆனால் தாய் சினந்தால் குழந்தை எவ்வளவு நேரம் பயப்படும்? அவள் மடியிலேயே முகத்தை மறைத்துக்கொண்டு அவளுடைய கோபப் பார்வைக்கு அது தப்பி விடும். எனக்கு இந்த நர்மதையிடம் இருக்கும் அன்பு அது போன்றதுதான்."

இப்படிப்பட்ட பண்பாடுகளினால் கஷ்ட வாழ்விலுங்கூட ரஜனி தன் உல்லாசத்தை ஒரு நாளும் இழக்கவில்லை.

அவளுடைய உல்லாசம் குறையாததற்கு மற்றொரு காரணமும் இருந்தது. அவளுடைய மாமாவின் வீட்டுக்குப் பக்கத்திலேயே ஒரு பெரிய கோர்ட் உத்தியோகஸ்தர் இருந்தார். அவருடைய மகன் ரகுராமன், ரஜனி இந்தூருக்கு வந்தபோது ஹைஸ்கூலில் படித்துக்கொண்டிருந்தான். மாமாவின் குழந்தைகள் படிப்பில் ஏதாவது சந்தேகம் கேட்க வேண்டுமானால் அவனிடந்தான் போவார்கள். அதனால் ரஜனி சீக்கிரமே அவனைத் தெரிந்துகொள்ள நேர்ந்தது. எல்லா விஷயங்களிலும் மற்றவரைவிட வேறுபட்டிருந்த அந்தப் பெண் அவனுடைய உள்ளத்தைக் கவர்ந்துவிட்டாள்.

ஆண் பெண் உறவைப் பற்றி நகரத்துப் பள்ளிக்கூட மக்களிடம் பொதுவாக இருக்கும் ஓர் ஆவலோ, இளைஞர்களோடு தம்மை அறியாமல் பெண்கள் காதலுறும் தன்மையோ ரஜனியிடம் அடியோடு இல்லை. சம வயதுள்ள இரண்டு பையன்கள்

பழகுவதுபோலவே அவள் ரகுராமனோடு சகஜமாகப் பழகி னாள். ஆனால் அவளுடைய பழக்கத்தில் அவனுக்குத் தனி யான இனிமையும் இன்பமும் கிடைத்தன.

மாமாவின் வீட்டில் அவள் படும் துன்பங்கள் அவனுக்குத் தெரியும். அவற்றின் வேகத்தை அவன் தன்னால் ஆனமட்டும் குறைக்க முயன்றான். பள்ளிக்கூடத்து இடைவேளை விடுமுறை யில் அவன் அவளைத் தன் வீட்டுக்கு அழைத்துப்போய் ஏதா வது சாப்பிடக் கொடுப்பான்.

இந்தத் துன்ப நிலையிலுங்கூட ரஜனி ஒரே வருஷத்தில் இரண்டு பரீட்சைகளில் தேர்ச்சி பெற்று விரைவில் மெட்றிகு லேஷன் வகுப்புக்கு வந்துவிட்டாள். மெட்றிக்கில் அவள் மாகாணத்திலேயே மூன்றாமவளாக இருந்ததனால், அவளைக் காலேஜுக்கு அனுப்பும் பிரச்னை தானாகவே தீர்ந்துவிட்டது. மாமாவின் வீட்டை விட்டு அவள் இப்போது ஹாஸ்டலில் இருக்கலானாள்.

ரகுராமனுடைய அன்பும் உதவியும் இல்லாமல் இந்தப் புகழைத் தான் பெற்றிருக்க முடியாது என்பதை அவள் நன்றாக உணர்ந்தாள். ஆதலால் காலேஜுக்குப் போனதும் அவர் களுடைய அன்பு கனிந்தது. அவனிடம் தனக்கு இருந்த ஆழ்ந்த பிரேமையை அவள் எப்பொழுதும் ஆராய்ந்து பார்க்க வில்லை; அதை மறைக்கவும் அவள் விரும்பவில்லை. அவனிடம் அப்படி அன்புகொள்வது தன் இயல்பான தன்மையென்றே அவள் கருதினாள். அது மட்டுமல்ல; திடீரென்று உதயமாகி, காதற் காவியங்களைப் படித்ததனால் வளருகிற காலேஜ் இளை ஞர்களின் காதலில் தென்படும் வெறியும், அளவு கடந்த தன்மையும் அவளுடைய அன்பில் இல்லவே இல்லை.

ரெப்ரிஜிரேடரில் வைத்துள்ள பழம், ரஸத்தோடு சுவை யாக இருந்தாலும், மரத்திலிருந்து பறித்த புதுக் கனியிலுள்ள ரஸ வேகமும், தளதளப்பான நிறமும் அதனிடம் இருக்க முடியாது. அதுபோல அவனிடம அவளுக்கு இருந்த அன்பு ஆழ்ந்ததாகவும், ஆனால் விகாரமற்றதாகவும் இருந்தது. அந்த அன்பில் ஒரு வகைத் தான்தோன்றித்தனமோ துடுக்குத் தனமோ இல்லை. நிரம்பிய மடுவின் ஆழம் கண்ணுக்குத்

தென்படாததுபோல, காதற் சேஷ்டைகள் இல்லாத அவளது நடவடிக்கையிலிருந்து அவளுடைய அன்பின் ஆழத்தைக் கண்டு பிடிப்பது சாத்தியமாக இல்லை. ஆகையால் அவளும் ரகு ராமனும் பழகுவது வீட்டிலும் வெளியிலும் இருப்பவர்களுக்குத் தெரிந்திருந்தாலும் அது அவர்கள் கண்ணில் படவில்லை.

ஆனால் இந்த ஆழ்ந்த அன்பின் வேகம் ஒரு நாள் அணையை உடைத்துக்கொண்டு வெளிவந்தது.

ரகுராமன் எம். ஏ. வகுப்பில் படித்துக்கொண் டிருக் கையில் அவனுக்கு ரத்த க்ஷய நோய் ஏற்பட்டது. எல்லாச் சிகிச்சைகளும் செய்தும் பயன்படவில்லை. அப்போது அவன் உடலில் புது ரத்தத்தை ஏற்றும் கடைசி உபாயத்தைச் செய்து பார்க்கலாம் என்று டாக்டர்கள் சொன்னார்கள்.

ரஜனி இன்டரில் படித்தபடியே அவனுக்குத் தன்னாலான பணிவிடைகளைச் செய்தாள். டாக்டர்கள் ரத்தம் ஏற்றுவ தாகச் சொன்னபோதிலும் அதை அமலுக்குக் கொண்டு வருவது எளிதாக இல்லை. ரகுராமனுடைய ரத்தத்துக்குப் பொருத்தமான தூய ரத்தம் கிடைத்தால்தான் அந்த எண்ணம் நிறைவேற முடியும். பண ஆசையினால் ரத்தம் கொடுக்க முன்வந்தவர்களின் ரத்தம் அவனுக்குப் பொருந்தியதாகவும் தூயதாகவும் இல்லை. ஆதலால் அந்த வழியையே கைவிடும் நிலைமை வந்தது. ரகுராமனோ வேகமாக உள்ளுக்குப் போய்க் கொண்டிருந்தான்.

கடைசியில் ஒரு நாள் ரஜனி, அவன் தகப்பனாரின் முன் னால் டாக்டரிடம் தன் ரத்தத்தைப் பரிசோதிக்கும்படியாகவும் அது பொருத்தமாக இருநதால் அவனுடலில் ஏற்றும்படியாக வும் வேண்டிக்கொண்டாள். அவளுடைய உருக்கமான பேச் சைக் கேட்டுக் கிழவருக்குக் கண்ணீர் மல்கியது. அவள் பேச்சை அமலுக்குக் கொண்டுவருவதைத் தவிர வேறு வழி இருக்கவில்லை. உடனே அவளுடைய ரத்தத்தைப் பரிசோதித் தார்கள். அது பொருத்தம் உடையதாகத் தோன்றியதனால் ரகுராமனின் உடலில் அந்த ரத்தத்தைப் பாய்ச்சினார்கள். இன்னாருடைய ரத்தம் தன் உடலில் ஏறுகிறது என்பதை அவன் அறியக்கூடாது என்று ரஜனி டாக்டருக்கு நிபந்தனை

போட்டிருந்தாள். அவன் டாக்டரை எவ்வளவோ வற்புறுத்திக் கேட்டும், ரஜனி ரத்தம் தந்தது அவனுக்குத் தெரியவேயில்லை.

புதிய ரத்தம் ஏற்றியதும் ரகுராமன் குணம் பெற்றிருப்ப தாகச் சில நாள் வரைக்கும் தோற்றியது; ஆனால் அந்தக் குணம் நிலைத்து நிற்கவில்லை. "வெகு நாள் கழித்து ரத்தம் ஏற்றியதனால், எதிர்பார்த்த குணம் ஏற்படவில்லை; இனி இவனுடைய மரணம் இவனுக்கு உரிய காலத்தைப் பொறுத் தது" என்று டாக்டர்கள் சொல்லிவிட்டார்கள்.

நர்மதைக் கரையில் சாகவேண்டும் என்று அவன் விரும் பினான். அவன் அப்படிப் பிடிவாதம் பிடித்ததனாலும், ஒரு வேளை காற்று மாறினால் உடம்பு குணப்படுமோ என்ற ஆசை யாலும் அவன் தகப்பனார் அவனை மகேசுவரத்துக்கு அருகில் நர்மதைக் கரையில் இருந்த தமது பங்களாவுக்கு அழைத்துப் போனார். அங்கே போனதும் சில நாள் வரைக்கும் அவன் நன்றாகத்தான் இருந்தான். பிறகு வேகமாக அவனுடைய உடல்நலம் மங்கி வந்தது. அப்போது அவன் வற்புறுத்திச் சொன்னதால் ரஜனிக்குத் தந்தி கொடுத்து, அவளை அங்கே வரவழைத்தார்கள். அவள் கையோடு தன் கையைக் கோத் துக்கொண்டு கண்ணிணையோடு கண்ணிணை கலந்ததுமே ரகுராமனுடைய உயிர் போய்விட்டது.

கடைசி வரைக்கும் அவனுக்கு நல்ல நினைவு இருந்தது. நன்றாகப் பேசினான். உடலைச் சாவு பிடித்துக்கொண்ட அன்று காலையில் அவன் ரஜனியிடம், "எனக்குச் சாக அடியோடு விருப்பமில்லை. ரஜனி! வாழ்க்கையில் எந்தச் சுகத்தின் இனி மையையும் நான் நுகர்ந்ததில்லை. அதிருப்தியுற்ற இந்த நிலை யிலேயே நான் உலகத்தை விட்டுப் போகவேண்டி யிருக்கிறது. இவர்கள் எல்லாரும் என்னை மறந்துவிடுவார்கள். ஆனால் நீ மட்டும் என்னை மறவாதே. நீயும் நானும் பிரியவேண்டி யிருப்பதை நினைத்தால் என் உயிர் துடிக்கிறது. நான் செத்த பிறகு என்னை நீ மறக்காதே. உன் அன்பிலும் உன் நினைவிலு மாவது எனக்கு நிலையான இடம் கிடைக்கட்டும்!" என்று சொன்னான். காலையில் இதைச் சொன்ன அவன் அன்று நள்ளிரவில் காலமானான்.

அறையில் மந்தமாக எரிந்த விளக்கொளியில் கொஞ்சம் கொஞ்சமாக மங்கிக்கொண்டே வந்த அவனுடைய பார்வை, கடைசியில் அவனுடைய சுய அறிவு மறையும் வரைக்கும் ரஜனியின் முகத்திலேயே பதிந்திருந்தது.

ஆனால் சாகும் அந்தக் கணத்திலுங்கூட, அவளுடைய ரத்தத்தினால் தன் வாழ்க்கை நான்கு மாதகாலம் நீடித்த செய்தி அவனுக்குத் தெரியாது. அவளுக்குத் தன்னிடமுள்ள அன்பின் ஆழத்தை அவன் அறியாமலிருக்கும்போதே மரணம் அவனைப் பற்றிவிட்டது.

அதற்குப் பிறகு கடந்த நான்கு ஆண்டுகளாக அவள் அவனுடைய நினைவை ஆழப் பூமியில் வைத்த புதையலைப் போலத் தன் உள்ளத்தில் பாதுகாத்து வந்தாள்.

ஆனால் நேற்று அவள் சேகரனைப் பார்த்ததிலிருந்து மனம் குழம்பியதனால், 'ரகுராமனுடைய கடைசிச் சொல்லுக்கு மாறாக நாம் நடந்துகொள்கிறோமோ?' என்ற சந்தேகம் அவளைக் குலைத்தது.

இன்று வரைக்கும் தன் உணர்ச்சிகளை ஆராய முயலாதவள், இன்று அதைச் செய்யவேண்டிய தேவையை உணர்ந்தாள். சேகரனிடம் தனக்கு உண்டாகிய கவர்ச்சி, ரகுராமனுடைய நினைவுக்கும். அன்புக்கும் தடையாக இருக்குமோ என்ற எண்ணம் நேற்றிலிருந்து விஷக்கடிபோல அவளை வருத்தியது. ரகுராமனிடம் தனக்கு இருந்த அன்பையும் சேகரனிடம் தோன்றிய இந்தக் கவர்ச்சியையும் அவள் அலசி ஆராய்ந்து பார்த்தாள்.

ரகுராமனிடம் தனக்கு எப்போது அன்பு உதித்தது என்பது அவளுக்கு ஞாபகம் இல்லை. அந்த அன்பில் எவ்வளவு பகுதி கவர்ச்சி இருந்தது என்பதும் விளங்கவில்லை. அவனைக் கணவனாகவும் காதலனாகவும் அவள் நினைத்து வந்தபோதிலும், அவன் உயிரோடு இருந்தவரைக்கும் அவனை மணந்துகொள்ளும் விருப்பம் தனக்கு எப்போதாவது ஏற்பட்டதா என்பதும் அவளுக்குத் தெளிவாக நினைவில்லை.

அவன் அவளுக்கு மிகவும் பிரியமாக இருந்தான்; அது போலவே அவளும் அவனுக்குப் பிரியமாக இருந்தாள்.

அவர்கள் ஒருவரை மற்றவர் பல தடவை ஸ்பரிசித்திருக்கிறார்கள். பேசிக்கொண்டே எத்தனையோ இரவுகளைக் கழித்திருக்கிறார்கள்; இளைஞர்களும் இளம் பெண்களும் பொதுவாக அஞ்சித் தட்டிக் கழிக்கும் தனிமைப் பழக்கத்தையும் அவர்கள் நுகர்ந்திருக்கிறார்கள். ஆனால் நேற்றுச் சேகரனைக் கண்டதுமே அவளுக்கு உண்டான அந்தக் கவர்ச்சியும் ஆசையும் பரிவும் அதனால் அவளுடைய உள்ளத்தில் உறுத்திய இனிய துயரமும், ரகுராமனோடு தனிமையில் பழகியபோதுகூட ஏற்பட்டதில்லை.

இளமைக்கு உரிய உணர்ச்சிகள் மலருவதற்கு முன்பே அவளும் ரகுராமனும் பழகியதால், இன்று இன்பமும் துன்பமும் கலந்து தோன்றும் இந்த விந்தையநுபவம் அன்றைக்கு அவளுக்கு உண்டாகவில்லையோ என்னவோ என்ற கேள்வியும் ஒருவேளை எழலாம்.

ஆனால் இந்த அநுபவம் அவளுடைய வாழ்வுக்குத் தடையாகாதா? அவள் மனத்தினாலே ஒருவனை மணந்தவள்; சேகரனோ வெளிப்படையாக மணமானவன். இந்த நிலையில் அவனிடம் அவளுக்குத் தோன்றிய மோகம் எந்த அளவில் விரும்பத்தக்கது?

இந்த எண்ணம் எழுந்ததும், ரகுராமன் இறந்த பிறகு அவள் ஜபல்பூருக்குப் போனபோது அவள் துயரத்தை ஆற்றத் தந்தை கூறிய அறிவுரை அவள் ஞாபகத்துக்கு வந்தது.

அவர் அவளுக்குச் சமாதானம் சொன்னபோது அதை அவள் எதிர்த்துப் பேசினாள். "அப்பா, எப்போதும் நீங்கள் பேசும் வேதாந்தத்தை இன்று என்னிடம் சொல்லாதீர்கள்! ஆத்மாவுக்கு அழிவில்லை என்று நீங்கள் ஆயிரம் தடவை சொல்லிக் கேட்டிருக்கிறேன். ஆத்மா அழிவற்றதாயினும், அது கண்ணுக்குத் தென்படுவதில்லை. அதோடு பேச முடிவதில்லை; கையால் அதை ஸ்பரிசிக்க முடியாது; ஆகவே, அதன் சாவாமையினால் பயன் என்ன? உடலின் துணைகொண்டு ஆத்மா இன்ப துன்பங்களை அநுபவிக்கிறது என்று உங்கள் வேதாந்தமே கூறுகிறது. அந்த உடல் போனதும், ஆத்மா அழிவற்றது என்ற தத்துவ ஞானத்தினால் மனத்துக்கு எப்படி ஆறுதல் உண்டாகும்? நாம் உணர்ச்சிகளை வெளிப்படுத்துவதும்

அவற்றை நுகர்வதும் உடலின் வலுவினுல்தான்; ஆத்மாவினுல் அல்ல. முற் பிறவியையும் மறு பிறவியையும் ஆத்மா தன் நினைவி ஞல் கோத்துவைக்கக் கூடுமாஞல் அப்போது அதன் சாவா மைக்கு ஏதோ கொஞ்சம்பயன் இருக்கும்; அதன் அழியாமையை நம்பவும் தோன்றும். ஆஞல் இன்று ஆத்மாவின் அழியாமையை நாம் கற்பனையைக கொண்டுதான் மதிக்க வேண்டியிருக்கிறது. உங்களுடைய இந்த வேதாந்தம் எனக்கு விளங்கவில்லை.''

''இல்லை அமமா ரஜனி, இன்று நான் உன்னிடம் வேதாந்தம் பேசவில்லை மலைமகள் யாகத்தீயில் பாய்ந்ததும் மிருத்யுஞ்சயஞன சிவபெருமான் கூடத் தமது துயரத்தை அடக்கிக்கொள்ளவில்லை. நம்மைப் போன்ற சாமானிய மனி தர்களைப் பற்றிப் பேச்சே தேவையில்லை. ஆஞல் உலகத்தில் எந்தத் துன்பமும் மறக்க முடியாதது அல்ல; எப்போதும் நிலைத்திருப்பதும் அல்ல; ஆண்டவன் நமகக்கு ஞாபகசக்தியைக் கொடுத்திருப்பது மிகப் பெரிய வரம் என்று நாம் நினைக்கிருேம். ஆஞல் அவன் நமக்குத் தந்திருக்கும் மறதிதான் அதைவிடப் பெரிய வரம். அதன் பெருமையினுல்தான் இந்த உலகத்துத் துயரங்களை நாம் பொறுத்துக்கொள்கிருேம்.

''மனிதனுடைய மனமோ வாழ்க்கையோ நீண்ட நாள் வெறிச்சென்று இராது. துன்பத்தின்போது நாம் செய்யக்கூடிய செயல் ஒன்றே ஒன்றுதான்: நம்மைப் பிரிந்த அன்பார்ந்த மனி தருடைய நினைவிஞல் உண்டாகும் இனிமையை நுகர்வதுதான் நம் செயல். அந்த நினைவை மரணம் நம்மிடமிருந்து பறிக்க முடியாது. மரணம் என்பது காலத்தின் தூதன். சாவு முதலில் பெயரையும் உருவத்தையும் அழிக்கிறது. பிறகு காலம் அவை இருந்தன என்ற நினைவையும் அழித்துவிடுகிறது. ஆதலால் சாவு எடுத்துச் சென்ற அன்பான மனிதர்களின் நினைவு நம் உள்ளத்திலிருந்து மறைவதற்கு முன்பே அதன் இனிமையை நாம் நன்கு நுகர வேண்டும்.''

தந்தையின் இந்தச் சொற்கள் ரஜனிக்கு ஞாபகம் வந்தன. ரகுராமனுடைய சாவுத் துன்பமும் அவனுடைய அன்பின் இனிய நினைவும் தன் உள்ளத்திலிருந்து மறைவதற்கு இந்தப் புதிய கவர்ச்சி காரணமாக இருக்குமோ என்ற எண்ணம் திடீ

றென்று அவளுக்குப் பொங்கியது. அந்த எண்ணம் எழுந்ததுமே அவளுக்குத் தூக்கி வாரிப்போட்டது.

ரகுராமன் காலமான பிறகு அவள் இந்தூரில் இருக்கப் பொறுக்காமல் அங்கே வசதியாக இருந்த பள்ளிக்கூட வேலையை விட்டு, நாகபுரிக்கு வந்தாள். அன்றைத் தினமே அவள் உண்மையில் தன்னையறியாமல் அவனை மறக்க ஆரம்பித்துவிட்டாள். இந்தப் புதிய அன்பினால் அவனுடைய நினைவு விரைவில் மங்கியே போகும். அவளுடைய தந்தை சொன்னது தான் சரி. மாந்தரின் மனமும் வாழ்க்கையும் நீண்ட நாள் வெறிச்சென்று இருக்க முடியாது.

மேலும் மேலும் குவிந்து வந்த எண்ணங்களை அவளால் தாங்க முடியவில்லை. அந்த எண்ணங்களின் கடுமையான உண்மையை அவளால் பொறுக்க முடியவில்லை. அங்கிருந்து எழுந்தாலாவது தனக்கு விருப்பமில்லாத அந்தச் சிந்தனைகளிலிருந்து விடுபடலாம் என்று நினைத்து, அவள் சடக்கென்று எழுந்து ஜன்னலருகில் போய் நின்றாள்.

எதிரே சாலைக்குப் பக்கத்தில் இருந்த வயலில் அறுவடைக்குத் தயாராக இருந்த சோளக் கதிர்கள் பொன்னொளி வீசின. அடுத்த வருஷம் அதே வயலில் மறுபடி சோளக் கதிர்கள் அறுவடைக்குத் தயாராக இருக்கும். இளவேனில உதித்ததும் மரங்களில் புதுத் தளிர்கள் தோன்றும். உலகில் எதுவும் வெறிச்சென்று இருக்கக கூடாது எனபது இயற்கை விதி.

'நாம் ஏன் நேற்றுச் சேகரனைச் சந்தித்தோம்?' என்று அவளுக்குத் தோன்றியது.

அவள் கண்களில் நீர் தேங்கியது.

"ரஜனி, உனக்கு இலை போடட்டுமா? மணி ஒன்பதாகி விட்டதே!" என்று சொல்லிககொண்டு அவளுடைய தாய் அங்கு வந்து எட்டிப் பார்த்தாள். அவள் கண்ணீரைக் கண்டதும் தாய்க்கு அழுகை வந்துவிட்டது. அப்பாவின் ஞாபகத்தினால் ரஜனி அழுகிறாளோ என்று அவள் நினைத்தாள்.

ரஜனியின் தகப்பனார் ஓங்கார மாந்தாதாவுக்கு யாத்திரை சென்றபொழுது, மலையிலிருந்து கால் நழுவி ஆற்றிலே விழுந்தார். அவர் ஜல சமாதி கொண்டதாகப் பலர் கருதினார்கள்.

இந்த விபத்து நிகழ்ந்து சில வருஷங்களே ஆகியிருந்தன. ரஜனி அப்போது இந்தூரில் இருந்தாள். தந்தி கிடைத்து அவள் ஓங்கார மாந்தாதாவுக்குப் போவதற்குள் பண்டிதருடைய உடலைத் தகனம் செய்துவிட்டார்கள். தான் வருவதற்குமுன்பு, அவரோடு இருந்த பிரயாணிகள் இவ்வளவு சீகிரமாகத் தகனம் செய்தது அவளுக்குக் கோபத்தை விளைவித்தது. அவளுடைய அன்னையை அவர்கள் தலைமயிர் நீக்க வேண்டுமென்று தொந்தரவு செய்தபோது, ரஜனி அவளை அழைத்துக்கொண்டு மூன்றுவது நாளே இந்தூருக்குத் திரும்பிவிட்டாள்.

அன்றையிலிருந்து தந்தையின் நினைவினால் அவள் அழாத நாளே இல்லை. ரகுராமனுடைய சாவினால் அவளுக்கு உண்டான துன்பம் உள்ளூற மறைந்திருந்தது. அதனால் அவள் மனம் உள்ளுக்குள்ளேயே தவித்தது. அந்தத் துயரத்தில் அவளோடு பங்கு கொள்ளும் உறவினர் யாருமில்லை. ஆனால் தந்தையின் மரணமோ, அருகில் தாய் இருந்ததனால், அவளுக்கு எப்போதும் புதுமையான துயரத்தையே தந்தது.

பற்றைத் துறந்த எளிய வாழ்வு வாழ்ந்த தன் கணவரை நினைந்து நாள்தோறும் தெய்வத்தின் முன்னால் கண்ணீர் வடிக்கும் தாயைக் கண்டதும் ரஜனியின் மனம் கலங்கும்.

'இந்த விரதத்தைக் காட்டிலும், இந்தப் பரிவைக் காட்டிலும் தூய்மையானது வேறு என்ன இருக்கிறது? அம்மாவுக்குக் காதல் என்றால் இன்னது என்று தெரியாமல் இருக்கலாம்; அந்தச் சொல்லையே அவள் தெரிந்துகொள்ளாமல் இருக்கலாம்; ஆனால் உலகத்தையே துச்சமாகக் கருதிய சாத்துவிகக் கணவரோடு அவள் அமைதியாகக் குடும்பத்தை நடத்தினாள். அவருடைய மரணம் அவள் வாழ்வையே குலைத்துவிட்டது. அவளுடைய கற்பைப் போன்ற தூய்மையான பொருள் வேறு என்ன இருக்கிறது? ஹிந்துப் பெண்களுக்குரிய விதி வாதமும் பொறுமையும் மட்டுமல்லாமல், அவர்களுக்கே சொந்தமான கடுமையான விரதமும், எல்லையற்ற தியாகமும் அம்மாவிடம் இருக்கின்றன. பயனைக் கருதாத, எல்லையற்ற, சொல்லைக் கடந்த, இந்தத் தியாகத்தை நாம் மதிக்காவிட்டால், வேறு எதைத்தான் மதிக்க முடியும்?' என்று அவள் சிந்திப்பாள்.

இப்போது தாய் அழுவதைக் கண்டதும் ரஜனிக்கு வெட்கமாகப் போயிற்று. 'சேகரனிடம் உண்டான மோகத்தினால் என் நெஞ்சை இவ்வளவு கலங்கவிடுவதா? சேச்சே! நான் அவரை மறக்கத்தான் வேண்டும். இல்லாவிட்டால் ரகுராமனை மறந்து விட நேரும்' என்று நினைத்து, அவள் தன் சேலைத் தலைப்பினால் கண்ணீரைத் துடைத்துக்கொண்டாள்.

காய்ந்த கூந்தலைக் கையால் தட்டிக்கொண்டே, "அம்மா, நாம் அடுத்த மாதத்திலிருந்து இந்த வீட்டை விட்டு ராமதாஸ் பேட்டைக்குக் குடிபோய்விடலாம்" என்றாள் ரஜனி.

"ஏன் அம்மா?"

"எனக்கு இங்கே ஒரே சோர்வாக இருக்கிறது. எதிரே வெட்டவெளியாகக் கிடக்கும் இந்த வயல்களையும், பக்கத்தில் சிறையருகிலுள்ள காட்டையும் கண்டால் பயமாக இருக்கிறது."

இப்படிச் சொன்னபோதிலும அதே நிமிஷத்தில் வேறு ஓர் எண்ணமும் அவள் நெஞ்சில் எழுந்தது. 'இந்த வீட்டை விட்டு நாம் தொலைவில் குடிபோனாலும் சேகரனிடம் நமக்கு இருககும் மோகம் உண்மையாகவே குறைந்துவிடுமா?' என்ற கேள்வி அவள் முன்னால் நின்றது.

## 7

அந்தக் கடிதத்தைப் படித்ததும் சேகரனுக்கு ஒரே வியப்பாக இருந்தது. ஐந்து நிமிஷ நேரம் அவன தன் நினைவு இல்லாமல் அந்தக் கடிதத்தையே பார்த்தான்.

வெள்ளை வெளேரென்ற வழுவழுப்பான காகிதத்தில் அழகாக டைப் செய்த அந்தக் கடிதத்தை அவன் மறுபடி ஒரு முறை படித்தான். பிறகு எழுந்து சமையலறைக்குச் சென்றான்.

மஞ்சு இலை போட்டுத் தம்ளர்களில் தண்ணீர் எடுத்து வைத்தாள். அவன் உள்ளே வந்ததைக் கண்டதும் அவள் கடிகாரத்தைப் பார்த்துக்கொண்டே, "நீங்கள் சாப்பிட உட்காருவதற்கு இன்னும் பதினைந்து நிமிஷம் இருக்கிறதே!" எனறாள்.

தான் வேலையில் இருக்கும்போது அவன் உள்ளே வருவது அவளுக்குப் பிடிக்காது.

"அது சரி; பம்பாயிலிருந்து இந்தக் கடிதம் வந்திருக்கிறதே!

பார்த்தாயா?'' என்று சொல்லிவிட்டு, அதை அவன் அவளுக்குப் படித்துக் காண்பித்தான்:

''எங்கள் கம்பெனி டைரெக்டர் நேரில் தங்களோடு பேச விரும்புகிறார். தாங்கள் எப்பொழுது வர முடியும் என்று தந்தி அடியுங்கள். பிரயாணச் செலவை நாங்கள் கொடுப்போம்.''

''யாரிடமிருந்து வந்திருக்கிறது இந்தக் கடிதம்?''

''உனக்கு ஞாபகம் இருக்கிறதா? ஆறு மாதத்துக்கு முன்னால் நான் சினிமாவுக்கு எழுதிய ஒரு கதையை அனுப்பியிருந்தேனே! அந்தக் கம்பெனி மானேஜர் இப்போது எழுதி இருக்கிறார்.''

''அதை நான் அடியோடு மறந்தே போனேன்!''

''நானும் அதை மறந்துவிட்டேன்! எனக்கு ஒன்றுமே புரியவில்லை. அப்புறம் எல்லாம் ஞாபகம் வந்தது.''

''ஆமாம், கதை வந்து சேர்ந்த தகவலை அவர்கள் முன்பே உங்களுக்குத் தெரிவிக்கவில்லையோ?''

''நான் கையெழுத்துப் பிரதியை ரிஜிஸ்தர் தபாலில் அனுப்பியிருந்தேன்; ரசீது திரும்பிவந்தது. அவ்வளவுதான்!''

''இந்தக் கடிதத்தில் கூட அதைப் பற்றித் தெளிவாக ஒன்றும் குறிப்பிடவில்லையே?''

''என்னைப் பேசக் கூப்பிட்டிருப்பதனால் இது அந்தக் கதை சம்பந்தமாகத்தான் இருக்கும் என்று நன்றாகத் தெரிகிறதே! அவர்கள் செலவுக்குக் கொடுக்கும்போது போயவருவதற்குத் தடை என்ன இருக்கிறது? 'நாம் எப்போதும் விதிக்குச் சந்தர்ப்பம் கொடுக்க வேண்டும்' என்று நம்முடைய பம்பு ஸேட் அடிக்கடி சொல்வது வழக்கம்'' என்று சேகரன் சிரித்துக்கொண்டே சொன்னான்.

ஆனால் மஞ்சு ஏதோ சிந்தனையில் ஆழ்ந்திருந்தாள். அவள் சிறிது நேரம் கழித்து, ''உங்களுக்கு இப்போது பம்பாய்க்குப் போக லீவு கிடைக்குமா?'' என்றாள்.

''லீவே கேட்க வேண்டாமே! இன்று வெள்ளிக்கிழமை; இன்று இரவு மெயிலில் புறப்பட்டால் திங்கட்கிழமை காலைக்குள் திரும்பி வந்துவிடலாம்.''

''அப்படியானால் கட்டாயம் போய் வாருங்கள்.''

திடீரென்று வந்த அந்தக் கடிதம் அவ்விருவருக்குமே வலுத்த நம்பிக்கையை உண்டாக்கிவிட்டது. அவர்கள் என்ன என்னவோ மனக்கோட்டைகள் கட்டினார்கள். ஆனால் அந்த ஆசைகளில் மயங்கிப் போகவோ, அவற்றை மற்றொருவரிடம் சொல்லவோ அவர்கள் விரும்பவில்லை.

ஆகையால் சேகரன், "ஏதாவது உபயோகம் இருக்குமா? போய்வரும் அலைச்சல் மட்டும் கடைசியில் மிஞ்சுவதாக இருந்தால்?" என்று சந்தேகமாகப் பேசினான்.

"அதுவும் வாஸ்தவந்தான்! ஆனால் அந்த டைரெக்டர் என்ன சொல்லப் போகிறார் என்பதாவது நமக்குத் தெரிய வேண்டாமா?"

"அப்படியானால் போகலாம் என்கிறாயா?"

"ஆமாம். அவர்கள்தான் செலவுக்குக் கொடுக்கிறார்களே. இரண்டு நாள் வெளியூர் போவதால் உங்களுக்கும் காற்று மாறும்; கொஞ்சம் தெம்பாக இருக்கும்" என்று அவள் முகம் மலர்ந்து சொன்னாள்.

சேகரன் லேசாக அவள் கன்னத்தில் தட்டி, "தெம்பு எனக்கு மட்டுந்தான் வேண்டுமா? உனக்கு வேண்டாமா, மஞ்சு?" என்றான்.

"நான் சரளாவோடு எப்போதும் எங்கேயாவது சுற்றிவிட்டு வருகிறேன். நீங்கள்தான் வீட்டை விட்டு அசையாமல் இங்கேயே தனியாக உட்கார்ந்திருக்கிறீர்கள்!"

"உனக்கு என்ன, சரளா போன்ற பணக்காரத் தோழி இருக்கிறாள்! வாரம் தவறாமல் காரில் வன போஜனத்துக்கு அழைத்துப்போக எனக்கு யார் இருக்கிறார்கள்?"

இதைச் சொன்னதும் சேகரனுக்குச் சிரிப்பு வந்துவிட்டது. அந்தக் கணமே அவன் கண்முன்னால் ரஜனியின் வடிவம் நின்றது. அன்போடு தன்னைப் பார்க்கும் அவளுடைய அழகை அவன் கற்பனைக் கண்ணால் பருகினான்.

'அந்த ரஜனியை நீ பிறகு எங்காவது பார்த்தாயோ?' என்று மஞ்சுவைக் கேட்க வேண்டுமென்ற ஆசை 'சட்'டென்று அவன் உள்ளத்தில் எழுந்தது.

ஆனால் என்ன நினைத்தோ அவன் அந்த எண்ணத்தை

நெஞ்சத்துககுள்ளேயே அழுத்திவிட்டான்.

மஞ்சுவைத் தவிர வேறு ஒரு பெண்ணிடம் அவனுக்கு ஆவல ஏற்பட்டது இதுதான் முதல் தடவை. அவளிடம தன் எண்ணததை அவன் மறைக்கும முதல் சந்தர்ப்பமும் இதுவே.

அவனுடைய மனத்தில் அரைக்கணம் தோன்றி மறைந்த இந்தக கலவரததை மஞ்சு கவனிககவில்லை. அவள் சமையல் வேலையில் ஈடுபட்டிருந்தாள்.

சற்று நேரம கழிதது அவள் மென்முறுவல பூத்து, "உங்க ளுககுப் பம்பு ஸேட் போன்ற நண்பர்கள் இல்லையா?" என்ருள்.

"ஆனல் அவனேடு சுற்றுவதற்கு எனக்கு மனம் பிடித் தால்தானே? மேலும, அவனேடு நான் சுற்றிககொண்டிருந் தால் நீ எனறைக்காவது ஒரு நாள் என்னை வீட்டை விட்டு வெளியே துரத்திவிடுவாய்!"

இதைச் சொன்னதும் சேகரன் சிரிக்க முயன்ருன். ஆனல் திடீரென்று ரஜனியை நினைத்துக்கொண்டதனல் அவனுக்கு ஏற்பட்ட உணர்ச்சி இன்னமும் மங்கவில்லை.

"முந்தாநாள் சரளா ஒரு விஷயம் சொன்ளுளே! பம்பு ஸேட் ஒரு சினிமாக் கம்பெனி வைக்கப்போகிருனும்."

"அவனிடம் பணம் ஏராளமாகக் குவிந்துவிட்டதுபோல இருக்கிறது. நீ சரளாவிடம் சொல்லி வைப்பதுதானே, நம் மிடம் ஒரு கதாசிரியர் தயாராக இருக்கிருர் என்று?"

"இதைச் சொல்லுவானேன்? அவர்கள் கம்பெனி வைத் தால் கதை எழுதும் வேலை தானுக உங்களிடந்தான் வரும்."

"உங்களில் யாரையாவது நடிகையாகவும் ஏற்பாடு செய்து விடுவார்கள்!"

"சும்மா ஏதாவது பேசாதீர்கள்! அவர்கள் சொல்லிவிட் டால்தான் என்ன? நாங்கள் அதற்குத் தயாராக இருந்தால் தானே அது நடக்கும்?"

"ஏன்? நடிகையாவதில் என்ன கெடுதி இருக்கிறது? வாரம் தவறினுலும் தவறும்; எல்லாப் பத்திரிகைகளிலும் விதம் விதமான போட்டோக்கள் வருவது தவருது. எல்லாரும் பேட்டி காண வருவார்கள். 'நற்குலத்தில் பிறந்து நன்ருகக்

கற்றறிந்த லட்சிய நடிகை இவள்!" என்று பத்திரிகைகளில் உன்னுடைய வரலாறும் அச்சாகி வரும்."

"சரியான கேலிதான் செய்கிறீர்கள்! அந்த வரலாற்றைப் படித்ததும் கணவனுக்கு ஒரே மயக்கமாக இருக்கும். 'இது நம் மனைவியின் வரலாறுதானா, அல்லது ஏதாவது ஒரு நாவலின் அத்தியாயமா!' என்று அவன் திகைப்பான்."

"நான் சொல்கிறேன், மஞ்சு: சினிமாவில் குலமங்கைகள் சேர்ந்தால் அவர்களுடைய சரித்திரம் நாவலாக வேண்டியது தானே? மனைவியைப் படத்தில் நடிப்பதற்கு அனுமதிக்கும் கணவன் இதற்கெல்லாம் தயாராக இருக்க வேண்டாமா? அவர்கள் அந்தப் பெண்மணியின் மோகன அங்க வளைவுகளைப் படம் பிடிப்பார்கள். சுடச்சுட விறுவிறுப்பான செய்திகளைத் திரட்டும் நிருபர்கள் அவளைப் பேட்டி கண்டதும் தங்கள் மனம் போனவாறு எழுதுவார்கள் பத்திரிகை ஆசிரியர்கள் அவள் வரலாற்றைக் கவர்ச்சிகரமாகச் சித்திரிப்பார்கள். இதற்கெல்லாம், கணவன் உறுதியாகத்தான் இருக்க வேண்டும்!"

"சினிமாவுக்குக் கதை எழுதும் ஆசிரியர்கள் மட்டும் அப்பட்டமான துறவிகளோ?"

"அப்படியென்றால் நான் பம்பாய்க்குப் போகும் திட்டத்தை ரத்துச் செய்துவிடுகிறேன்."

"ஆமாம், ஆமாம்! தொழில் முறையில் நீங்கள் இன்னும் சினிமாக் கதை எழுத ஆரம்பிக்கவே இல்லையே? கதை எழுதி ஆறு மாதம் கழித்து இன்றைக்கு இரண்டு வரி ஏதோ பதில் வந்திருக்கிறதாம்! இப்படியே கணக்குப் பார்த்துக்கொண்டு போனால், உங்கள் கதை திரைக்கு வர ஆறு வருஷமாகும்!"

முத்துப் பற்கள் தெரிய அவனை அவள் பார்த்துவிட்டு, "நீங்கள் பம்பாயிலிருந்து திரும்பி வந்த பிறகுதான் நான் யோசனை செய்யப்போகிறேன், குழந்தைகளை விடுதியில் விடுவதா வேண்டாமா என்று!" எனத் தொடர்ந்து பேசினாள்.

"குழந்தைகள் எங்கே, இன்னும் வரவே இல்லையே?"

"தோட்டத்துக்குப் போயிருக்கிறார்கள். நாம் சாப்பிடுவதற்குள் திரும்பிவிடுவார்கள். நீங்கள் அவர்களுக்குப் பம்பாயிலிருந்து படப் புத்தகங்களும் ஒரு மெகானோவும் வாங்கி

வாருங்கள்.''

அன்றைக்கு அவர்களுடைய சாப்பாடு ஜோராகத்தான் இருந்தது. அந்தக் கடிதத்தினால் உண்டான ஆனந்தத்தை என்னதான் முயன்றும் அவர்களால் ஒளித்துவைக்க முடியவில்லை. ஒருவர் முகத்திலிருந்து மற்றொருவர் முகத்துக்கு அது தாவிச் சென்றபடியே இருந்தது. சேகரன் வெள்ளிக் கிழமை இரவு மெயிலில் ஏறும வரைக்கும் அந்த உல்லாசம் பொஙகியபடியே இருநதது.

சனிக்கிழமை காலையில் சேகரன் தாதர் ஸ்டேஷனில் இறங்கி, உடனே வேறு வண்டியில் ஜோகேசுவரிக்குப் போயச் சேர்ந்தான்.

ஸ்டேஷனிலிருந்து சுமார் முக்கால் மைல் தூரததில் ஸுஷமா பிக்சர்ஸ் டைரெக்டர் ஸ்ரீமான் புருஷோத்தம தேஸாய் அவர்களின் பஙகளா இருந்தது.

வாசலில் நின்ற வேலையாளிடம் தன் விலாசச் சீட்டைக் கொடுத்துவிட்டு வராந்தாவில் இருந்த வட்டமேஜையைச் சுற்றிப் போட்டிருந்த பிரம்பு நாற்காலிகளுள் ஒன்றில் சேகரன் உட்கார்ந்தான்.

வேலையாள் சிறிது நேரத்தில் திரும்பி வந்து, பஙகளாவின் இடப்பக்கததில் இருந்த ஓர் அறைக்கு அவனை அழைத்துச் சென்றான்.

அந்த அறை வாசலில், 'ஆபீஸ்' என்று எழுதிய எனமல் தகடு அடித்திருந்தது. சேகரன் உள்ளே போனதும், அறைக்கு நடுவே இருந்த பெரிய மேஜை அருகில் நாற்காலியில் வீற்றிருந்த நடுத்தர வயதுடைய கனவானைக் கண்டான்.

சேகரனைப் பார்த்ததுமே அவர் தமது தடித்த உதடுகளின் கோடியில் இருந்த நீண்ட கரிய சுருட்டுக் குழாயை எடுத்து, எதிரே இருந்த நீலப் பாண்டத்தில் வைத்தார். மேலாக எழுந்த அவர், கையைக் குலுக்க விரும்பி மென்னகையோடு கையை நீட்டினார்.

''என் தந்தி வந்து சேர்ந்ததா?'' என்று கை குலுக்கும் போது சேகரன் கேட்டான்.

''வந்தது. நான் முதலில் என்னைப்பற்றிச் சொல்லிவிடு

கிறேன்" என்று கூறி மேஜையில் இருந்த சிகரெட் பெட்டியை அவர் மெதுவாக அவன் முன்னால் நகர்த்தினார்.

"கடிதத்தில் கையெழுத்திட்டவர் நீங்கள்தான் என்று நினைக்கிறேன். ஆனால் அந்தக் கையெழுத்தை என்னால் சரியாகப் புரிந்துகொண்டு படிக்க முடியவில்லை."

"என் கையெழுத்துத்தான் அது. என் பெயர் பாலசந்திரன்."

சேகரன் எதையோ நினைத்துக்கொண்டு, "அதாவது, சந்திரன் என்பது நீங்கள்தானே?" என்றான்.

"ஆமாம்."

"நான் உங்கள் பெயரை எத்தனையோ தடவை பத்திரிகைகளில் படித்திருக்கிறேன்; போட்டோவும் பார்த்திருக்கிறேன்."

சேகரன் இப்படிச் சொன்னானே தவிர, பத்திரிகைகளில் படத்தில் பார்த்த 'ஸுஷமா பிக்சர்ஸ்' மானேஜர் சந்திரன் அவர்களுக்கும் இப்போது தன் எதிரே உட்கார்ந்திருந்த பாலசந்திரனுக்கும் உள்ள ஒற்றுமையை அவனால் கண்டுபிடிக்க முடியவில்லை. சினிமா நடிகைகளைப் போல இந்த மானேஜரும், படம் பிடிக்கும்போது 'மேக்அப்' செய்துகொள்கிறாரோ என்று அவனுக்குத் தோன்றிற்று.

"ரெயிலில் உங்கள் பிரயாணம் சுகமாக இருந்ததா? எங்கள் ஐயா பம்பாயிலிருந்து இன்னும் ஒரு மணி நேரத்தில் வந்துவிடுவார். அதற்குள் நீங்கள் ஸ்நானம், சாப்பாடு எல்லாம் முடித்துக்கொள்ளுங்கள். அவர் வந்ததும் உங்களைக் கூப்பிட்டு அனுப்புகிறேன்" என்று கூறி, சந்திரன் மேஜை மேல் இருந்த மணியைத் தட்டினார்.

சேகரன் அந்த விசாலமான அறையை நாலுபுறமும் பார்த்தான். அது மேல்நாட்டு முறையில் அலங்கரித்திருந்தது. ஆனால் எதிரே அமர்ந்திருந்த சந்திரனுடைய உடைகள் மட்டும் தூய கதரில் குஜராத்தியார் பாணியில் அமைந்திருந்தன.

மணியோசை கேட்டதும் வேலையாள் உள்ளே வந்தான். சேகரனை அதிகம் பேசவிடாமல் அவர் வேலையாளோடு அவனை அனுப்பினார்.

பங்களாவின் முக்கியக் கட்டிடத்திலிருந்து சிறிது தொலை

வில் இருந்த ஒரு சிறு வீட்டுக்கு வேலையாள் சேகரனை அழைத்துச் சென்றான். அங்கே அவன் தேநீர் அருந்த ஏற்பாடு செய்தான். ஸ்நான அறையிலிருந்து சேகரன் குளித்து வெளியே வருவதற்குள், 'சாப்பாடு தயார்' என்று அவன் சொன்னான். குஜராத்தி, மகாராஷ்டிரம், தமிழ் நாடு முதலிய பல மாகாணத்துப் பண்டங்கள் அந்தச் சாப்பாட்டில் அடங்கி யிருந்தன. அந்தக் கலவையினால் அது சேகரனுக்கு விசித்திர மாகவும் ருசியாகவும் இருந்தது.

சாப்பாடு முடிந்ததும் அவன் ஸோபாவில் சாய்ந்து பத்திரிகைகளைப் புரட்டலானான். அதற்குள் வேலையாள் அவனைக் கூப்பிட வந்தான். அவன் சேகரனைப் பங்களாவின் விசாலமான ஹாலுக்கு அழைத்துப் போய் உட்காரவைத்தான்.

ஹால் பிரம்மாண்டமாக இருந்தும் அலங்காரம் குறை வாகவே இருந்தது. மூலையில் முக்காலியில் வைத்திருந்த பள பளவென்ற பித்தளைப் பூக்கிண்ணத்தைத் தவிர அங்கே வேறு அழகுப் பொருள் ஏதும் இல்லை. நடுவே இருந்த சதுரமான மேஜையில் பத்திரிகைகளும் ஆபீஸ் பைல்களும் சிகரெட் பெட்டியும் இருந்தன. பக்கத்து அறையில் இருந்த ரேடியோவி லிருந்து இனிய இசை காற்றில் மிதந்து வந்தது.

சேகரனுக்குப் பின்னாலேயே சந்திரன் வேகமாக அங்கே வந்தார்; "உங்களுக்கு அசௌகரியம் ஒன்றும் நேரவில்லையே?" என்று கேட்டார்.

"அடடா! இங்கு எல்லா ஏற்பாடுமே ஜோராக இருக் கிறது!" என்றான் சேகர்.

"ஐயா இதோ சிறிது நேரத்தில் வந்துவிடுவார்" என்று சந்திரன் கைக்கடிகாரத்தைப் பார்த்தபடி சொன்னார்.

அவருடைய புருவ அசைவும், நெற்றியில் விழுந்த சுருக்கங் களும், மென்மையான குரலில் அவர் சீட்டி அடித்ததும், அவர் மனம் அமைதியற்று இருப்பதைக் காண்பித்தன. ஸ்ரீமான் புருஷோத்தம தேஸாய் உலகப் புகழ் பெற்ற டைரெக்டர். அவருடைய கண்டிப்பையும், குறித்த நேரத்தில் குறித்த வேலையை முடிக்கும் திறமையையும் பற்றிப் பல சம்பவங்களைச் சேகரன் பத்திரிகைகளில் படித்திருந்தான். ஆகையால், சந்திர

னுடைய அமைதியின்மை அவனுக்குப் பொருத்தமாகவே தோன்றியது.

சந்திரன் சீட்டியடிப்பது திடீரென்று நின்றது. சற்று வய தானவரும் நல்ல பருமனுமான புருஷோத்தம தேஸாய் நிதான மாக அடிவைத்து ஹாலுக்குள்ளே நுழைந்தார். அவர் வெளுப்பான கதராடை அணிந்திருந்தார்.

சந்திரன் எவ்வளவுக்கு எவ்வளவு அமைதியற்று இருந் தாரோ, அவ்வளவுக்குச் சாந்தமாக இருந்தார் தேஸாய்.

அவர் மேஜையருகில் வந்ததுமே சந்திரன் மரியாதையாக, "இவர்தான் சேகர்; நாகபுரியிலிருந்து வந்திருக்கும் நம் விருந் தாளி" என்றார்.

சேகரன் கையைக் குலுக்க நீட்டுவதற்குள் தேஸாய் கையைக் கூப்பி அஞ்சலி செய்து, "இங்கு வந்ததிலிருந்து உங்களுக்கு எந்தவிதமான வசதிக் குறைவும் ஏற்படவில்லையே? என்ன சந்திரன், இவருடைய வரவேற்புக்குச் சரியான ஏற் பாடுகள் செய்திருந்தீர்கள் அல்லவா?" என்று கேட்டார்.

சந்திரன் அந்தக் கேள்விக்குப் பதில் சொல்வதற்குள் சேகரனே பேசினான்: "எனக்கு எவ்வகையான சிரமமும் இல்லை. எல்லா ஏற்பாடுகளும் அழகாக இருக்கின்றன."

"எங்கள் கடிதத்தைக் கண்டு உங்களுக்கு ஆச்சரியமாக இருந்திருக்குமே. எங்களிடம் ஏராளமான கதைகள் வருகின் றன. அவற்றைப் படித்துப் பார்த்து முடிவு செய்வதற்காக ஒரு தனிப்பிரிவே ஏற்படுத்தி இருக்கிறேன். என்ன சந்திரன், இவ ருடைய கதை நம்மிடம் வந்து ஆறு மாதம் ஆகியிருக்குமா?"

"இருக்கும்."

"எங்களிடம் வரும் கதைகளை வரிசையாகத்தான் படித்து ஆலோசிக்கிறோம். அதற்குப் பிறகு ஆசிரியர்களுக்குத் தெரி விக்கிறோம். அதனால்தான் உங்களுக்குக் கடிதம் போட இவ் வளவு நாள் ஆயிற்று."

"உங்கள் சிரமங்கள் எனக்குத் தெரியும்."

"உங்கள் கதையில் ஓட்டமும் திருப்பங்களும் நன்றாக இருக்கின்றன. ஆனால் எப்போதும் என் அநுபவம் என்ன வென்றால் கதாசிரியன் எவ்வளவுதான் கெட்டிக்காரனாக

இருந்தாலும் சினிமாப் பத்ததிக்கு ஏற்றபடி கதை எழுதுவது என்பது ஒரு தனிக் கலைதான்!''

''அதைப்பற்றி எனக்கும் கொஞ்சம் தெரியும்.''

''அப்படியானால் மிகவும் நல்லது. உங்களுடன் சுலபமாகப் பேசி முடித்துவிடலாம். பெரும்பாலும் எழுத்தாளர்கள் தங்கள் கலையில் வீண் பெருமிதமே கொள்கிறார்கள். இதைத் தவிர ஒவ்வொருவரிடம் ஒவ்வொரு கிறுக்கு உண்டு!—சந்திரன், இவருடைய கதை இங்கே இருக்கிறதா?''

''இதோ'' என்று சொல்லி, சந்திரன் தமது பையிலிருந்து கையெழுத்துப் பிரதியை எடுத்து, மேஜைமேல் வைத்தார்.

அபபொழுது தேஸாய் ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டே, ''உஙகளுடைய இந்தக் கதை எனக்குப் பிடித்திருக்கிறது, சேகர்! ஆனால் மனதததுவ ஆராய்ச்சிப்படி இதில் ஒரு குறை இருப்பதை நீங்கள் உணரவிலலையா?'' எனறார்.

அவர் யாருடைய ஆராய்ச்சியைப் பற்றிப் பேசுகிறார் என்பது அவனுககு விளங்கவில்லை. ஆனால் பொதுவாக அவர் குற்றம் கண்டுபிடிப்பதைக் கண்டதும் அவன் ஆவலோடு, ''என்ன குறை?'' என்றான்.

''வறுமையினால் மட்டும் உங்கள் கதாநாயகன் தாழ்ந்த நிலையை அடைந்ததாக நீங்கள் காண்பித்திருககிறீர்களே!''

''ஆமாம், வறுமை எனபது ஒரு சமூகக் குற்றம். மனிதனுடைய இழிவுக்கு வறுமைதான் காரணம் என்பது என் முக்கியக் கருத்து. அதனால்தான இந்தக் கதைக்கு, 'சமூகக் குற்றம்' என்று தலைப்புக் கொடுத்திருக்கிறேன்.''

''அது எனக்குத் தெரிகிறது. ஆனால் வெறும் வறுமையினாலே மட்டும் மனிதன் தாழ்ந்துவிடுகிறான் என்று நீங்கள் வாஸ்தவமாகவே நினைக்கிறீர்களா?''

''பின்னே மனிதனுடைய தாழ்வுக்குக் காரணம் நீங்கள் என்னவென்று சொல்கிறீர்கள்?''

''உங்கள் கதாநாயகன் ஏதோ ஒரு துர்ப்பழக்கத்தில் சிக்கியதனால் வீழ்ச்சியடைந்ததாக நீங்கள் காண்பிப்பது பொருத்தமாக இருக்கும் என்று நினைக்கிறேன்.''

''பழங்காலத்து நாடக ஆசிரியர்கள் முக்கியமான பாத்

திரம் மேடையில் இறந்து விழுந்தால்தான் அது துன்பியல் நாடகம் என்று ஒப்புக்கொள்வார்களாம். மனிதனுடைய வீழ்ச்சியைப் பற்றிய உங்கள் கருத்தும அதுபோலத்தான் எனக்குத் தோன்றுகிறது!''

சேகரன் சடக்கென்று இப்படிப் பேசிவிட்டான். ஆனுல் உடனே தன் பிழையை உணர்ந்துகொண்டு, ''சரி, எந்தத் துர்ப்பழக்கத்தைக் காண்பிப்பது? அவனுக்குத் தன் மனைவி யிடம் அபாரமான அன்பு. அவளுடைய கஷ்டங்களைப் பார்த்துக் குடித்தனத்தில் அவனுக்கு மனம் அலுத்துப்போவதாக நான் சித்திரித்திருககிறேன்'' என்று மெதுவாகக் கூறினுன்.

''நீங்கள் இப்படிச் செயயலாமே; அந்த அலுப்பிலேயே அவன் மதுபானத்தில் இறங்குகிருன். அதனுல் அவனுடைய குடித்தனம மண்ணுகிறது. மதுவைவிட நாசபபழககம் உலகில் வேறு என்ன இருககிறது?''

தேஸாய் தம் கையில் இருந்த சிகரெட்டை எறிந்துவிட்டு வேருென்றைப் பற்ற வைத்துக்கொண்டே சிரித்தபடி மேலும் பேசினுர்: ''நீங்கள் செய்த தவறு இதுதான், சேகர்! வெறும் வறுமையினுலே மட்டும் மனிதன் வீழ்ச்சி அடைவதில்லை. ஏதாவது ஒரு துர்ப்பழக்கம் இருந்தால்தான் அவன் வீழ்ச்சி யடைவான். இல்லாவிட்டால் பணக்காரர்கள் ஏன் வீழ்ச்சி யடைகிருர்கள்?''

''மனிதனுடைய வீழ்ச்சிக்கு முக்கிய காரணம், பொருளா தார நிலை சமூகத்தில் ஏற்றத் தாழ்வாக இருப்பதுதான். செல்வம் மிகுந்து இருப்பதனுல் பணக்காரர்கள் வீழ்ச்சியுறு கிருர்கள். செல்வம் இல்லாமையினுல் ஏழைகள் வீழ்ச்சியடை கிருர்கள். பணமும் பண்பாடும் உடையவன் மதுபானம் செய்வது, மிதமிஞ்சிய சுகபோகத்தினுல் வலுவிழந்து போன தன் மனத்துக்கும் அறிவுக்கும் புலன்களுக்கும் தெம்பு ஊட்டுவ தற்காக! ஏழையும் பேதையுமான மனிதன் மது அருந்துவது, வறுமையினுல் உண்டாகும் பொறுத்தற்கரிய வேதனைகளை மறப்பதற்காக! ஆதலால் மனிதனுடைய வீழ்ச்சிக்கு முக்கிய காரணம் மது அல்ல; பொருள் ஓரிடத்தில் மிஞ்சி இருப்பதும், மற்ருேரிடத்தில் அடியோடு இல்லாமையுந்தான் காரணம்!

வறுமையைப் போலவே பொருள் மிஞ்சி இருப்பதும் மனித னுடைய அழிவுக்குக் காரணமாகிறது.''

''ஆனால் வறுமையினால்தான் மனிதன் மதுபானத்தில் இறங்குகிறான என்பதையாவது நீங்கள் ஒப்புகொள் கிறீர்களா?''

''சிலா அபபடி இறங்கலாம மனததில வலுவற்றவன் எந்த ஆபத்தையும் நீணட நாள் பொறுத்துகொள்ள முடியாது. பிறகு அவன் அந்த ஆபத்தை மறப்பதற்குரிய கருவிகளைத் தேடுகிறான். மதுபானத்தின தேவையை உணர்வது, மன வலிமை குறைந்திருப்பதற்கு அடையாளமாகும். மனததுக்கோ அறிவுக்கோ உண்டாகும் களைப்பையும் சோர்வையம போககக் கூடிய வலிமையை மனிதன் இழந்துவிட்டானானால், அப்போது அவன் வெறியும் தெம்பும் ஊட்டும் பானஙகளைத் தேடுகிறான். ஜீரண சக்தி இல்லாதவன் லேகியத்தைப் புசிப்பதுபோல, மன வலிமையை இழந்தவன் வெறியூட்டும் பானங்களைக் குடிக்க விரும்புகிறான். தெம்பு கொடுக்கும் எந்தப் பானத்தை யும் உலகில் ஏழைகள் அதிகமாகக் குடிப்பதற்குக் காரணமே இதுதான்.''

''இது சரியென்றால், உங்கள் கதாநாயகன் மதுபானத்தில் இறங்குவதாகச் சித்திரிக்க நீங்கள் ஏன் தயங்குகிறீர்கள்?''

''என் கதாநாயகன் கோழை நெஞ்சன் அல்ல என்பதனால் தான் நான் தயங்குகிறேன். அவன் வறுமையோடு துணிச்ச லாகப் போராடுகிறான். தன் வலிமையை அவன் இழக்க வில்லை. அந்தத் தனிமையான போராட்டத்தில் கடைசியில் அவன் பொடி சாம்பலாகிவிடுகிறான். அவனைக் குடியனாகச் சித்திரித்தால் அவனுடைய தீர வடிவம் வடுப்படும். வறுமை என்பது ஒரு சமூகக் கொடுமை என்பதில் ஜனங்களுடைய கவனம் போகாது. மதுபானத்தைக் கண்டாலே அவர்களுக்கு வெறுப்பு உண்டாகும். நான் விரும்புவது வேறு.''

''என்ன?''

''கொள்கையும் நற்குணமும் உழைப்பும் உடைய ஒருவனை வறுமை எப்படி அழித்துவிடுகிறது என்பதைக் காண்பித்து, மக்களுக்கு வறுமையினிடம், அந்தச் சமூகக் கொடுமையினிடம்

வெறுப்பை உண்டாக்குவதே என்னுடைய நோக்கம்.''

''ஆனால் நான் சொல்வதைக் கேளுங்கள். குடியனுடைய தால் அவனுடைய குடும்பம் கெடுவதைக் காண்பித்தால் ஜனங்களுடைய மனத்தில் கதை பதிவதுபோல, வெறும் வறுமையினால் உண்டாகும் தீமைகளைக் காண்பிப்பதனால் பதியாது.''

''நீங்கள் சொல்வதில் ஓர் உண்மை இருக்கிறது. குடியின தீமையைக் காண்பிக்கும்போது, தீவிர உணர்ச்சிகளும் சோகமும் நிறைந்த சூழ்நிலையையும் பளிச்சென்று மனத்தில் பதியக் கூடிய காட்சிகளையும் கொண்டுவர முடியும். வறுமையின் கொடுமையைச் சித்திரித்தால் அவ்வளவு பரபரப்பான சம்பவம் வராது என்பதை ஒப்புக்கொள்கிறேன். என் கதை முழுக்க முழுக்க அறிவுக்கு விருந்தாவது.''

''அதனால்தான் இப்போது இருக்கும் நிலையில் அது சினிமாவுக்குப் பயன்படாது என்கிறேன்!'' என்று தேசாய் தன்னம்பிக்கையோடு பேசினார்.

அவருடைய நோக்கத்தைச் சேகரன் உணர்ந்துகொண்டான். ''அப்படியானால் நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?'' என்றான்.

''கதாநாயகனுக்கு மது வேட்கை உண்டாகிறது; அதனால் அவனுடைய குடித்தனம் அழிகிறது. இப்படிக் கதையை மாற்றுவதனால் உயிர்த் துடிப்புள்ள பல காட்சிகளைக் காண்பிக்கலாம்.''

சேகரன் ஒன்றுமே பேசவில்லை.

தேசாய் தமது பேச்சைத் தொடர்ந்தார். ''நாங்கள் இப்படிக் கதையை மாற்றி எங்கள் பாணியில் அதை எழுதியிருக்கிறோம். அதைப் படித்துப் பாருங்கள்.—சந்திரன், அந்த மற்றொரு பிரதியை இவரிடம் கொடுங்கள்!''

சந்திரன் தமது பையிலிருந்து ஒரு கட்டை எடுத்துச் சேகரனிடம் கொடுத்தார்.

அவன் அதைப் புரட்டிப் பார்த்தான். தான் நிர்மித்த ஓர் அழகிய சிலையை ஒரு வழிப்போக்கன் குரூபமாக்கிவிட்டதைக் கண்டு வருந்தும் சிற்பிபோல, அவன் அந்தப் பிரதியைப்

படிக்கும்போது மன வேதனை அடைந்தான். அந்தக் கட்டைப் பேசாமல மேஜைமேல் வைத்தான்.

''அப்படியானால் என்ன சொல்கிறீர்கள், சேகர்?''

திடீரென்று அடிபட்டதனால் மூர்ச்சையானவன் விழித்துக் கொண்டதும், நிலைமையைத் தெரிந்துகொள்வதற்காக மெது வாகப் பேசுவதுபோலச் சேகரன் தாழ்ந்த குரலில் பேசினான்.

''நான் சொல்வதற்கு என்ன இருக்கிறது? சினிமா டெக்னிக்கின்படி நீங்கள் செய்தது சரியாக இருக்கலாம். ஆனால் அது எனக்குப் பிடித்தமில்லை. கலைஞன் தன் சொந்த அநுபவத்திலிருந்தும் வாழ்க்கையிலிருந்தும் கலையைச் சிருஷ்டிக் கிறான். அவனுடைய கற்பனைக் குழந்தை அது. பிறர் அதைக் குரூபமாக்குவது அவனுக்கு எப்படிப் பிடிக்கும?''

இப்படி வருத்தமாகவும் குத்தலாகவும் அவன் பேசியதனால் தேஸாய் சிறிதும பின்வாங்கவில்லை. அவர் லேசாகச் சிரித்த படியே, ''இதோ பாருங்கள், சேகர்! உங்கள் கதை இனிமேல் தான் உலகத்துக்குத் தெரியப் போகிறது. அதற்கு முனனா லேயே, நாங்கள் அதைக் கெடுத்துவிட்டதாக நீங்கள் குற்றம் சாட்ட முடியாது. உணர்ச்சி வசமாக நீங்கள் பேச வேணடாம். இது விவகாரம். உங்களுக்குப் பணம் வேண்டும்; எங்களுக்குக் கதை வேண்டும். உங்கள் கதை நன்றாக இருககிறது; அதைப் பயன்படுத்த நாங்கள் விரும்புகிறோம். தொழில முறையில் எங்களுக்கு வசதியாக நீங்கள் அதை மாற்றிக் கொடுக்கா விட்டால், நாம் எப்படி ஒத்துப்போக முடியும்?'' என்றார்.

சேகரன் பேசாமல் இருந்தான். இதுவரைககும் வாயையே திறககாமல் அவர்கள் சமபாஷணையை ஆவலோடு கேட்டுக் கொண்டிருந்த சந்திரன் இப்போது இடைமறித்து, ''ஒத்துப் போவதற்குச சுலபமான வழி இருக்கிறதே! இவருடைய கதையை இவரிடமே திருப்பிக கொடுததுவிடுவோம். அதற்குப் பதிலாக நாம் அதிலிருந்து மாற்றிய இநதக் கதையைப் பயன் படுத்திக்கொள்வோம். இவருடைய கதை நமக்கு ஆதாரமாக இருநததற்காக இவருககுத் தகுதியான சம்மானம் கொடுப் போம்'' என்றார்.

''இது சரியான யோசனை, சந்திரன்! ஆனால் நாம் தயாரித்த

கதையைத் தம் பெயரால் வெளியிட இவர் விரும்புவாரா?''

"அதற்கும் வழி இருக்கிறது, ஸார்! இவருடைய கதையை நாம் மாற்றியிருப்பதனாலே தம் பெயரை வெளியிட இவர் மறுக்க வேண்டிய காரணம் இல்லையே! இவருடைய கதையைப் பயன்படுத்துவதற்காக இவருக்குச் சம்மானம் கொடுக்கிறோம். அப்படியிருக்க இந்த மாற்றிய கதையில் இவர் பெயரை ஏன் வெளியிடலாகாது?''

"அதை முடிவு செய்ய வேண்டிய பொறுப்பு நம்முடையதல்ல, சந்திரன்! இவர் அதற்கு இணங்கினால் இவர் பெயரை வெளியிட எனக்குத் தடையில்லை!''

இந்தச் சம்பாஷணையைக் கேட்டுக்கொண்டிருந்த சேகரன் நடுவில ஆத்திரத்தோடு, "இந்தக் கதையை என் பெயரால் வெளியிட எனக்கு அடியோடு விருப்பமில்லை!'' என்றான்.

"அப்படியானால் ஐயாவின் பெயரால் இந்தக் கதை வெளியாவதில் உங்களுக்குத் தடை ஏதாவது உண்டா? இதோ பாருங்கள், சேகர்! இதனால் உங்களுக்குப் பணம் கிடைக்கும்; எங்களுக்குத் தேவையான கதையும் கிடைக்கும். இதை ஏன் நீங்கள் ஒப்புக்கொள்ளக் கூடாது?''

"இவர் பெயரால் இந்த மாறிய கதை வெளிவந்தால், பின்பு இந்தக் கதையைக் கொண்டு நான் நாவல் எழுதும் போது ஜனங்கள் அதைத் திருட்டுக் கதை என்பார்கள்!''

"இவ்வளவுதானே? நீங்கள் அந்த நாவலை வெளியிடும் போது அதை ஐயாவுக்குச் சமர்ப்பணம் செய்துவிட்டு, அதன் முகவுரையில் 'சினிமாவுக்கு இந்தக் கதை தயாரானபோது நான் உதவி செய்தேன்' என்று தெளிவாகக் குறிப்பிட்டு விடுங்கள்.''

"எனக்கு நாவலைச் சமர்ப்பணம் செய்ய வேண்டிய அவசியங்கூட இல்லை, சேகர்! உங்கள் முகவுரையை எனக்குக் காண்பித்தால் போதும். சினிமாவுக்குக் கதை எழுத நீங்கள் உதவி செய்ததாகக் குறிப்பிட்டால் அதனால் உங்கள் தொழில் லாபகரமாகவே இருக்கும்!'' என்றார் தேஸாய், புன்னகையோடு.

பெருமிதம் நிரம்பிய அவருடைய சிரிப்பு அவன் நெஞ்சைப் பிளந்தது. தேஸாய் சிறந்த கதாசிரியர் என்றும் டைரெக்டர்

என்றும் இந்தியா முழுவதும் புகழ் பெற்றிருந்தார். 'பிறருடைய கற்பனைக் குழந்தைகளை இப்படி ரகசியமாகத் திருடித்தான் இவர் இந்தப் புகழைப் பெற்றிருப்பாரோ?' என்று சேகரனுக்குத் தோன்றிறறு.

"அப்படியானால் சேகர், உங்கள் பெயரால் செக எழுதலாமா? நீங்கள் ஒரு தொகை சொல்லுங்கள். நீங்கள் என்ன சொன்னாலும் அதை ஐயா எழுதுவார்" என்றார் சந்திரன்.

"செக்கா?" என்று தன் சிந்தனை மயக்கத்திலிருந்து விழித்துக்கொண்டு சேகரன் கேட்டான்.

"ஆமாம். இந்தத் திட்டத்துக்கு நீங்கள் ஒப்புக்கொள்கிறீர்கள் என்று எண்ணுகிறேன்; இனி எங்களுக்குப் பொழுதில்லை. ஐயா ஒன்றரை மணிக்கு டவுனுக்குப் போகவேண்டும். இப்பொழுதே எல்லாம் தீர்மானம் ஆகிவிடவேண்டும். உங்கள் தொகையைச் சொல்லுங்கள்." சந்திரன் இப்படித் தரகனைப் போலப் பேரம் பேசினார். சேகரனுடைய கலங்கிய மனநிலையை அவர் நன்றாகத் தெரிந்துகொண் டிருந்தார்.

'இநதச் செக்கை மறுத்துவிட்டு நம் கதையை எடுத்துக்கொண்டு இஙகிருந்து பேசாமல் ஓடிவிடலாம்' என்று ஒரு கணப்பொழுது சேகரன் நினைத்தான்.

உடனே அவன் கண்முன்னால் வீட்டுக் கஷ்டங்களினால் இளைத்துக களைத்துப் போன மஞ்சுவின் வடிவம் வந்து நின்றது.

நெறறியில் வடிந்த வேர்வையைத் துடைத்துக்கொண்டே அவன் திடீரென்று, "உங்களுக்குச் சரி என்று தோன்றுவதைக் கொடுங்கள். எனக்கு இந்த விவகாரமெல்லாம் தெரியாது என்பதுதான் வெளிப்படையாச்சே!" என்றான்.

சந்திரன் ஏதும் பேசவில்லை. கருத்து நிரம்பிய பார்வையோடு எஜமானரைப் பார்த்துவிட்டு, செககில் சேகரனுடைய முழுப் பெயரையும் தொகையையும் தேதியையும் எழுதினார்.

தேஸாய் வாயிலிருந்த சிகரெட்டை எடுத்துக் கிண்ணத்தில் எறிந்துவிட்டு, சந்திரன் நீட்டிய பேனாவை வாங்கி அந்தச செக்கில் மௌனமாகக் கையெழுத்திட்டார்.

சந்திரன் அந்தச செககை வெட்டிச் சேகரனிடம் கொடுத்தார். அவன் அதன்மீது பார்வையைச் செலுத்தினான்.

பச்சை மையால் குண்டு குண்டாக எழுதியிருந்த ஐந்நூறு ரூபாய் என்ற தொகை அவன் கண்ணில் பட்டது.

'இந்தக் கதையைக் கொண்டு முழு நாவல் எழுதி அதைப் பிரசுரகர்த்தரிடம் கொடுத்தாலும் ஒரு மொத்தமாக இவ்வளவு தொகை ஒரே நாளில் கிடைத்துவிடாது' என்று அவனுக்குத் தோன்றிற்று. ஆனால் அவனுடைய உள்ளத்தில் குண்டூசி குத்துவதைப் போன்ற ஒரு வேதனையும் உண்டாயிற்று.

"இந்தத் தொகை குறைவு என்றால் தெளிவாகச் சொல்லுங்கள். உங்களுக்குப் பிரயாணச் செலவு வேறு நாங்கள் கொடுக்கப் போகிறோம்."

சந்திரனுடைய இந்தப் பேச்சைக் கேட்டதும், சேகரனுக்குச் சுய நினைவு வந்தது. செக்கை மடித்துக்கொண்டே, "வந்தனம்" என்றான்.

"உண்மையில் எங்களுக்குத்தான் நீங்கள் பேருதவி செய்திருக்கிறீர்கள். நீங்கள் சமாதானமாக இணங்கியிராவிட்டால் ஒரு நல்ல கதை எங்களுக்குக் கிடைக்காமற் போயிருக்கும்."

தேஸாய் முகம் மலர்ந்து, "இன்று மெயிலிலேயே நீங்கள் திரும்பிப் போக வேண்டுமா? முடிந்தால் நாளைக்கு ஒரு நாள் இருங்களேன். எங்கள் ஸ்டூடியோவை நீங்கள் ஒரு தடவை பார்க்க வேண்டும் என்று எனக்கு ஆசை" என்றார்.

ஆனால் அந்த இனிமையான வரவேற்பு இப்போது சேகரனுக்குக் கசந்துவிட்டது.

மறுபடி அவன் வந்தனம் செலுத்திவிட்டு, "என்னை மன்னியுங்கள். எனக்கு வேலை இருப்பதால் இன்றிரவு புறப்பட்டாக வேண்டும்" என்றான்.

"நீங்கள் இப்படிப் பிடிவாதம் பிடிக்கும்போது நாங்கள் என்ன செய்வது? மறுபடி ஏதாவது கதை எழுதினால் எங்களிடமே அனுப்புங்கள். எப்போதும் உங்கள் கதையை நாங்கள் முதலில் கவனிப்போம்."

மறுநாள் காலையில் சேகரன் ஸ்டேஷனிலிருந்து வீட்டுக்கு வந்ததும் மெகானோ, படப் புத்தகங்கள், பந்து முதலியவற்றையும் விதம் விதமான தின்பண்டங்களையும் அவன் குழந்தை

களுக்கு வாங்கி வந்திருப்பதை மஞ்சு பார்த்தாள். 'பம்பாய்ப் பயணம் வெற்றிதான்' என்று கருதினாள்.

ஆனால் சேகரன மிகவும் சோர்ந்திருந்தான். வழக்கம்போல் பிரயாண வேடிக்கைகளை அவன் அவளிடம் வர்ணிக்கவே இல்லை. அதனால், அவன் பிரயாணத்தினால் சோர்ந்திருக்கிருன் என்பது அவளுக்கு விளங்கவில்லை.

அவன் தானாகவே ஏதாவது பேசுவான் என்று எதிர் பார்த்தாள்.

திங்கட்கிழமையன்று சாப்பிடும்போது கூட அவன் குழந் தைகளிடம் மட்டுமே பேசினான். பம்பாயைப் பற்றி ஒரு வார்த்தை எடுக்கவில்லை.

பள்ளிக்கூடம் போவதற்காக அவன் உடையணிந்து தயா ராக நிற்பதைக் கண்டதும், அவள் மெதுவாக, "பம்பாயில் ஒன்றும் ஏற்பாடு ஆகவில்லை போல் இருக்கிறது?" என்றாள்.

"ஆகாமலென்ன? இந்தா, இந்தச் செக்கை வாங்கிக்கொள். வந்ததுமே உன்னிடம் கொடுக்க மறந்துவிட்டேன்" என்று சொல்லி அசட்டையாகச் சட்டைப் பையிலிருந்து செக்கை எடுத்தான்.

மஞ்சு செக்கைப் பார்த்துவிட்டு ஆனந்தத்தோடு, "அப்படி யானால் உங்கள் கதை எப்போது வெள்ளித்திரையில் வரும்?" என்று கேட்டாள்.

"இப்போது அது என் கதையாக இல்லை, மஞ்சு!"

"பின்னே? நீங்கள் சொல்வது புரியவில்லையே?"

"அது டைரெக்டர் பெயரால் திரையில் வரும்! நான் என் கற்பனைக் கன்னியை விற்றுவிட்டு வந்திருக்கிறேன், மஞ்சு!" என்று சொல்லிச் சேகரன் பெருமூச்சு விட்டான்.

## 8

பம்பாயிலிருந்து நாகபுரிக்குத் திரும்பி வந்தபொழுது வண்டியில் நிகழ்ந்த ஒரு சம்பவத்தை மட்டும் சேகரன் மஞ்சு விடம் சொல்லவே இல்லை.

தேஸாயைப் பேட்டி கண்டு முடிந்ததும் அவன் தாதர் ஸ்டேஷனுக்குப் புறப்பட்டான். சந்திரன் பிரயாணச் செல

வுக்காக அவனிடம் முப்பது ரூபாய் கொடுத்தார். தமது காரிலேயே அவனை ஸ்டேஷனுக்குக் கொண்டுவிட்டார்.

சந்திரன் அவனுக்கு விடை கொடுத்தபோது, "எங்கள் ஐயா, குஜராத்தியராக இருந்தாலும் பிற மாகாணத்தவருடைய அறிவையும் கற்பனையையும் அவர் போற்றுவது உண்டு. கதாசிரியாகளிடமும் நடிக நடிகைகளிடமும் அவரைப் போலத் தாராளமாக எந்தச் சினிமாக் கம்பெனியும் நடந்து கொள்வதில்லை" என்றார்.

"உங்கள் ஆபீஸ் கோட்டையில் இருக்கும்போது, என்னை நீங்கள் பேசுவதற்கு ஏன் இந்த இடததுக்கு அழைத்தீர்கள்?" என்று சேகரன் கேட்டான்.

"எங்கள் ஆபீஸ் கோட்டையில் இருப்பது வாஸ்தவம். ஆனால் ஏதாவது முக்கியமான நாசுக்கான விஷயம் பேசுவதாக இருந்தால், ஐயா தமது பங்களாவுக்கே யாரையும் அழைப்பது வழக்கம்."

இதைச் சொன்னதும் சந்திரனுடைய முகம் மலர்ந்தது. அவர் மேலும் தொடர்ந்து, "அவருடைய கண்டிப்பான சுபாவத்தைப் பற்றியும், குறித்த மணிப்படி வேலை செய்வது பற்றியும் நீங்கள் நிறையக் கதைகள் கேட்டிருபபீர்கள். ஆனால் அவர் தம்முடைய இனிமையான பேசசினாலும நடவடிககையினாலும் மனிதர்களை வசமாக்கிக்கொள்வது ஒரு தனிக் கலை" என்றார்.

சநதிரன் சொல்வது சரி என்றுதான் சேகரனுக்கும் பட்டது. தேஸாயின் செயல் திறமையையும் தாராளத் தனத்தையும் பற்றி, பம்பாயில் உள்ள வாரப் பத்திரிகைகள் எல்லாம் தமுக்கு அடிப்பது சும்மா அல்ல என்பதை அவன் உணர்ந்தான்.

காரிலிருந்து தாதர் ஸ்டேஷனில் இறங்கிய பிறகு, அவன் லேடி ஜம்ஷெட்ஜி ரோடில் இருந்த 'வெண்ணிலா' மாதப் பத்திரிகையின் காரியாலயத்துக்குப் போனான். அவன் ஏற்கனவே வெண்ணிலா ஆசிரியருக்குக கடிதம எழுதி, தான் அஙகே சொந்த வேலையாக வரப்போவதைத் தெரிவித்திருந்தான்.

விசாலமான சாலையில் ஒரு பெரிய கட்டிடத்தின் மேல் மாடியில ஒரு சிறு இருட்டு அறையில் அந்தப் பிரசித்த மாதப் பததிரிகையின் குடித்தனம் நடந்து வந்தது. அறையின் ஒரு பககததில ஆசிரியருடைய மேஜை இருந்தது. அதைச் சுற்றி நாலைந்து கிர்லோஸ்கர் நாற்காலிகள், பேட்டி காண வருகிற வர்களுககாகப் போட்டிருந்தன.

ஆசிரியரின் மேஜையில் பத்திரிகைகளின் குவியலும், சிகரெட் சாம்பல் நிறைந்த் கிண்ணமும், பாதி காலியான காபித் தம்ளரும், புரூப் சுற்றிய கற்றைகளும், கடிதங்களின் கட்டும் இருந்தன. நீல மூடி போட்ட மின்சார விளக்கின் வெளிச்சத்தில் அவர் தம் கையிலிருந்த புரூப் மீது பார்வையை ஓட்டினார். அவருடைய மூக்கின் ஒரு துவாரத்திலிருந்து சிக ரெட் புகை வளையங்கள் சுழன்று வெளிவநதன.

அவருக்கு எதிரே இருந்த மேஜையருகில் டிப்டாப்பாக உடை அணிநத ஓர் இளைஞன் ஏதோ அவசரமாக டைப் செய்து கொண்டிருந்தான். பக்தர்கள் வேண்டுதலுக்காகத் தேவிக்குச் சமர்ப்பித்த சிறு தொட்டில்கள் கோயில் மண்டபத்தில் தொங்குமே, அதுபோல ஆசிரியரின் பின்னல் சுவரில் பல பத்திரிகைகளின் பைல்கள் தொங்கின. 'வெண்ணிலா'வின் தீபாவளி மலரில் மேலட்டையில் அச்சிட்ட லீலா தேஸாயின் படம் பதித்த ஓர் அழகான காலண்டர் அந்த டைப்பிஸ்டின் வலது பக்கத்தில் மாட்டி இருந்தது. சுவரிலிருந்த அலமாரி களில் மட்டுமின்றி, கீழே தரையிலும புத்தகங்களும் பத்திரிகை களும் காகிதஙகளுமட பரவி இருந்தன.

சேகரன் உள்ளே வந்ததும் ஆசிரியர் அவனை அஞ்சலி செய்து வரவேற்று, "என்ன, நீங்கள் வந்த வேலை முடிந்ததா? இன்றைய மெயிலிலேயே போக வேணடுமா?" என்று கேட்டார்.

"ஆமாம், வேலை முடிந்ததும் முதலில் இங்கேதான் வநதேன்."

"இன்று சாயந்தரமே போக வேண்டுமா?"

"ஆமாம; ஊரில் நிறைய வேலை இருக்கிறது."

சேகரனுடைய இந்தப் பதிலை ஆசிரியர் கவனித்துக் கேட்க

வில்லை. எதிரே இருந்த இளைஞனைப் பார்த்து, "பக்கத்திலே ஈரானி ஹோட்டலுக்குப் போய் டீயும் கொஞ்சம் டின்னர் பிஸ்கட்டும் வாங்கி வாப்பா. பையனையும் கூட அழைத்துப் போ. அவன் தனியாய்ப் போனால் நேரமாகும் என்றுதான் உன்னையும் அனுப்புகிறேன்" என்றார்.

பிறகு அவர் சிகரெட் பெட்டியைச் சேகரனிடம் நகர்த்திய வண்ணம், "உங்கள் கட்டுரைகளைப் பற்றி வாசகர்களுககு மிகவும் நல்ல அபிப்பிராயம் இருக்கிறது. மாதந்தோறும் உங்கள் கட்டுரையோ கதையோ வெளியானதும் எங்கிருந் தாவது கடிதங்கள் வராமல் இருப்பதே இல்லை" என்றார்.

சேகரன் சிகரெட்டை வநதனத்துடன் மறுத்துவிட்டு, "நடு நடுவே எனக்கும் கடிதங்கள் வருகின்றன" என்றான்.

"இந்தக் கடிதங்களில் தேர்ந்தெடுத்த சிலவற்றை 'வாச கர்களும் எழுத்தாளர்களும்' என்ற தலைப்பில் வெண்ணிலா வில் வெளியிடப்போகிறேன். இது நல்ல யோசனைதானே? ஆனால் இந்தக் கடிதங்களில் உள்ள கேள்விகளுக்கும் சந்தேகங் களுக்கும் உங்களைப் போன்ற எழுத்தாளர்கள் பதில எழுதி எங்களுக்கு உதவ வேண்டும். வாசகர்கள் தம்மைப் பற்றி உண்மையில் என்ன நினைககிறார்கள் என்பது எழுத்தாளர் களுக்குக் கட்டாயம் தெரிய வேணடும்; அதுபோல வாசகர் களின் ஐயங்களைப் போக்கி, அவர்களின் அறிவைத் தூண்டு வதும் எழுத்தாளர்களுடைய கடமை."

தமமுடைய இந்தச் சிந்தனையை வெளியிட்ட பிறகுதான் சேகரன் சிகரெட் எடுத்துக் கொள்ளாததை ஆசிரியர் கவனித் தார். "உஙகளுக்குச் சிகரெட் பிடிக்காதோ? இது விசித்திர மாகத்தான்இருக்கிறது! இந்தக் காலத்து எழுத்தாளன் என்றால் சிகரெட்டும் பீரும் இல்லாமல் பொழுது போகாதே!" எனறு சொல்லி அவர் தமக்குள் சிரித்துக்கொண்டார். பின்பு தமது கையில் இருந்த சிகரெட்டின் தழல், விரலைச் சுடுவதைக கண்டு அதைச் சடக்கென்று கிண்ணத்தில் எறிந்தார். அவருடைய வாய் மட்டும் ஓயவில்லை.

"கலையைப் பற்றிய உங்கள் புதிய ஆராய்ச்சிகளை இங்கே நிறையப் பேர் ஆவலோடு படிக்கிறார்கள். கலையை அதன அடி

வேர் வரைக்கும் பெயர்த்துப் பார்த்து நுணுக்கமாக ஆராய்ந்த வர்கள் எத்தனையோ பேர் இங்கே பம்பாயில் இருக்கிறார்கள். ஆனால் நாகபுரியைப் போன்ற ஓர் இடத்தில் கலையின் கரையைக் கண்ட ஓர் எழுத்தாளர் இருப்பது இங்கு எல்லாருககுமே ஆச்சரியமாகத்தான் இருக்கிறது!'' என்றார்.

சேகரன் ஒன்றுமே பதில் பேசவில்லை. கடந்த ஆறு மாதங்களாக அவனுடைய கட்டுரைகளுக்கும் கதைகளுக்கும் சம்மானம் வரவேண்டியிருந்தது. ஆனால அவன வந்த நிமிஷத்திலிருந்து ஆசிரியா ஓயாமல பிரசஙகம செயததனால் பாககியை எப்படிக் கேட்பது என்று அவனுக்கு விளங்கவில்லை.

''அடடா! உங்களுக்குக் காண்பிப்பதற்கென்றே ஒரு கடிதத்தை எடுத்து வைத்தேன்; கொடுக்க மறந்துவிட்டேனே!'' என்று சொல்லி ஆசிரியர் மேஜை டிராயரை இழுத்து ஒரு கவரை எடுத்துச் சேகரனிடம் கொடுத்தார். வெணணிலா தீபாவளி மலரில் வெளிவந்த சேகரனுடைய கட்டுரையைப் பற்றி அதில் புகழ்ந்து எழுதியிருந்தது. கடிதம் சின்னதுதான். அதன் அடியில் 'ரஜனி' என்ற கையெழுத்தைப் பார்த்ததும் சேகரனுக்கு மெய் சிலிர்த்தது.

ஆனால் அவன் தன் உணர்ச்சியை வெளியில் காண்பிக்காமலே, ''இவர் உங்கள் பத்திரிகையில் எப்பொழுதாவது எழுதுகிறாரோ?'' என்று கேட்டான.

''ஆகா! போன இரண்டு வருஷங்களாகத் தவறாமல் வெண்ணிலாவில் எழுதுகிறாரே!'' என்று ஆசிரியர் புன்சிரிப்போடு சொன்னார்.

''இவர் பெயரைப் பார்த்ததாக எனக்கு ஞாபகம் இல்லையே?''

''அதுவா? அவர் புனைபெயரில் எழுதுகிறார்.''

''அவர் என்ன எழுதுகிறார் என்று தெரிந்தால் எனக்குக் கேட்க மகிழ்ச்சியாக இருக்கும்.''

''உங்களிடம் சொல்வதற்கு என்ன? 'முத்து' என்ற புனைபெயரில் அவர் எழுதுகிறார். உங்களுக்கு அவரைத் தெரியுமோ? இப்பொழுது அவர் நாகபுரியில்தான் இருக்கிறார்.''

''சமீபத்தில்தான் அவரைப் பற்றித் தெரிந்துகொள்ள

நேர்ந்தது. ஆனால் அவர் எழுதுகிறார் என்பது அப்போது எனக்குத் தெரியாது. அவருடைய நடையே தனியாக இருக்கிறது. வெண்ணிலாவில் வெளிவந்த அவருடைய உருவகக் கதைகளையும் வசன காவியங்களையும் நான் படித்திருக்கிறேன். ஆனால் அவற்றை ஒரு பெண் எழுதியிருப்பாள் என்று நான் நினைக்கவே இல்லை. அவருடைய எழுத்தில் ஒரு வகையான வேகமும் வெறியும் கலையழகும் இருக்கின்றன.''

''அவருடைய தனிப் பண்பே அதுதான். உங்களுடைய கதைகளைப் போலவே அவருடைய கதைகளையும் வாசகர்கள் ரசிக்கிறார்கள் ''

அதற்குள் அந்த டைப்பிஸ்டும் அவன் பின்னால் பையனும் மூன்று கப் டீயும் பிஸ்கட்டுகளும் எடுத்துக்கொண்டு வந்தார்கள். ஆசிரியர், சேகரனிடம் ஒரு கப் டீயைக் கொடுத்துவிட்டு, ''இவர் எங்கள் டைபிஸ்ட் சேகர். இவரும் நல்ல கவி. இப்போதெல்லாம் வாசகர்களுக்குச் சிறுகதை, கட்டுரை, கவிதை என்றாலே அலுத்துப் போய்விட்டது. ஏதாவது ஒரு கட்டுரையின் முடிவில் இடம் காலி இருந்து அதற்கு உரிய விளம்பரம் கிடைக்காவிட்டால், அப்பொழுதுதான் நான் கவிதைக் கட்டைப் பிரித்துப் பார்ப்பது வழக்கம். ஏதாவது ஓர் அழகிய நீதியோ கவிதைத் துணுக்கோ கிடைத்துவிட்டால் அங்கே வெளியிடுவேன். ஆனால் இந்த ரஜனியின் வசன காவியங்களும் உருவகக் கதைகளும் மட்டும் ஜனங்களுக்கு மிகவும் அதிகமாகப் பிடிக்கின்றன'' என்றார்.

''அவருடைய உண்மையான பெயர் வாசகர்களுக்குத் தெரியாதே.''

''தெரியாது. வெண்ணிலாவைத் தவிர அவர் வேறு எதிலும் எழுதுவதே இல்லை. அவர் கடிதத்தை நான் உங்களுக்குக் காண்பித்ததற்குக் காரணம், உங்களால்தான் அவர் வெண்ணிலாவில் எழுத ஆரம்பித்தார் என்பதுதான்.''

டீயைக் குடித்துவிட்டுக் கோப்பையைக் கீழே வைத்த சேகரன், ''அது எப்படி?'' என்றான்.

''ஒன்றரை வருஷங்களுக்கு முன்னால் என்று நினைக்கிறேன்; இந்தூரிலிருந்து உங்கள் கட்டுரையைப் புகழ்ந்து

அவர் ஒரு கடிதம் எழுதியிருந்தார். அப்போது வெண்ணிலா வுக்கு ஏதாவது எழுதும்படி அவரை வேண்டினேன். முதலில் அவர் மறுத்தார். பிறகு நான் நிறையக் கடிதங்கள் எழுதி யதும், தம்முடைய பெயரை எங்கும் வெளியிடக் கூடாதென்று என்னிடம் வாக்குறுதி வாங்கிக்கொண்டு, 'பந்தமும விடுதலை யும்' என்ற அழகிய உருவகக் கதையை எங்கள் புது வருஷ மலருக்கு அனுப்பினார்."

"ஆமாம், அந்தக் கதை எனக்கு ஞாபகம் இருக்கிறது; கற் பனையும் நடையும் புத்தம்புதியனவாக இருந்தன. அப்படியானால் இன்று உங்கள் வாக்குறுதியை மீறிவிட்டீர்களே!"

"வேண்டுமென்றுதான் அப்படிச் செய்தேன். நாகபுரிககுப் போவதாக அவர் எனககுத் தெரிவித்ததுமே, உஙகளுக்கு அவரைப் பற்றி எழுத வேண்டும் என்று நினைத்திருந்தேன். இன்றைக்குத்தான் அந்தச் சந்தர்ப்பம் கிடைத்தது" என்று கூறி ஆசிரியர் முறுவல் பூத்தார்.

சேகரன் பேசாமலே இருந்தான். இவ்வளவு ஆனந்த மான சம்பாஷணைக்குப் பிறகு, பணத்தைப் பற்றிப் பேச அவ னுக்குச் சங்கடமாக இருந்தது. அதற்குள் ஆசிரியரே பேச்சை மீண்டும் தொடஙகினார். "அடுதத ஜூலையிலிருநது ஒரு தொடர் கதை ஆரம்பிக்கலாம என்று நினைககிறோம். இப்போதெலலாம் ஜனங்களுக்குத் தொடர்கதை தவிர வேறு எதுவும் வேண்டி யிருப்பதில்லை. நீங்கள் வெண்ணிலாவில ஒரு தொடர்கதை எழுதுங்களேன்?"

இந்தக் கேள்வியைக் கேட்டதும் உடலில் காயம்பட்ட ஒரு பகுதியில் திடீரென்று எதிர்பாராதபடி அடிவிழுந்தால் வேதனை உண்டாகுமே, அதைப்போன்ற வருத்தம் சேகரனுக்கு உணடா யிற்று. அவனுடைய பையில் தேஸாய் சற்று நேரம முன்பு திருப்பிக்கொடுத்த சினிமாக் கதை இருந்தது. அதைக்கொண்டு ஒரு நாவல் எழுதப்போகும் யோசனையை அவன் இரண்டு மணிநேரம் முன்பு சொல்லியும் இருந்தான்.

ஆனால் இப்போது அவன் ஆசிரியரிடம், "அது சீக்கிரத்தி லேயே முடியும் என்று எனக்குத் தோன்றவில்லை. நாவல்கள் நான் எழுதத்தான் போகிறேன். ஆனால் அதைப்பற்றி

இன்னும் நான் சிந்திக்கவே இல்லை'' என்றான்.

''இன்னும் ஐந்தாறு மாதம் இருக்கிறதே! அதற்குள் கதையைத் தீர்மானித்து, நீங்கள் சுலபமாக எழுதலாம். வெண்ணிலாவில் உங்கள் முதல நாவல் ஆரம்பமாகட்டும்!''

சேகரன் வாயைத் திறக்கவில்லை.

ஆசிரியர் ஏதோ யோசனையில் ஆழ்ந்தவராக, ''உங்கள் சம்மானத்தைப்பற்றி நீங்கள் துளியும் சந்தேகப்பட வேண்டாம். மாதநதோறும் பத்தாம் தேதி, இருபது ரூபாய் மணியார்டரில் உங்களுக்கு வந்து சேர்ந்துவிடும். கதை தொடரும் வரையில் இது தவறாது'' என்றார்.

''ஆமாம், அதைத்தான் நான் கேட்பதாக இருந்தேன். இன்று நீங்கள் எனகசு ஏதாவது பணம் கொடுக்க முடியுமா?'' என்று அந்த நூலைப் பிடித்துக்கொண்டு சேகரன் ஆத்திரத்தோடு கேட்டான்.

''அது எனக்கு ஞாபகம் இருக்கிறது. உங்களுக்கு ஆறு மாதமாகப் பணம் அனுப்பவில்லை. இதோ உடனே இந்தச் செக் கொடுககிறேன். இப்போது வியாபாரமெல்லாம் மந்தமாக இருபபதனல் விளம்பரப் பணம் நாலு மாதமாக வசூலே ஆகவில்லை! அதனால்தான் உங்களுக்குச் சம்மானம் அனுப்ப முடியவில்லை. ஜனவரி கடைசிககுள் முழுப் பாக்கியையும் அனுப்பிவிடுகிறேன். இந்தத் தொடர்கதைக்கு என்ன செய்யப் போகிறீர்கள்?''

''அது இப்பொழுதே ஒன்றும் நிச்சயமாகச் சொல்ல முடியாது. பிப்ரவரி வாக்கில் தெரிவிக்கிறேன்.''

இருபது ரூபாய்க்கு அவர் கொடுத்த செக்கைச் சட்டைப் பையில் வைத்துக்கொண்டே சேகரன் நாற்காலியிலிருந்து எழுந்தான். ''சரி, நான் போய் வரட்டுமா? எனக்கு இன்னும் சில சாமான்கள் வாங்க வேண்டும்'' என்றான்.

''தாதர் ஸ்டேஷனில்தானே வண்டி ஏறப்போகிறீர்கள்? கூட்டம் இருந்தால் இடம் கிடைப்பது கஷ்டம். ரஜனியம்மாளுக்கு என் நமஸ்காரத்தைத் தெரிவியுங்கள். தொடர்கதை ஞாபகத்தில் இருக்கட்டும்; மறக்க மாட்டீர்களே?''

ஆசிரியர் அவனை வாசல்வரைக்கும் வந்து வழியனுப்பி

ஞர். பிறகு இரண்டு மணி நேரத்திற்குள் சேகரன் குழந்தைகளுக்கு வேண்டிய பொருள்களை வாங்கிக்கொண்டான்.

தனக்குத் தெரிந்த இரண்டொரு நண்பர்களைப் பார்த்தான். மெயில் வரும நேரத்துக்கு ஸ்டேஷனுககு வந்து சேர்ந்தான்.

பத்திரிகாசிரியர் சொன்னது உண்மையாகி விட்டது. ஐந்தாறு நாளில் கிறிஸ்துமஸ் பண்டிகை. ஆதலால் மெயிலில் ஒரே கூட்டம். சேகரனிடம் சாமான் மிகவும் குறைவாகத் தான் இருந்தது. ஆனல் வண்டிக்குள் எங்கும் மனிதர்களின் முகஙகளே நிறைநதிருநதமையால, அவன் உள்ளே புகுவதே சிரமமாக இருந்தது. கோடியிலிருந்த ஒரு பெட்டியில் கூட்டம் சிறிது குறைவாக இருந்தது ஆனல் கல்கத்தாவுக்குப் போகும் ஸேட், கதவின் பககததில மிட்டாய்க் கூடை முதல கனமான நகைகள் பூண்ட தன் மனைவி வரைககும பலவகைப் பண்டங்களைப் பரப்பி வைத்துவிட்டான். ஒன்றன்மேல் ஒன்ருக அடுக்கிய எஃகுப் பெட்டிகளின்மேல் தான் வீற்றிருநது வண்டிககுள் வருகிறவர்களை அவன தடுத்துக்கொண் டிருநதான்.

சேகரன் வணடியில் ஏறியபோது, "இங்கே இடமில்லை. வேறு பெட்டிக்குப் போ!" என்று அவன் கூவிஞன்.

ஆனல் அவனுடைய கூச்சலைப் பொருட்படுத்தாமலே சேகரன் வேகமாகக் கதவைத் தள்ளியதும் அது பெட்டிகளை இடித்துக்கொண்டு போயிற்று ஸேட் ஏதோ முணுமுணுத்துக் கதவை மறுபடி சாத்துவதற்குள் சேகரன் வண்டிக்குள் நுழைந்து அவனெதிரே நின்ருன்.

பக்கத்தில் இருந்த பெஞ்சுகளில் எதிரெதிராக இரண்டு இளைஞர்கள் கால் நீட்டிப் படுத்திருந்தார்கள். அவர்கள் காலடியில் இருந்த சிறிய இடத்தில் இரண்டு மூன்று பேர் அடைந்து கிடந்தார்கள். அதற்கு அடுத்த பெஞ்சியில் ஒரே ஒரு படுக்கை விரித்திருந்தது. மறு ஓரத்தில் இருந்த பெஞ்சில் ஏழெட்டுப் பேர் ஒய்யாரமாக வெயில் காய்ந்துகொண்டு சாய்ந்திருந்தார்கள். பெஞ்சுகளுக்கு நடுவிலிருந்த வழியிலெல்லாம் சாமான்கள் அடைத்திருந்தன. இரண்டு கதவண்டையிலும் நாலைந்து பேர்கள் நின்ருர்கள். இரண்டு பக்கத்திலும் இருந்த பலகைகளில் நாலைந்து பேர் உடம்பை ஒடுக்கிக்கொண்டு

தூங்குவது போலப் பாசாங்கு செய்தார்கள். அங்கும் சில சாமான்கள் இருந்தன.

சேகரன் உள்ளே புகுந்தவுடனே வண்டி புறப்பட்டுவிட்டது. சற்றுத் தள்ளிப்போனால் தனக்கு இடம் கிடைக்கும் என்று அவன் நினைத்தான். ஆனால் அந்த ஸேட் அந்தச் சாமான்களைப் பரப்பியிருந்த காட்சியையும் அதற்குக் காவல் தெய்வமாகத் தன் மனைவியை உட்கார வைத்திருந்ததையும் பார்த்த பிறகு அந்தச் சாமான்களையும் அந்தத் தெய்வத்தையும் தாண்டாமல் அப்புறத்தில் செல்வது சேகரனுக்குச சாத்தியமென்று தோன்றவில்லை.

ஆயினும் சேகரன மிகவும் துணிச்சலோடு ஸேட்டைத் தனக்கு வழி விடும்படி கேட்டுக்கொண்டான்.

அவன் வேகமாகக் கதவைத் தள்ளியதனால் அது பெட்டிகளின்மேல் மோதி, பூகம்பம் போன்ற நிலைமையை யுண்டாக்கியதை ஸேட் மறந்துவிடவில்லை. இந்தக் காட்சி முழுவதையும் ஆவலோடு பார்த்துககொண்டு இருந்த தன் மனைவியிடம் சென்று அவளிடம் ஸேட் ஏதோ காதோடு சொன்னான். அவள் நீட்டியிருந்த தன் காலை மடக்கிக்கொண்டாள். சேகரன் பெஞ்சியின் மேல்பக்கத்தில் போய்ச் சேர்ந்தான்.

ஜன்னலருகில் பெஞ்சில் படுத்திருந்த இளைஞன் அவனைக் கண்டதும் அவசர அவசரமாக எழுந்து, "வாருங்கள், இப்படி உட்காருங்கள். என் படுக்கையில் உட்கார்ந்தாலும் பரவாயிலலை" என்றான்.

தன் சாமான்களைப் பெஞ்சியின் அடியில் ஒழுங்காக வைத்துவிட்டுச் சேகரன் அந்தப் படுக்கைமேல் உட்கார்ந்தான். அந்த இளைஞன் சிகரெட் பெட்டியை எடுத்துத் தான் ஒரு சிகரெட் எடுத்துக்கொண்டு சேகரனிடம் ஒன்று கொடுத்தான். ஆனால் சேகரன் அதை மறுத்துவிட்டான்.

அப்பொழுது வண்டி மிகவும் வேகமாக ஓடியது. சேகரனுடைய அமைதியற்ற மனம் அதையும்விட வேகமாக ஓடியது.

வண்டியில் வந்து உட்காரும் வரைக்கும் அவன் மனத்துக்கு ஏதாவது ஒரு தடை இருந்துகொண்டே இருந்தது. வண்டியில் உட்கார்ந்த பிறகு இனி மறுநாள் காலை ஒன்பது மணி

வரைக்கும் அந்தக் கலங்கிய மனத்தைத் தவிர அவனுக்கு வேறு கூட்டாளி யாரும் இல்லை. அந்த மனத்தின் போககுககு எவ்விதமான தடையும் இல்லை.

ரெயில் வண்டியில் தன்னந்தனியே பிரயாணம் செயயும் போது கிடைக்கும் தனிமை இருககிறதே, அது ஓர் விந்தையான அநுபவம். வண்டி வேகமாக ஓடுகிறது. வெளியிலுள்ள சரா சர உலகம் நம கண்ணெதிரே விர்ரென்று போகிறது; நம்மைச் சுற்றிப் பல வகையான புது மனிதர்கள் தங்கள் இன்பதுன்பங் களைப் பேசுகிறார்கள். ஏலககடைபோல்,வண்டியில் சாமான்கள் இங்குமங்குமாகச் சிதறிக் கிடக்கின்றன. சக்கரங்கள் கடகட வென்று ஓடுவதால் உடல் சுகமாக அசைந்தாடுகிறது. இந்த விசித்திரமான நிலையில், வீட்டில் நமக்கு எளிதில் கிடைகக முடியாத ஒரு தனிமை கிடைக்கிறது. எப்பொழுதும் ஒருமுக மாகக் குவியாத மனங்கூட, இந்த நிலைமையில், தன்னோடு தான் ஒன்றிவிடுகிறது. ஓட்டை உடைசல் போட்டு வைத்திருக் கும் இருட்டு அறையில் இன்னும் கண் திறககாத தன் குட்டி களை நாவினுல் தடவியும் பாலூட்டியும் கொஞ்சியும் நிச்சிநதை யாகப் பாதுகாக்கும் பெண் பூனை போல, நமது மனமும் ஆழ்ந்த குகைக்குள் சென்று அங்கே மறைந்திருககும் உரு வற்ற சிந்தனைகளோடும், சிறிதளவு அநுபவித்த உணர்ச்சி களோடும் குலாவி விளையாடுகிறது.

பம்பாயில் அந்த அவசரப் பிரயாணத்தில் அவனுக்கு எல்லாவற்றையும்விட அதிகமாக மன அதிர்ச்சியைக் கொடுத்த விஷயம், வெண்ணிலா ஆசிரியர் ரஜனியைப் பற்றிக் கூறிய செய்திதான்.

ரஜனியை அவன் ஒரே ஒரு தடவைதான் பார்த்திருந் தான். ஆனுல் மனம் தவிக்கும்போது ஒரு பாட்டின் அழகான பல்லவியோ, அல்லது நிலவிலே பார்த்த ஓர் அழகிய காட் சியோ மனத்தில் நன்கு பதிந்துவிடுவதுபோல அவளுடைய முதற் சந்திப்பின் நினைவு – அந்த நினைவின் அறிய முடியாத உணர்ச்சி – அவன் நெஞ்சிலே நிரந்தரமாகப் பதிந்துவிட்டது.

ஆனுல் இன்று அந்தச் செய்தியை அறிந்ததிலிருந்து, அந்த நினைவு பல அழகிய உருவம் எடுத்துத் தன் மென்மையான

இன்னிசையால் அவன் மனத்தை மயக்கியது. நீலத்தாமரைகளில் இனிய மென்மணம் வீசும் மகரந்தப் பொடிமீது பலநிறச் சிறகுகளோடு ஓடிவரும் பொன்வண்டுகளைப் போல, ரஜனியைப் பற்றிய, இனம் தெரியாத, நெகிழும் பல உணர்ச்சிகள் அவனுடைய மனத்தில் ரீங்காரம் செய்தன.

பள்ளிக்கூடத்தில் ஓயாமல் வேலையில் மூழ்கியிருந்த தனாலேயோ அல்லது வீட்டில் மஞ்சுவுடனேயே இருந்த தனாலேயோ இன்று வரைக்கும் ரஜனியின் நினைவை அவன் ஒருபொழுதும் தீவிரமாக உணர்ந்தது இல்லை. அதிகாலையில் கண்டதும், லேசாக ஞாபகம் வருவதுமான ஒரு கவர்ச்சிகரமான சம்பவம் பல நாள் கழித்து எப்போதாவது மனத்தில் எழுவது போல, ஒரு சமயம் அந்தச் சம்பவம் திடீரென்று அவன் ஞாபகத்துக்கு வரும். அந்த ஞாபகத்தினால் ஒரு கணம் அவன் மனம் கலங்கும். ஆனால் இன்று ரெயில் வண்டியில் கிடைத்த இந்தத் தனிமையிலும் சிந்தனையுலகிலும் அவன் மனம முழுவதையும் அவள் திடீரென்று சூழ்ந்துகொண்டாள். தான் சிருஷ்டித்த கற்பனை இலக்கியம் சிதைக்கப்பட்டதைப் பற்றியோ, தன் வழி மேல் விழி வைத்து ஆவலோடு எதிர் பார்க்கும் மஞ்சுவைப் பற்றியோ, அப்பா பம்பாயிலிருந்து நமககாக எனன என்ன வாங்கி வருவாரோ என்று மனக் கோட்டை கட்டும் குழந்தைகளைப் பற்றியோ, ஒருவித எண்ணமும் அவனுக்குத் தோன்றவில்லை. அவன்மனத்தின் ஒவ்வோர் அணுவையும் ரஜனி வியாபித்துக்கொண்டாள்.

'முத்து' என்ற பெயரால் வெண்ணிலாவில் கடந்த இரண்டு வருஷங்களாக வெளியான ஒவ்வோர் வரியையும் அவன் படித்திருந்தான். அந்த வரிகளில் புலப்பட்ட உன்னதமான இனிய உணர்ச்சி அலைகளில் வீசும் வடிவம் இவ்வளவு அழகாக இருக்கக் கூடும் என்பலதயும், தன்னுடைய குணங்களிடம் அது இவ்வளவு ஈடுபட்டிருககக் கூடும் என்பதையும் அவன் நினைககவே இல்லை.

இதற்கு மாறுக, ரஜனியின் வசன காவியங்களிலும் உருவகக கதைகளிலும் தோன்றும் கற்பனை வேகத்தையும், தீப் பொறி போன்ற ஒளியையும் கண்ட அவன், "இவ்வளவு

கற்பனையும் கொடுமையும் நிறைந்த காவியத்தைப் பாடும் இந்த வடிவம் எப்படி இருக்குமோ? அவளுடைய உள்ளம் வெள்ளை வெளேரென்ற ஊற்றுப் பொங்கும் அருவியைப் போல அன்பு நிரம்பியிருக்குமா, அல்லது ஒளிக் கம்பிகளை வீசுகிற வைரத்தைப் போலக் கடுமையாக இருக்குமா? அவளுடைய வசன காவியத்தில் இனிமை இருக்கிறது. ஆனால் அது வெண்மதியின் கிரணங்களிலிருந்து பொழியும் வறண்ட அமுதத்தைப் போன்றது. அந்த அமுதம் உடலைக் குளுமைப் படுத்தினாலுங்கூட அந்த வறண்ட குளிர்ச்சியினால் மனத் தவிப்புச் சிறிதும் தணிவதில்லை என்று நினைத்துப் பார்த்த துண்டு. முத்துவின் காவியங்களிலும் கதைகளிலும் இருந்த உணர்ச்சியலை அவனுக்குப் பெருமபாலும் கானல் நீரா கவே தோன்றியது. மிகவும் மோகனமாகவும் ஒளி பொருந்திய தாகவும் இருந்தும், அதில் துளியும் இருப்பதாகத் தெரிய வில்லை.

ஆனால் அன்று இரவு அவள் கண்ணில் அவன் கண்ட உணர்ச்சியிலும் ஆவலிலும் ஈரமும் இரக்கமும் நிரம்பி யிருந்தன.

அதாவது, அவளுடைய காவியத்திலும் கதையிலும் காணப்படும் இந்த வறண்ட அழகு – சிலை போன்ற மழ மழப்பும் கடுமையும் வாய்ந்த அழகு – எங்கிருந்து வந்தது? அவளுடைய மனத்தின் எந்தத் தனிப் பண்பிலிருந்து இது தோன்றியிருக்கும்?

இந்தச் சிந்தனைகளில் சேகரன் ஆழ்ந்திருந்தபொழுது, படுக்கையில் உட்கார்ந்து புகை குடித்துக்கொண்டிருந்த அந்த இளைஞன, "உங்கள் பெயர்தானே சேகரன்? உஙகள் படத்தை நான் எங்கோ பார்த்திருக்கிறேன்" என்றான்.

"ஆமாம்" என்றான், திடுக்கிட்ட சேகரன். பின்பு ஏதாவது கேட்க வேண்டுமே என்று, "உங்களைப் பற்றிச் சொல்ல வில்லையே?" என்றான்.

"என் பெயர் தினகரன். நான் மாரிஸ் காலேஜில் படித்த போது உங்களைப் பார்த்தது ஞாபகம் இருக்கிறது. இப்போது நான அகோலாவில் வக்கீல் தொழில் செய்கிறேன்."

"உங்கள் பெயரைப் படித்தது எனக்கும் ஞாபகம் இருக்கிறது."

"ஆமாம், நான் பொது இயக்கங்களில் பங்கெடுத்துக் கொள்கிறேன. எங்களைப் போன்ற வக்கீல்களுக்குக் கோர்ட்டில் அதிக வேலை கிடையாது" என்றுன் அவன சிரித்துக் கொணடே.

"நீங்கள் குடியானவர் இயக்கத்தில்தானே சேர்ந்திருக்கிறீர்கள்?"

"ஆமாம், வர்ஹாட் பிராந்தியத்தில் இன்று குடியானவர்கள் படும் வேதனையைச் சொல்லி முடியாது. இந்த நிலையில் குடியானவர் இயக்கம் இன்றே நாளையோ தீவிர உருவம் கொள்ளாமல் இருக்கவே முடியாது."

"காங்கிரஸ் தலைவர்கள் இந்த இயக்கத்தை அவ்வளவாக ஆதரிப்பதாகத் தெரியவில்லையே!"

"என்ன இப்படிச் சொல்லுகிறீர்களே; குடியானவர் சார்பில் அவர்கள் எங்களை மிரட்டினார்கள். அவர்கள் இந்த இயக்கத்தில அநுதாபம் கொண்டிருப்பதற்கு வேறு என்ன அத்தாட்சி வேண்டும்? எங்கள் செயல் முறைதான் அவர்களுக்குப் பிடிக்கவில்லை" எனறு தினகரன் கிண்டலாகச் சிரித்துக் கொண்டே சொன்னான்.

பிறகு அவன் சேகரனை உற்றுப் பார்த்து, "நீங்கள் சமூகப் புரட்சியை ஆதரித்துக் கட்டுரை எழுதுகிறீர்களே, மிஸ்டர் சேகர், அப்படியிருக்க நீங்கள் ஏன் இந்த இயக்கத்திலே சேரக் கூடாது?" என்றுன்.

"எந்த இயக்கத்திலும் சேர எனக்குச் சுதந்தரமில்லை. பள்ளிக்கூட வாத்தியாருக்கு எவ்விதமான சுதந்தரமும் கிடையாது."

"வெறுமே உங்கள் சிந்தனைகளை வெளிப்படுத்திக் கட்டுரை எழுதிவிடுவதனாலேயே உங்களுக்குத் திருப்தி உண்டாகிவிடுகிறதா? நம்முடைய சிந்தனைப்படி செயல் இல்லையே, எழுத்துப் படி வாழ்வு இல்லையே என்று உஙகளுக்கு வருத்தமாக இல்லையா? எழுதுவதற்குத் தேவையான ஊக்கம் வேறு; செயல் புரியும் வாழ்க்கையை உண்டாக்குவதற்குத் தேவையான

ஊக்கம் வேறு. உங்களைப் போன்ற பிரபல எழுத்தாளர்கள், தமது சிந்தனை வெள்ளத்திலே, தமது கொள்கை அருவியிலே, வாழ்க்கையைக் கரைத்துவிட வேண்டும். அதன் முடிவு என்ன ஆனாலும் சரி!"

பேசும்போது அந்த இளைஞனின் கண்களிலிருந்து ஆவேசக் கனல் வீசியது. அவன் கண்கள் சிறியவையாக இருந்தும் அவனுடைய பார்வை கூர்மையாகவும் சுழல்வதாகவும் இருந்தது. அவனுடைய மெல்லிய உதடு வளைந்து, மோவாய்க்கட்டை தட்டையாக இருந்ததனால் பேசும்போது அவன் வடிவம் பயங்கரமாக இருந்தது. ஆவேசத்தில் அவன் கண்கள் சிறியவையாக, படமெடுத்த நாகத்தின் கண்களைப் போலவே மின்னின.

தினகரனுடைய அந்த ஆவேசம் அரைக்கணந்தான் இருந்தது. பின்பு அவன் தனக்குள் சிரித்துக்கொண்டு, "என்னை மன்னியுங்கள், சேகர்! நான் தற்பெருமைக்காக உங்களுடன் இப்படித் தாராளமாகப்பேசுகிறேன் என்று நினைக்கவேண்டாம். உங்கள் கட்டுரையைப் படித்ததும் உங்களிடம் எனக்குப் பரிவு தோன்றியது. அதனால்தான் இப்படிப் பேசினேன். உங்கள் உத்தியோகத்தில் சங்கடம் இருப்பது உண்மை. ஆனால் உங்களுக்கு எப்போதாவது இயக்கத்தில் சேரும் விருப்பம் இருந்தால், அல்லது என்றைக்காவது விதிவசத்தினால் நீங்கள் இந்த வேலையை விட நேர்ந்தால், அன்றைக்கு எனக்குத் தெரியப்படுத்துங்கள். உங்களைப்போல விஞ்ஞான முறையில் சிந்தனை செய்யும் அறிவாளிகள் எங்களுக்குத் தேவை. வேலை செய்யவேண்டும என்ற ஆசை மனிதனுக்கு ஏற்பட்டுவிட்டால் பணம் தானக அவன் பின்னால் ஓடி வரும். ஒவ்வோர் இயக்கமும் தன் தொழிலாளிகளின் வாழ்வுக்குத் தேவையான பொருள்களை கொடுத்துவிடுகிறது. அதனால்தான் உலகில் புதிய சிந்தனைகளும் புதிய இயக்கங்களும் பரவுகின்றன.

அப்புறம் வெகு நேரம்வரைக்கும் அவன் பேசவே இல்லை. இரண்டு மூன்று சிகரெட்டுகளை அரைகுறையாய்ப் புகைத்துவிட்டு வெளியே வீசி எறிந்தான். பிறகு திடீரென்று அவன் சேகரனிடம் பேசலானன்.

"உங்கள் கட்டுரையில் நீங்கள் வெளியிடுகிற ஒரு சிந்தனை

எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது. முதலாளிகள் மக்களுடைய உழைப்பை விலைக்கு வாங்குவதனால் இன்று மனிதத் தன்மைக்கு உண்டாகும கேட்டைவிட மனிதர்களுடைய அறிவையும் கற்பனையையும் சாதுரியத்தையும் அவர்கள் விலை கொடுத்து வாங்குவதனால் உண்டாகும் தீமை மிகுதியாக இருக்கிறது. ஏனென்றால் அறிவும் கற்பனையும் சாதுரியமும் புதிய அறிவை, புது யுகத்தை, புதிய சமூகத்தை உண்டாக்க வல்லவை. முதலாளித்தனம் இன்று தன் சுயநலத்துக்காக அவற்றைப் பயன்படுத்துவதனால் மனித முன்னேற்றத்துக்கு வேண்டிய அளவு அவை கிடைப்பதில்லை. கல்வி, கலை, இலக்கியம், ஆராய்ச்சி ஆகிய எல்லாத் துறைகளிலும் அறிவாளிகளின் திறமையை விலைக்கு வாங்கிக்கொண்டு முதலாளித்தனம் தன் ஆட்சியை நிலைநிறுத்தி வருகிறது. பொருளாதாரச் சுரண்டலோடு, அது அறிவையும் சுரண்டுவதை நீங்கள் குறிப்பிட்டிருப்பது எனக்குப் பிடித்திருக்கிறது.''

தன் படுக்கையில் இருந்த டப்பியிலிருந்து அவன் ஓயாமல் சிகரெட்டுகளை எடுத்துப் புகைத்துக்கொண்டு இடையிடையே சேகரனோடு பேசிவந்தான்.

இது அவனுடைய சிந்தனைகளை வெளிப்படுத்தும் முறை என்று எண்ணி, சேகரன் அவனைக் குறுக்குக் கேள்வி கேட்காமல் சும்மா இருந்தான். தினகரனுடைய பேச்சைவிட அவனது நிர்மலமான மனம் சேகரனை மயக்கிவிட்டது. ரஜனியைத் தான் மறந்துபோனதுகூட அவன் கவனத்துக்கு வரவில்லை.

இகத்புரி ஸ்டேஷனில் வண்டி வந்து நின்றதும், சேகரன் வேண்டாம் என்று மறுத்துங்கூட, தினகரன் இரண்டு தட்டுச் சாப்பாடு வரவழைத்தான். சாப்பாடு ஜோராக முடிந்தது.

தினகரன் வெற்றிலை பாக்குப் போட்டுக்கொண்டு சிகரெட்டைப் பற்றவைத்தான். "உத்தியோகத்தில் உள்ள கட்டுப்பாடுகளைப் பற்றி நீங்கள் சொன்னது சரி, சேகர்! ஆனால் நம் சிந்தனைப்படி வாழ வேண்டுமானால் அதற்கு வீரம் வேண்டும். அந்த வீரம் நம்மவர்களிடையே மிகவும் குறைவு. அதனால் தான் இந்தத் தாழ்நிலைக்கு நாம் வந்திருக்கிறோம். சிந்தனை

என்பது நமது கற்பனை வல்லமையின் மலர். அந்த மலர் காய்த்துக் கனியும்படி வாழாமல் நம்மை நாமே ஏமாற்றிக்கொண்டு நம் வளர்ச்சியைத் தடுக்கிறோம்'' என்று அவன் பேசினான்.

சேகரன் மிகவும் களைத்துப் போயிருந்ததனால் சாப்பிட்டவுடனே அவனுக்குத் தூக்கம் வந்துவிட்டது. நாசிக் தாண்டியதுமே அவன் தன் படுக்கையை விரித்துத் தூங்கினான்.

தினகரன் மட்டும் புகையைக் கக்கினான். அவனுடைய புகை எப்போது நின்றது, அவன் எப்போது தூங்கினான் என்பதே சேகனுக்குத் தெரியாது.

அதி காலையில் அகோலாவில் வண்டி நின்றதும் தினகரன் அவனை எழுப்பி அவன் கையை அழுத்திப் பிடித்து, "சேகர், நான் சொன்னது ஞாபகம் இருக்கட்டும். இயக்கத்தில் சேர உங்களுக்கு விருப்பம் இருந்தாலோ அல்லது வேலையிலிருந்து நீங்கள் விடுபட்டாலோ உடனே எனக்குத் தெரிவியுங்கள். உங்களுக்கு வேண்டிய எல்லா வசதிகளையும் செய்கிறேன். உங்களைப் போன்றவர் எங்களுக்குத் தேவை'' என்றான்.

இதைச் சொல்லி, அவன் வண்டியிலிருந்து இறங்கிப்போய் விட்டான்.

சேகரனோ ஆழ்ந்த தூக்கத்தில் கிடந்தான். வர்தா ஸ்டேஷனுக்கு வந்ததும் டீ குடித்த பிறகுதான் அவன் அதிகாலையில் அரைத் தூக்கத்தில் இருந்தபொழுது தினகரன பேசியதும், கையை அழுத்தியதும் ஞாபகத்துக்கு வந்தன. அவனுடைய கூர்மையான பார்வையும் நினைவுக்கு வந்தது. எல்லாம் ஒரு கனவு போல இருந்தது.

காலையில் வீடு திரும்பியதும், மிட்டாய்க்காகக் குழந்தைகள் போட்ட கூச்சலிலும் தன் வேலை மும்முரத்திலும், படக்கதையை விற்ற வருத்தத்திலும் மூழ்கிவிட்ட சேகரன், வண்டியிலே நிகழ்ந்த இந்தப் புது அறிமுகத்தைப் பற்றிய செய்தியை மஞ்சுவிடம் சொல்ல மறந்தே போனான்.

## 9

"சேகர், மிஸ்டர் சேகர், என்ன செய்கிறீர்கள்?''

இதைக் கேட்டதும் சாய்வு நாற்காலியில் சாய்ந்து படித்துக்

கொண்டிருந்த மஞ்சு எழுந்து வெளியே தலை நீட்டிப் பார்த்தாள்.

கதரில் தைத்த பாதிச் சட்டையும், பாதி நிஜாரும் அணிந்து, உதட்டு முனையில் கரிய நீண்ட சுருட்டைப் பிடித்த வண்ணம், கையில் டென்னிஸ் மட்டையோடு பம்பு ஸேட் காட்சியளித்தான்.

அவளைக் கண்டதுமே அவன் புகையிலைக் கறைபடிந்த தன் உதட்டைக கோணிக்கொண்டு, "புது வருஷத்திலே உங்களுக்குச் செலவம் பொங்கட்டும், மஞ்சு அம்மாள்! சேகர் வீட்டில் இல்லையா?" என்றான்.

"இருக்கிறார்; பின்னால் மைதானத்தில் குழந்தைகளோடு விளையாடுகிறார்."

"நீங்கள் குழந்தைகளோடு விளையாடுவதில்லையோ? பெண்களுக்குக் குழந்தைகளோடு விளையாட விருப்பம் இராது தான்! குழந்தை என்பது பெண்களுக்குப் பளு; ஆண்களுக்கு விளையாட்டு!"

தான் ஏதோ உயர்ந்த ஹாஸ்யம் பேசிவிட்டதாக எண்ணி அவன் கலகலவென்று நகைத்தான்.

மஞ்சு ஒன்றும் பேசவில்லை.

ஆனால் அவளுடைய மௌனத்தில் இருந்த வெறுப்பைக் கண்ட பம்பு ஸேட் உடனே பின்புறத்து மைதானத்துக்கு நடந்தான்.

சேகரன் பம்பாயிலிருந்து வாங்கிவந்த சிறு மட்டைகளை வைத்துகொண்டு குழந்தைகளுடன் பாட்மின்டன் விளையாடிக் கொண்டிருந்தான்.

ரஞ்சிதம் அவனோடு ஒழுங்காக விளையாடினாள். நந்து கொழுகொழுவென்ற தன் உடலைச் சமாளித்துக்கொண்டு பூஞ்செடிகளை நோக்கிக் குதித்தான்.

ஸேட்டைப் பார்த்ததும் அந்த இரண்டு குழந்தைகளும் விளையாட்டை விட்டு ஓடி வந்து அவனை அணைத்துக்கொண்டு, "சித்தப்பா, எங்களைக் காரில் உலாவ அழைத்துப் போகிறீர்களா?" என்று கேட்டார்கள்.

"நான் மாட்டேனென்றா சொல்கிறேன்? உங்கள் அம்மா

உத்தரவு கொடுக்க வேண்டும்; அப்பா வீட்டை விட்டு வெளியே வர வேண்டும்!" என்று சொல்லிக்கொண்டே ஸேட் தன சட்டைப் பையிலிருந்து சாக்கலெட் பொட்டலங்களை எடுத்து அவர்களிடம் கொடுத்தான்.

"என்ன ஸேட்ஜி, இன்று என் ஞாபகம் வந்துவிட்டதோ?" என்று சேகரன் அவனைக் கேட்டுவிட்டு, ரஞ்சிதத்திடம், "அம்மாவை டீ போடச் சொல்லு" என்றான்.

"எனக்கு வேண்டாம் ஐயா, உங்கள் டீ! நான் வந்ததுமே உங்கள் மனைவி என்னை மிகவும் கோபத்தோடு பார்த்தாள்; ஏன் இங்கே வந்தோம் என்று எனக்குத் தோன்றிற்று. மிஸடர் சேகர், டீ கிடக்கிறது; நீங்கள் முதலில் என்னோடு புறப்படுங்கள்."

"எந்த இடத்துக்கு?"

"இதுதானே உங்களிடம் இருக்கும் கெடுதல்! வெளியே வாருங்கள் என்றால் பேசாமல் காரில் உட்கார வேண்டும். எனக்கு இவ்வளவு நண்பர்கள் இருக்கிறார்களே, வெளியே புறப்படுங்கள் எனறால் 'எங்கே?' என்று யாரும் கேட்க மாட்டார்கள். கோவிந்தன் எவ்வளவு பெரிய மனுஷர்! அவர்கூட நான் கூப்பிட்டதும் பேசாமல் காரில் உட்கார்ந்துவிடுவார். நீங்கள் பெரிய ஆராய்ச்சியாளராக இருப்பதனால்தான் இந்த அவஸ்தை!"

"கேட்டதற்குப் பதில் சொல்லாமல் எதையாவது பேசுவதே உங்கள் சுபாவம், ஸேட்ஜி! என் கேள்விக்குப் பதில் சொன்னால் ஒழிய நான் உங்கள் காரில் உட்கார மாட்டேன்" என்று சேகரன் சிரித்துக்கொண்டே சொன்னான்.

அவனுடைய சிரிப்பில் தோன்றிய உறுதியைக் கவனித்த ஸேட், "இன்று புது வருஷம் பிறந்திருக்கிறது. ஆகையால் சில நண்பர்கள் சேர்ந்து இன்று மாலைப்பொழுதைக் குஷியாகக் கழிக்கப் போகிறோம். அதற்குத்தான் உங்களை அழைத்துப் போக வந்தேன்" என்றான்.

"நீங்கள் வந்ததற்கு வந்தனம். உங்கள் குஷியில் நான் கலந்துகொள்ள முடியாது என்பது உங்களுக்கே தெரியுமே. ஏன் என்னை வீணுக்குக் கூப்பிடுகிறீர்கள்?"

ஸேட் அரைக்கணம் பேசாமல் நின்ருன். பிறகு சேகரன் தோள்மேல் கைபோட்டுக்கொண்டு பரிவுடன், "நான் வெறும் குஷிக்காக உங்களைக் கூப்பிடவில்லை. உங்களிடம் எங்களுககுக் கொஞ்சம் வேலை இருக்கிறது" என்ருன்.

"எங்களுக்கு என்ருல் யாருக்கு?"

"எனக்கும் கோவிந்தனுக்கும்! இப்போது திருப்திதானே? அடுத்தபடி, என்ன வேலை என்று கேட்பீர்கள்!"

"கேட்பதாகத்தான் இருந்தேன். நான் கட்டாயம் வர வேண்டுமோ?"

"ஆமாம், வரத்தான் வேண்டும்."

"என்னை எப்பொழுது திருப்பிக் கொண்டு விடுவீர்கள்?"

"அடடா! புறப்படுவதற்கு முன்பே திரும்பி வருவதற்கு ஒப்பந்தமா? சேகர், நீங்கள் உஙகள் மனைவிக்கு மூன்ருவது குழந்தையாகத்தான் இருக்கிறீர்கள்!"

"இந்தக் கவலை எல்லாம் உஙகளுக்கு வேண்டாம், ஸேட்ஜி! நான் என் மனைவிக்குக் குழந்தையாக இருப்பேன், அல்லது அடிமையாக இருப்பேன். நீங்கள் என்னை எப்பொழுது திருப் பிக் கொண்டு விடுவீர்கள் என்று சொல்லுங்கள்!"

"இன்றைக்குப் புது வருஷப் பிறப்பாச்சே, ஸார்! ஹிட்லர் மாதிரி நிபந்தனை போடுகிறீர்களே!"

"புது வருஷம் உங்களுக்குப் பிறந்திருக்கிறது. என்னைப் போன்றவர்களுக்கு அல்ல! புறப்படும்போதே தெளிவாகத் தெரிந்தால் நல்லது. இல்லாவிட்டால் காலையில்தான திரும்ப முடியுமோ என்னவோ!"

"அப்படியெல்லாம் இல்லை. வேலை முடிந்ததுமே நான் உங்களை வீட்டுக்குக் கொண்டுவிடுகிறேன். சரிதானே?"

"சரி, டீ குடித்துவிட்டுப் போவோம்."

அவர்கள் இருவரும் உள்ளே போனுர்கள்.

பச்சைப் பட்டாணி போட்ட சோமாசியும் டீயும் கொண்டு வந்து வைத்தாள் மஞ்சு.

சோமாசித் தட்டை ஸேட்டின் முன்னுல் வைத்த சேகரன், "நான் இவரோடு சற்று வெளியே போய் வருகிறேன்!" என்ருன் மஞ்சுவிடம்.

"இரவில் சாப்பாடு ஆனபிறகுதான் இவர் திரும்பி வருவார்" என்று பாதி சோமாசியை வாயில் போட்டுக்கொண்டே ஸேட் சொன்னான்.

"இன்று எதற்காக நீங்கள் விருந்து வைக்கிறீர்கள்?"

"இன்று ஜனவரி முதல் தேதி. எங்களைப்போன்ற வியாபாரிகள் தங்கள் வாடிக்கைக்காரர்களுக்கு விருந்து வைத்து இதைக் கொண்டாட வேண்டும்!"

"இவர் உங்கள் வியாபாரத்திலும் இல்லை; வாடிக்கைக் காரரும் இல்லையே!"

"இவர் என் நண்பர் இல்லையா?"

மஞ்சு இதற்கு ஒன்றும் பதில் சொல்லவில்லை. அமைதியாகத் தன் நீண்ட கண்களால் சேகரனை உற்றுப் பார்த்து, "இரவு நீங்கள் வருவதற்கு வெகு நேரம் ஆகுமோ?" என்றாள்.

"அப்படி ஒன்றும் நேரமாகாது. சாப்பாடு ஆனதும் நாங்கள் ஒருவேளை சினிமாவுக்குப் போகலாம்!" என்றான் ஸேட்.

அதற்குள் குழந்தைகள் ஸேட்டின்மேல் விழுந்து, "சித்தப்பா, எங்களைக் காரில் உலாவ அழைத்துப் போகிறீர்களா?" என்று கேட்டார்கள்.

"ஓ! இதோ டீ குடித்ததும் புறப்பட வேண்டியதுதான்!" என்று சொல்லி ஸேட் நந்துவை அணைத்துக்கொண்டான்.

"நந்து, நீ பார்க்கில் போய் ஊஞ்சலாட வேண்டாமா?"

"வேண்டாம் அம்மா, நான் சித்தப்பாவின் காரில் போவேன்" என்று நந்து பெருமையாகச் சொன்னான்.

"இவனையும் விருந்துக்கு அழைத்துப் போகிறீர்களா?"

ஸேட் வேடிக்கையாகச் சிரித்துக்கொண்டே, "அதற்கென்ன, அழைத்துப் போகலாமே!" என்றான்.

மஞ்சு பேசாமல் உம்மென்று இருந்தாள்.

"பார்க்கை ஒரு சுற்றுச் சுற்றி இவர்களை வீட்டில் கொண்டு வந்துவிட்டு, பிறகு நாம் போகலாம்" என்றான் தேநீர் அருந்திய சேகரன்.

மஞ்சு கொடுத்த பாக்குப்பொடியை வாயில் போட்டுக் கொண்டு, அவர்கள் குழந்தைகளோடு வெளியே புறப்பட்டார்கள்.

"சோமாசி இன்று நன்றாக இல்லையா, ஸேட்ஜி? உங்களுக்கு மிகவும் பிடிக்குமே!"

"நன்றாகத்தான் இருந்தது. ஆனால் உங்கள் மனைவியிடம் இருந்த பயத்தால் அது வயிற்றுக்குள் இறங்கவே இல்லை. ஒவ்வொரு கேள்வியும் எப்படிக் கேட்கிறாள்! அந்தச் சரளா இருக்கிறாளே, அவள் கணவனோடு எங்கே போகவும் தயார்; கணவன் எங்கே போனாலும் அதைப்பற்றி அவளுக்கு அக்கறை இல்லை!"

"எதற்காக அக்கறை! அவள் தானே எப்போதும் ஊர் சுற்றுகிறவள். கோவிந்தனுடைய வாழ்க்கை எப்படிப்பட்டது என்பதும் அவளுக்குத் தெரியும். சரி, நாம் குழந்தைகளை வீட்டில் விட்டுவிடலாம்."

பார்க்கைச் சுற்றிவிட்டுக் கார் வீட்டுக்கு வந்தது.

சேகரன் குழந்தைகளை இறக்கி வீட்டுக்குள் கொண்டு போய் விட்டான்.

அவன் மறுபடி காரில் உட்கார்ந்ததும், "நீங்கள் திரும்பி வருவீர்களோ மாட்டீர்களோ என்று எனக்குச் சந்தேகமாகி விட்டது. அந்த இரண்டு குழந்தைகளுடனே உங்கள் மனைவி உங்களையும் இருக்கச் சொல்லிவிடுவாளோ என்று பார்த்தேன்!" என்றான் ஸேட்.

"அதில் ஒன்றும் கெடுதல் இல்லையே! வீட்டில் ஆனந்தமாகப் பொழுது போகும்!"

"என்ன சேகர், உங்களுக்கு வீட்டைத் தவிர வேறு உலகமே இல்லையா? நீங்கள் எப்படி எழுத முடிகிறது? 'நிறைந்த வாழ்வு வாழ்ந்தாலொழிய நல்ல இலக்கியம் எழுத முடியாது' என்கிறாள் சரளா. நீங்களோ இப்படிக் கிணற்றுத் தவளையாக இருக்கிறீர்கள்!"

"சரளா சொல்வது அவர் வாழ்க்கைக்குத் தக்கபடி சரிதான். நிறைந்த வாழ்வு என்றால் என்ன? மனம் போனபடி கேளிக்கையாக வாழ்வதுதானே? வாழ்க்கை வாழ்வதற்காக இருக்கிறது என்று சொல்லிக்கொண்டு மனமார இன்பம் அனுபவிப்பது! கார், மாமிசம், மது, கேளிக்கை—இவற்றைத் தவிர அறிய வேண்டியதோ அனுபவிக்க வேண்டியதோ இவர்களுக்கு

வேறு எதுவுமே இல்லை! உலகத்து அநுபவத்தையும் சுவையை யும் காணப் புறப்படும் இந்த ஜம்பக்காரர்கள் மக்களுடைய வாழ்வைக் கசப்பாக்கி யிருக்கும் பலவகைத் துன்பங்களில் சிலவற்றையாவது நுகரத் தயாராக இருக்கிறார்களா? நிறைந்த வாழ்வுதானே உங்களுக்கு வேண்டும்? அப்படியானால் நூற்றுக்கு நூறு மக்கள் அநுபவிக்கும் துயரத்தை அநுபவித்துப் பார்க்க வேண்டும். ஆயிரத்தில ஒருவனுக்குக்கூடக் கிடைக் காத இனபத்தைப் பெறும் ஆவலினால் சிலர் இப்படித் தத்துவம் பேசுகிறார்கள். உலகத்தில் வேறு நாடுகள் எந்த நிலையில் இருக்கின்றன, நாம் எந்த நிலையில் இருக்கிறோம் என்று இந்தக் கேளிக்கைக்காரர்களுக்குத் தெரியுமா? மனம் போனபடி வாழ் வதுதான் இவர்கள் தத்துவம். இவர்களுக்கு மக்களிடமோ தனக்குள்ளேயோ வெட்கம் சிறிதுமில்லை. பெரிய பெரிய அலங்காரச் சொற்களை அடுக்குவதனால் இந்தத் தத்துவத்தில் பதுங்கியுள்ள சுயநலம் மறைந்து போகாது!"

"ஐயா சாக்ரடிஸ் அவர்களே, உங்களுடைய தத்துவப் பிர சங்கத்தை நிறுத்திக்கொள்ளுங்கள். இன்றிரவு ஆனந்தமாகப் போகட்டும்!"

"அப்படியானால் என்னை ஏன் அழைத்து வந்தீர்கள்?" என்று சேகரன் சிரித்துக்கொண்டே கேட்டான்.

"அதற்காக என்னை இப்படிப் பழி வாங்க வேண்டுமா? உங்களுடைய இந்தக் கேள்விகளோ விவாதமோ இனி வேண் டாம். கோவிந்தனிடம் உங்களைக் கொண்டுவிடுகிறேன். என்ன வேலையோ, நீங்கள் பேசிக்கொள்ளுங்கள்."

அதற்குள் கோவிந்தனுடைய பங்களா வாசலில் கார் வந்து நின்றது.

"அப்படியானால் உங்கள் வேலை எதுவும் இல்லையா?"

"அவர் வேலை எது, என் வேலை எது என்று வெவ்வேறாக எதுவுமே இல்லை, சேகர்! நீங்கள் இப்படி அப்பாவியாக இருக்கிறீர்களே!"

அவர்கள் இருவரும் ஹாலில் போனதும் கோவிந்தன் அவர்களை வரவேற்று, "வாருங்கள், சேகர்! நீங்கள் வருவீர் களோ மாட்டீர்களோ என்று சந்தேகப்பட்டேன்" என்றார்.

"பம்பு ஸேட் தங்களுடைய வேலை என்று சொன்னதும் வராமல் எப்படி இருப்பது?"

கோவிந்தனுக்கு வலப்பக்கத்துச் சோபாவில் அமர்ந்திருந்த சரளா, "வேலை எதுவும் இல்லாமல் நாங்கள் அழைத்தோ மென்றால் நீங்கள் வர மாட்டீர்களா?" என்றாள்.

"அதெப்படி? வேலையில்லாமல் நீங்கள் என்னைக் கூப் பிடவே போவதில்லையே?"

"அப்படிச் சொல்லாதீர்கள். மனிதர்கள் ஒருவரை ஒரு வர் சந்திப்பது எப்போதும் வேலைக்காகத்தானா? அப்படியானால் மனிதர்களுக்கும் யந்திரங்களுககும் என்ன வித்தியாசம்? கார ணமே இல்லாமல் யாரையாவது பார்க்க வேண்டும் என்ற எண்ணம் இது வரைக்கும் உங்களுக்குத் தோன்றியதே இல்லையா?"

சரளாவின் இந்தக் கேள்வி சேகரனைத் திகைக்க வைத்தது. ஆனால் மறு நிமிஷமே அவன் சிரித்துக்கொண்டு, "நீங்கள் திடீ ரென்று மனத் தத்துவத்தில் புகுந்துவிட்டீர்கள், சரளா அம்மா! நான் விவகார முறையில் பேசுகிறேன்" என்றான்.

"அவருக்கு முதலில் காபி கொடுக்க ஏற்பாடு செய். இன்று மிகவும் குளிரவில்லை, சேகர்?" என்று இடைமறித்த கோவிந் தன், எதிரே முக்காலியில் ஒரு பெட்டியிலிருந்து சிகரெட்டை எடுத்துப் பற்ற வைத்தார்.

அஸ்தமிக்கும் சூரியனுடைய மஞ்சள் வெயில் ஹாலில் பரவியிருந்தது. மர நிழல் மறைந்து இலைகளில் இருள் குடி கொண்டது. கூட்டுக்குத் திரும்பிய பறவைகளின் கலகலப்பு அந்த மரங்களுக்கு அழகு தந்தது. சற்றுத் தொலைவில் தொழி லாளருடைய குடிசைகளிலிருந்து புகை வளையங்கள் வெளிவந் தன. அருகே உயரமாக நின்ற சிறைச் சுவர்கள் அந்த இயற் கைக் காட்சியில் சோர்வை உண்டாக்கின.

சரளாவுக்குப் பின்னால் காபிக் கிண்ணங்களுடன் சமையற் காரன் வந்தான். மேஜை மேல் காபியை வைத்துவிட்டு, அவன் விளக்கைப் போட்டான்.

மங்கிய வெயிலில் வெளுப்பாகத் தெரிந்த சரளாவின் உடல் நிறம் இப்போது விளக்கு வெளிச்சத்தில் செக்கச் செவே

லென்று இருந்தது. சாக்கலெட் நிறச் சேலையை அவள் அணிந் திருந்தாள். அதே நிறத்தில் கம்பளிக் கோட்டும் போட்டிருந் தாள். கோவிந்தன் எப்போதும் போலக் கதராடைதான் உடுத்திருந்தார் என்றாலும், அது மேல்நாட்டுப் பாணியில் இருந்தது.

சரளா அவர்கள் மூன்று பேருக்கும் காபி கொடுத்தாள். கோவிந்தன் காபியை அருந்தியவாறு சேகரனைப் பார்த்து, "இந்தப் புது வருஷம் உங்களுக்கு ஆனந்தமாக இருக்கட்டும்" என்றார்.

"ஹூம்! வாழ்த்துவதற்கு ஏற்ற பானம் இந்தக் காபி அல்ல!" என்றான் ஸேட்.

"உள்ளத்திலிருந்து வரும் வாழ்த்தாக இருந்தால் வெறும் தண்ணீரைக்கூட அருந்தலாம்!"

"பின்னே நீங்கள் எதற்காக எனக்கு டீ கொடுத்தீர்கள்? வெறும் தண்ணீர் கொடுப்பதுதானே!"

"இன்று வருஷத்தின் முதல் நாள். எப்போதும்போல வாதத் தில் இறங்காதீர்கள், சேகர்!" என்றாள் சரளா நகைத்தபடி.

சேகரன் காபி குடித்தானதும், "உங்கள் வேலையைப் பற்றிச் சொல்லுங்கள், மிஸ்டர் கோவிந்தன்!" என்றான்.

"ஏன், என்ன இவ்வளவு அவசரம்? இன்னும் ஒருமணி நேரத்தில் நாம் வெளியே போய், தனிமையாகப் பேசலாமே! வருஷப் பிறப்புக்காக இன்று சில பேர் வரப்போகிறார்கள். அவர்கள் வந்து போனதும் நாம் புறப்படலாம்."

"சேகரன் பேசாமல் காத்திருந்தான். இரவு எட்டு மணி வரைக்கும் அங்கே பல வகையான அதிகாரிகளும் வெவ்வேறு சாதியைச் சேர்ந்த வியாபாரிகளும் கோவிந்தனை வாழ்த்த வந் தார்கள். கோவிந்தன் எல்லாருடனும் இனிமையாகப் பேசி னார். சரளாவும் அந்தப் பேச்சில் கலந்துகொண்டாள்.

சில வக்கீல்களும், கோவிந்தனுடைய சிபாரிசில் வேலை முடியவேண்டிய சில ஆலை முதலாளிகளும் வந்து போனார்கள்.

ஒரே விதமான அந்தச் சம்பாஷணையும் மனப் போக்கும் சேகரனுக்கு அலுப்பைத் தந்தன. ஹாலில் அந்த வாழ்த்துக் களும் பேச்சும் நடந்துகொண் டிருந்தபோது அவன் மெதுவாக

எழுந்து வெளியே சோலைக்கு வந்தான். சில்லென்ற காற்று வீசியது. ஆயினும் அவனுடைய மனத்தின் வெப்பம் குறைய வில்லை. சிறிது தூரத்தில் குடிசைகளிலிருந்து தொழிலாளிப் பெண்களின் இனிய பாட்டு வெளிவந்தது. அந்த இன்னிசை சேகரனுடைய கலங்கிய உள்ளத்தில் பல உணர்ச்சிகளை எழுப்பியது.

"உண்மையான பாரத நாடு-வறுமையிலும் துன்பத்திலும் ஆழ்ந்த பாரத நாடு-இந்தக் குடிசைகளில் இருக்கிறது. ஆனல் அதற்கும் நமக்கும் என்ன சம்பந்தம்? அதிகாரத்திலும் செல் வத்திலும் மூழ்கிய இந்த உயர் வர்க்கத்தாரின் காதில் இந்த ஏழைகளின் துயரப் பாடல் ஏன் விழப் போகிறது?" என்று அவன் சிந்திககலானுன்.

ஏழாம் பிறைச் சந்திரன கரிய சிறை மதிலின் பின்னல் மெதுவாக மறைந்தான். ஒரு புறம் ஒரே இருட்டும், மறு புறம் மின்சார வெளிச்சமாகவும் இருந்தது.

சிந்தனையில் ஆழ்ந்திருந்த சேகரனுடைய முதுகைப் பட் டென்று யாரோ தட்டவே, அவன் திரும்பிப் பார்த்தான்.

"என்ன ஐயா, சாக்ரடிஸ்! இங்கே தனியாய் நின்று கொண்டு என்ன யோசனை செய்கிறீர்கள்? நீங்கள் பேசாமல் கொள்ளாமல் வீட்டுக்குப் போய்விட்டீர்களோ என்று பார்த் தேன்" என்ருன் ஸேட்.

"போயிருந்தால் நல்லதுதான்!"

"ஹாலில் நடக்கும் வேடிக்கைகளைப் பாருங்களேன்!"

"உங்கள் வேடிக்கையைப் பார்த்து எனக்கு அலுத்துப் போய்விட்டது. என்னை இப்பொழுது வீட்டுக்குக் கொண்டு விடுங்கள்."

"பேஷ்! கோவிந்தனுடைய வேலை என்ன ஆவது?"

"உண்மையில் அவருக்கு என்னிடம் வேலை இருக்கிறதா?"

"பின்னே என்ன? நான் உங்களைச் சும்மா அழைத்து வந் திருக்கிறேன் என்று பார்த்தீர்களா? நீங்கள் நடந்துகொள்ளும் விதமே புதுமையாகத்தான் இருக்கிறது. வாருங்கள், உள்ளே போகலாம்" என்று அவன் சேகரனுடைய தோளைப் பிடித்து அழைத்துப் போனுன்.

அவர்கள் உள்ளே வருவதைக் கண்ட சரளா, "நீங்கள் வீட்டுக்குப் போய் விட்டதாக அல்லவா நினைத்தேன்?" என்றாள்.

"நான் அவரைப் போக விடுவேனா? நம்முடைய முக்கிய வேலை இனிமேல்தானே இருக்கிறது! நீங்களும் எங்களோடு வருகிறீர்களா, சரளா அம்மா?"

"அவள் இன்று நம்மோடு வர வேண்டாம். அங்கே நாம் வியாபார விஷயம் பேசப் போகிறோம். அவளுக்கு அலுப்பாக இருக்கும் மேலும் அங்கே இன்று பல பேர் வருவார்கள்" என்று சொல்லி, கோவிந்தன் அவளைத் தடுத்துவிட்டார்.

அவர்கள் மூவரும் உட்கார்ந்ததும், கார் வேகமாகப் புறப் பட்டது.

அவர்கள் மவுண்ட் ஹோட்டலுக்குப் போனதும் வேலையாள் எப்போதும் போல அவர்களை அறையில் அழைத்துப் போய் உட்கார வைத்தான். பமபு ஸேட் மேஜைமேல் இருந்த 'மெனு'வைப் பார்த்து, தேவையான பண்டங்களைப் பரபர வென்று குறித்துக் கொடுத்தான். பிறகு சிகரெட் பிடித்துக் கொண்டே, "இந்த உணவு உங்களுக்கு ஆகாதே சேகர்?" என்றான்.

"அடியோடு ஆகாது!"

"சரி, உங்களுக்குத் தனி ஏற்பாடு செய்கிறேன். ஆனால் எங்களோடு கொஞ்சம் பீர் குடிப்பீர்கள் அல்லவா?"

"மாட்டேன்."

"போன தடவை எங்களோடு எடுத்துக்கொண்டது எனக்கு ஞாபகம் இருக்கிறதே. இன்று ஏன் வேண்டாம் என் கிறீர்கள்? கொஞ்சமாக எடுத்துக் கொள்ளுங்கள், சேகர்!"

"எனக்கு இந்த மாதிரி எந்தப் பானத்திலும் அடியோடு ருசி இல்லை, மிஸ்டர் கோவிந்தன்!"

"மனிதனுக்கு இயல்பாக ருசி என்று ஒன்று உண்டா என் பது எனக்குச் சந்தேகமாகத்தான் இருக்கிறது. குழந்தைக்கு முதல் முதலில் பாயசம் ஊட்டும்போது அது முகத்தைக் கோணிக்கொள்கிறது. அது போல எந்த ருசியும் உண்டாக்கி னால் அது பழக்கத்தில் வந்துவிடுகிறது. இந்தக் காலத்தில்

எல்லா இன்பங்களுமே செயற்கையானவைதாம். நீங்கள் பழக்கப்படுத்திக் கொண்டால், மதுவின் கசப்பே இனிமையாக மாறிவிடும். பாகலை விடவா பீர் கசப்பாக இருக்கிறது? பாகற் காய்ப் பச்சடியை நாம் எவ்வளவு சுகமாகச் சாப்பிடுகிறோம்?''

''உங்களுக்குப் பீர் பிடிக்காவிட்டால் வேண்டாம். வேறு ஏதாவது எடுத்துக் கொள்ளுங்கள். புது வருஷ முதல் நாளில் இப்படி நடந்துகொண்டு எங்கள் விருந்தை விரசமாக்கா தீர்கள்!—டே பையன், ஷாண்டி கொண்டு வா!''

பம்பு ஸேட் ஷாண்டி நிரம்பிய ஒரு கண்ணாடிக் கிண் ணத்தைச் சேகரன் முன்னால் வைத்தான். அதில் ஒரு வாய் குடித்த சேகரன் கோவிந்தனைப் பார்த்து, ''இனி உங்கள் வேலையைப் பற்றிப் பேச ஏதும் தடை இல்லையே?'' என்றான்.

அந்தக் கேள்வியைக் கேட்டதும் கோவிந்தன் தமது நாற் காலியில் கம்பீரமாக உட்கார்ந்தார். ''சேகர், நாங்கள் நாகபுரி யில் ஒரு சினிமாக் கம்பெனி ஆரம்பிக்க யோசித்திருக்கிறோம். முதல் போடுவதற்கும், சரியான டைரெக்டரை நியமிப்பதற்கும் ஏற்பாடு நடக்கிறது. நீங்கள் இந்தக் கம்பெனியில் சேர வேண்டும் என்று நாங்கள் வற்புறுத்தி வேண்டுகிறோம்'' என்றார்.

''நீங்கள் சொல்வது விளங்கவில்லையே, கோவிந்தன்!''

''நான் சொல்கிறேன்'' என்று ஸேட் உரக்கப் பேச்சைத் துவக்கினான். அவன் அதற்குள் ஒரு புட்டியைக் காலி செய்தா யிற்று. மற்றொரு புட்டியில் பாதியைக் கோவிந்தனின் கிண் ணத்தில் ஊற்றிவிட்டுப் பாதியைத் தன் கிண்ணத்தில் ஊற்றிய பின் ஒரு வாய் குடித்துவிட்டு, ''இதோ பாருங்கள், சேகர்! நாங்கள் எங்கள் கம்பெனியில் உங்களை எங்களுக்குச சரிசம மாகச் சேர்த்துக்கொள்ளப் போகிறோம். நாங்கள் இந்தக் கம் பெனியின் டைரெக்டர்களாக இருப்போம். நீங்களும் டைரெக்ட ராக வேண்டும் என்பதுதான் எங்கள் விருப்பம்'' என்றான்.

''என்னிடம் ஒரு செல்லாக் காசுகூட இல்லை. நான் எப்படி டைரெக்டராக முடியும்?''

''ஒரு காசு இல்லாமல் நாங்கள் உங்களை டைரெக்டர் ஆக்குகிறோம். அதனால் என்ன?'' என்றான் ஸேட்.

"இப்படி யாருடைய தயவாலும் டைரெக்டர் ஆக எனக்கு விருப்பம் இல்லை!" என்று சேகரன் துடுக்காகப் பேசினான்.

"அப்படியானால் கரி டெப்போவில் உட்கார்ந்து ஆயுள் முழுவதையும் கழிப்பீர்களா?"

"அது உங்கள் விஷயம் அல்ல, ஸேட்ஜீ! நான் கரி டெப் போவில் உட்காருவதால் உங்கள் முகத்தில் கரி படப்போவ தில்லை. ஆகவே அதைப்பற்றி நீங்கள் பேச வேண்டிய கார ணம் இல்லை. இப்படிப் பேசத்தான் என்னை இன்று இங்கே கூப்பிட்டு வந்தீர்களோ?"

கோவிந்தன் அமைதியான தமது இனிய குரலில், "நீங்கள் இப்படிக் கோபித்துக் கொள்ளாதீர்கள், சேகர். முதலில் எங்கள் திட்டத்தை நன்றாகப் புரிந்துகொண்டு பிறகு பதில் சொல் லுங்கள். உங்களை டைரெக்டர் ஆக்குவதால் நாங்கள் ஒரு தயவும் காண்பிக்கவில்லை. உங்களால் எங்களுக்கு மூன்று விதமான பயன் உண்டு. எங்கள் விளம்பர இலாகாவைப் பார்த்துக்கொள்ள உங்களைப் போன்ற பிரசித்த எழுத்தாளர் கிடைத்தால், மக்கள் எங்கள் கம்பெனியிடம் கவனம் செலுத்து வார்கள். சினிமாக் கதை, சம்பாஷணை முதலியவை எழுது வதற்கும் வந்த கதைகளைப் பரிசீலனை செய்து எங்களுக்கு ஆலோசனை கூறுவதற்கும் உங்கள் உதவி மிகவும் தேவையாக இருக்கும். தவிர இன்னும் ஒரு முக்கியமான காரியமும் உங்க ளால் முடியும்" என்று சொல்லிச் சிறிது தயங்கினார்.

"அந்த மூன்றாவது வேலை எது?" என்று சேகரன் ஆவலோடு கேட்டான்.

"நடிகைகளைச் சம்பாதிப்பது" என்று கோவிந்தன் நிதான மாகச் சொன்னார்.

"நடிகைகளைச் சம்பாதிப்பதா? அதை நான் எப்படிச் செய்ய முடியும்?" என்று சேகரன் ஆச்சரியத்தோடு கேட்டான்.

கோவிந்தனுடைய இனிமையான பேச்சினால் சற்றுத் தணிந்திருந்த அவனுடைய ஆத்திரம் மறுபடியும் அதிகமாயிற்று. 'மஞ்சுவைச் சினிமாவில் சேர்ப்பதற்கு இது ஒருவேளை பீடிகை யாக இருக்குமோ?' என்றும் அவன் எண்ணினான்.

அவன் குரலிலும் தோற்றத்திலும் உண்டாகிய மாறுதலைக்

கோவிந்தன் கவனித்தார். அவர் தமது கருத்தைச் சுற்றி வளைத்துப் பேசுவதற்குள், பம்பு ஸேட் பேசலானான்.

''இதோ பாருங்கள், சேகர்! உங்களுக்கு இளம் பெண்களைத் தெரியும். உங்கள் எழுத்தில அவர்கள் மோகம் கொண்டிருக்கிறார்கள். நீங்கள் மனம் வைத்தால அவர்களில் இரண்டு மூன்று அழகிகளை எங்களுக்கு நடிகைகளாகச் சம்மதிக்க வைக்க முடியும். காலேஜ் பெண் ஒருத்தி கதாநாயகியாக நடித்தால நமது கம்பெனியின் புகழும் கவர்சசியும் பல மடங்கு வளர்ந்துவிடும்!''

இந்த விரிவுரையினால் சேகரனுடைய ஆத்திரம் சிறிது தணிந்தது. ஆனால பொங்கும் தணணீரை 'ஸடவ்'வீலிருந்து இறக்கியதும் கொதிவருவது நிற்கிறதே, அதைப்போன்ற தணிவு அது. அவன் கோபத்தோடு, ''பம்பாயில் சில சினிமாக் கம்பெனிகளுக்கு கோவாவில ஏஜெண்டுகள் இருப்பது போல நான் உங்கள் கம்பெனிக்கு உள்ளூர் ஏஜெண்டாக இருக்க வேண்டும் என்கிறீர்களா?'' என்றான்.

அவனுடைய கிண்டலான கேள்வி ஸேட்டின் உள்ளத்தில் தைத்தது. அவன் லேசாக நகைத்து, ''இதில் என்ன தப்பு? காலையிலும் மாலையிலும் உங்களிடம் பல இளம் பெண்கள் வருவதால நாங்கள் இந்த வேலையைச் செய்யச் சொல்கிறோம். நீஙகள் வீட்டில் அவர்களுககுக் கலையையும் இலக்கியத்தையும் பற்றிப் பாடம் சொல்கிறீர்கள். அந்தப் பாடத்தையே எஙகள் ஸ்டூடியோவில் சொல்லுஙகள் என்றுதான் நாங்கள் கேட்டுக் கொள்கிறோம். தம்மைச் சுற்றிப் பல இளைஞர்களையும் பெண்களையும் சூழ்ந்து கூட்டம் போடச் செய்வது இந்தக் காலத்து எழுத்தாளர்களுடைய தந்திரம்!'' என்றான்.

''அது உண்மைதான்! ஸ்ரீமான் கோவிந்தன் அவர்களுடைய வீட்டில்கூட அந்தத் தந்திரத்தை நடத்தும் கோஷ்டி இருக்கிறது. உங்களுக்குக் கதாநாயகன் கிடைப்பதற்கு அந்தக் கோஷ்டி மிகவும் நன்றாகப் பயன்படும் என்று நினைக்கிறேன். ஸிவில் லயன்ஸில் அந்த அழகிய இளைஞனை ஓவியன் இருக்கிறானே, அவன் சரளா அம்மாள் நாகபுரியில் இருந்தால் அறுபது நாழிகையும் அவரோடுதான் இருப்பான். அவனை நம்முடைய

முதல் படத்துக்குக் கதாநாயகன் ஆக்கலாம். நடிகர்களையும் நடிகைகளையும் தேடிப் பிடிப்பதற்குச் சரளா அம்மாவும் நானு மாகச் சேர்ந்து உங்கள் கம்பெனியில் ஏஜெண்டு வேலை செய்கி ேறாம். சரளா அம்மாவிடம் பல வாத்தியக்காரர்களும் பாடகர் களும் எழுத்தாளர்களும் ஓவியர்களும் எப்போதும் ஆலோ சனை கேட்க வருவது உண்டு. உங்கள் கம்பெனிக்குத் தேவை யான பல வகைக் கலைஞர்களை அந்தக் கோஷ்டியிலிருந்து மிகவும் மலிவாகத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம்.''

இந்தப் பேச்சு, கோவிந்தனுடைய உள்ளத்தில் அம்பு போலப் பாய்ந்தது. ஆயினும் விவாதத்தை வளர விடுவது அவருக்கு அநுகூலமாக இல்லை. ஆதலால் அவர் தமது சினம் முழுவதையும் அடக்கிக்கொண்டு, ''பம்பு ஸேட், எந்த விஷயத் தையும் உங்களுக்கு வகையாகச் சொல்லத் தெரிவதில்லை. நீங்கள் தவருக நினைக்க வேண்டாம், சேகர்! நீங்கள் இப் பொழுது சொன்னது அவ்வளவும் உண்மைதான். நமக்குத் தெரிந்த கோஷ்டியிலிருந்து நடிகர், நடிகை, பாடகர்கள், ஓவி யர்கள் முதலியவர்களை எடுத்துக் கொள்ளத்தான் போகிறேம்'' என்ருர்.

''உங்களுக்கு உதவி செய்ய எனக்குத் தடை இல்லை, மிஸ்டர் கோவிந்தன்! கபடமும் அநாகரிகமும் நிறைந்த உங்கள் கூட்டத் தார் என்னைப்பற்றி எப்போதும இழிவாகப் பேசுவதுபோல உங்களைப்பற்றி என்னல் பேச முடியாது என்று நீங்கள் நினைக் கிறீர்களா? நீங்கள் உங்கள் பேசும் முறையையும் நடவடிக்கை யையும் முதலில் சரிப்படுத்திக் கொள்ள வேண்டும்.''

''இதோ பாருங்கள், சேகர்! பம்பு ஸேட்டை நினைத்துக் கொண்டு நீங்கள் பேச வேண்டாம். இதுவரையில் அவர் ஐந்து புட்டிகளைக் காலி செய்திருக்கிருர். அவர் எப்போதும் அப்படித்தான் பேசுவார். ஆனல் நான் உங்களிடம் மனப் பூர்வமாகச் சொல்லுகிறேன். நீங்கள் எங்கள் கம்பெனியில் சேரத்தான் வேண்டும்.''

''மிஸ்டர் கோவிந்தன், இன்று முதல்முதலாக உங்களிடம் மனம் விட்டுப் பேசுகிறேன். இந்த மாதிரியான எந்த விஷயத் திலும் நான் உங்களுடன் பங்கு கொள்ளவோ உதவி செய்

யவோ முடியாது. உங்கள் இனம் வேறு; என் இனம் வேறு. உங்களைப்போன்ற பெரிய மனிதர் என்னிடம் உதவி வேண்டுவது எனக்குச் செய்யும் பெரிய அருள்தான். ஆனால் அதை நிறைவேற்றும் பாக்கியம் எனக்கு இல்லையே? ஆனந்தமான இந்த நாளில் உங்களுக்கு ஏமாற்றம் தருவது எனக்கு வருத்தமாகத்தான் இருக்கிறது."

இப்படிச் சொல்லிவிட்டுச் சேகரன் கையை அலம்பி முகத்தைத் துடைத்துக்கொண்டான்.

வீடு திரும்பி வந்ததும் அவன் மஞ்சுவிடம், "நீ அன்றைக்குச் சொன்னது அவ்வளவும் உண்மைதான், மஞ்சு! இவர்களுடைய உலகம் வேறு; நம்முடைய உலகம் வேறு. நாம் தவறிப் போய்க்கூட அந்த உலகில் காலடி எடுத்துவைக்கக் கூடாது!" என்றான்.

# 10

அன்று சாயந்தரம் சேகரன் பள்ளிக்கூடத்திலிருந்து இரண்டு மணிநேரம் முன்னதாகவே வீட்டுக்கு வந்துவிட்டான். வந்ததுமே குழந்தைகளை அழைத்துக்கொண்டு பார்க்கில் உலாவப் போனான்.

அவன் சீக்கிரமாக வந்தது மஞ்சுவுக்கு ஏற்கனவே ஆச்சரியமாக இருந்தது. அவன் வந்தவுடனே குழந்தைகளை அழைத்துக்கொண்டு வெளியே போனது அதையும்விட ஆச்சரியமாக இருந்தது.

அவன் சில நாளாகப் பள்ளியில் ஸ்பெஷல் வகுப்புகள் நடத்துவதில்லை. அதனால் அவனுக்கும் தலைமையாசிரியருக்கும் இரண்டொரு தடவை சச்சரவும் நடந்தது. ஆறுவது பாரத்து மாணவர்களுக்கு முக்கியமான விஷயங்களில் ஸ்பெஷல் வகுப்புகள் நடத்தியே ஆகவேண்டும் என்பது தலைமையாசிரியரின் சட்டம். பாடத் திட்டம் முடியாவிட்டாலோ, அல்லது மாணவர்கள் பரீட்சைக்குச் சரியாகப் படிக்காமல் இருந்தாலோ ஸ்பெஷல் வகுப்புகள் நடத்த வேண்டுவது அவசியம். ஆனால் தேவை இல்லாதிருக்கும்போது அதிக நேரம் பாடம்

சொல்வது, ஏற்கனவே பல விஷயங்களின் பளுவினால் திண்டாடும் மாணவர்களின் அறிவுக்கு மிதமிஞ்சிய வேலை கொடுப்பதாகும் என்பது சேகரனுடைய கொள்கை.

ஆதலால் தலைமையாசிரியர் அவனை ஸ்பெஷல் வகுப்பு நடத்தச் சொன்னபொழுது, "என் வகுப்பு மாணவர்கள் நன்றாகப் படித்திருக்கிறார்கள். அவர்களுக்கு எதற்கு ஸ்பெஷல் வகுப்பு?" என்றான்.

"பாடத்தைத் திருப்பிப் படித்ததுபோல ஆகும்."

"திருப்பிப் படிப்பதற்கு எல்லை இல்லையா? அதற்கு வாத்தியார் ஏதுக்கு? மாணவர்களின் சந்தேகத்தைப் போக்குவதற்கும் கேள்விகளுக்குப் பதில் எழுதுவதற்கும் வாரத்தில் இரண்டு அதிக வகுப்புகள் இப்போது எடுத்துக்கொள்கிறேன்; அதுவே போதும். தினமும் ஸ்பெஷல் வகுப்பு வேண்டியதில்லை."

தலைமையாசிரியருக்கு இந்தப் பேச்சுப் பிடிக்கவில்லை. ஆயினும் சேகரன் அதற்குப் பிறகு ஸ்பெஷல் வகுப்பு நடத்தவில்லை.

ஆகையால் எப்போதையும்விடச் சீக்கிரமாக அவன் வீட்டுக்கு வந்தது மஞ்சுவுக்குப் பெரிதாகத் தோன்றவில்லை. ஆனால் வந்ததும் அவளோடு பேசாமல் அவன் குழந்தைகளை வெளியே அழைத்துச் சென்றதுதான் அதிசயமாக இருந்தது. அவன் திரும்பி வந்தபோது சாப்பாடு தயாராக இருந்தது.

மஞ்சு குழந்தைகளுக்கு முன்னதாகச் சாப்பாடு போட்டு விடுவது வழக்கம். அதற்காக அவர்களைக் கூப்பிட்டபோது, தந்தையின் அருகில் உட்கார்ந்து ஏதோ ஒரு பத்திரிகையில் படம் பார்த்துக்கொண்டிருந்த ரஞ்சிதம், "நான் இன்று அப்பாவோடு சாப்பிடுகிறேன், அம்மா!" என்றாள்.

"ஏற்கனவே நீங்கள் சாப்பிட நேரமாகிவிட்டது. அப்புறம் தூக்கம் வரும். அவருக்கு இன்னும் நேரம் இருக்கிறது. வாருங்கள், சாப்பிட!" என்றாள் மஞ்சு.

அவள் கூப்பிட்டதுமே நந்து எழுந்தான். ஆனால் ரஞ்சிதம் என்ன நினைத்தோ அசையாமல் உட்கார்ந்திருந்தாள்.

குழந்தைகள் கட்டுப்பாட்டை மீறுவது மஞ்சுவுக்கு அடி

யோடு பிடிக்காது. ஆனால் குழந்தைகளை அடிப்பதையும் அவள் விரும்ப மாட்டாள். ஆகையால் அவள் கோபத்தோடு, "இப்பொழுது நீ சாப்பிட வராவிட்டால் பட்டினியாகத்தான் தூங்க வேண்டும்!" என்றாள்.

ரஞ்சிதம் தந்தையை அணைத்துக்கொண்டு, "நான் அப்பாவின் இலையில் சாப்பிடப் போகிறேன்" என்றாள்.

சேகரன் அவளை விரட்டி அனுப்ப வேண்டுமென்று மஞ்சுவுக்குத் தோன்றிற்று. அவன் ஒன்றும் பேசாமல் இருக்கவே, அவள் நந்துவை அழைத்துக்கொண்டு உள்ளே போனாள்.

நந்து சாப்பிட்டுத் தூங்கியதும் அவள் சேகரனைக் கூப்பிட வந்தாள். அதற்குள் ரஞ்சிதம் தூங்கிவிட்டாள்.

"அப்பொழுதே நீங்கள் மிரட்டியிருந்தால் இவள் சாப்பிட்டிருப்பாள். இப்போது தூங்கிவிட்டாளே!" என்றாள் மஞ்சு.

சேகரன் அவளை எழுப்பிப் பார்த்தான். அவள் சிறிது தூக்கம் விழித்து, "நாளைக்கு உங்களுடன் சாப்பிடுகிறேன், அப்பா!" என்று சொல்லிப் படுத்துவிட்டாள்.

அவளை மெதுவாக எடுத்து நந்துவின் அருகில் படுக்க வைத்த சேகரன், "எப்படியும் இன்று இவளை நீ பட்டினி போடுவதாகத்தான் இருந்தாய்! அம்மாவின் கட்டுப்பாட்டை மீறியதற்காக இவளுக்குத் தண்டனை கிடைத்துவிட்டது" என்றான்.

"தன் குழந்தை பட்டினியாகத் தூங்கவேண்டும் என்று எந்தத் தாயும் ஒருபோதும் நினைக்க மாட்டாள். இவள் இன்று நாள் முழுவதும் ஓடியாடி விளையாடி யிருக்கிறாள். இரவில் இவளாக எழுந்திருக்கும்போது பாலாவது கொடுக்க வேண்டும்" என்று சொல்லிக்கொண்டே ரஞ்சிதத்துக்குக் கம்பளியைப் போர்த்தினாள் மஞ்சு.

**பி**றகு அவர்கள் இருவரும் சாப்பிடப் போனார்கள். மஞ்சு பேசாமல் இருந்தாள். அவளுக்குச் சாப்பாட்டில் மனம் இல்லாததைக் கண்ட சேகரன், "ரஞ்சிதம் சாப்பிடாமல் தூங்கியதற்காகவா இவ்வளவு நேரம் சிந்திக்கிறாய்?" என்றான்.

"அதில் சிந்திப்பதற்கு என்ன இருக்கிறது? நான் ஏதோ கோபத்தில் சொன்னது அப்படியே நடந்துவிட்டதே!" அவள் முகம் சோர்ந்திருந்தது.

"நான் உண்மையிலேயே சிந்திக்க வேண்டிய ஒரு செய்தியை இன்று உனக்குச் சொல்லப்போகிறேன்!" என்று அவன் ஏதோ வேடிக்கையாகச் சொன்னான். ஆனால் அவளுடைய சோர்வு மறைந்து அவள் கண்களில் ஆவல் எழுந்தது.

"அது என்ன செய்தி?"

அதற்குள் வெளியே பலமான இடியோசை கேட்டது. வேகமான காற்றில் கதவுகளும் ஜன்னல்களும் படபடவென்று அடித்துக்கொண்டன. மஞ்சு திடீரென்று இலையிலிருந்து எழுந்து நடு அறைக்குப் போய், குழந்தைகளைத் தட்டிவிட்டு வந்தாள். அவ்வளவு காற்றிலும் அவர்கள் கவலையற்றுத் தூங்கினார்கள். சிறிது நேரத்துக்கெல்லாம் சோவென்று மழை பெய்தது.

"இன்று சாயந்தரமே புயல் வரும்போலத்தான் இருந்தது!" என்றான் சேகரன்.

"அதனால்தான் குழந்தைகளைப் பார்க்குக்கு அழைத்துப் போனீர்களோ? ரஞ்சிதத்தின் கழுத்தில் மப்ளர்கூடச் சுற்றாமல் அழைத்துக்கொண்டு போனீர்கள். அவளுக்கு இந்தக் குளிர் அடியோடு ஆகாது!"

"எனக்கு இன்று மிகவும் வெறுப்பாகப் போய்விட்டது. குழந்தைகளோடு விளையாடினால் தெம்பு வரும் என்று பார்த்தேன்."

"குழந்தைகளால் அந்த உபயோகமாவது இருக்கிறதே! சரி, நீங்கள் ஏதோ செய்தியைப் பற்றிச் சொன்னீர்களே. அது என்ன?"

"அது அவ்வளவு முக்கியமானதும் அல்ல; எதிர்பாராததும் அல்ல. இன்று நான் ராஜீநாமாச் செய்துவிட்டேன், மஞ்சு!"

"ராஜீநாமாவா?"

"ஆமாம். பள்ளிக்கூடத்துக்கு விடைகொடுத்து வந்துவிட்டேன்."

மஞ்சு தன் வருத்தத்தை மறைக்க முயன்று, "ஏன், தலைமை ஆசிரியர் ஏதாவது கண்டபடி பேசினாரா?" என்றாள்.

"அப்படி ஒன்றும் இல்லை. இரண்டு மாதமாகவே அவர் ஸ்பெஷல் வகுப்பைப்பற்றி என்னைத் தொந்தரவு படுத்துகிறார்.

இன்று பகலில் என்னைத் தமது அறைக்குக் கூப்பிட்டு, 'தினமும் தனி வகுப்பு நடத்த வேண்டும்' என்றார். 'என் மாணவர்கள் நன்றாகப் படித்திருக்கிறார்கள். பரீட்சையிலும் நன்றாக எழுதியிருக்கிறார்கள். அவர்களுக்குத் தினமும் ஸ்பெஷல் வகுப்புத் தேவையில்லை' என்றேன். அவர் ஒரே அடியாகக் கொதித்தெழுந்து, 'உங்களுக்குப் பள்ளிக்கூடத்தில் அடியோடுஅக்கறை இல்லை, சேகர்! வெளி உத்தியோகங்களில்தான் அதிகப் பற்று இருக்கிறது. உங்களைப் போன்ற வாத்தியார்களினால் பள்ளிக்கூட ஒழுங்கு கெடுகிறது' என்றார். 'என்றால் பள்ளிக் குத் துளியும் தீங்கு நேர வேண்டாம்' என்று சொல்லி அங்கேயே ராஜீநாமாவை எழுதிக் கொடுத்துவிட்டேன்.''

''அதை அவர் ஒப்புக்கொண்டாரா?''

''அது எப்படித் தெரியும்? அவர் ஒன்றும் பேசவேயில்லை; பள்ளிக்கூடம்விடும்வரைக்கும் ஒன்றும் தெரிவிக்கவும் இல்லை.''

''அப்படியானால் பள்ளிக்கு விடைகொடுத்ததாக நீங்கள் எப்படிச் சொல்ல முடியும்?''

''ஏன், நான்தான் ராஜீநாமாக் கொடுத்திருக்கிறேனே!''

''அவர் அதை ஏற்றுக்கொள்ளும் வரையில் நீங்கள் வேலைக்குப் போக வேண்டாமா?''

''அவசியமே இல்லை. அவர் அதை ஏற்றுக்கொள்ளாவிட்டால் எனக்குத் தெரிவிப்பார். பிறகு என்ன செய்யலாம் என்று யோசிப்போம்.''

''நாளைக்குப் பள்ளிக்கூட நேரம்வரைக்கும் அவர் பதில் அனுப்பாவிட்டால் நீங்கள் வேலைக்குப் போகலாமே.''

''அது எப்படி? ராஜீநாமாக் கொடுத்த பிறகு இனி எனக்கு எவ்விதமான பொறுப்பும் இல்லை.''

''அதை ஏற்றுக்கொண்டதாக அவர் உங்களுக்குத் தெரிவித்தாரா? அதுவரைக்கும் நீங்கள் வேலைக்குப் போக வேண்டாமா?''

''வேண்டாம்! அது அவசியமே இல்லை!''

''நீங்கள் பேசுவது எனக்கு விளங்கவில்லை!''

''நான் ராஜீநாமாச் செய்தது உனக்குப் பிடிக்கவில்லை; அப்படித்தானே?'' என்று சேகரன் கோபத்தோடு கேட்டான்.

அவள் பேசாமல் தலையைத் தொங்கப் போட்டுக்கொண்டு சாப்பாட்டை முடித்தாள்.

"தலைமை ஆசிரியர் என்னை எப்படி நடத்தினாலும் அதைப் பொறுத்துக்கொண்டு நான் பேசாமல் வேலைசெய்ய வேண்டும் என்பது உன் எண்ணமா, மஞ்சு? பெண்கள் எவ்வளவுதான் படித்தாலும் அவர்களுடைய சுபாவம் போவதில்லை. ஆண் எப்போதும் ஒரு லட்சியத்துக்காக, ஒரு தத்துவத்துக்காகப் போராடுகிறான். பெண் எப்போதும் பாதுகாப்பைத்தான் தேடுகிறாள். வாழ்வில் வேறு எதையும் அவள் விரும்புவதில்லை. தன் குடித்தனம், தன் பாதுகாப்பு-இதற்குமேல் அவளுடைய பார்வை செல்வதில்லை. மஞ்சு, நீ இப்படி இருப்பாய் என்று நான் எதிர்பார்க்கவில்லை!"

அப்பொழுதும் அவள் பேசவில்லை.

"ராஜீநாமாச் செய்ததற்காக நீ என்னைப் பாராட்டுவாய், பக்க பலமாக இருப்பாய் என்ற பிரமையிலும் மகிழ்ச்சியிலும் நான் இருந்தேன்."

அவன் மேலே ஏதோ பேசுவதற்குள் "மஞ்சு, மஞ்சு!" என்ற கூக்குரல் கேட்டது. கதவும் ஓசைப்பட்டது. மழையின் சத்தத்தில் அந்த ஓசை அவர்கள் காதில் விழவில்லை.

"மஞ்சு, மஞ்சு! சீக்கிரம் கதவைத் திற! நான் தெப்பமாக மழையில் நனைகிறேன்!"

"அண்ணா வந்திருக்கிறான் போல இருக்கிறது!" என்று சொல்லி, மஞ்சு இலையிலிருந்து எழுந்து வாசலுக்குப் போனாள்.

அவள் கதவைத் திறந்ததும், உள்ளே வேகமாகக் காற்று வீசியது. தலையிலிருந்து கால்வரைக்கும் தெப்பமாக நனைந்த ராமநாதன் உள்ளே புகுந்தான்.

கதவைப் போட்டுவிட்டு அவள் அவனைப் பார்த்தாள். அவனுடைய அங்கியிலிருந்து நீர் சொட்டியது.

"இவ்வளவு மழையிலும் காற்றிலும் எங்கே அண்ணா போயிருந்தாய்?"

"இன்றைக்கு ராஜாராம் வாசகசாலையில் ஒரு கூட்டம். மழை வரும்போலத் தோன்றியதால் இங்கே வரப் புறப்பட்டேன். வழியிலேயே நல்ல மழை பிடித்துக்கொண்டது"

என்று சொல்லி, தன் தலையில் இருந்த தண்ணீரை விரல்களினால் வழித்து விட்டுக்கொண்டே அவன் சிரித்தான்.

"இரு; நான் உனக்கு வேறொரு வேட்டி கொண்டு வருகிறேன்."

"வேட்டி எதற்கு? என் அங்கி ஒரு ரெயின் கோட்டைப் போல. அதை நான் ஒருபொழுதும் துவைப்பதில்லை, ஆதலால் தண்ணீர் சிதறிவிடுகிறது. என் சட்டையும் அரை நிஜாரும் உலர்ந்துதான் இருக்கின்றன. எனக்குச் சீக்கிரம் சாப்பாடு போடு. சாப்பிடுவதற்குள்ளேயே அங்கியும் உலர்ந்துவிடும்" என்று கூறியபடி அவள் பின்னாலேயே அவன் சமையலறைக்குச் சென்றான்.

"நமஸ்காரம், சேகர் ஸார்!" என்று அவன் கிண்டலாகவும் கலகலவென்று நகைத்துக்கொண்டும் சொன்னான்.

சேகரன் பேசாமல் எழுந்து கையலம்பப் போனான்.

மஞ்சு இலையைப் போட்டதும் ராமு உட்கார்ந்தான். சேகரன் அவளிடமிருந்து வெற்றிலை பாக்கை வாங்கிக்கொண்டு சமையலறைக்கு வெளியே சென்றான்.

ராமு சாப்பிட்டுக்கொண்டே, "சேகரன் இன்று ராஜீநாமாச் செய்ததாகக் கேள்விப்பட்டேன்" என்றான்.

"உன்வரைக்கும் எப்பொழுது வந்தது இந்தச் செய்தி?"

"இன்று சாயந்தரம் ஹோட்டலில் தெரிந்தது. என் தந்தி, டெலிபோனை விட வேகமாக வேலை செய்யுமே மஞ்சு!" என்று கூறி, அவன் சிரித்தான். பிறகு, "அந்த முட்டாள் தலைமை ஆசிரியருக்குச் சரியான வேலை காட்டியதற்காக நான் சேகரனைப் பாராட்டுவதாக இருந்தேன். ஆனால் அவன் ஏதோ கோபமாக இருப்பது தெரிந்தது. ராஜீநாமாச் செய்ததற்காக அவன் வருந்துகிறானோ? மஞ்சு, வேலையை உதறித் தள்ளிவிட்டு மறுபடி ஆனந்தமாக வாழ்வைக் கழிப்பது சுலபமல்ல. இந்த ராமநாதன் ஒருவன்தான் அப்படிப்பட்ட வீரச் செயலைச் செய்ய முடியும்!" என்றான்.

மஞ்சு அதற்கு ஏதோ பதில் சொல்வதற்குள் அடுத்த அறையிலிருந்து சேகரனுடைய குரல் கேட்டது: "நான் சற்று உலாவிவிட்டு வருகிறேன், மஞ்சு! கதவைப் போட்டுக்கொள்."

சேகரன் வெளியே புறப்பட்டபொழுது வானம் தெளிந்திருந்தது. மழைத்துளி ஒன்றிரண்டு எப்பொழுதாவது விழுந்தது. கறுப்பும் வெளுப்புமான முகிற் கூட்டம், கொட்டிய பஞ்சுக் குவியலைப்போல், கீழ்த்திசையில் மெதுவாகச் சென்றது. அதற்குமேல் நான்காம் பிறை மிக அழகாகத் தெரிந்தது. முகில் அதைத் தாண்டிச் சென்றபோது அது பல துணுக்குகளாகத் தோன்றியது.

''மழைத் துளிகள் சிந்திய மரக்கிளைகள் நிலவில் ஒளி வீசின. மழையும் நிலவும் கலந்த இயற்கை, இப்போதுதான் ஸ்நான அறையிலிருந்து உடம்பைத் துடைத்துக்கொண்டு, கூந்தலிலும் சேலையிலும் தண்ணீர் சொட்ட வெளியே வரும் அழகியைப் போல, நிர்மலமாகவும் மகிழ்ச்சியுற்றும் இருந்தது.

சேகரன் திடீரென்று வீட்டைவிட்டுக் கிளம்பியது, இன்ன இடத்துக்குப் போக வேண்டும் என்ற நோக்கத்தோடு அல்ல. மஞ்சுவின் மௌனத்தினால் கொதித்த அவன் மனத்துக்கு, ராமு வந்ததும் இனி ஒரு கணங்கூட வீட்டில் தங்கக்கூடாது என்று தோன்றிற்று. அந்த ஆத்திரத்தோடு அவன் வெளியே புறப்பட்டான். நிலவு வெளிவந்ததுமே தெரு விளக்குகள் அணைந்தன. சில பங்களாக்களில் பளிச்சிட்ட விளக்குகளும், ரேடியோவிலிருந்து வந்த இன்னிசையும், தெருவில் சிலர் பேசிச் செல்வதும், தன்னைச் சுற்றி மனிதர் இருப்பதை அவனுக்கு உணர்த்தின. இடையே ஏதாவது ஒரு கார் ஓடி, அதன் விளக்கொளியால் அவன் கண்கள் கூசும். இந்த மனிதச் சந்தடியிலிருந்து தொலைவில் சென்று முழுத் தனிமையிலே இருக்க அவன் விரும்பினான். எனவே அவன் பார்க்கைச் சுற்றிக் கொண்டு ஜெயில் ரோடுக்கு வந்தான்.

எந்தக் குறிப்பிட்ட இடத்துக்கும் செல்லும் நோக்கமின்றி அவன் வேகமாக நடந்தான்.

சற்று நேரத்துக்கு முன்பு அவன் காதில் விழுந்த விதம் விதமான ஒலிகள் மெல்ல மெல்ல அடங்கின. பேச்சற்ற தனிமை அவனுக்கு நீண்டநேரம் கிடைக்கவில்லை. சிறிது தூரம் சென்றதும் பசுக்களின் கழுத்தில் கட்டியிருந்த மணிகளின் ஓசை அவனுக்கு இனிமையாகக் கேட்டது. கன்றுக்குட்டி கூவுவதும்,

தாய்ப் பசு அதற்குக் குரல் கொடுப்பதும் அவன் உள்ளத்தைக் கவர்ந்தன.

சற்றுத் தள்ளியிருந்த ஒரு வீட்டிலிருந்து பஜனைக் குரல் காதில் விழுந்தது: 'என் துயரம் யாரறிவார்?'

அந்த இன்னிசை அவனை மயக்கியது. அந்தக் குரலில் ஏக்கமும் கனிவும் நிரம்பியிருந்தன. அந்தப் பஜனை முழுவதை யும் கேட்க வேண்டுமென்று அவன் அந்த வீட்டை நோக்கி விரைந்தான்.

வீட்டின் ஜன்னல் வழியே இன்னிசையோடு விளக்கு வெளிச்சமும் வெளிவந்தது. வெளியில் இருந்த தாழ்வாரத் தில் ஒரு கம்பத்தில் சாய்ந்துகொண்டு அவன் அந்தப் பாடலைக் கேட்டான்.

பாட்டின் போக்கிலே உருகிப்போன அவன் கம்பத்தில் தொங்கிய பலகையைக்கூடப் படித்துப் பார்க்கவில்லை. பஜனை முடிந்ததும் அவனுக்குத் தன் உணர்வு வந்தது.

'இப்படி நாம் நிற்பதை யாராவது பார்த்தால் என்ன நினைப்பார்கள்? வீட்டிலிருந்து யாராவது கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தால் நம்மிடம் சந்தேகந்தானே தோன் றும்?' என்று அவன் நினைத்தான்.

அங்கிருந்து அவன் புறப்பட்டபோது அவன் பார்வை, பலகையில் பொறித்த வெண்மையான எழுத்துக்களின் மேல் விழுந்தது—'முத்து, பி. ஏ.'

இதைப் படித்ததும் அவன் அசையாமல் அங்கேயே நின் றான். ஆனால் அடுத்த கணமே அங்கிருந்து ஓடிவிட வேண்டும் என்று அவனுக்குத் தோன்றிற்று. இரவில் அந்த வேளையில் அவன் அங்கே நிற்பதை யாராவது பார்த்தால் எவ்வளவு தவறாக நினைப்பார்கள்?

அதே நிமிஷத்தில் அந்த வீட்டின் வாசற் கதவு திறந்தது. வராந்தாவில் இருந்த விளக்கை யாரோ போட்டார்கள்.

வேறு வழியின்றி, சேகரன் எதிரே பார்த்தான்.

வாசற்படியில் நின்ற ரஜனி அவனையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தாள். அந்தப் பார்வையில் எவ்விதமான சந்தேக மும் எவ்விதமான கூச்சமும் இல்லை. வியப்பு மிகுந்த குறு

குறுப்பினுலும், ஆவல் மிகுந்த மகிழ்ச்சியினுலும் அந்த அச்ச மற்ற கண்கள் மலர்ந்திருந்தன.

"யார்? சேகரா! இங்கே வந்து எப்படி நிற்கிறீர்கள்? எப் பொழுது வந்தீர்கள்? ஒரு குரல் கூப்பிடுவதற்கு என்ன? ஏன் இந்த வீண் சங்கோசம்?"

அவளுடைய இந்தக் கேள்விகள் அவனை மயக்கத்திலிருந்து எழுப்பின.

"நீங்கள் இங்கே இருக்கிறீர்கள் என்று எனக்குத் தெரி யாது!" என்று அவன் பேசினன்.

"பின்னே இங்கே யாரைப் பார்க்க வந்தீர்கள்?"

"நான் யாரைப் பார்க்கவும் வரவில்லை. என் நடவடிக்கை உங்களுக்குப் பைத்தியம்போல் தோன்றும். பஜனையின் இன் னிசையைக் கேட்டு மயங்கிப் போய் இங்கே வந்தேன்."

"ஏதோ நாவலில் படிப்பது போல இருக்கிறதே இந்தச் சம்பவம்! இனிமேல் எங்கள் வீட்டுக்குக் காவற்காரன் வைக்க வேண்டும்! என் குரல் கவர்ச்சிகரமாக இருப்பது இன்று வரைக்கும் எனக்குத் தெரியவில்லை. தவறிப் போய் வந்தது வந்தீர்கள்; எங்கள் வீட்டில் சிறிது நேரம் இருந்துவிட்டுப் போங்கள்."

அவள் இப்படிச் சிரித்துக்கொண்டே சொன்னதும், சேகரன் படிகளில் ஏறி மறுபடி வராந்தாவுக்கு வந்தான். அவர்கள் இருவரும் அவள் படிக்கும் அறைக்குச் சென்றூர்கள்.

மேஜைமேல் லேசான கிளிப்பச்சை வர்ணமுள்ள மூடி போட்ட மின்சார விளக்கு ஒளிர்ந்தது. தாடி வளர்ந்து, சிந்தனை யில் ஆழ்ந்திருந்த ஒரு கிழவருடைய படம் மேஜையின் நடுவில் இருந்தது. அதைச் சுற்றி ரோஜா மாலை அலங்கரித்திருந்தது. மேஜைக்கு ஒரு புறத்தில் எழுதுவதற்கு வேண்டிய கருவிகளும், மறுபுறத்தில் புத்தகங்களும் வைத்திருந்தன. மேலே சுவரில் ஓர் இளைஞனுடைய முகத்தின் ஒருபுறத்தைக் காட்டும் புகைப் படம் மாட்டியிருந்தது. இந்த இரண்டு படங்களைத் தவிர அந்த அறையில் அலங்காரப் பொருள் வேறு எதுவும் இல்லை. அறை யின் ஒரு மூலையில் அழகிய துணியால் சுற்றிய தம்புராவும், அதன் பக்கத்திலேயே தபலாவும் இருந்தன.

மேஜைக்கு அருகில் இருந்த நாற்காலியில் அவள் உட்கார்ந்து எதிரே இருந்த நாற்காலியில் அவனை அமரச்செய்தாள்.

கோவிந்தனுடைய பங்களாவில் அவர்கள் சந்தித்து இப்போது மூன்று மாதங்கள் ஆயின. அப்போது நாலைந்து நிமிஷமே அவர்கள் பேசியிருப்பார்கள்.

இன்றுதான் முதல் முதலாக அவர்கள் இருவரும் தனிமையில் சந்தித்து எதிரெதிராக அமர்ந்திருந்தார்கள்.

சிறிது நேரம் இருவருமே ஒன்றும் பேசவில்லை. எதிர்பாராதபடி ஆச்சரியமாக நேர்ந்த அந்தச் சநதிப்பு அவர்கள் மனத்தைக் கலக்கிப் பேசவொட்டாதபடி செய்தது. ஆனால் அந்தச் சிறிது நேரத்தில் ஒருவரை மற்றவர் நன்ருகக் கூர்ந்து பார்த்துக்கொண்டார்கள்.

சேகரன் அணிந்திருந்த கவர்ச்சிகரமான கம்பளிச்சட்டை அவனுடைய நீண்ட கழுத்தின் புஷ்டியையும், அகன்ற வலிய மார்பையும் எடுத்துக் காட்டியது. அதைப் பார்க்க அவனுடைய முகம் குறுகலாகவும் சிறியதாகவும் இருநதது. ஆனால் காற்றில் அலைந்த அவனுடைய கருங்குழலும், அகன்ற நெற்றியும், ஒளி வீசிய கண்களின் மென்மையும் மோகனமாக இருந்தன. அந்தி நேரத்து மங்கிய ஒளியில் வானத்தையளாவும் மலையுச்சியிலும், நிலாவெளிச்சத்தில் அமைதியான பொய்கையிலும் தோன்றும் நீல நிறம் அந்தக் கண்களில் புலப்பட்டது. ஆவேசமும் வருத்தமும் தோய்ந்த அநதக் கண்களைப் பார்த்ததும், 'என்ன உன்னதமான கற்பனைகள், இந்தக் கண்களின் வாயிலாக உலகத்தைப் பொறுமையோடு எட்டிப் பார்க்கின்றன! லட்சியம் பேசும் இநதக் கண்கள் எந்தக் கொடிய அநுபவங்களினால் இப்படி இடிந்திருக்கின்றன?' என்று ரஜனி நினைக்கலானாள்.

தன் மன நிலையை அவன் உணரக்கூடாது என்று எண்ணியோ என்னவோ, "என் பாட்டில் உங்களுக்கு இவ்வளவு பிடிக்கும்படியாக என்ன இருக்கிறது?" என்று அவள் திடுமென்று கேட்டாள்.

"அந்தக் குரல் இனிமையாக இருந்தது. மேலும் அதில் என்னை நானே மறநதுவிடுவதற்கு என் மன நிலையும் காரணமாக இருக்கலாம்."

"மன நிலையா? உங்கள் மனம் அமைதியற்றிருப்பதற்கு என்ன நடந்தது? உங்களுக்கு ஏதாவது தொந்தரவு இருக்கிறதா?" என்று அவள் பரிவோடு கேட்டாள். உடனே தன்னைச் சமாளித்துக்கொண்டு, "என்னை மன்னிக்க வேண்டும். உங்கள் சொந்த விஷயத்தை நான் கேட்பது சரி இல்லைதான்!" என்றாள்.

"சேச்சே! இதில் சொந்த விஷயம் இல்லை. இன்றுதான் நான் என் வேலையை ராஜீநாமாச் செய்திருக்கிறேன்."

பிறகு அவள் கேட்டதும் அவன் அந்தச் செய்தியைச் சுருக்கமாகக் கூறினான்.

அதற்கு அவள், "நீங்கள் மிகவும் பொருத்தமாகத்தான் செய்திருக்கிறீர்கள், சேகர்! தனி நிர்வாகப் பள்ளிகளில் பெரும்பாலும் இத்தகைய தொந்தரவுதான் நேருகிறது. நான் இந்தூரில் வேலை செய்த பள்ளியின் தலைமை ஆசிரியை பழங்காலத்து பி. ஏ. தன்னைவிடப் படித்தவளையோ, மாணவிகளுக்குப் பாடஞ் சொல்லுகிறவளையோ கண்டால் அவளுக்கு ஆகாது. அப்படிப்பட்ட வாத்தியாரம்மாளுக்கு அவள் பல தொந்தரவுகளைக் கொடுத்து, வேலையை விட்டுப் போகும்படி செய்வாள். கடைசியில் அந்தப் பள்ளிக்குச் சர்க்கார் உதவியே சரியாகக் கிடைக்கவில்லை. இது ஒரு வகையான அறிவுச் சுரண்டல். சுய மதிப்புடைய யாரும் இதை ஓங்கவிடக்கூடாது. சரி, இனி என்ன செய்வதாக உத்தேசம்?" என்றாள்.

"இன்றுதானே ராஜீநாமாக் கொடுத்திருக்கிறேன்? இப்பொழுதே எப்படிச் சொல்ல முடியும்?"

"இன்று காலையில் பம்பாயிலிருந்து ஒரு பிரசித்த இன்ஷ்யூரென்ஸ் கம்பெனியின் பிரதிநிதி என்னிடம் வந்திருந்தார். அவருக்கு இந்த மாகாணத்தில் பிரசாரம் செய்யப் பெண் ஏஜெண்டுகள் தேவையாம். அந்த வேலையை ஏற்றுக்கொள்ளும்படி அவர் என்னை வற்புறுத்தினார். ஆனால் எனக்கு இந்த மாதிரி வேலைகளில் ஆசை இல்லை. அதனால் மறுத்துவிட்டேன். ஆயினும் நாளைக்கு என்னைப் பார்க்க வரப்போகிறார். அவரிடம் உங்களைப் பற்றிக் கேட்கட்டுமா? அந்தக் கம்பெனிக்கு ஒருவேளை ஏஜெண்டுகள் தேவையாக இருக்கலாம்."

சேகரன் ஒன்றும் பதில் சொல்லவில்லை. அவனுடைய அகன்ற கொழுகொழுவென்ற கைகள் நடுங்கின. தான் ராஜீநாமாச் செய்ததாக மஞ்சுவிடம் சொன்னதும் அவள் வருத்தப்பட்டதையும், அதனால் வெறுப்புற்றுத் தான் வெளியில் வந்ததையும் ரஜனியிடம் சொல்லிவிடலாமா என்று அவன் விரும்பினான். ஆனால் அடுத்த கணமே அவன் தன் மனத்தை அடக்கிக்கொண்டு அமைதியாக, "அவ்வளவு கவலைப்படுவதற்கு ஒன்றும் இல்லை. வேலையே கிடைக்காவிட்டாலும் நான் வேறு வழி ஏதாவது பார்த்துக்கொள்வேன். எனக்கு ஏதோ கொஞ்சம் எழுதத் தெரியும். அதற்குச் சிறிது மதிப்பும் நாளுக்கு நாள் ஏற்பட்டு வருகிறது" என்றான்.

"ஆமாம், பழங்காலத்தில் நாடக ஆசிரியர்களுக்கு இருந்த மதிப்பு இப்போது கதாசிரியர்களுக்கு ஏற்பட்டிருக்கிறது. சினிமாத் தொழிலில் இறங்கும் யோசனை உங்களுக்கு உண்டா?"

இதைக் கேட்டுத் திடுக்கிட்ட சேகரன், "எதைக் கொண்டு இப்படிக் கேட்கிறீர்கள்?" என்றான்.

"இல்லை; நானாக நினைத்தேன். கோவிந்தனும் பம்பு ஸேட்டும் சினிமாக் கம்பெனி ஆரம்பிக்கப் போகிறார்களே; அதனால்—"

"அது உங்களுக்கு எப்படித் தெரியும்?"

"அவர்களே சொன்னார்கள். தமது கம்பெனியில் நடிகையாக நடிக்கும்படி வேண்டிக்கொள்ள இங்கே வந்திருந்தார்கள்" என்று கூறி அவள் களுக்கென்று சிரித்தாள்.

மேலும் அவள் தொடர்ந்து பேசினாள்: "விருந்தன்று நாம் சந்தித்தோமே. அன்றையிலிருந்து அவர்கள் இருவரும் ஏதாவது ஒரு காரணம் வைத்துக்கொண்டு அடிக்கடி என்னிடம் வருகிறார்கள். கிறிஸ்துமஸின்போது சரளா அம்மாள் ஒரு நாள் இரவு என்னைச் சாப்பிட அழைத்தாள். அன்று பம்பு ஸேட்டும் அங்கே வந்திருந்தார். சாப்பாடு ஆனதும் கோவிந்தன் என்னைக் காரில் கொண்டுவிடப் புறப்பட்டார். வண்டி பங்களாவுக்கு வெளியே வந்ததும், 'இன்று நிலா எவ்வளவு ஜோராக இருக்கிறது, புது மணப்பெண்ணின் அன்பைப்

போல! நாம் சற்று உலாவிவிட்டுப் போகலாமே' என்ருர். 'அரைமணிநேரம் உலாவ எனக்குத் தடை இல்லே; ஆனல் பத்து மணிக்குள் நான் வீடு போய்ச் சேரவேண்டும்' என்றேன். கார் நேரே மவுண்ட் ஹோட்டலுக்குப் போயிற்று.''

''உங்களோடு ஸேட்டும் இருநதாரு?''

''அவர் இல்லாமலா? அவரும் கோவிந்தனும் இணைபிரியா தவர்கள் ஆச்சே! அங்கே போனதும் கோவிநதன் என்னை மது பானம் செய்ய வற்புறுத்திஞர். நான் மறுத்துவிட்டேன். 'உங் கள் கொள்கையிலிருந்து, நீங்கள் இதை மறுக்க மாட்டீர்கள் என்று நினைத்தேன்' என்ருர் கோவிந்தன். 'கொள்கை வேறு, சாப்பாடு வேறு' என்று நான் சொன்னதுந்தான் அவர் அந்தப் பேச்சை விட்டார். நாம் இருவரும் அடிக்கடி சந்திப்பதாக அவர்கள் எண்ணம். உங்கள் பெயரைச் சொல்லி அவர்கள் என்னைக் கம்பெனியில் சேரச் சொன்ஞர்கள்.''

''என் பெயரைச் சொல்லியா? அதெப்படி?''

''அவரை டைரெக்டராக்கப் போகிரும் என்ருர்கள்.''

''அப்படியா! நீங்கள் அவர்களுக்கு என்ன பதில் சொன் னீர்கள்?''

''முடியாது என்று மறுத்துவிட்டேன். மறுநாள் சரளா எங்கள் வீட்டுக்கு வந்து அதையே பேசிஞள். அவளும் உங்கள் பெயரை எடுத்தாள்.''

''அதெப்படி?''

'''சேகரன் எழுதிய கதையில் கதாநாயகியாக நடிக்க உங்க ளுக்கு விருப்பமில்லேயா? அவர் கதைகள் உங்களுக்கு மிகவும் பிடிக்குமே' என்ருள். அதற்கு நான், 'உதயசங்கரின் நாட்டியம் என்ருல் உங்களுக்கு உயிர்; அதனுல் நீங்கள் அந்த நாட்டியக் குழுவில் சேருவீர்களா?' என்றேன். முதலில் அவள் பதிலே சொல்லவில்லே. பிறகு, 'அவருடைய கதைகளை நீங்கள் நன்ரு கப் புகழ்ந்துகொண் டிருப்பதனல், அந்தக் கருத்தை நடிப்பில் வெளியிட உங்களால் நன்கு முடியுமே என்றுதான் இவ்வளவு வேண்டுகிறேன்' என்ருள். 'உங்களுக்குத்தானே சேகர னுடைய கதைகள் பிடிக்கும்?' என்று நான் சொன்னேன். அவள் எதனுல் அப்படிப் பேசிஞள் என்று தெரியவில்லே.''

"இப்பொழுதுதான் எனக்கு எல்லாம் விளங்குகிறது. என்னிடமும் அவர்கள் உங்களைப்பற்றிச் சொன்னார்கள். எனக்கு அந்தக் கம்பெனியில் என்ன வேலை, தெரியுமா?"

"என்ன வேலை?"

"நடிகைகளைச் சம்பாதிப்பது!"

இதைக் கேட்டதும் அவள் சிரித்தாள்; அவனும் சிரித்தான்.

"மனிதர்கள் வெளிக்குத் தெரிவதுபோல உள்ளூற இருப்பதில்லை. சினிமாத் தொழிலுக்குப் போக உங்களுக்கு விருப்பம் இல்லையே?" என்று அவள் கேட்டாள்.

"நான் இன்னும் அதைப்பற்றிச் சிந்திக்கவில்லை. ஆனால் இந்த வேலையை விட்டதனால் வருந்தும்படியாகவோ, கவலைப் படும்படியாகவோ ஏதும் இல்லை!"—இதைச் சொன்னதும் பரபரப்போடு அவன் கடிகாரத்தைப் பார்த்தான். "மணி பதினொன்று ஆகப்போகிறது. நான புறப்படவேண்டும்!" என்றான்.

அவள் உடனே எழுந்து, "பார்க் வரைககும் உஙகளைக் கொண்டு விட்டு வருகிறேன். எனக்கும் நிலாவில் உலாவியதாக இருக்கும். இன்று மப்பும் மந்தாரமுமாக இருந்ததனால் சாயந்தரம் உலாவப் போகவில்லை" என்றாள்.

விலகியிருந்த சேலைத் தலைப்பை அவள் இழுத்துக் கெட்டியாகச் செருகிக்கொண்டாள். பாட்மிண்டன் ஆடியதனால் பருத்திருந்த அவள் கையையும், தலைபபை இழுத்துக் கொண்டதனால் விம்மித் தோன்றிய மார்பையும் சேகரன் கவனித்தான். பிறகு அவள் கூந்தலைக் கோதிக்கொண்டதையும், புடைவையை இழுத்துச் சரிப்படுத்திக்கொண்டதையும், மின்னலைப் போன்ற அவளுடைய அசைவையும் பார்த்தபோது, 'கருமையின் எழிலெல்லாம் இன்று நம் எதிரே வந்து நிற்கிறதோ!' என்று அவனுக்குத் தோன்றிற்று.

காற்று, சுகமாக வீசியது. மழைபெய்து ஓய்ந்திருந்ததனால் எங்கும் குளுமையாக இருந்தது. குயில் கூவும் மாமரத்திலிருந்து மலரின் மணம் வீசி, இளவேனிலின் வருகையை அறிவித்தது. முகில்கள் கலைந்தன. நடுநடுவே கீழ்த் திசையில் மின்னல் பளிச்சிட்டது. தவளையும் ஆந்தையும் இடையிடையே ஏதாவது பறவையும் பரப்பிய ஒலியைத் தவிர, எங்கும் ஓரே

அமைதியாக இருந்தது. அந்த அமைதியில் பால்போல் வீசிய நிலவு, காதற் கனவைப்போல் இனிமையாகவும் வெறியூட்டுவதாகவும் இருந்தது.

சாலைக்கு வந்ததும் சேகரன் எதையோ ஞாபகப்படுத்திக் கொண்டதுபோல, "நீங்கள் எதற்கு என்னோடு வருகிறீர்கள்? தனியாகத் திரும்ப வேண்டி இருக்குமே!" என்றான்.

"பார்க்கிலிருந்து என் வீடு என்ன, அவ்வளவு தொலைவா? தவிர, எனக்குப் பயம் என்றாலே இன்னது என்று தெரியாது."

"இன்று இவ்வளவு மழைக்குப் பிறகு நிலவு பொழியும் என்று நான் நினைக்கவே இல்லை!"

"இன்று எல்லாமே விந்தையாகத்தான் இருக்கிறது. நீங்கள் பஜனையைக் கேட்டு என் வீட்டுக்கு வந்தீர்கள். அந்தச் சமயத்தில் நான் கதவைத் திறக்காதிருந்தால் உங்களைச் சந்தித்திருக்க முடியாது."

"உங்கள் குரல் இனிமையாக இருந்தது; உணர்ச்சி நிரம்பி இருந்தது."

"என் தகப்பனாரிடமிருந்து நான் பாடக் கற்றுக்கொண்டேன். நான் இந்தப் பஜனைகளைப் பாடினால் அம்மாவுக்கு ஆறுதலாக இருக்கும். அதனால் இன்று எனக்கு வேறொரு பயனும் கிடைத்தது!"

அவளுடைய அந்த மென்மையான குரலோடு, கடுமையான ஹாரன் சப்தமும் சேகரன் காதில் விழுந்தது. விர்ரென்று ஒரு கார் அவர்களைத் தாண்டிச் சென்றது.

"பம்பு ஸேட்டின் கார்போல இருக்கிறதே!"

"சரளாவும் கோவிந்தனும் அதில் இருக்கிறார்கள்" என்று ரஜனி அந்த வாக்கியத்தை முடித்தாள்.

அதற்குப் பிறகு பார்க் வரைக்கும் அவர்கள் இருவரும் பேசாமல் நடந்தார்கள். பார்க்கின் அருகில் வந்ததும் சேகரன், "உண்மையாகவே நீங்கள் தனியே போக முடியுமா? அல்லது நான் கொண்டுவிட வரட்டுமா?" என்றான்.

"வேண்டவே வேண்டாம்! நீங்கள் என்னைக் கொண்டுவிட, நான் உங்களைக் கொண்டுவிட இப்படியே இந்த இரவு விடிந்துவிடும்!"

சேகரன் ஒன்றும் பேசத் தோன்றாமல் ஒரு கணம் திகைத்து நின்றான். பிறகு, "மறுபடி எப்போது சந்திப்போம்?" என்றான்.

"இன்றைப்போல மறுபடி சந்தர்ப்பம் வரும். இன்று நாம் கனவிலாவது நினைத்தோமா......"

"கனவில் நேரும் சந்திப்பைவிட இத்தகைய திடீர்ச் சந்திப்புத்தான் வியப்பையும் ஆனந்தத்தையும் தரும்!"

ரஜனி ஏதும் பேசவில்லை. சேகரனுடைய ஆவலுற்ற கண்கள் அவளுடைய உணர்ச்சியுற்ற கண்களோடு இணைந்தன. பிரியும்போது கைகுலுக்கும் விருப்பத்தோடு அவன் கையை நீட்டினான்.

ஒரே கணம், ஒரு கணந்தான்—தன் கரத்தைப் பின்னால் மறைத்துக்கொள்ளலாம் என்று அவள் நினைத்தாள்.

ஆனால் அந்த எண்ணம் வேகமாக மின்னல் வேகத்தில் மனத்தில் ஓடியபொழுதே அவள் சடக்கென்று தன் கரத்தை முன்னால் கொண்டுவந்தாள்.

அவனுடைய அந்தக் கொழுகொழுப்பான உறுதியான கைகளின் ஸ்பரிசம் தன் மென்மையான சிறு கரத்தில் பட்டு, அந்த நீண்ட செவ்விரல்கள் தன் உள்ளங்கையை அழுத்துவதை உணர்ந்ததும அவளுடைய மெய் சிலிர்த்தது.

## 11

மறுநாள் காலையில் பள்ளிக்கூட நேரத்துக்கு மஞ்சு சமையல் செய்து வைத்தாள். ஆனால் பள்ளிக்கூடத்தைப் பற்றி ஒரு வார்த்தைகூடச் சேகரனிடம் பேசவில்லை. அவர்களுடைய சாப்பாடும் மௌனமாகவே நடந்தது. சாப்பாடு ஆனதும் அவள் எல்லாவற்றையும் ஒழுங்காக மூடி வைத்துவிட்டு உடனே தன் பள்ளிக்கூடத்துக்குப் புறப்பட்டாள்.

அவசியமில்லாமல் அவர்கள் ஓர் எழுத்துக்கூடப் பேசவில்லை. அவர்களின் மண வாழ்க்கையில் அவர்கள் இப்படி இருந்தது அன்றுதான் முதல் நாள்.

இதற்கு முன்பெல்லாம் சேகரன் இரவில் நேரம் கழித்து

வந்தால் அவள் கேட்பதற்கு முன்பே காரணத்தைச் சொல்லி விடுவான். அன்று இரவு அவன் ரஜனியின் வீட்டிலிருந்து இரவு வெகு நேரம் கழித்து வந்ததும் மஞ்சுவிடம் ஒன்றுமே சொல்லவில்லை. அவளும் அவனை ஒன்றும் கேட்கவில்லை. சுமார் பன்னிரண்டு மணிக்கு அவன் திரும்பி வந்தபோது, அவள் பர்ல் பெக் எழுதிய 'பெருமித உள்ளம்' என்ற நாவலைப் படித்துக்கொண் டிருந்தாள். அவள் கதவைத் திறந்து அவனை ஒரு தடவை உற்றுப் பார்த்தாள். அந்தப் பார்வையில் என்ன கருத்து, என்ன உணர்ச்சி இருந்ததோ – யாருக்கும் தெரியாது. அவன் வாய் திறவாமல் கைகால் கழுவிக்கொண்டு படுக்கை யில் போய்ப் படுத்ததும், அவள் தான் படித்துக்கொண் டிருந்த அத்தியாயத்தை முடித்துவிட்டுக் குழந்தைகளின் பக்கத்தில் போய்ப் படுத்தாள்.

ஆரம்பத்திலிருந்தே அவர்கள் இருவருடைய படுக்கையும் தனித் தனியாகத்தான் இருக்கும். ஆனால் இப்போது சில நாளாக, அந்தப் படுக்கைகளுள் ஒன்றின் மேற்போர்வை துளியும் கலையாமலே இருந்தது. குழந்தைகள் பிறந்த பிறகு மஞ்சு அவர்களுடனே தூங்கியபோதிலும், இரவில் பல மணி நேரம் அந்தத் தம்பதிகள் குலாவிப் பேசுவது வழக்கம்.

ஒருவரிடம் மற்றவர் பேசாமலும் ஒருவரை மற்றவர் அணுகாமலும் அவர்கள் கழித்த முதல் இரவு அதுதான்!

மஞ்சு அந்த இரவு முழுவதும் துடிதுடித்தாள்.

சேகரனோ விடிகாலை வரைக்கும் குறட்டை விட்டுத் தூங்கினான்.

அதிகாலை நான்கு மணிக்கு அவன் விழித்துக்கொண்ட போது, வழக்கம்போல் மஞ்சுவைக் கூப்பிட்டான். ஆனால் சரி யாக அதே நேரத்தில்தான் அவள் கண்ணயர்ந்தாள்.

பிறகு நீண்ட நேரம் அவன் படுக்கையில் விழித்திருந்த போதிலும் மறுபடி அவளைக் கூப்பிடவில்லை; அவளருகில் சென்று தூங்கவும் இல்லை.

ஒரு மணிநேரம் கழித்து மஞ்சு விழித்துக்கொண்டாள். சேகரன் எழுந்ததும் எப்போதும்போலத் தன்னைக் கூப்பிடாமல் இருக்க மாட்டான் என்று நினைத்தாள்.

இப்படி அவர்கள் இருவரும் தங்கள் தங்கள் படுக்கையில் விழித்தவாறு இருந்தார்கள்; ஒருவரைப்பற்றி மற்றவர் சிந்தித்தார்கள். ஒருவர் மற்றவருடைய குரலையும் அணைப்பையும ஆவலோடு எதிர்பார்த்தார்கள்.

இந்த நிலையிலேயே பொழுது விடிந்தது.

மஞ்சு பள்ளிக்குப் போனதும் சேகரன் சிறிது நேரம் குழந்தைகளோடு விளையாடினான். ஆனால் ரஞ்சிதம் விரைவில விளையாட்டில் களைப்படைந்து தூங்கினாள். அவள் தூங்கவே நந்துவும் தூங்கினான். பிறகு இரண்டு மணி வரைககும் சேகரன் பல புத்தகங்களைப் புரட்டினான்.

இரண்டரை மணிக்கு மஞ்சு திரும்பி வந்தாள். பேசாமல் டீ போட்டு அவனிடம் கொடுத்தாள். அதை அவன் குடித்ததும், இருவரும் வெளி அறையில் உட்கார்ந்து படிககலானார்கள்.

சிறிது நேரத்துக்கெல்லாம் சேகரனுடைய வகுப்பில படித்த முப்பத்தைந்து மாணவர்களின் கூட்டம் வாசலில் வந்து நின்றது. மஞ்சு உடனே எழுந்து நடு அறைக்குப் போனாள்.

சேகரன் ராஜீநாமாச செய்த செய்தி லேசாகக் காதில் விழுந்திருந்த போதிலும், மறுநாள் காலையில் வகுப்புக்கு அவன் வராமல் வேறு வாத்தியார் வரும் வரைக்கும் அவர்கள் சிறிது சந்தேகத்துடனே இருந்தார்கள். பள்ளிக்கூட வேலை தொடங்கியதும் மறுநாள் வேறு வாத்தியார் வரவே, அந்த வகுப்பு மாணவர்கள் அனைவரும் உடனே ஆத்திரத்தோடு வெளியேறினார்கள். அவர்களில் நாலைந்துபேர் தலைமை ஆசிரியரிடம் நேரில் சென்று சேகரனுடைய ராஜீநாமாவுக்குக காரணம் கேட்டார்கள்.

"இதற்கும் உங்களுக்கும் சம்பந்தம் இல்லை. பேசாமல் வகுப்பில் போய் உட்காருங்கள்!" என்று மிரட்டினார் தலைமை ஆசிரியர்.

மாணவர்கள் அவருக்குப் பதிலே சொல்லவில்லை. பன்னிரண்டு மணிக்குத் தண்ணீர் குடிக்க விடும் பத்து நிமிஷ இடைவேளையில் அவர்கள் பள்ளிக்கூடம் முழுவதும் பிரசாரம செய்து, மேல் வகுப்பு மாணவர்கள் அனைவரையும் வெளியேறச் செய்தார்கள். எதிரே இருந்த மைதானத்தில் அவர்கள்

கூட்டம போட்டுத் தலைமை ஆசிரியர் பெயரைச் சொல்லிக் கூச்சலிட்டார்கள். ஆனால் அவர்களுடைய கலவரத்தை அவர் துளியும் கவனிக்கவில்லை.

இரண்டு மணிநேரம் இப்படிக் கோஷம் போட்டுவிட்டு, அந்தப் பையன்கள் தமக்குள் யோசித்துக்கொண்டு சேகர னுடைய வீட்டுக்கு வந்து சேர்ந்தார்கள்.

அவர்களுககுள்ளே உற்சாகம் மிகுந்த ஒரு மாணவன் பள்ளியில் நிகழ்ந்த செய்திகளைச் சேகரனுககு விவரமாகச சொல்லி, "ஸார்! நீங்கள் புதிய பள்ளிக்கூடம் ஆரம்பியுங்கள். நாஙகள் உங்கள் பள்ளிககூடத்திற்கு வருகிறோம்" என்றான்.

சேகரன் பகலென்று சிரித்தான். "ஜோராகத்தான் இருக் கிறது உங்கள் கற்பனை! ஆனால் நான் இனி வாத்தியார் வேலைக்கு வருவதாக இல்லை. ஆகையால புதிய பள்ளிக்கூடம் ஆரமபிக்க முடியாது. தலைமை ஆசிரியர் நடநதுகொண்டது அநியாயம என்று உங்களுக்குத் தோன்றினாலும் நீஙகள் இப்படி உங்கள் படிப்பைக் கெடுத்துக்கொள்ள வேண்டாம்" எனறான்.

அவன் இனிமையாகக் கூறிய ஆலோசனை மாணவர் களுக்குப பிடிக்கவில்லை. அவர்களுடைய உற்சாகம் போய் விட்டது. 'இவர் நல்ல வாத்தியார்; ஆனால் இவருககுத் துணிச் சல் இலலை!' என்று தமக்குள் முடிவு செய்துகொண்டு அவர்கள வீட்டுக்குப் போனார்கள்.

மஞ்சு அவர்களின சம்பாஷணையைக் கேட்டுக்கொண்டு பேசாமல் உள்ளே உட்கார்ந்திருந்தாள்.

மாணவர்களின் கூட்டம் வெளியே போனதும், நான்கு மணிக்கு ஒரு புதிய இளைஞன் சேகரனைப் பார்க்க வந்தான். ரஜனி அவனிடம் கடிதம் கொடுத்திருந்தாள். அவன்தான் பம்பாய் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனியின் பிரதிநிதி.

ஆரம்பப் பேச்சு முடிந்ததும் அந்த இளைஞன், "நாகபுரிக்கும் மகாகோசலத்துக்குமாக ஒரு முக்கிய ஏஜெண்டு எங்களுக்குத் தேவை. இதன் தலைமைக் காரியாலயம் நாகபுரியில் இருக்கும். வியாபாரத்துக்கான செலவு முழுவதையும் நாங்கள் கொடுப் போம்" என்றான். முக்கிய ஏஜெண்டின் வேலைகளையும், கமிஷன் நிபந்தனைகளையும் அவன் விரிவாகக் கூறினான்.

"எனக்கு இம்மாதிரியான வேலைசெய்து அநுபவம் இல்லை. நான் சிந்தனை செய்து நாளைக காலைக்குள் உங்களுக்கு என் முடிவைத் தெரிவிக்கிறேன்" என்று சேகரன் பதில சொன்னான்.

"அதனால பரவாயில்லை. எங்கள் மானேஜர் நாளைக் காலையில் அகோலாவிலிருந்து இஙகே வரப்போகிறார். நாளைப் பிற்பகல் மூன்று மணிக்கு அவரை உங்களுக்கு அறிமுகப் படுத்துகிறேன். ஏறவோ, குறையவோ என்ன பேச வேணடு மானாலும் அவரிடம நேரில் சொல்லி நீங்கள் தீர்மானிததுக் கொள்ளலாம். நாளைக்கு இரண்டரை மணிககு உங்களிடம் வருகிறேன்" என்றான் இளைஞன்.

சேகரன் தலையை ஆட்டினான். இளைஞன் தன்னிடம் இருந்த இனஷ்யூரன்ஸ் புத்தகஙகளை அவனிடம் கொடுத்து விட்டுப் புறப்பட்டான்.

அவனை வழியனுப்பிவிட்டு உள் வந்ததும் மஞ்சு தன் மடி யில் ரஞ்சிதத்தைத் தட்டிககொண டிருப்பதைச சேகரன் கவ னித்தான். நந்து பககததில் படுக்கையில உட்கார்நது படம் பார்த்துக்கொண டிருந்தான்.

"என்ன, ரஞ்சிதத்துக்கு உடம்பு சரியில்லையா?" என்று பயததோடு கேட்டான சேகரன்.

"ஆமாம்; உடம்பு நெருப்பாகக் கொதிக்கிறது!" என்று மஞ்சு அமைதியாகச் சொன்னாள்.

ஏறககுறைய இருபது மணிநேரம் கழித்து அவள் அவனோடு மறுபடியும் பேசினாள. அவளுடைய கணவனோடு கண இணைந் ததும் அவன் அடஙகிப் போனான்; அவன் நெஞசம் நெகிழ்ந்தது.

அவன் 'சடக்'கென்று அவள் அருகில் வநது உட்காாந்து, அவள் கரத்தைத் தன் கையில் தாங்கிக்கொண்டு, "நேற்று நான் செய்த பிழையின் பயன் இது. நேற்று நான இவளைத் தோட்டத்துக்கு அழைத்துப் போயிருக்கக்கூடாது" என்றான்.

மஞ்சு ஒன்றும் பதில் சொல்லவில்லை. அவள் கண்ணில் நீர் துளுமபியது.

ரஞ்சிதம் அசையாமல் படுத்திருந்தாள். அவளுடைய செங்கமல முகம் பின்னும் நன்றாகச் சிவந்திருந்தது. மூச்சு இழைவது தெளிவாகக் கேட்டது.

"டாக்டரைக் கூப்பிட்டு வரட்டுமா?" என்று பரபரப் போடு கேட்டான் சேகரன்.

"வேண்டாம். இப்போதுதான் மருந்து கொடுத்திருக் கிறேன். பொழுது விடிவதற்குள் ஜுரம் இறங்கிவிடும். அப் படி இல்லாவிட்டால டாக்டரைக் கூப்பிடலாம்."

இதைக் கேட்டதும் அவன் மறுபடி அவளருகில் உட்கார்ந் தான். சோர்வுற்றிருந்த அவள் தன் தலையை அவன் தோள் மேல சாய்த்துககொணடாள்.

நீண்ட நேரம் பேசாதது அவர்கள் இருவருககுமே வருத்த மாக இருந்தது. அவன்தோளில அவளுடைய கண்ணீர் மளமள வென்று பெருகியது. அவன் அவளுடைய முகத்தையும் முதுகை யும் தடவிக் கொடுத்தான். முநதிய நாள் இரவு முழுவதும் அவள் மனம் பட்ட துயரம் கண்ணீராக வெளிவந்தது.

சேகரன் மெதுவாகப் பேசலானான்: "சற்று முன்பு நிகழ்ந்த சம்பாஷணை உனக்குத் தெரியுமே, மஞ்சு! நேற்று இரவு நான் உலாவப் போனபோது தற்செயலாக ரஜனியைச் சந்தித்தேன். இந்த இன்ஷ்யூரன்ஸ் கம்பெனிப் பிரதிநிதியை என்னிடம் அனுப்பியவள் அவள்தான்" என்றான்.

"அந்தமாதிரி வேலை உங்களால் முடியும் என்று நினைக் கிறீர்களா? தாராளமாகப் பழகும் தன்மையும் வியாபாரத் திறமையும் அதற்கு வேண்டுமே! அயலார் வீட்டுக்குப் போவ தற்கே நீங்கள் கூச்சப்படுவீர்களே. கரி டிப்போ வைத்து மூன்று மாதத்துக்குள் நீங்கள் அலுத்துவிட்டீர்கள்; அந்த வேலை யையும் கூட்டு வியாபாரத்தையும் விட்டுவிடுவதாகப் பேசி னீர்கள்..."

"ஆமாம், நீ சொல்வது சரி, மஞ்சு! நான் பரிசோதனை யாகச் சில விஷயங்களைச் செய்து பார்ப்பதாக இருக்கிறேன். இனி என்ன ஆனாலும் சரி, வாத்தியார் தொழில் செய்யப் போவதில்லை. தான் எப்போதும் செய்யும் வேலையில் வெறுப்பு ஏற்படும்படியான ஒரு காலம் மனிதனுக்கு வருகிறது. அதா வது புதிய தொழில் செய்ய வேண்டும்; பல விபத்துக்களை எதிர்த்துப் புதிய பரிசோதனைகள் செய்ய வேண்டும் என்று அவன் நினைக்கிறான். தன் வாழ்வை மாற்றுவதற்கு மனிதன்

முயலும்போது அவன் இந்த உளுத்துப்போன உடலை விட்டுப் புதிய உடலையே பெறுவதாக இருந்தாலும் அதை ஏற்றுக்கொள்வான்."

"ஏது, ஒரே வேதாந்தமாகப் பேசுகிறீர்கள்!"

"மஞ்சு, என் வாழ்க்கையில் இன்று அந்தப் புதுநாள் வந்துவிட்டது. கடந்த ஏழெட்டு ஆண்டுகளாகச் சாமானிய ஆரோக்கியத்தோடு வாழ்ந்தேன். இனி ஆரோக்கியத்தையே பொருட்படுத்தாமல் புதிய துறைகளில் இறங்கித் துணிச்சலோடு செயல் புரியத் தீர்மானித்துவிட்டேன. இன்னும் நாலைந்து மாதங்களுக்கு நமக்குக் கவலை இல்லை; பாங்கியில் இருக்கும் பணம் செலவுக்குப் போதும். அதற்குள் புதிய துறைகளில் என்ன வழி பிறககிறதோ, பார்க்கலாம!" என்று அவன மென்னகையோடு பேசினுன்.

மஞ்சு ஏதோ பதில் சொல்வதற்குள், ராமநாதன் அவனைக் கூப்பிட்டுக்கொண்டே வந்து சேர்ந்தான். "என்ன சேகரன், பள்ளிக்கூடம் ஆரம்பிப்பதாக யோசனையா? பையன்கள் உங்களிடம் வந்து போனது எனக்குத் தெரிந்தது" என்ருன்.

"அப்படியாளுல் அந்தப் பையன்களே நடந்ததைச் சொல்லியிருப்பார்களே!" என்று சேகரன் குத்தலாகச் சொன்னுன்.

"அவர்களில் இரண்டு பேரை நான் ஹோட்டலில் பார்த்தேன். 'பையன்களா, ஹைஸ்கூலில எல்லா வகுப்புக்களையும் காலியாக்கும் துணிச்சல் உங்களுக்கு இருந்தால் நான் சேகரனைப் பளளிக்கூடம் ஆரம்பிக்கச் சொல்லுகிறேன்' என்றேன். அவர்கள் அதற்கும் தயாராக இருக்கிருர்கள். நீங்கள் புதுப் பள்ளிக்கூடம் தொடங்குகிறீர்களா? நீங்கள் இரண்டு பேருமாக ஆரம்பித்தால் நன்ருக இருக்கும். கூட்டுக் கல்வியையும் முயன்று பார்க்கலாம். நாகபுரியில் ஆண்களும் பெண்களும் ஒன்ருகப் படிக்கக் கூடிய உயர்தரப் பள்ளி இல்லை. இதை நீங்கள் ஆரம்பித்து நடத்துங்கள், பார்க்கலாம்!"

"அது சரி, பள்ளிக்கூடம் நடத்துவதற்கு முதல் வேண்டாமா, ராமு?"

"இப்போதைக்குக் கடன் வாங்கிக்கொண்டால் ஆச்சு! என் வழக்கு ஜயித்ததும் ஒரேயடியாக அந்தக் கடனை அடைத்து

விடலாம். பணம் இல்லையென்று எந்த வேலையாவது நிற்குமா? விவேகானந்தர் அமெரிக்காவுக்குப் புறப்பட்டபோது அவர் கையில காலணுக் காசு இல்லை. மனிதர்கள் வேலை செய்ய ஆரமபித்தால் பணம் தானுக வரும்.''

அவனுடைய பேசசு மஞ்சுவுக்குப் பிடிக்காமையால் அவள் வெறுப்போடு, ''அண்ணு, உன் வழக்கு ஒரு வழியாகத் தீர்ந்ததும் நாங்கள் பள்ளிக்கூடம் ஆரம்பிக்கிறோம். இப்போதைக்கு உன்னைப் போலவே வீட்டோடு இருக்கப்போகிறார்'' என்றாள்.

அவள் மடியில் தூஙகிக்கொண்டிருந்த ரஞ்சிதத்தை ராமு கவனித்தான். ''இவளுககு ஜுரம்போல் இருககிறதே. மிகவும் ஜாக்கிரதையாக இருக்கவேண்டும்,மஞ்சு! ஊரில் எங்கே பார்த்தாலும் நிமோனியாவாக இருககிறது'' என்றான்.

''ஊரில் எதுவாக இருந்தாலும் எனக்கு அது தெரிய வேண்டியதில்லை. எஙகள் வீட்டுக்கு எந்த நோயும் வர வேண்டாம்!'' என்று மஞசு கோபமாகப் பேசினாள்.

ஆனல் ராமநாதன தன் சிந்தனையிலேயே மூழ்கியிருந்தான். ''இவளுக்கு மார்பில் கபம் இல்லையே? ஏதாவது பயமாக இருந்தால் எனககுச் சொலலி அனுப்பு. இரவில் கண் விழித்திருக்க நான் வருகிறேன்'' என்றான்.

அவன் .பேசப் பேச மஞசுவுக்கு எரிச்சலாக இருந்தது. அவனை அவள் போகச் சொல்வதற்குள், அவனே எழுந்தான். ''நான் போய்வருகிறேன், மஞசு! தொழிலாளர்கள் ஊர்வலம் புறப்படப்போகிறது. பஞ்சப் படிக்காக அவர்கள் போராடுகிறார்கள்!'' என்று வாசற்படியிலிருந்து சொல்லிக்கொண்டே அவன் போய்விட்டான்.

மறுநாள் காலையில் ரஞ்சிதத்தின் ஜுரம் தொண்ணூற்றொன்பது டிகிரிக்கு இறங்கியதால கவலை பெரிதும் குறைநதது. மஞ்சு அந்த மருநதையே தொடர்ந்து கொடுததாள். அன்று சனிககிழமை; ஆதலால் காலையில் பள்ளிக்கூட வேலையை விரைவாக முடித்துக்கொண்டு மஞ்சு ஒன்பது மணிக்கு வீடு திரும்பினாள்.

பிற்பகல் இரண்டரை மணிக்கு இன்ஷ்யூரன்ஸ் கம்பெனியின் பிரதிநிதி சேகரனை அழைத்துச் செல்ல வந்தான்.

"பிறகு என்ன முடிவு செய்தீர்கள்? எங்கள் கம்பெனியின் கிளைக் காரியாலயப் பொறுப்பை ஏற்றுக் கொள்ளுகிறீர்கள் அல்லவா?" என்று அவன் கேட்டான்.

"இன்னும் நான் அதைப்பற்றிச் சிந்திக்கவே இல்லை. நேற்றிரவிலிருந்து என் பெண்ணுக்கு உடம்பு சரியில்லை. இரவு முழுவதும அந்தக கவலையிலேயே போய்விட்டது!"

"இன்று காலையில் எங்கள் மானேஜர் ரஜனியம்மாளைக் கண்டு பேசினார். அவர் உடனே வேலைக்கு ஒப்புக்கொண்டார். எஙகள் மானேஜர் வெகு இனிமையாகப் பேசுவார். அவர் பேச்சை யாரும் தட்ட முடியாது!" என்று அவன் பெருமிதத்தோடு சொன்னான்.

"அவர் எஙகே இருக்கிறார்?" என்று சேகரன் கேட்டான்.

"ஆனநதாசிரமத்தில் தங்கி யிருக்கிறார். எப்படியும் நாளைக்கு இஙகே கிளைக காரியாலயத்தைத் தொடங்கிவிட்டே புறப்படுவது என்று அவர் உறுதியாக இருக்கிறார்."

டீ குடித்ததும அவாகள் இருவரும் வெளியே புறப் பட்டார்கள்.

ஆனந்தாசிரமத்தில் வலப்பக்கத்துப் பெரிய அறையில் இருந்த ஸ்கிரீனை விலக்கிகொண்டு அவர்கள் உள்ளே போனதும் மானேஜர் நாற்காலியிலிருந்து எழுந்து கைகுலுக்குவதற்காகக் கைநீட்டி, "நீஙகள்தானே மிஸ்டர் சேகர்? உஙகளைப்பற்றி நான் நிறையக கேள்வியுற்றிருக்கிறேன்; நீங்கள் எழுதியவற்றையும் படித்திருக்கிறேன். அறிவும் புது நோககமும் உடைய நீங்கள் வாய்த்தது எங்கள் கம்பெனிக்கு அதிருஷ்டம்!" என்றார்.

அவர் பேச்சில் இருந்த அந்த இனிமை, சேகரனுக்கு மிகவும செயற்கையாகத் தோன்றிற்று. பேசும்போது அவர் கழுத்து, சிறிது வளைந்திருநதது. பாதி திறந்த அணிற் கண்களால் அவர் அவனை உற்றுப் பார்த்தார். அவர் உயரமாகவும் பருத்தும் இருந்தார். தலையில் இருந்த வழுக்கை, நன்றாக வாரியிருந்ததால் லேசாக மறைந்திருந்தது. அவர் வெள்ளை வெளேரென்று கதராடை அணிந்திருந்தார். உடுப்பு மேல் நாட்டுப் பாணியில் இருந்தது.

"இன்று உங்களோடு தாராளமாகப் பேசத் தீர்மானித்திருக்கிறேன்; அதனுல்தான் மூன்றிலிருந்து நான்கு மணி வரைக்கும் என் அறையில் யாரும் வரக் கூடாது என்று சொல்லியிருக்கிறேன்" என்று கூறி, அவர் ஓர் அழகிய சிகரெட் பெட்டியை அவன் முன்னுல் நகர்த்தினுர். அதை அவன் மரியாதையாக மறுத்ததும் அவர் ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துக்கொண்டே, "பேஷ்! இது மிகவும் நல்லது. எவ்வித மான துர்ப்பழக்கமும் இல்லாமை உங்கள் புலனடக்கத்தைக் காட்டுகிறது. டிவாலராவும் ஹிட்லரும் சுருட்டுக் குடிக்கமாட்டார்களாம்!" என்ருர். அவர் அவனுக்குத் தேநீர் கொண்டு வரச் சொன்னுர்.

பிறகு அவர் தமது மூக்குக்கண்ணுடியைச் சரியாகப் பதிய வைத்துக்கொண்டு, "எனக்கு வெறும் ஏஜெண்டுகள் தேவை இல்லை. புதிய நோக்கமும் குறிப்பிட்ட அரசியல் லட்சியமும் கொண்டவர்களே எனக்கு வேண்டும். நம் நாடு அரசியலில் முன்னேருமைக்குக் காரணம் பண பலம் இல்லாமை. பணத்தை உண்டாக்கும் தொழில்களை நாம் செய்யவேண்டும். எத்தனையோ இன்ஷ்யூரன்ஸ் கம்பெனிகள் நம் நாட்டில் நடக்கின்றன. நன்ருகவும் நடக்கின்றன. அப்படியிருக்க இந்தப் புதிய கம்பெனி ஏதுக்கு? சரியான கேள்வி!" என்று ஆவேசமாகப் பேசலானுர்.

மறுநாள் கம்பெனிக் கிளையின் திறப்பு விழாவில் பேசுவதற்கு இப்போது அவர் இப்படிப் பேசிப் பழகிக்கொள்கிருரோ என்று சேகரனுக்குத் தோன்றியது.

கையில் இருந்த சிகரெட்டின் சாம்பலை உதறிவிட்டு அவர் மேலும் பேசலானுர். "நம் கம்பெனி வெறுமே தொழில் செய்யும் கம்பெனி அல்ல. நம்முடைய ஒவ்வொரு பிரதிநிதியும் அரசியல் தலைவனுக இருக்க வேண்டும். நம்முடைய பணம் நாட்டின் முன்னேற்றத்துக்கு உதவ வேண்டும். வியாபாரத்திலும் அரசியலிலும் நாம் தலைமை தாங்குவோம். இதற்காக நான் ஒரு திட்டம் வகுத்திருக்கிறேன்" என்ருர்.

அதற்குள் தேநீர் வந்தது. மானேஜர் சிகரெட்டை எறிந்து சிறிது தேநீர் அருந்தினுர். சேகரனும் தேநீர் குடித்தாயிற்று.

பிறகு அவர் தம்முடைய பெட்டியைத் திறந்து, "என் திட்டத்தை நான் ஒளித்து வைக்கவில்லை. நமது கம்பெனியின் ஐந்தாவது ஆண்டு விழாவின்போது ஒரு பிரசித்த பத்திரிகையில் நான் வெளியிட்ட அறிக்கையின் பிரதி இது; படித்துப் பாருங்கள்!" என்று கூறி, அதைச் சேகரனிடம் கொடுத்தார்.

சிவப்புப் பென்சிலால் அவர் குறிப்பிட்ட இடங்களைச் சேகரன் படித்தான். அதற்குள் மானேஜர் எழுந்து அவன் தோளைத் தட்டிக்கொடுத்து, "மிஸ்டர் சேகர், உங்களைப்போன்ற லட்சியவாதியான இளைஞர்கள் எனக்கு வேண்டும். வெறும் தொழிலுக்காகத் தொழில் நடத்திப் பணமே குறியாக இருப்பவர்கள் தேவையில்லை. நாட்டின் நன்மைக்காகத் துடிக்கிற, புதிய நோக்கமுள்ள, செயல் திறமை வாய்ந்த, லட்சியக் கனவு காண்கிற இளைஞர்களே எனக்கு வேண்டும்" என்றார்.

அவருடைய அணிற்பார்வை சேகரனுக்குப் பிடிக்கவில்லை; அதோடு அவர் இப்படிக் கொஞ்சுவது அடியோடு பிடிக்கவில்லை.

அவன் சிறிது நகர்ந்துகொண்டு, "உங்கள் நோக்கம் மிகவும் உயர்ந்ததாக இருக்கிறது. இந்தப் பெரும் செயலுக்கு நான் எந்த அளவில் உதவியாக இருப்பேன் என்று தெரியவில்லை" என்றான்.

"நீங்கள் இப்படிச் சந்தேகப்படக் கூடாது. மிஸ் ரஜனியிடமும் காலையில் நான் இதைத்தான் சொன்னேன். நம்முடைய இளைஞர்களிடம் போதுமான தன்னம்பிக்கை இல்லை; முன்னுக்கு வருகிற துணிச்சல் இல்லை. இந்தத் தோல்வி மனப்பான்மையை முதலில் ஒழிக்க வேண்டும். நீங்கள் தைரியமாகச் செயலில் முனையுங்கள். உங்கள் சந்தேகம் தானாகப் பறந்துவிடும்!" என்று சொல்லி அவர் உட்கார்ந்தார்.

பிறகு அவர் புதிய சிகரெட்டை எடுத்துக்கொண்டே, "நாளைச் சாயந்தரம் இங்கே காரியாலயம்தொடங்குவதென்றும், உங்களை நாகபுரிக்கும் மகாகோசலத்துக்கும் முக்கிய ஏஜெண்டாக நியமிப்பதென்றும், இன்று காலையிலேயே தீர்மானித்து விட்டேன். இந்த நிபந்தனையின் பேரில்தான் மிஸ் ரஜனி வேலை செய்ய ஒப்புக்கொண் டிருக்கிறார்" என்றார்.

"என்ன நிபந்தனை?" என்று கேட்டுக்கொண்டே, சேகரன் அந்தத் திட்டத்தின் பிரதியை அவரிடம் திருப்பிக் கொடுத்தான்.

"காலையில் நாங்கள் வெகு நேரம் பேசினோம். ரஜனி எங்கள் ஏஜென்ஸிக்கு ஒப்புக்கொள்ளவில்லை. அவருக்குச் சம்பளம் கொடுப்பதாகவும் நாங்கள் சொன்னோம். அப்பொழுதும் கேட்கவில்லை. 'உங்களிடம் இந்த வேலையை ஒப்படைக்காமல் நான் நாகபுரியை விட்டு நகரப் போவதில்லை!' என்று நான் பிடிவாதமாகச் சொன்னேன். உங்களை இங்கே முக்கிய ஏஜெண்டாக நியமித்தால் தாம் வேலையை ஒப்புக்கொள்வதாக அவர் சொன்னார். உடனே அவரிடம் பாரத்தை கொடுத்துக் கையெழுத்து வாங்கிக்கொண்டேன். சேகர், நீங்கள் உண்மையில் பெரிய பாக்கியசாலி. அந்தப் பெண் உங்களைக் காதலிக்கிறாள் போல இருக்கிறது! பேஷான பெண்! நைஸான பெண்! உங்களுக்காக அவள் எதையும் செய்வாள்!"

இதைக் கேட்ட சேகரனுடைய முகம் கோபத்தினால் சிவந்தது. அவன் ஆத்திரத்தோடு எழுந்து, ஏதோ பேச முயன்றான். அதற்குள் மானேஜர் அவன கையைப் பிடித்துக் கொண்டு, "நீங்கள் எனக்கு விரிவாகச் சொல்ல வேண்டியதில்லை, சேகர்! நீங்கள் மணமானவர் என்பது எனக்குத் தெரியும். அதனால் ஒன்றும் கெட்டுப் போய்விடவில்லை. லட்சியவாதியான மனிதன் தன்னுடைய உற்சாகததை எப்போதும் புதுமையாக வைத்துக்கொள்வதற்கு இமமாதிரியான நட்பும் கூட்டுறவும் மிகவும் தேவைதான மிஸ் ரஜனி ஆணித்தரமாகப் பேசுகிறார். அவர் பேச்சு வன்மை என்னையே மயககி விட்டது. அவர் உங்களுக்குக் கிடைத்தது உங்கள் பாக்கியம். நான் பிறகு எப்போதாவது அவரை எங்கள் தலைமை ஆபீஸில வேலைக்கு அழைத்துக்கொள்கிறேன். ரொம்ப ரொம்ப ஆச்சரியமான பெண்!" என்றார்.

அவருடைய பேச்சின் முன்னால் சேகரன் ஒன்றுமே செய்ய முடியவில்லை. அவர் ஆரம்பத்திலிருந்தே ஓயாமல் பேசினார்; ஒரு நிமிஷங்கூட அவனைப் பதில் சொல்ல விடவில்லை. ஆனால் ரஜனியைப் பற்றி அவர் கண்டபடி பேசியதும் முதலில் அவ

னுக்கு வெட்கமாக இருந்தது. பின்பு கோபம் வந்தது. மானேஜரோ பிறர் பேச்சைக் காதில் போட்டுக் கொள்கிறவராகவே இல்லை. தம்முடைய வேலை இப்பொழுது முடிந்துவிட்டதாக அவர் எண்ணினார்.

அவர் தமது கைக் கடிகாரத்தைப் பார்த்தார்; "நாளை மாலையில ஆறு மணிக்கு நம் காரியாலயத் திறப்புவிழா நடத்துவோம். பர்டீ ரோட்டில் இடம் பார்த்தாயிற்று. உள்ளூர்ப் பத்திரிகைகளுககு இப்போதே செய்தி அனுப்பிவிடுகிறேன். நாளைக காலையில் நீங்கள் வாருங்கள். மிஸ் ரஜனியும் வருவார். அப்பொழுது மீதி விஷயஙகளை முடிவு செய்யலாம்" என்றார்.

அதற்குள் மேல்நாட்டு உடையில் ஒரு பார்சி அங்கே வந்தார். "வாருங்கள், பர்ஜோர்ஜி! இவர் எங்கள் கம்பெனியின் முக்கிய ஏஜெண்டு—மிஸ்டர் சேகரன். உங்களுக்கு மோட்டார் இன்ஷ்யூரன்ஸ், தீ இன்ஷ்யூரன்ஸ் எலலா வேலைகளும் இவர் செய்து கொடுப்பார்" என்று சொலலி, அந்தப் பார்சிக் கனவானையும் அவர் சேகரனுக்கு அறிமுகப்படுத்தினார்.

"மிஸ்டர் சேகர், நீங்கள் கிடைத்தது என்னுடைய நல்வினையின பயன். நேற்று அகோலாவில எங்கள் முக்கிய ஏஜெண்டான தினகரனைச் சந்தித்தேன். 'உஙகளைப்போன்ற ஏஜெண்டு எங்களுக்கு நாகபுரியில் கிடைக்க வேண்டுமே!" என்றேன். அவர்தாம் முதலில் உங்கள் பெயரை எனக்குச் சொன்னார். உங்களை எப்படிப் பார்ப்பது என்று இருந்தேன். ஆனால் மிஸ் ரஜனி எல்லா ஏற்பாடுகளையும் செய்துவிட்டார். அதிருஷ்டம் என்கிறார்களே அது இதுதான்! சரி, காலையில் ஒன்பது மணிக்கு வந்துவிடுங்கள்" என்று சொல்லி மானேஜர் சேகரனை வழியனுப்பினார்.

சேகரன் அங்கிருந்து வெளிவந்ததும் அவனுடைய கோபம் ஆச்சரியமாக மாறியது. மூன்று மாதங்களுக்கு முன்பு அவன் வண்டியில் சந்தித்த தினகரனைப் பற்றி மறந்தேபோயிருந்தான். மானேஜரின் பேச்சு இப்போது அநத நினைவைத் தீவிரமாகத் தூண்டியது. ரஜனியைப்பற்றி மானேஜர் அசட்டுத்தனமாகப் பேசிய சொற்களைக்கூட அவன், தினகரனுடைய நினைவிலே மறந்துவிட்டான்.

## 12

மறுநாள் காலையில் ரஞ்சிதத்துக்கு ஜுரம் இறங்கவில்லை. மார்பில் கபம் இருப்பதாகவும் தோன்றிற்று. சேகரன் தன் நண்பனை ஒரு டாக்டரை அழைத்து வந்தான்.

நோயாளியின் உடம்பு முழுவதையும் பரிசோதனை செய்த பிறகு, "நீ எனக்கு முன்னதாகவே தெரிவித்திருக்கக் கூடாதா, சேகர்?" என்றான் டாக்டர்.

"மூன்று நாளாகத்தான் ஜுரமே அடிக்கிறது. நேற்றுக் காலையில் தொண்ணூற்று ஒன்பதுக்கு இறங்கியிருந்தது. அதனால் உன்னைக் கூப்பிட வேண்டுமென்றே எனக்குத் தோன்றவில்லை" என்றான் சேகரன்.

பிறகு அந்த நண்பன் ஒன்றுமே பதில் சொல்லவில்லை. ஆனால் கவலை தேங்கிய அவனுடைய உம்மென்ற முகத்தைப் பார்த்ததும் மஞ்சுவின் நெஞ்சம் திடுக்கிட்டது. டாக்டர்களின் வழக்கப்படி அவன் அங்கிருந்து போகும்போது மஞ்சுவுக்குத் தைரியம் சொல்லிவிட்டு மருந்தைக் கொடுக்கவேண்டிய முறைகளையும் விவரித்தான்.

சேகரனும் அவனோடு வெளியே புறப்பட்டான். அதைக் கண்ட மஞ்சு, "நீங்கள் இன்று வெளியே போகத்தான் வேண்டுமா?" என்றாள்.

"ஆமாம், ஒன்பது மணிக்கு அந்த மானேஜரைப் பார்க்க வேண்டும். நேற்றே நான் உன்னிடம் சொல்லவில்லையா?"

அவள் ஒன்றும் பதிலே பேசவில்லை. அவர்கள் இருவரும் வெளியே புறப்பட்டார்கள்.

முதல்நாள் சாயந்தரம் வீட்டுக்கு வந்ததிலிருந்தே சேகரன், ரஜனியைப் போய்ப் பார்த்து எல்லா விஷயங்களையும் விவரமாகக் கேட்டு வரவேண்டும் என்று எண்ணினான். ஆனால் சாயுந்தரமே ரஞ்சிதத்துக்கு ஜுரம் அதிகமாயிற்று. அதனால் அவன் வீட்டை விட்டு அசைய முடியவில்லை.

அவன் மானேஜரின் இருப்பிடத்துக்குப் போய்ச் சேர்ந்த பொழுது அவர் ரஜனியிடம் பேசிக்கொண்டிருந்தார். அவனைக் கண்டதும் உல்லாசத்தோடு, "வாருங்கள், வாருங்கள்! உங்கள்

வரவைத்தான் எதிர்பார்த்தேன். இன்று மாலை ஆறு மணிக்குக் கிளைக் காரியாலயத் திறப்புவிழா நடக்கிறது. உள்ளூர்ப் பத்திரிகைகள் எல்லாவற்றிலும் இதோ விளம்பரமும் செய்தியும் வந்திருக்கின்றன, பாருங்கள்!" என்றார். வெவ்வேறு பாஷைப் பத்திரிகைகளை அவர் சேகரன் முன்னால் வைத்தார்.

அவன் அவற்றைப் புரட்டிப் பார்த்தான்.

மானேஜர் மேலும் பேசலானார்: "இந்த விழாவுக்கு உள்ளூர்ப் பத்திரிகாசிரியர்களையும் நிருபர்களையும், சில முக்கியப் பெரிய மனிதர்களையும், ஆலை முதலாளிகளையும் வியாபாரிகளையும் அழைத்திருக்கிறேன். முடிவில் சிற்றுண்டியும் இருக்கும். நான் முதலில் கம்பெனியின் வளர்ச்சியைப் பற்றி அறிமுகப்படுத்திப் பேசுகிறேன். பின்பு உள்ளூர்ப் பிரமுகர்களில் இரண்டொருவர் பேசுவார்கள். கடைசியில் உங்களில் யாராவது வந்தனோபசாரம் கூறுங்கள்."

"ரஜனியம்மாள் வந்தனோபசாரம் கூறுவது பொருத்தமாக இருக்கும் என்று நினைக்கிறேன்" என்று சேகரன் சட்டென்று சொல்லிவிட்டான். தான் கம்பெனியில் வேலை ஏற்றுக்கொள்வதா வேண்டாமா என்பதை அவன் இன்னும் தீர்மானிக்கவில்லை. ஆதலால் அந்த விழாவில் வெளிப்படையாகப் பங்கெடுத்துக்கொள்ள அவன் விரும்பவில்லை.

ஆனால் அவன் வந்தனோபசாரம் கூறாவிட்டாலும் முக்கிய ஏஜெண்டு என்ற முறையில் அவன் பெயர் அந்த விழாவில் வெளிவராமல் இருக்குமா? வேலையில் சேருவதைப் பற்றி இன்னும் தனக்குள் முடிவு கட்டவில்லை என்பதை அவன் ஏன் இப்பொழுதே தெளிவாகச் சொல்லிவிடக் கூடாது? இவ்வளவு நேரம் கழித்து அதைச் சொன்னால் ரஜனி என்ன நினைப்பாளோ? மறுப்பதாக இருந்தால் முதல்நாள் மாலையே அதைச் செய்திருக்க வேண்டும்.

சேகரன் இந்தச் சிந்தனையில் ஆழ்ந்திருந்தபோது, மானேஜர், "பேஷ்! பேஷ்! நீங்கள் சொன்னது சரி, சேகர்! நானும் அதைத்தான் எண்ணியிருந்தேன். ஆனால் நீங்கள் அதைச் சொன்னதால் நன்மையே ஆயிற்று. என்ன ரஜனியம்மா, நீங்கள் வந்தனோபசாரம் கூற வேண்டும்!" என்றார்.

"ஆனால் முக்கிய ஏஜெண்டு அதைச் செய்வதுதான் பொருத்தம் என்று நினைக்கிறேன்."

"அப்படியல்ல, நீங்கள் பேசுவதில் பொருத்தம் இருக்கிறது, ரஜனியம்மா!" என்று ஆரம்பித்த மானேஜர் அந்தப் பொருத்தத்தை விளக்காமலே, "உங்கள் பேச்சு வெகு ஜோராக இருக்க வேண்டும்!" என்று முடித்தார்.

உடனே ரஜனி அன்றைய நிகழ்ச்சி நிரலைப்பற்றி ஞாபக மூட்டினாள். மானேஜர் சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டே அதைப்பற்றி முடிவுசெய்தார். சேகரன் ஒன்றுமே பேசவில்லை. அவனுடைய கவனம் முழுவதும் வீட்டிலேயே இருந்தது. திரும்பிப் போகும்போது ரஜனியிடம் இரண்டு வார்த்தை பேச வேண்டும் என்றுதான் அவன் அங்கே காத்திருந்தான். மணி பத்து அடிக்கவே அவன், "சரி, நான் சாயங்தரம் ஐந்து மணிக்கு வருகிறேன்" என்றான்.

"அப்படியே செய்யுங்கள். நீங்கள் இருவரும் நடந்தா போகிறீர்கள்? நான் இன்று நாள் முழுவதற்குமாக ஒரு டாக்ஸி வைத்துக்கொண்டிருக்கிறேன். நான் டவுனுக்குப் போக வேண்டும். உங்களை வழியில் இறக்கிவிடுகிறேன்" என்றார் மானேஜர்.

ரஜனியைத் தனிமையில் சந்தித்துப் பேச, சேகரனுக்கு மிகவும் ஆவலாக இருந்தது. ஆனால் மானேஜரின் பேச்சை மறுக்க முடியாமல் அவன் வண்டியின் பின்புறத்தில் உட்கார்ந்தான்.

அவனும் ரஜனியும் பின்னால் உட்கார்ந்திருந்தார்கள். முன்புறத்தில் மானேஜரின் பக்கத்தில் டிரைவர் அமர்ந்திருந்தான். அவர் வண்டியை ஓட்டினார்.

வண்டி புறப்பட்டதும், "இன்று உங்களுக்கு உடம்பு சரியில்லையோ?" என்று ரஜனி மெதுவாகச் சேகரனைக் கேட்டாள்.

"என் உடம்புக்கு ஒன்றுமில்லை. எங்கள் குழந்தை ரஞ்சிதத்துக்கு இரண்டு நாளாக ஜுரம்."

"சாதாரண ஜுரந்தானே?"

"இல்லை; டாக்டர் சொல்வதிலிருந்து நிமோனியாவாக இருக்குமோ என்று தோன்றுகிறது."

"அப்படியானால் மிகவும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். சாப்பாடு ஆனதும் நான் உங்கள் வீட்டுக்கு வரட்டுமா?"

"வேண்டாம்; ஒன்றும் அவசியமில்லை. நாங்கள் இரண்டு பேர் இருக்கிறோமே!"

"நீங்கள் கொஞ்சமும் கூச்சப்பட வேண்டாம், சேகர்! குழந்தைகளுக்கு நோய் என்றால், தாய் இரவும் பகலும் கண் விழிக்க வேண்டியிருக்கும். மஞ்சு அம்மாள் தனியாக எவ்வளவு நேரந்தான் குழந்தையை வைத்துக்கொள்வாள்? நான் வந்தால் அவர் சிறிது இளைப்பாற முடியும். இன்று எப்படியும் ஞாயிற்றுக்கிழமைதான். நோயில் ஆண்களின் உதவியை விடப் பெண்களின் உதவிதான் தேவையாயிருக்கும். அதிலும் குழந்தை நோய் என்றால்—"

"நீங்கள் சொல்வது சரி. அப்படித் தேவை ஏற்பட்டால் நான் சாயந்தரம் உங்களுக்குச் சொல்லி அனுப்புகிறேன். சரி, நான் வரட்டுமா?" என்று கூறிக்கொண்டே சேகரன் வண்டியிலிருந்து இறங்கினான். மானேஜருக்கு நமஸ்காரம் செய்து அவரிடமும் விடை பெற்றுக்கொண்டான்.

வண்டியில் ரஜனி சொன்னது சரியான பேச்சு என்பதை வீட்டுக்கு வந்ததும் சேகரன் உணர்ந்தான்.

அன்று முழுவதும் ஒரு நிமிஷங்கூட மஞ்சுவின் மடியிலிருந்து ரஞ்சிதம் இறங்கவே இல்லை. தன் மடியில் தூங்கும்படி சேகரன் அவளிடம் எவ்வளவோ சொல்லிப் பார்த்தான். ஆனால் தாயின் மடியைவிட்டு நீங்க அவள் ஒப்பவே இல்லை. பக்கத்து வீட்டு அத்தையம்மாள் வந்து சமையல் செய்தாள். குழந்தையைக் கீழே விட்டு அவள் அழ அழத் தான் சாப்பிட மஞ்சு விரும்பவில்லை. ஆகையால் அவளை மடியில் விட்டுக் கொண்டே ஏதோ கொஞ்சம் சாப்பிட்டாள்.

பகல் பன்னிரண்டு மணி வரைக்கும் ரஞ்சிதத்தின் ஜுரம் நூறு டிகிரியில் இருந்தது. ஆனால் வெயில் ஏற ஏற, அவளுடைய ஜுரமும் அதிகமாயிற்று. தாகத்தினால் அவள் துடியாகத் துடித்தாள். மஞ்சு ஓயாமல் அவள் வாயில் ஸ்பூனால் தண்ணீரை ஊற்றினாள். சேகரன் விசிறியால் வீசிக்கொண்டே இருந்தான்.

மணி நான்கு அடித்ததும் அவன் மஞ்சுவுக்குத் தேநீர் போட்டுக் கொடுத்தான். காலை ஒன்பது மணியிலிருந்து அவள்

குழந்தையை மடியிலேயே வைத்துக்கொண்டு உட்கார்ந்திருந் தாள். குழந்தையைக் கீழே தூங்கவிட, சேகரன் வற்புறுத்திச் சொல்லியும் அவள் கேட்கவில்லை. அவன் கோபமாகச் சொல் லவே, அவள் ரஞ்சிதத்தை எடுத்துக் கீழே விட்டாள். பகல் இரண்டு மணி வரைக்கும் மடியை விட்டே இறங்க விரும்பாத குழந்தை - மடியை விட்டுச் சிறிது அசைந்தாலும் கீச்சென்று அழும் குழந்தை – இப்பொழுது சிறிதும் அசைவற்றுக் கீழே படுத்துக்கொண்டாள். 'கொர், கொர்' என்ற வேகமான இழுப்பும், அந்த இழுப்போடு மேலும் கீழுமாக அசையும் அவள் மார்பும் – பார்க்கவே சகிக்கவில்லை. உக்கிரமான ஜுரத்தில் அந்தக் குழந்தை உயிரோடு இருப்பதற்கு அத்தாட்சியாக இருந் தது அந்தக் 'கொர் கொர்' என்ற சத்தந்தான்.

மஞ்சு நின்றபடியே இரண்டு வாய் மோரை விழுங்கிவிட்டு மறுபடி குழந்தையின் பக்கத்தில் உட்கார்ந்தாள்.

ரஞ்சிதத்தின் அந்தச் சிவந்த மென்மையான முகத்தை அவள் கண் கொட்டாமல் பார்த்தாள். பார்க்கப் பார்க்க அவள் கண்களில் நீர் துளும்பியது. "நீங்கள் இப்பொழுது போகாமலே இருந்தால் முடியாதா?" என்று திடீரென்று சேகரனைக் கேட்டாள்.

அச்சம் குடிகொண்ட அவள் பார்வையிலே இருந்த புக லற்ற தன்மை அவனைத் தீப்போலச் சுட்டது. அவன் அவ ளுடைய கையை அழுத்திப் பிடித்துக்கொண்டு, "மஞ்சு, உன்னை இப்படித் தனியாக விட்டுச் செல்ல என் மனம் இடம் கொடுக்குமா? ஆனால் சாயந்தரம் நான் அங்கே போகாவிட் டால் அவர்கள் என்ன நினைப்பார்கள்?" என்றான்.

"ஐந்து மணிக்குள் வரச் சொல்லி நான் சரளாவுக்குச் செய்தி அனுப்பியிருக்கிறேன். அவள் வராவிட்டால் என்ன செய்வது? அப்படி ஒன்றும் ஆபத்து வராது. இருந்தாலும் ஒருவருக்கு இருவராக இருந்தால் மனசுக்குக் கொஞ்சம் ஆறு தல்!" என்று சொல்லி மஞ்சு தன் கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள்.

அதற்குள் ரஞ்சிதம் வேதனையினால் உரக்கக் கீச்சிட்டு இந்தப் பக்கத்திலிருந்து அந்தப் பக்கமாகப் புரண்டாள்.

மஞ்சு அவள் உடம்பைத் தொட்டுப் பார்த்து, "நெருப்பாகக் கொதிக்கிறதே!" என்றாள்.

சேகரன் வாயே திறக்கவில்லை.

அவர்கள் இருவரும் அந்தக் குழந்தையின் அருகில் உட்கார்ந்து, ஜுரத்தில் கொதிக்கும் அந்த மென்மையான தேகத்தைத் தொட்டார்கள்.

அவர்கள் இருவருடைய நெஞ்சத்திலும் அப்போது இடி விழுந்தாற்போல இருந்தது.

ரஞ்சிதம்! – மணமானதும் இரண்டு ஆண்டுகள் அவர்கள் துய்த்த காதலின்பங்களும், வாழ்க்கையிலே கண்ட இனிய கனவுகளும் - அந்த இன்பங்களும் கனவுகளுமே உருவான குழந்தை இந்த ரஞ்சிதம்! நெருப்பாகக் கொதித்த அவளுடைய உடம்பைத் தொட்டதும், ஐந்தாறு வருஷதது நினைவுகளெல லாம் அவர்களுடைய உள்ளத்திலே பொங்கி எழுந்தன.

ஆயினும் அவர்கள் இருவரும் அசைவற்று இருந்தார்கள். ஒருவரோடு மற்றவர் ஏதும் பேசவில்லை. ஒருவரை மற்றவர் பார்க்கவும் இல்லை. இந்த நிலையில் அவர்கள் எவ்வளவு நேரம் உட்கார்ந்திருந்தார்களோ, தெரியாது.

வாசலில் கார் நின்ற சத்தம் கேட்டது. சரளா வேகமாக உள்ளே வந்தாள்.

அவர்கள் இருவரும் குழந்தையின் பக்கத்தில் அப்படி உட்கார்ந்திருந்ததைக் கண்டதும் முதலில் அவளுக்குத் தூக்கிவாரிப் போட்டது. உள்ளே வரலாமா என்று தயங்கி நின்றாள்.

அதற்குள் சேகரன், "வாருங்கள், சரளா அம்மா, உங்கள் வரவை எதிர்பார்த்துத்தான் உட்கார்ந்திருக்கிறோம்" என்றான்.

"ரஞ்சிதம் தூங்குகிறாளா?"

"தூக்கமாவது? ஜுரத்தில் நினைவு தெரியாமல் கிடக்கிறாள். நீ வருவாயோ வரமாட்டாயோ என்று நினைத்தேன், சரளா!"

"நான் எப்படி வராமல் இருப்பேன்? அந்தக் கம்பெனித் திறப்பு விழாவுக்கு எங்களுக்கு அழைப்பு வந்திருக்கிறது. ஆனால் உன்னைப் பார்க்காமல் என் மனம் நிம்மதி கொள்ளுமா!" என்று சொல்லிக்கொண்டே, அவள் மஞ்சுவின் அருகில் உட்கார்ந்தாள்.

பிறகு சேகரனைப் பார்த்து, "காரை வாசலில் நிறுத்தி வைத்திருக்கிறேன். நீங்கள் விழாவுக்குப் போகவேண்டாமா? இந்தக் காரிலேயே போய், வண்டியை வீட்டுக்கு அனுப்பி விடுங்கள்" என்றாள்.

"கோவிந்தன் விழாவுக்கு வரப்போகிறாரா?"

"அநேகமாக வரலாம். டாக்டர் இங்கே எப்பொழுது வருவார்? வேண்டுமானால் அவருக்குக் காரை அனுப்பலாமே?"

"அவன் சரியாக ஆறு மணிக்கு வந்துவிடுவான். அவன் என் நண்பன்தான். கார் அனுப்ப வேண்டிய அவசியம் இல்லை. நீங்கள் இங்கேயே இருங்கள். எவ்வளவு சீக்கிரத்தில் முடியுமோ, வந்துவிடுகிறேன்" என்று சொல்லிவிட்டு, சேகரன் வண்டியில் போய் உட்கார்ந்தான். காரியாலயம் திறக்கும் இடத்துக்குப் போய் இறங்கிக்கொண்டான்.

கட்டிடத்துக்கு முன்னால் இருந்த மைதானம் தண்ணீர் தெளித்துத் துப்புரவாக இருந்தது. கொடிகள் கட்டிச் சிறிது சிங்காரித்திருந்தார்கள். சுமார் ஐம்பது நாற்காலிகள் வளைவாக அழகாகப் போட்டிருந்தன.

அந்த நாற்காலிகளின் இடைவழியில் சென்றுகொண்டே ரஜனியிடம் பேசிய மானேஜர், சேகரன் வருவதைப் பார்த்தார். "நல்ல வேளையாக நீங்கள் வந்துவிட்டீர்கள். உங்கள் குழந்தைக்கு உடம்பு சரியில்லை என்று இவர் சொன்னார். மிகவும் வருத்தமாக இருக்கிறது. நீங்கள் வந்திராமற்போனால் உங்களை அழைத்து வரக் கார் அனுப்பியிருப்பேன். நீங்கள் இல்லாமல் இந்த விழாவை நடத்துவது, ஹாம்லட் இல்லாமல் ஹாம்லட் நாடகத்தை நடத்துவது போல!" என்றார்.

சேகரன் அவருக்கு ஏதோ பதில் சொல்வதற்குள், பின்னால் அறையிலிருந்து வெளிவந்த ஓர் இளைஞன் அவன் முதுகைத் தட்டிக்கொண்டே, "என்ன சேகர், ஞாபகம் இருக்கிறதா என்னை?" என்றான்.

சேகரன் சட்டென்று திரும்பிப் பார்த்தான். "தினகரனா? உங்களை நான் எப்படி மறக்க முடியும்?" என்றான்.

தினகரன் அவனுடைய இரண்டு கைகளையும் தன் நீண்ட உறுதியான கைகளால் கெட்டியாக அழுத்திக்கொண்டு,

"கடைசியில் நாம் இன்று இந்த முறையில் சந்திக்கிறோம்!" என்றான். அவனுடைய அந்த ஆழ்ந்த மின்னும் கண்கள் சேகரனுடைய கண்களோடு முட்டின.

"எனக்கு நேற்றையிலிருந்தே இந்த நிகழ்ச்சியைப் பற்றி ஆச்சரியமாகத்தான் இருந்தது. ஆனால் இன்று நீங்கள் இங்கே என்னைச் சந்திப்பீர்கள் என்று நினைக்கவில்லை."

"நேற்றுச் சாயந்தரம் மானேஜரின் தந்தி வந்தது. இன்று காலை எக்ஸ்பிரஸில் புறப்பட்டு வந்தேன். நீங்கள் வேலையை ஒப்புக்கொண்ட செய்தி எனகுத் தெரியாது. எப்படியும் உங்கள் விலாசத்தைக் கண்டுபிடித்து உஙகளைப் பாராமல் அகோலாவுககுத் திரும்புவதிலலை என்று வணடியில் ஏறும் போதே தீர்மானித்துவிட்டேன். இங்கு வந்த பிறகுதான் தெரிந்தது, இந்தக் கிளையின் பொறுப்பை நீங்கள் ஏற்றுக் கொண்ட செய்தி!"

"இவரை மானேஜர் உங்களுக்கு அறிமுகப்படுத்தினாரா?" என்று சேகரன், ரஜனியைப் பார்த்துகொண்டே கேட்டான். தினகரன் அவனோடு பேச ஆரம்பித்ததுமே, மானேஜர் சிற்றுண்டி ஏற்பாடுகளை கவனிக்க ஹாலுக்குள் போயிருந்தார்.

"ஆமாம், இவரைப்பற்றி இபபோதுதான் தெரிந்துகொண்டேன்" என்றான் தினகரன்.

இவ்வளவு நேரம் பேசுவதற்குச் சந்தர்ப்பத்தை எதிர் பார்த்துக்கொண்டிருந்த ரஜனி குறுக்கிட்டு, "ரஞ்சிதத்துக்கு ஜுரம் எப்படி இருக்கிறது?" என்று கேட்டாள்.

அந்தக் கேள்வியைக் கேட்டதுமே சேகரனுடைய முகம் வாடியது; அவன் நெஞ்சை அடைக்கும் குரலில, "மிகவும் அதிகமாக இருக்கிறது" என்றான்.

"அப்படியானால் மஞ்சு அம்மாள் வீட்டில் தனியாகவா இருக்கிறார்கள்?"

"இல்லை; சரளா அம்மா வந்திருக்கிறார். அப்புறந்தான் இங்கே வரப் புறப்பட்டேன்."

"உங்கள் பெண்ணுக்கு என்ன உடம்பு, என்ன வயது ஆகிறது?"

"ஐந்தாறு வயது ஆகிறது. மூன்று நாளாக நிமோனியா."

"இந்த விழா முடிந்ததுமே உங்கள் வீட்டுக்குப் புறப்படு வோம்" என்று தினகரன் அநுதாபத்தோடு சொன்னான்.

அதற்குள் ஹாலில் ஏதோ 'களக்'கென்று உடைந்த சத்தமும், அடிக்கும் சத்தமும், 'பிளடி பூல்' முதலிய ஆங்கில வசவுகளும் கேட்டன.

சேகரன் உடனே தெரிந்துகொண்டான். மானேஜர்தாம் அந்த ஆங்கில வசவுகளைச் சரமாரியாகப் பொழிந்தார்.

அவர்கள் மூவரும் உடனே உள்ளே போனார்கள்.

சிற்றுண்டிகளைத் தட்டில் எடுத்து வைத்த வேலைக்காரர் களுள் ஒரு பையனைத்தான் மானேஜர் அப்படித் திட்டினார். அவன் கண்ணைத் துடைத்து அழுதுகொண் டிருந்தான்.

"இந்தப் பயல் என்னைச் சாமி சாமி' என்கிறான். இது என்ன, பேஷ்வாக்களின் காலமா? அலலது நான் பேஷ்வாக் களைப்போல் உடை அணிந்திருக்கிறேனா? ஸூட்டும், பூட்ஸு மாக நிற்கும் என்னைப் பார்த்துச் 'சாமி' என்கிறானே!—'ஸார்' என்று சொல்ல உள்நாக்கு இழுத்துக்கொண்டு போய்விட் டதா? ஜாக்கிரதை! இனிமேல் 'சாமி' என்று சொன்னாயோ, உன்னை—" என்று கூறி மானேஜர் அவன் காதைத் திருகினார்.

மறுபடி ஆத்திரத்தோடு, "என்ன சொல்வாய்?—ஸார், ஸார்!—ஆம், அப்படிச் சொல்லு. இனி ஞாபகம் இருக்குமா? டாம் பூல்!" என்றார்.

அந்த நிகழ்ச்சியை வியப்போடு பார்த்து நின்ற மற்றவர் களைப் பார்த்ததும் அவர் சிரித்துக்கொண்டே, "வேலைக் காரர்கள்மேல் கை வைப்பது எனக்குப் பிடிக்காது. ஆனால் வேறு வழியில்லை. பாருங்கள், இந்த முட்டாள்களுக்கு ஒழுங்கே தெரிவதில்லை. நானும் அப்போது முதல் பார்க்கிறேன். சாமி சாமி என்கிறான். இதோ நாலு பெரிய மனிதர்கள் வரப் போகிறார்கள். அவர்கள் முன்னால் என்னை ஸார் என்று கூப்பிடாமல் சாமி என்றால் நம்முடைய கம்பெனிக்கு என்ன மதிப்பு இருக்கும்?" என்றார்.

ரஜனி சேகரனைப் பார்த்தாள். அவன் முகம் கோபத் தினால் சிவந்திருந்தது. தினகரனுடைய முகத்திலோ குறும்புச் சிரிப்பு விளையாடியது.

"ஆறு அடிக்க இன்னும் பதினைந்து நிமிஷந்தான் இருக்கிறது, சேகர்! இதோ எல்லாரும் வந்துவிடுவார்கள். நீங்கள் மூவரும் வாசலில் அவர்களை வரவேற்க நில்லுங்கள்" என்று சொல்லிவிட்டு, மானேஜர் சர்சர்ரென்று பூட்ஸ் ஒலிக்க, பக்கத்து அறைக்குள் சென்றார்.

"என்ன சேகர், மிகவும் கோபத்தில் இருக்கிறீர்களே! இப்போதைய உலகமே இப்படித்தான் இருக்கிறது. நம்முடைய மானேஜரின் நிறம் வெளுப்பு. அவர் கறுப்புப் பையனைப் பார்த்து, 'பிளடி பூல்' என்றுதான் சொல்வார். இதை யெல்லாம் பார்த்து உங்களுக்குக் கோபம் வருகிறது. எனக்குச் சிரிப்பு வருகிறது" என்று பேசிக்கொண்டே தினகரன் அவனை வெளியே அழைத்துச் சென்றான்.

தேர்ந்தெடுத்த சில பேருக்குத்தான் மானேஜர் அழைப்பு அனுப்பி இருந்தார். ஆறு மணி சுமாருக்கு அநேகமாக எல்லாரும் வந்துவிட்டார்கள். கோவிந்தனும் பம்பு ஸேட்டும் ஒரே வண்டியில் வந்தார்கள். சேகரனைப் பார்த்ததுமே கோவிந்தன் புன்னகை பூத்து, "இந்தப் புது வியாபாரத்திலே உங்களுக்கு லாபம் கொழிக்க வேண்டும், சேகர்! நீங்கள் முக்கியஏஜெண்டு என்பதை இன்று காலையில் பேப்பரில் பார்த்தேன்" என்றார்.

பம்பு ஸேட் ஒன்றுமே பேசவில்லை. நாற்காலி வரிசைகளின் அருகில் நின்ற ரஜனியை அவன் கடைக்கண்ணால் கோவிந்தனுக்குச் சுட்டிக்காட்டி உட்கருத்தோடு சிரித்துக் கொண்டான்.

மணி ஆறு அடித்ததுமே மானேஜர் பேசுவதற்கு எழுந்து நின்றார். அவர் சுமார் இருபது நிமிஷ நேரம் கம்பெனியின் சிறப்புகளை விளக்கினார்; மூன்று ஆண்டுகளில் அது முன்னேறிய வரலாற்றைக் கூறினார்; நாகபுரியிலும் மகாகோசலத்திலும் உள்ள மக்கள் அதற்கு ஆதரவு அளிப்பார்கள் என்று நம்புவதாகப் பேச்சை முடித்தார். அவருடைய குரல் இனிமையாக இருந்தது. பேச்சு வெள்ளமாகப் பிரவகித்தது.

அவருக்குப் பிறகு ஓர் ஆலை முதலாளியும், வியாபாரியும், அரசியல் பிரமுகரும் கம்பெனியைப் புகழ்ந்து சுருக்கமாகப் பேசினார்கள். கடைசியில் ஆங்கிலத் தினசரி ஒன்றின் ஆசிரி

யர் பேசுவதற்கு எழுந்தார். போரினல் வாழ்க்கை நிலையற்று இருப்பதாகவும் அதனல் இன்ஷ்யூரன்ஸ் செய்வது மிகவும் அவசியமென்றும் அவர் பேசினர். இந்தக் கம்பெனி மாகாணம் முழுவதிலும் பரவி மக்களுக்கு நன்மை செய்யவேண்டும் என்று ஆசி கூறி அவர் பேச்சை முடித்தார். பின்பு ரஜனி ஐந்தே நிமிஷம் விறுவிறுப்பாகப் பேசி வந்தனேபசாரத்தை நிகழ்த்தினள்.

திறப்பு விழா முடிந்ததும் ஹாலில் சிற்றுண்டிக்கு ஏற்பாடு ஆகியிருந்த இடத்தில் எல்லாரும் வந்தார்கள். விழாவில் பேசியவர்களும் மானேஜரும் ரஜனியும் நடுவில் இருந்த பெரிய மேஜையைச் சுற்றி உட்கார்ந்தார்கள். அடுத்திருந்த ஏழெட்டு வட்டமேஜைகளின் அருகில் மற்றவர்கள் அமர்ந்தார்கள்.

மானேஜர் நாலைந்து நிமிஷமே அங்கே உட்கார்ந்திருந்தார். சிற்றுண்டி ஆரம்பமானதும் அவர் எழுந்து, சேகரன் உள்பட எல்லாரிடமும் போய் விசாரித்தார். ஒவ்வொருவரிடமும் இரண்டொரு வார்த்தை இனிமையாகப் பேசினர். எல்லாருக்குமே அவரிடம் ஒரு பற்றுதல் உண்டாயிற்று.

அவர் மறுபடி தமது இடத்துக்குப் போனதும் சேகரன் எழுந்து, கோவிந்தனும் ஸேட்டும் உட்கார்ந்திருந்த இடத்துக்கு வந்தான். "இன்னும் கொஞ்சம் டீ பருகுகிறீர்களா, மிஸ்டர் கோவிந்தன்? உங்கள் உதவியினல்தான் எங்கள் வியாபாரம் நடக்க வேண்டும்" என்றான்.

"எங்கள் வியாபாரம் என்ருல் யாருடைய வியாபாரம்?" என்று பாதி வாழைப்பழத்தை வாயில் திணித்துக்கொண்டே ஸேட் கேட்டான்.

"எங்கள் கம்பெனியின் வியாபாரம்!"

"அப்படியா! 'எங்கள்' என்ருல் உங்களையும் ரஜனியையும் சொல்லுகிறீர்களோ என்று பார்த்தேன். உங்கள் கம்பெனிக்கு இந்த அம்மாள் எப்பொழுது வந்தாள், சேகர்? பேப்பரில் உங்கள் பெயர் மட்டுமே முக்கிய ஏஜெண்டு என்று வந்தது. இங்கே வந்து பார்த்தால் வந்தனேபசாரம் செய்ய இந்த அம்மாள் எழுந்து நிற்கிருள்! உண்மையான முக்கிய ஏஜெண்டு யார்? நீங்களா, மிஸ் ரஜனியா?"

"நான்தான் முக்கிய ஏஜெண்டு" என்று சேகரன் சினத்தோடு பேசினன்.

"அப்படியானல் இந்த ரஜனி உங்களுக்கு என்ன ஆக வேண்டும்? உங்களுக்கு என்ருல் உங்கள் கம்பெனிக்கு. வீணுக ஏதாவது தப்பர்த்தம் செய்து கொண்டு என மேல் பாயாதீர்கள். நான் உங்களைப் போலவே நிறுத்துப் பேசுவதற்கு எழுத்தாளன் அல்ல!"

"அவர் எனக்குத் துணையாக வேலை செய்பவர். பெண்களிடம் இன்ஷ்யூரன்ஸைப் பரப்ப அவரை ஏஜெண்டாக நியமித்திருக்கிருர்கள்." – பொங்கி வந்த தன் கொதிப்பை அடக்கிக் கொண்டு சேகரன் இந்தப் பதிலைச் சொன்னன்.

அவனுடைய மனக்கொதிப்பைக் கோவிந்தன் முன்னமே உணர்ந்து கொண்டார். ஆதலால் அவர் பேச்சில் இடைமறித்து, "ரஜனியம்மாள் நன்ருக வேலை செய்வார், சேகர்! அவர் கெட்டிக்காரத்தனமாய்ப் பேசுவார்; நல்ல துணிச்சல் உள்ளவர். இப்படிப்பட்டவர்தாம் இன்ஷ்யூரன்ஸ் தொழிலுக்குத் தேவை. முக்கிய ஏஜெண்டு என்று உங்களுக்கு மாதச் சம்பளம் பேசி இருக்கிறீர்களா, கமிஷன் கணக்கா?" என்ருர்.

அவருடைய கேள்வியைக் கேட்டதும் சேகரன் சிறிது அமைதி அடைந்தான். "சம்பளம் எதுவும் கிடையாது. கம்பெனிச் செலவு, பிரயாணச் செலவு முதலியவற்றுக்குப் பணம் கிடைக்கும்" என்ருன்.

"அப்படி என்ருல் கமிஷன்தான் உங்களுக்கு ஆதாரம். அது ஒன்றும் கெடுதல் அல்ல. எனக்குத் தெரிந்து மாதம் ஆயிரம் ஆயிரத்தைந்நூறு சம்பாதிக்கும் ஏஜெண்டுகள் பலர் இருக்கிருர்கள். ஆனல் இப்போதைக்கு ஒரு குறிப்பிட்ட வருமானம் பெறுவதற்கு நீங்கள் ஏதாவது வேலை செய்வதுதான் நல்லது."

"பார்க்கலாம்! நான் இன்னும் அதைப்பற்றிச் சிந்திக்கவே இல்லை."

"நீங்கள் வீட்டில் இருந்தபடி செய்யக்கூடிய வேலை வேண்டுமானல் கிடைக்கச் செய்கிறேன். உங்கள் மானேஜரின் பக்கத்தில் உட்கார்ந்திருக்கிருரே, அவர் ஓர் ஆங்கிலத் தினசரி

யின் ஆசிரியர். அவர் பெயர் மணியம். ஆசிரியர் குறிப்பு எழுதுவதற்கு நிறையப் படிப்புள்ள ஒருவர் இப்போது அவருக்குத் தேவை. அந்த வேலையை ஒப்புக்கொள்ள முடியுமா?''

''ஒப்புக்கொள்ள ஏதும் தடை இருப்பதாகத் தெரியவில்லை.''

''ஆனால் இதை மட்டும் ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள். பேனா உங்களுடையது. கருத்து அவருடையது. அவர் பெரிய கர்வி. தமக்கு ஒன்றும் தெரியாவிட்டாலும் எல்லாம் தெரிந்தவர் போல் உங்கள் கட்டுரையைத் திருத்துவார்.''

''சரி, என்ன ஊதியம் கிடைக்கும்?''

''நூறு ரூபாய்க்குக் குறையாமல் கிடைக்கலாம். ஆனால் ஒன்று மட்டும் சொல்லி வைக்கிறேன்; நீங்கள் மறந்துபோய்க் கூட ஆசிரியர் குறிப்பெழுதும் செய்தியை வெளியே சொல்லக் கூடாது. பத்திரிகையில் நல்லது என்று இருப்பதையெல்லாம் தாம் செய்வதாக அவர் சொல்லுவார். அதை நீங்கள் பேசாமல் கேட்டுக்கொள்ள வேண்டும். வேலை அதிகம் இராது. தினமும் இரண்டு மணிநேரம் ஆபீசுக்குப் போனால் போதும். ஆசிரியர் குறிப்பு எழுதுவதும் அதன் புரூப் பார்ப்பதுமே உங்கள் வேலை. நாள்தோறும் எல்லாப் பத்திரிகைகளும் உங்கள் வீட்டுக்கு வரும். நான் இந்த வேலையைப் பேசி முடிவு செய்யட்டுமா?''

''செய்யுங்கள். இது எனக்குப் பெரிய உதவி.''

''அதைப் பற்றி என்ன! நான் உங்களைச் சொந்த மனிதராகவே எண்ணியிருக்கிறேன். மணியத்துக்கும் எனக்கும் நெருங்கிய நட்பு உண்டு. அதைத் தவிர, அவர் கம்பெனியில் நான் நிறையப் பங்குகளும் எடுத்துக்கொண் டிருக்கிறேன்.''

''சில சமயம் இவரே ஆசிரியர் குறிப்பும் எழுதுகிறார்!'' என்று பம்பு ஸேட் குறுக்கே பேசினான்.

கோவிந்தன் சிரித்துக்கொண்டே, ''ஆமாம், எப்போதாவது ஒரு சமயம் எழுதுவேன். அந்தப் பத்திரிகைக்கு ஒன்றும் கொள்கையே கிடையாது. பொதுவாக யாரையும் புண்படுத்தாமல் எந்தப் பிரச்னையையும் பற்றி மூடி மெழுகி எழுதிவிட வேண்டியது! காங்கிரசையும் எதிர்க்கக் கூடாது; எதிர்க் கட்சி

யாரையும் தாக்கக் கூடாது. இதை ஞாபகத்தில் வைத்துக் கொண்டு ஆசிரியர் குறிப்பு எழுத வேண்டும்'' என்றார்.

''நான் இன்று வரைக்கும் இப்படிக் கூலிக்கு எழுதினதில்லை. இருந்தாலும் முயன்று பார்க்கலாமே!''

அதற்குள் சிற்றுண்டி முடிந்தது. ஒவ்வொருவராக மானேஜரைக் கை குலுக்கி விட்டுப் புறப்பட்டார்கள். சேகரன் மட்டும் அந்தக் கொண்டாட்டத்தில் ஒரு துளி தேநீர்கூடப் பருகவில்லை.

கோவிந்தனிடம் விடை பெற்றுக்கொண்டு அவன் திரும்பி வந்ததும், ரஜனி அவனிடம் மெதுவாக, ''உங்களுக்குக் கொஞ்சம் டீ கொண்டுவரட்டுமா? நீங்கள் ஒன்றும் சாப்பிடவே இல்லையே!'' என்றாள்.

அந்தக் கேள்வியைக் கேட்டதும் அவன் அவளைத் திடுக்கிட்டுப் பார்த்தான். ''வேண்டாம், எனக்குப் பசியே போய் விட்டது'' என்றான்.

''எல்லா வேலையும் ஆயிற்று. இதோ உங்கள் வீட்டுக்குப் புறப்படலாம்.''

அவள் பேச்சு அவனைச் சிந்தனையில் ஆழ்த்தியது. பம்பு ஸேட் கிண்டலாகப் பேசியது இன்னமும் அவன் நெஞ்சில் பசுமையாக இருந்தது. ரஜனி அவனோடு வீட்டுக்கு வந்தால் சரளா என்ன நினைப்பாள்? அவள் தன் கம்பெனியில் துணையாக வேலை செய்வதை அவன் இன்னமும் மஞ்சுவிடம் சொல்லவில்லை. அதைச் சொல்ல அவனுக்குப் பொழுதே கிடைக்கவில்லை. சரளாவிடமோ பத்திரிகை வாயிலாகவோ இதை அறியும்போது மஞ்சு என்ன நினைப்பாள்?

ஆனால் ரஜனி தானாகு வரும்போது, அவளுடைய வற்புறுத்தலை அவன் எப்படித் தடுப்பது? இன்று அவளை அவன் அழைத்துச் செல்லாவிட்டாலும் அவளோடு அவன் பழகுவது மஞ்சுவுக்குத் தெரியாமலா இருக்கப்போகிறது? அப்படியிருக்க, அவளை ஏன் வீட்டுக்கு அழைத்துப் போகக் கூடாது? மேலும் அவன் மனம் தெளிவாகவும், ஒழுக்கம் நேர்மையாகவும் இருக்கும்போது அவன் இந்தத் தொடர்பை மஞ்சுவிடமிருந்து மறைக்க ஏன் முயல வேண்டும்?

இந்த எண்ணத்தில் அவன் மூழ்கி இருந்தபோது தினகரன் அவன் அருகில் வந்து, "என்ன சேகர், உங்கள் வீட்டுக்குப் புறப் படலாமா? மானேஜரின் காரிலேயே போகலாம். பொழுதும் மிசசமாகும்" என்றான்.

தினகரன் தன்னோடு வருவதாகச் சொன்னபோது வெறும் அநுதாபத்துக்குத்தான் என்று சேகரன் நினைத்திருந்தான். அவன் தன் வீட்டுக்கு வருவதாகச் சொன்னதுமே சேகரனுக்கு அப்பாடா என்று இருந்தது. இனி ரஜனியை அவன் தாராள மாக அழைத்துப் போகலாம். தினகரனும் கூட வருவதால் யாரும் அதைப் பிழையாக நினைக்க மாட்டார்கள்.

அவர்கள் மூவரும் மானேஜரிடம் விடை பெற்றுக்கொண்டு வண்டியில் உட்கார்ந்தார்கள்.

வண்டி வீட்டு வாசலில் நின்று, அதிலிருந்து சேகரன் இறங் குவதற்குள் உள்ளேயிருந்து அவசர அவசரமாக வந்த ராம நாதன், "இது யாருடைய வண்டி, சேகர்? டாக்டரை உடனே அழைத்து வர வேண்டும். ரஞ்சிதத்தின் நிலைமை மிகவும் மோசமாக இருக்கிறது. நான் அங்கேதான் இப்போது புறப் பட்டேன்" என்றான்.

"சரி, நீங்கள் இந்த வண்டியில் போய் டாக்டரைஅழைத்து வாருங்கள்" என்றான் சேகர். தினகரனும் ரஜனியும் பின்வர, அவன் மெதுவாக வீட்டுக்குள்ளே சென்றான்.

## 13

ரஞ்சிதம் மஞ்சுவின் மடியில் அசையாமல் படுத்திருந்தாள். அவளுடைய மூச்சின் வேகம் இப்போது குறைந்திருந்தது. விளக்கொளியில் அவளுடைய சிவந்த உடல் பளபளவென்று மின்னியது.

நந்து சரளாவின் மடியில் உட்கார்ந்திருந்தான். சரளா ரஞ்சிதத்துக்கு லேசாகக் காற்றுப் படும்படி விசிறியை வீசினாள்.

சேகரன் உள்ளே வந்ததுமே அவன் கண்கள் மஞ்சுவின் கண்களோடு கலந்தன. உடனே அவள் கண்களில் நீர் வெள்ள மாக ஓடியது.

அவன் பேசாமல் அவளருகில் போய் உட்கார்ந்து, ரஞ்சிதத்தின் உடம்பைத் தொட்டுப் பார்த்தான். "டாக்டர் வந்து போனானா? என்ன சொன்னான்?" என்று கேட்டான்.

"மார்பு முழுவதும் கபம் இருப்பதாக அவர் சொன்னார்."

"அப்படியானால் இஞ்செக்ஷன் ஏதாவது கொடுக்க முடியாதோ?"

"அதைப் பற்றித் தீர்மானம் செய்யத்தான் அவர் போயிருக்கிறார். அதற்குள் எங்களுக்குத் தைரியம் இல்லாமையால் ராமுவை அனுப்பினேன்."

"அவனை நான் பார்த்தேனே!" என்றான் சேகரன்.

வாசற்படியில் நின்ற தினகரனை அப்பொழுதுதான் மஞ்சு பார்த்தாள். அருகில் ரஜனியைக் கண்டு, "உட்காருங்கள், ரஜனியம்மா. அவரையும் உட்காரச் சொல்லுங்கள்" என்றாள்.

ரஜனி வெளியறையிலிருந்து இரண்டு நாற்காலிகளை எடுத்து வந்தாள். அவர்கள் இருவரும் அதில் உட்கார்ந்தார்கள்.

சிறிது நேரம் அந்த அறையில் அமைதி பரவியிருந்தது. நடு நடுவே ரஞ்சிதத்தின் சுவாசம் மட்டும் கேட்டது.

ராமநாதனும் அவன் பின்னால் இரண்டு டாக்டர்களும் வந்தார்கள். அவர்களைக் கண்டதும் சேகரனும் ரஜனியும் தினகரனும் எழுந்து நின்றார்கள்.

இரண்டு டாக்டர்களில் இளைஞனாக இருந்தவன், நோயின் தன்மையை மற்றவருக்கு விளக்கிச் சொன்னான்.

வழுக்கை விழுந்த கிழ டாக்டர் ரஞ்சிதத்தின் உடம்பைப் பரிசோதித்தார். குழந்தையின் மார்பிலிருந்து ஸ்டெதஸ்கோப்பை எடுத்ததும் அவர் ஒரு பெருமூச்சு விட்டு, "நீ என்னை மிகவும் தாமதமாக அழைத்து வந்தாய். குழந்தையின் நிலைமை உள்ளுக்குப் போய்க்கொண்டிருக்கிறது. இப்பொழுது நான் என்ன செய்ய முடியும்?" என்றார். நெற்றியில் வடிந்த வேர்வையைக் கைக்குட்டையால் துடைத்துக்கொண்டு, அவர் மௌனமாக வெளியே நடந்தார்.

டாக்டரின் பேச்சைக் கேட்டதும் சரளா கண்ணைத் துடைத்துக்கொண்டாள். அவள் மடியில் இருந்த நந்து பயந்துபோய்

அம்மாவையும், சரளாவையும், அம்மாவின் மடியில் கிடந்த ரஞ்சிதத்தையும் மாறி மாறி உற்றுப் பார்த்தான்.

இவ்வளவு நேரமாக அழுதுகொண்டிருந்த மஞ்சு மட்டும் திடமாகவும் அமைதியாகவும் உட்கார்ந்திருந்தாள். அவள் தன் இரண்டு கைகளையும் படுக்கையின் மேல் தாங்கிக் கொண்டு, மடியில் அசையாமல் கிடந்த ரஞ்சிதத்தையே பார்த்துக்கொண் டிருந்தாள்.

டாக்டர்களோடு வெளியே போன சேகரன் திரும்பி வரவில்லை.

ரஜனி நாற்காலியிலிருந்து எழுந்து மஞ்சுவின் அருகில் படுக்கைமேல் உட்கார்ந்தாள். அந்த அறையில் இன்னதென்று விவரிக்க முடியாத சாவின் அமைதி பரவியிருந்தது. சாவின் காலடி பட்டதுமே சொல் மறைந்தது; கண்ணீர் ஓய்ந்தது.

சிறிது நேரத்துக்கெலலாம் ராமநாதன் மெதுவாக உள்ளே வந்தான்; ரஞ்சிதத்தின் உடமபைத் தொட்டுப் பார்த்தான.

தூக்கத்தில் ஆழ்ந்திருக்கும் சிறு குழநதையை எடுப்பது போல அவன் ரஞசிதத்தை அலக்காக மஞ்சுவின மடியிலிருநது எடுத்துக் கீழே விட்டான்.

மஞ்சு அசைவற்று இருந்தாள். ஆனால் சரளாவின் தடுக்க முடியாத விக்கல், இதுவரைக்கும் அந்த அறையில பரவியிருந்த பயங்கர அமைதியைக் குலைத்தது.

சரளாவின் மடியில் இருந்த நந்து அசையாத தன் தாயையும், கீழே போர்த்துக் கிடந்த ரஞ்சிதத்தையும் கண்கொட்டாமல் பார்த்தான்.

ரஜனி எழுந்திருந்து, அவனைச் சரளாவின் மடியிலிருந்து எடுத்து, காலியான மஞ்சுவின் மடியில் உட்கார வைத்தாள்.

பயந்துபோயிருந்த நந்து உடனே தன் தாயைக் கெட்டியாக அணைத்துக்கொண்டு, அவள் முன்றானையில் முகத்தை மறைத்துக்கொண்டான்.

அவனுடைய மென்மையான உடலின் ஸ்பரிசம் பட்டதும் மஞ்சு அவனைக் கட்டி அணைத்துக்கொண்டு அவன் தலைமேல் முகத்தைக் கவிழ்த்துக்கொண்டாள்.

இவ்வளவு நேரமும் ரஞ்சிதத்தைப் பார்த்துப் பார்த்துப்

பூத்துப்போய் வற்றிக் கிடந்த அவள் கண்களிலிருந்து இப்போது தாரை தாரையாக நீர் பெருகலாயிற்று.

சேகரன் அன்று இரவு முழுவதும் ஒரு நிமிஷங்கூடக் கண் மூடவில்லை.

சாவை இதற்கு முன்னுல் அவன் பார்த்ததில்லை என்பதில்லை. சாவு என்ருல் என்ன என்பதை அவன் முழுதும் அறிந்து கொள்வதற்கு முன்பே அவனுடைய பெற்ருேர் இறந்தார்கள். பிறகு அவன் மாமாவின் வீட்டுக்கு வந்தான். அங்கே மாமாவின் குழந்தைகள் பிறந்ததையும் செத்ததையும் அவன் பார்த்திருக்கிருன். அவனுடைய மாமாவின் வீட்டில் பிறந்தவுடனே இறந்தாலும் சரி, பிறந்து ஐந்தாறு வருஷங்கள் இப்படியும் அப்படியுமாக உயிரோடு இருந்து இறந்தாலும் சரி — குழந்தைகளின் சாவைக் கணக்கில் எடுத்துக்கொள்ளும் வழக்கமே இல்லை. கனிகள் பழுத்துக் குலுங்கும் மரத்திலே சில கனிகள் தரையில் விழத்தான் விழும் என்று தோட்டக்காரன் தீர்மானித்து நடந்து கொள்வதுபோல, குழந்தைகள் நிரம்பிய அந்த வீட்டில் இந்தச் சாவுகளை யாரும் பாராட்டவே இல்லை. அதனுல் அவனும் அவற்றை எளிதில் மறந்து விட்டான்.

ஆனுல் சிறிதும் எதிர்பாராதபடி ரஞ்சிதம் இறந்தபொழுது தான் சாவின் கோர வடிவத்தை அவன் முதல் முதலாகக் கண்டான்.

கடந்த பத்து ஆண்டுகளாக அவன் சுகமாக வாழ்கிருன் என்றே சொல்லலாம். தன் அறிவுக்கும் படிப்புக்கும் ஏற்ற வருமானம் இல்லை என்ற வருத்தம் அவனுக்கு இருந்தபோதிலும், எழுத்தாளன் என்று அவனுக்கு இப்போது கிடைத்து வந்த புகழ் அந்த வருத்தத்தை மறைத்தது.

மஞ்சுவை மணந்த பிறகு அவனுடைய தனி வாழ்வில் உல்லாசம் பிறந்தது. அவனுடைய மனக்கோட்டைகள் எல்லாம் சிதறி, வாழ்க்கை துன்பமாக இருந்தாலும் அதனுல் அவன் மனம் கசந்துகொள்ளவில்லை. சில சமயம் அவனுக்கு வெறுப்பாக இருக்கும். மனம் இடிந்தாற்போல இருக்கும். ஆனுல் குழந்தைகளோடு சிறிது நேரம் விளையாடினுலும், மஞ்சு

வின் இனிய ஸ்பரிசம் பட்டாலும் அவனுடைய வேதனைகள் யாவும் தீர்ந்துவிடும்.

அந்த இன்ப வாழ்க்கை இனி எப்போதுமே வராது என்ற கடுமையான உணர்ச்சி, ரஞ்சிதத்தின் மரணத்தினால் அவனுக்கு உண்டாயிற்று.

மறுநாள் மாலையில் மானேஜரை ரெயிலேற்றிவிட்டுத் திரும்பியபொழுது தன்னுடைய இந்த உணர்ச்சியைச் சேகரன் தினகரனிடம் தெரிவித்தான்.

ஞாயிற்றுக்கிழமை இரவு எல்லாரும் மயானத்திலிருந்து திரும்பி வரும்வரைக்கும் சரளாவும் ரஜனியும மஞ்சுவின் அருகிலேயே உட்கார்ந்திருந்தார்கள். சேகரன் தானே ரஞ்சிதத்தை மயானத்துக்குச் சுமந்து செல்ல விரும்பினான். ஆனால் ராமநாதன் அவனைப் பிணத்தைத் தொடவே விடவில்லை. பம்பு ஸேட்டும் கோவிந்தனும் தினகரனும் அவனுக்கு ஓயாமல் ஆறுதல் சொன்னார்கள்.

மஞ்சு துயரத்தில் மூழ்கியிருந்தாள். மடியில் தூங்கிய நந்துவின் ஸ்பரிசம் அந்தத் துயரத்திலும் அவளுக்குச் சிறிது ஆறுதலைத் தந்தது. நந்துவைப் படுகையில் விடும்படி சரளா இரண்டொரு தடவை சொல்லிப் பார்த்தாள். ரஞ்சிதத்தை நாள் முழுவதும் மடியில் வைத்திருந்ததனால் அவளுக்குக் கால் மரத்துப் போயிருக்கும் என்று அவள் எண்ணினாள். ஆனால் மஞ்சு அவள் பேச்சைக் கேட்கவில்லை. ஒரு மரப்பாச்சி தொலைந்துபோனால் சிறு பெண்கள் மற்றொரு மரப்பாச்சியை விடாமல் வைத்துக் கொள்வதுபோல, மஞ்சு அந்தக் குழந்தையைச் சிறிதும் நகர்த்தாமல் வைத்துக்கொண்டாள்.

சரளாவும் ரஜனியும் அவளோடு மெதுவாகவே பேசினார்கள். இடையிடையே அவள் கண்களிலிருந்து நீர் பெருகியது. ஆனால் அன்பு நிரம்பிய தோழிகள் பக்கத்தில் இருந்ததனால் அவளுடைய துயரம் கொஞ்சங் கொஞ்சமாகக் குறைந்தது. அடுத்த வீட்டு அத்தை அவளை வற்புறுத்தி ஸ்நானம் செய்யக் கிளப்பியதனால், அவள் எழுந்து எப்போதும்போல வேலை செய்யலானாள்.

நண்பர்களோடு வழியில் திரும்பிவந்த சேகரனுக்கோ

நெஞ்சம் கொதித்தது. உலகத்தின் நிலையற்ற தன்மையை அன்றுதான் அவன் நன்ருக உணர்ந்தான். சங்கராசாரியார் தொடங்கி ஷோபென்ஹார் வரைக்கும் பல தத்துவ ஞானிகள் உலகத்தின் துன்பகரமான அழிவைப்பற்றி எழுதியிருப்பதை அவன் படித்திருந்தான். ஆனுல் அவனது சொந்த வாழ்க்கையில் அந்தத் தீயின் சூடு இப்போதுதான் முதல் முதலாக – அதுவும் தீவிரமாக உறைத்தது.

குளத்துக்கு வந்து ஸ்நானம் செய்ததும் அவனுடைய கொதிப்புச் சிறிது அடங்கியது. சாவின் அதிர்ச்சி பட்டுங்கூட, மனிதனுக்குத் தான் வாழும் ஆசை போவதில்லை என்பதை அவன் உணர்ந்தான். உள்ளத்தில் துயரம் தகதகவென்று கொதிக்கும்போதும் மஞ்சு எழுந்து வேலை செய்யவேண்டி யிருப்பதை அவன் கண்டான். சாவுக்கு உண்மையான எதிரி, அடக்க முடியாத போட்டி ஏதாவது இருக்கிறது என்ருல், அது மனிதன் வாழ விரும்புவதுதான். அந்த விருப்பம் பெண்ணுக உருவெடுத்திருக்கிறது. இந்த வாழும் விருப்பமாகிய அமரத்துவம் – சாவைத் தோற்கடிக்கும் இந்த விந்தைத் துணிச்சல்– பெண்ணின் உருவோடு இந்த உலகிலே உலவி, குடும்பத்தில் நிலைக்கும் தன்மையையும் இடையருத ஓட்டத்தையும் உண்டாக்கியிருக்கிறது. ஆண் தனக்காக, தன் கொள்கைகளுக்காக வாழ்கிருன்; பெண் வருங்காலத்து மக்களுக்காக வாழ்கிருள்.

எல்லாரும் வீட்டுக்குத் திரும்பி வந்ததும், "நான் ஆனந்தாசிரமத்துக்குப் போக வேண்டும். அங்கே மானேஜர் என்னை எதிர்பார்த்துக்கொண் டிருப்பார். நான் நாளைக் காலையில் இங்கே வருகிறேன்" என்ருன் தினகரன்.

அதற்குள் கோவிந்தன், "நாம் எல்லாரும் என் காரிலேயே போகலாமே. நீங்கள் வருகிறீர்களா, ரஜனியம்மா?– நீ இங்கேயே இருக்கப் போகிருயா?" என்று சரளாவைப் பார்த்துக் கேட்டார்.

"நான் காலையில் எழுந்ததுமே திரும்பி வருகிறேன்" என்று அவள் பதில் சொன்ருள். எல்லாருமே அங்கிருந்து புறப்பட்டார்கள்.

சிறிது நேரங்கழித்துப் பக்கத்து வீட்டு அத்தையம்மாள் சேகரனுக்கும் மஞ்சுவுக்கும் இலை போட்டாள். சேகரன் பேசாமல போட்டதைச் சாப்பிட்டுவிட்டு எழுந்தான்.

மஞ்சுவுககு இலையடியில் உட்கார்ந்ததுமே அழுகை வந்து விட்டது. அத்தையம்மாள் எவ்வளவோ சமாதானம் சொன்ன போதிலும், அவள் சோற்றை எறிந்துவிட்டே எழுந்தாள்.

சாப்பாடு முடிந்ததும் சேகரன் தன் படுக்கையில் போய்ப் படுத்தான்.

அத்தையம்மாள் சமையலறையில் எல்லாவற்றையும் மூடி வைத்துப்போனதும் மஞ்சு வெளியறைக்கு வந்தாள். அவள் படுக்கையில் நந்து மட்டும் தூங்கிக்கொண் டிருந்தான். கடந்த மூன்று வருஷங்களாக அவள் இரண்டு குழந்தைகளோடு அதில் தூங்குவது வழக்கம். இன்று நந்து தனியே தூங்கு வதைக் கண்டதும் அவளுக்குத் துயரம் பொங்கியது.

அவள் கட்டிலைச் சார்ந்து கீழே உட்கார்ந்து, நந்துவுக்குப் பக்கத்தில் காலியாக இருந்த இடத்தில் விக்கி விக்கி அழுது கண்ணீர் வடித்தாள்.

சேகரன் எழுந்து வந்து அவளை அணைத்துக்கொண்டு, "மஞ்சு, மஞ்சு!" என்று ஆறுதலாக அழைத்தான்.

அதற்குமேல் அவனால் பேச முடியவில்லை. அவனுடைய சூடான கண்ணீர் அவள் நெற்றியிலே விழுந்தது.

அவன் மெதுவாக அவளை அணைத்துக்கொண்டு, தன் மார்பில் அவளுடைய தலையைப் புதைத்துக்கொண்டு, ஆறுதலாக ஏதோ பேசினான்.

அவனுக்கு அதிகமாக ஒன்றும் பேசத் தோன்றவில்லை; அவனுடையபேச்சினால் அவளுக்கு ஆறுதலும் உண்டாகவில்லை. ஆனால் அவனுடைய மென்மையும் உறுதியுமான ஸ்பரிசத்தினாலும், நெற்றியில் விழுந்த சூடான கண்ணீரினாலும், நீண்ட பெருமூச்சினாலும் அவளுக்கு உண்டான அந்த ஆறுதல், எத்தகைய சொல்லினாலும் உண்டாகி யிருக்க முடியாது. இரவு முழுவதும் ஓயாமல் பிசுபிசுவென்று தூற்றல் விழுந்து அதனால் பூமியின் தாபம் தணிவதுபோல, அவனுடைய மௌனமான ஸ்பரிசம் அவளுக்கு ஆறுதலைத் தந்தது.

விடிகாலையில் அவளுக்குத் தூக்கம் வந்தது. அவன் மட்டும் விழித்தபடியே இருந்தான். நடுநடுவே அவள் உடம்பு நடுங்கியது; அவள் தூக்கத்தில் கீச்சிட்டாள். அபபோது அவன் அவளை மெதுவாகத் தட்டிக் கொடுத்தான்.

அவளுடைய ஸ்பரிசம் அவனுக்குத தேவையாக இருநதது. அவனுடைய வாழ்க்கையின்பம் முழுவதும் அந்த ஸ்பரிசததிலே நிரமபி யிருந்தது; அவனுக்கு இதுவரைக்கும் உற்சாகததை மலர்வித்தது அந்த ஸ்பரிசந்தான். ஆனால் இன்று அது அவனுககு வேறு வகையான உணர்ச்சியைக் கொடுத்தது. அந்த ஸ்பரிசத்தில் இன்ப எழில் இல்லை; உணர்சசி வெறி இலலை; பனிநீர் படிந்த தண்மையான புது மலரினால கண்ணின் உஷ்ணம தணிவதுபோல, அவனுடைய மனத்தின் கொதிப்பு அந்த மென்மையான உடலின் ஸ்பரிசத்தினால் தணிநதது. வாழ்க்கையின் ஈரமும் தண்மையும் அந்த ஸ்பரிசத்திலே இருந்தன.

இந்த நிலையிலேயே பொழுது விடிந்தது. நந்து எழுநததனால் அவன் மஞ்சுவை எழுப்ப வேணடியதாயிற்று.

மஞ்சு ஸ்டவ்வைப் பற்ற வைத்து அவனுக்கு ஓவலடின தயாரிப்பதற்குள், வாசலில் சரளா கூப்பிட்டது அவள் காதில விழுந்தது.

சேகரன் கதவைத் திறந்தான்; சரளா உள்ளே வந்தாள்.

வந்ததுமே அவள் சேகரனைப் பார்த்து, "இரண்டு மூன்று நாளைக்கு நீங்கள் எங்கள் வீட்டில் வநது இருககலாமே. மஞ்சுவின் லீவுககாக இப்போதுதான் அவளுடைய பள்ளிக்கூடத் தலைவிக்குக் கடிதம் எழுதியிருக்கிறேன். நீங்கள நாலைந்து நாள் எங்கள் வீட்டில் இருந்தால் உங்களுக்குச் சிறிது ஆறுதலாக இருக்கும்" என்று பரிவோடு வேண்டினாள்.

அதைக் கேட்டு அவன் திகைத்தான். அவர்கள் வீட்டுக்குப் போய் வசிப்பது அவனுககுப் பிடிக்கவிலலை. அந்த வேண்டுகோளை மறுப்பதும் சரியென்று தோன்றவில்லை. மேலும் அவன் ஒரேயடியாக மறுத்துவிட்டால் மஞ்சு அதைப் பற்றி என்ன நினைப்பாளோ என்ற சந்தேகமும் எழுந்தது.

அதனால் அவன் ஒன்றுமே பதில் சொல்லவில்லை.

மஞ்சு, "நீ சொலவது சரிதான், சரளா! ஆனல் வேறு இடத்தில் போய் இருப்பதனல் நம் துயரம் மறந்து போகுமா? துயரம் என்பது மனப் புண். உடல் போகும் இட மெல்லாம் உடற்புண்ணும அதனேடு செல்வது போலத்தான் மனப் புண்ணின் நிலையும். உன் வீட்டுக்கு நான் வந்தால உன் குழநதைகள் இல்லாத கேள்விகளெலலாம் கேட்பாாகள். எனககுப் பைத்தியம் பிடித்தாற்போல ஆகிவிடும. நந்துவுககே இப்போது ஒவ்வொரு தடவைக்கும் என்ன பதில் சொல்வ தென்று எனக்குத் தெரியவிலலை" என்ருள். பேசியபோதே அவளுக்கு அழுகை வந்துவிட்டது.

சரளாவுககு அவள் பேசசு பொருத்தமாகத் தோன்றியது. மஞ்சு தன் வீட்டுக்கு வந்தால், ரஞ்சிதத்தைப் பற்றிக் குழந் தைகள் ஓயாமல் கேள்வி கேட்டுத் தொணப்புவார்கள் என்பது அவளுக்கும் தெரிந்தது. ஆயினும் மஞ்சு தன்னிடம் வந்து இருக்க வேண்டுமென்று அவள் விரும்பினுள். ஆகவே, "அப் படியானல் ஒன்று செய். பத்து மணிக்கு நான் வண்டி அனுப் புகிறேன். இவரை ஆபீசுககு அனுப்பிவிட்டு எங்கள் வீட்டுக்கு வந்துவிடு. இதற்கு ஏதும் தடை இல்லையே? இரவு சாப்பாடு ஆனதும், உங்களுக்குத் தோன்றினல் திரும்பி வாருங்கள். எப்படியும் இன்று நீ தனியாக இந்த வீட்டில் இருக்கக் கூடாது" என்ருள்.

அவள் இப்படி வற்புறுத்திப் பேசும்போது இதை மறுக்க லாகாது என்றே சேகரனுக்குத் தோன்றிற்று. அவன் சடக் கென்று, "நீங்கள் சொல்வது சரி, சரளா அம்மா! பத்து மணிக்கு வண்டி அனுப்புங்கள். இவள் உங்கள் வீட்டுக்கு வரு வாள். நான் ஆபீசுக்குப் போகிறேன். இன்று நான் புதிதாக வேலை செய்ய வேண்டிய முதல் நாள். இன்று கட்டாயம் போக வேண்டும். வீட்டில் உட்கார்நது வருத்தப்படுவதை விட வேலையில் மனத்தைச் செலுத்துவது நல்லது. ஆனல் இரவு நாங்கள் எப்போதும்போல வீட்டில் சாப்பிட வந்துவிட வேண்டும்" என்ருன்.

"அதை நாம் சாயங்தரம் தீர்மானித்துக் கொள்ளலாம். நீங்கள் எப்பொழுது நம் வீட்டுக்கு வருவீர்கள்?"

"சுமார் ஏழு மணிக்கு வருவேன். மானேஜர் இன்று பம்பாய்க்குப் புறப்படுவார். அவருடன் தினகரனும் போவாரோ என்னவோ, எனக்குத் தெரியாது. நான் சாயந்தரத்தைப்பற்றி இப்போது ஒன்றும் திட்டமாகச் சொல்லமுடியாது."

"சரி, நீங்கள் எப்போது வந்தாலும் பரவாயில்லை. நான் போய்ப் பத்து மணிக்கு வண்டி அனுப்புகிறேன்" என்று சொல்லி, தேநீர் அருந்தக்கூட நிற்காமல் அவள் போனாள்.

ஒன்பது மணிக்குத் தினகரன் வந்தான். அப்பொழுது சமையல் ஆகிவிட்டது. ஆதலால் அவன் சாப்பிட வேண்டுமென்று சேகரன் வற்புறுத்தினான்.

அதற்குத் தினகரன், "நானே உங்களை அங்கே சாப்பாட்டுக்கு அழைத்துப்போக வந்திருக்கிறேன். மானேஜர் உங்கள் துயரத்தைக் கேட்டு மிகவும் வருத்தப்பட்டார். உங்கள் இருவரையும் பார்க்க அவரே வருவதாக இருந்தார். நான்தான் அவர் வர வேண்டிய அவசியமில்லை என்று சொன்னேன். ஆயினும் என்னை வண்டியில் அனுப்பி உங்களை அழைத்துவரச் சொல்லியிருக்கிறார்" என்றான்.

"அப்படியானால் சாப்பாடு ஆனதும் எனக்கு இன்று ஒரு வேலையும் இராது. நான் இன்று முழுவதும் கோவிந்தனின் வீட்டுக்குப் போய் இருக்கப்போகிறேன்."

"இன்றைக்கு நாம் ஆபீஸ் வேலைகளையெல்லாம் சரியாகத் தீர்மானித்துவிட வேண்டும். நீங்கள் மானேஜரிடம் தெளிவாகப் பேசி ஒன்றும் முடிவு செய்து கொண்டதாகத் தெரியவில்லையே!"

"இப்பொழுது உங்களோடு ஆலோசித்து எல்லாம் முடிவு கட்டிவிடுகிறேன்" என்று சொல்லிச் சேகரன் சிரித்தான். வருத்தம் தோய்ந்த அவன் சிரிப்பு, இருள் பரவிய அலைநீரைப் போல இருந்தது.

அவர்கள் சாப்பிடுவதற்குள் சரளாவின் வண்டி வந்துவிட்டது. மஞ்சு அந்த வண்டியில் சரளாவின் வீட்டுக்குப் போனாள். சேகரன் தினகரனோடு ஆபீசுக்குச் சென்றான்.

சாயங்காலம் வரைக்கும் ஆபீஸ் வேலைகளை ஒழுங்கு செய்வதிலும், மானேஜரோடு எழுத்து மூலமாக ஒப்பந்தங்கள்

செய்வதிலும் அவர்களுக்குப் பொழுது போய்விட்டது. தினகரன் விவகாரத்தில் எவ்வளவு கெட்டிக்காரன் என்பதைச் சேகரன் அப்பொழுது அறிந்துகொண்டான். சுமார் நான்கு மணிக்கு ரஜனி வந்தாள். அரை மணிக்குமேல் அவள் அங்கே நிற்கவில்லை. அவள் போகும்போது சேகரனிடம் மெதுவாக, "வீட்டில் மஞ்சுவுக்கு யார் துணை இருக்கிறார்கள்?" என்று கேட்டாள்.

"அவள் இன்று சரளா அம்மாவின் வீட்டுக்குப் போயிருக்கிறாள்."

"நீங்கள் வீடு மாற்றினால் நல்லது என்று எனக்குத் தோன்றுகிறது. அதே வீட்டில் இருந்தால் பல நினைவுகள் உண்டாகி மஞ்சு அம்மாள் ஓயாமல் வருத்தப்படுவாள்."

"காலையிலேயே இதை நான் நினைத்தேன். ஆனால் வசதியாக வீடு கிடைக்க வேண்டுமே?"

"என்ன இருந்தாலும் அந்த வீட்டில் இருந்தால் மஞ்சு அம்மாளுக்கு நிம்மதியாக இராது. ஆண்களை விடப் பெண்கள் வீட்டில் அதிக நேரம் இருக்கிறார்கள். ஆகையால் இம்மாதிரி சந்தர்ப்பத்தில் வீடு வெறிச்சென்று தோன்றும்!"

அவள் மானேஜரிடம் விடை பெற்றுக்கொண்டு வீட்டுக்குப் போனாள். சேகரனும் தினகரனும் உடனே ஸ்டேஷனுக்குப் போகப் புறப்பட்டார்கள். மானேஜர் தினகரனைத் தம்மோடு புறப்பட்டு வரச் சொன்னார். ஆனால் தனக்கு இன்னும் நிறைய வேலைகள் இருப்பதாகப் பக்குவமாகச் சொல்லி, தினகரன் நின்றுவிட்டான்.

ரெயில் புறப்பட்டதும் அவர்கள் இருவரும் வெளியே வந்து டாக்ஸியில் உட்கார்ந்து குன்றின் பக்கமாக வந்தார்கள். அமராவதி சாலையின் அருகே அவர்கள் டாக்ஸியிலிருந்து இறங்கி, மெதுவாக நடந்தார்கள்.

சூரியன் மலைவாயில் விழுந்தது. வெயில் குறைந்திருந்தும், சூடு மட்டும் காற்றில் பரவியிருந்தது.

நடந்துகொண்டேயிருந்த தினகரன் சேகரனுடைய தோளைத் தட்டி, "அதோ எதிரே பார்த்தீர்களா?" என்றான்.

சேகரன் திடுக்கிட்டு எதிரே பார்த்தான்.

ஒரு வயலில் ஓர் எருமையின் பிணம் விழுந்து கிடந்தது. அதை நாலைந்து கழுகுகள் கொத்திக்கொண் டிருந்தன. அந்தச் செத்த உடலில் இருந்த மாமிசமெல்லாம் போய்விட்டது. எலும்புகளில் கொஞ்ச நஞ்சம் ஒட்டிக்கொண் டிருந்த மாமிசத் துணுக்கை அந்தக் கழுகுகள் தம் நீண்ட மூக்கினால் கொத்தின. பெரிய சிறகுகளை விரித்துக்கொண்டு அவை அந்தப் பிணத்தின் மேல் பாய்ந்தபோது அது வேகமாக அசைந்தது.

அந்தக் கழுகுகளின் அக்கம் பக்கத்தில் நாய்களும் காகங் களும் தமக்கு ஒரு துணுக்காவது கிடைக்கும் சந்தர்ப்பம் வேண்டுமே என்று வட்டமிட்டன. நாய்கள் தரையைப் பிருண்டிக் குரைத்தன. காகங்கள் கரைந்துகொண்டு வட்ட மிட்டுப் பறந்தன.

அவற்றின் கூச்சலை அந்தக் கழுகுகள் சற்றும் மதிக்கவே இல்லை. அமைதியாக அந்தப் பிணத்தின் மேல் உட்கார்ந்து தம் வேலையை நடத்திக்கொண் டிருந்தன.

தினகரன் கண்கொட்டாமல் இந்தப் பயங்கரமான காட்சி யைப் பார்த்துக்கொண்டு நின்றான். பார்த்துக்கொண் டிருக் கையில் அவனுடைய ஆழ்ந்த கண்களில் ஓர் ஒளி வீசியது. அவன் உரக்கச் சிரித்து, "எனக்கு ஒன்று தோன்றுகிறது, சேகர்! இந்தப் பிணத்தைப் படம் எடுத்து ஏதாவது ஒரு பத் திரிகைக்கு அனுப்பலாம். 'பாரத நாடு' என்று இதற்குப் பெயர் வைக்க வேண்டும். ஆனால் யாரும் இதை வெளியிட மாட்டார்கள்!" என்றான்.

அடுத்த கணமே அவன் சிரிப்பு மறைந்தது. "சேகர், இன்று நம் நாட்டின் நிலை இப்படித்தானே இருக்கிறது? இன்று அதன் பிணந்தான் மிஞ்சியிருக்கிறது. அந்தப் பிணத்தில் கொஞ்ச நஞ்சம் தங்கிப் போயிருக்கும் மாமிசத்தையும் இப் போது மூக்கால் கொத்துகிறார்கள்" என்றான்.

அவனுடைய முந்திய சிரிப்பைவிட இந்தப் பேச்சு, சேக ரனைச் சிந்தனையில் ஆழ்த்தியது. அவனுடைய கண்ணின் ஒளி யும் விகாரச் சிரிப்பும் சேகரனுக்கு இப்போது பழகிப் போயி ருந்தாலும், எதிரே அந்தக் காட்சியைப் பார்த்தபோது அவ னுக்குத் தூக்கிவாரிப் போட்டது. சிறகுகளைப் படபடத்துக்

கொண்டு கழுகுகள் பறப்பதையும், பிணம் கிடந்த இடத்தி லேயே ஆடுவதையும் அவனுக்குப் பார்க்கச் சகிக்கவில்லை.

அவன் தினகரனுடைய கையைப் பிடித்துக்கொண்டு, "நாம் இங்கிருந்து போகலாம், வாருங்கள். இந்தப் பரிதாபக் காட்சியை என்னால் பார்க்க முடியவில்லை" என்றான்.

தினகரன் ஒன்றும் பேசவில்லை. அவர்கள் இருவரும் மௌனமாக ஒரு மேடையில் வந்து உட்கார்ந்தார்கள். தின கரன் ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துக்கொண்டே, "நீங்கள் என்னோடு இரண்டு நாளைக்கு அகோலாவுக்கு வருகிறீர்களா, சேகர்? காற்று மாறினால் உங்களுக்கும் மனம் அமைதியாக இருக்கும்" என்றான்.

"இப்பொழுது நான் எப்படி வர முடியும், தினகர்? இன்று நாம் ஆபீசைத் தொடங்கியிருக்கிறோம். உடனே இதைப் பூட்டிக்கொண்டு நான் உங்களோடு அகோலாவுககு வருவதா? ஆனால் நேற்றிலிருந்து நான் உங்களை ஒன்று கேட்பதாக இருந் தேன். நம் மானேஜரைப் பற்றி நீங்கள் என்ன நினைக் கிறீர்கள்?"

"நான் சொல்லாமலே அது உங்களுக்குத் தெரிந்திருக்க வேண்டுமே?" என்று கூறி, தினகரன் நகைத்தான்.

"அப்படியானால் நீங்கள் ஏன் அவர் கம்பெனியில் ஏஜெண்டு ஆனீர்கள்?"

"வேறு நான் என்ன செய்வது, சேகர்? இன்று படித்த இளைஞர்கள் ஒரு வியாபாரக் கம்பெனிக்கு ஏஜெண்டோ வேலையாளோ ஆக முடியுமே தவிர, சொந்தமாக என்ன தொழில் செய்ய முடியும்? நல்ல வேலையோ கிடைக்கவில்லை; கிடைத்தாலும் என்னால் ஒருவனிடம் உத்தியோகம் செய்ய முடியாது. நம்முடைய மானேஜர் ஒரு பெரிய பெருச்சாளி என்பது எனக்குத் தெரியும். ஆனால் நம் நாட்டுத் தலைவர்களே பெரும் பூனைகளாக இருப்பதை நாம் நாள்தோறும் கண்ணால் காணும்பொழுது, இதைப் பார்த்து வெறுத்துக்கொள்ள முடி யுமா? இந்த மானேஜர் எப்படிப்பட்டவரானாலும் தாம் அல்வா புசித்த பிறகாவது சுற்றுமுள்ளவர்களுடைய நன்மையைக் கவனிக்கிறார். இன்று உலகத்திலேயே இவ்வளவு தாராளத்

தன்மையைப் பார்ப்பது அரிது!''

அவன் தன் பேச்சைச் சிறிது நிறுத்தி வானத்தைப் பார்த்தான். பிறகு சேகரனுடைய தோளை அணைத்துக் கொண்டு, ''இந்த வேலையை நான் ஏற்றுக்கொண்டதற்கு வேறு ஒரு காரணம் இருக்கிறது, சேகர்! இந்தத் தொழிலினுல் நான் தினமும் பல பேரைப் பார்க்க முடிகிறது. அதிலிருநது நம்முடைய வேலைக்குத் தேவையானவர்களைத் தேர்ந்தெடுகக முடிகிறது. சமூகத்தின் பல்வேறு துறைகளில் இருப்பவாக ளோடு நாம் நெருங்கிப் பழகக் கூடிய விரிவான தொழில் இதைப் போன்று வேறில்லை. சமூகத்தின் முக்கியமான தேவையை உணர்ந்து, ஒவ்வொருவனிடமும் நாமாகச் சென்று அவனுக்கு நன்மையான வழியைக் கண்டு பிடிப்பதற்கு வேண்டிய திறமையும், மக்களோடு கலந்து பழகும் தன்மையும் இந்தத் தொழிலுக்கு வேண்டும். இந்தத் தொழிலில் இருக்கும் இந்தப் பயனை நம் மானேஜர் நன்ருகத் தெரிநதுகொண்டிருக் கிருர். ஆதலால, சேகர், நீஙகள் உற்சாகமாக வேலை செயது சீக்கிரமே தொழிலில் உங்கள் சக்தியைக் காண்பிக்க வேண்டும்'' என்ருன்.

''நீங்கள் சொல்வது எனக்குப் புரிகிறது, தினகர்! ஆனுல் நேற்றுக் குழந்தை காலமானது முதல் என் மனமே சோர்ந்து போயிற்று. பழைய மன நிம்மதி இனிமேல் நம் வாழ்வில் வராது என்று தோன்றுகிறது.''

இதைக் கேட்டதும் தினகரன் தன்னை மறந்து ஆவேசமாகப் பேசினுன்: ''சேகர், உங்கள் ஒருவருடைய வாழ்வில் மட்டு மன்று; நம் எல்லாருடைய வாழ்க்கையிலும் நிம்மதியாக வாழும் நாள் இப்போது போய்விட்டது. இப்போது இருக்கும் இந்த மரண அமைதி, எலலாருடைய சக்தியையும் பிழிந்துவிடும். விஷம் நிரம்பிய இந்த ஆரோக்கியம் இனி நீண்ட நாள் நீடிக் காது. நாம் எல்லாருமே இனி எந்த விபத்துக்கும் ஆபத்துக்கும் தயாராக இருக்க வேண்டும். நமது மனத்தின் இந்தச் சோர்வு, ஏமாற்றமடைந்த மனத்தின் சோர்வு அன்று; அலுப்பும் வெறுப்புமுற்ற மனத்தின் சோர்வு இது. இந்த மரண அமைதி நிலவும் வரைக்கும் எவ்விதமான நன்மையும் நம் நாட்டுககு

ஏற்பட முடியாது.''

''நீங்கள் சொல்வதன் நோக்கம். எனக்கு விளங்கவில்லை! இந்த நாட்டில் புரட்சி நடைபெறும் என்று நீங்கள் நினைக்கிறீர்களா?''

''ஏன் நடக்காது? கட்டாயம் நடக்கும்!''

''தினகர், நான் சொல்வது உங்களுக்குப் புரியவில்லை என்று நினைக்கிறேன். புரட்சி என்றால் என்ன என்பதையே இன்னும் நாம் சரியாக அறிந்துகொள்ளவில்லை. நாம் பெரிய பெரிய சொற்களை வாழ்வில் உபயோகிக்கிறோம். புரட்சி யுத்தம், கடைசி எச்சரிக்கை, சமூக முன்னேற்றம் முதலிய பல சொற்களுக்கு இப்போது அர்த்தமே இல்லாமற்போயிற்று. நம் நாடு நல்ல நிலைமையை அடைய வேண்டுமென்றால் அதற்கு நாம் கடுந்தவம் இயற்றவேண்டும். நான் கேட்கிறேன, தினகர்: நம்முடைய நாட்டிலே புரட்சியை – சமூகப் புரட்சியை–உண்டாக்க முடியுமா?''

''முடியும் என்றுதான் நான் நினைக்கிறேன். நான் காகிதத்தில் புரட்சியைப்பற்றி எழுதுகிறவன் அல்ல. வயலில் வேலை செய்யும் கிராமத்து மக்களோடு பழகுகிறவன். சமூகத்தில் தாழ்ந்த மக்களோடு வாழ்கிறவன். பொது மக்கள் இப்போது திராணியற்றுக் கிடக்கிறார்கள் என்பது எனக்குத் தெரியும். இனிமேல் இதற்கு மேலும் சுரண்டல் நடந்தால் அதை அவர்களால் தாங்க முடியாது என்பதும் எனக்குத் தெரியும். நம் நாட்டில் படித்தவன் ஒவ்வொருவனும், அறிவுள்ளவன் ஒவ்வொருவனும், இந்த விஷமான அமைதியை வெறுத்து, மக்களை ஒன்று திரட்டி நீறுபூத்த நெருப்பை நன்றாக மூட்டிவிட வேண்டும். நான் பேசுவதை நடத்திக் காட்ட முடியும்; அதற்காக எந்த இடுக்கணையும் தாஙக முடியும். இதற்கு நீங்கள் தயார்தானா, சேகர்?''

''நீங்கள் பேசுவதெல்லாம் சரிதான், தினகர்! ஆனால் நம்மால் என்ன செய்ய முடியும்? படிப்பையும் அறிவையும் தவிர நம்மிடம் வேறு என்ன இருக்கிறது?''

''ஞானமும் புத்தியும் இந்த உலகிலே மிகப் பெரிய ஆயுதங்கள். சாணக்கியன் நூறு சேனா வீரர்களின் பலத்தைத்

தன் புத்தியினால் சம்பாதித்தான். இந்தப் புத்தி விழித்துக் கொள்ளாத இடத்தில் அறிவு எங்கிருந்து வரும்? இந்த இரண்டோடு இன்னும் ஒன்று வேண்டும். அதுதான் துணிச்சல். அறிவைக் கொண்டு பிழைக்கும் இனத்தாரிடம் அதுதான் அடியோடு இல்லை. நாம் என்ன செய்ய முடியும் என்றுதானே நீங்கள் இப்போது நினைக்கிறீர்கள், சேகர்?''

சேகரன் ஒன்றுமே பேசவில்லை; இதுவரைக்கும் அவன் தன் அறிவைப்பற்றிப் பெருமிதம் கொண்டிருந்தான். இன்று அந்தப் பெருமிதம் குலைந்தது. தன் அறிவின் மறைவில் எவ்வளவு பயங்கொள்ளித்தனம் நிரம்பியிருக்கிறது, அது எவ்வளவு முடமானது என்பதை அவன் உணர்ந்தான். தன் அறிவிலிருந்தும் படிப்பிலிருந்தும் எழுத்திலிருந்தும் அவன் ஒரு புது உலகத்தைப் படைக்க முயன்றானே; அது பளபளப்பான கண்ணாடி வீட்டைப் போல எவ்வளவு பலவீனமானது, உடையக் கூடியது என்பதை அறிந்ததும் அவன் ஒரு கணம் பிரமித்து நின்றுவிட்டான்.

சிறிது நேரத்தில் எங்கும் இருள் பரவியது. சற்று நேரம் முன்பு கண்ணுக்குத் தென்பட்ட பொருள்கள் யாவும் அந்த இருளில் மறைந்தன. எங்கும் ஒரே அமைதியாக இருந்தது.

''நீங்கள் ஏன் பேசவில்லை சேகர்?'' என்று அவன் தோளைத் தட்டித் தினகரன் கேட்டான்.

''என்னத்தைப் பேசுவது, தினகர்! என் முட்டாள்தனமும் பயங்கொள்ளித்தனமும் இப்போது நன்றாகத் தெரிகின்றன. நம் நாட்டில் படித்து அறிவினால் வாழும் இளைஞர்கள் எல்லாருமே இப்படித்தான் இருப்பார்களோ என்று நினைக்கிறேன்.''

''இதை அறிந்துகொண்டதில் கெடுதல் எதுவுமில்லை, சேகர்! இந்த உணர்ச்சியினால் புதிய தன்னம்பிக்கையும், புதிய லட்சியமும், புதிய சக்தியும் உங்களுக்கு உண்டாகும். விறகிலிருந்து பிறக்கும் தீ அந்த விறகையே எரித்துவிடுவது போல, இந்தப் புதிய லட்சியம் உங்களையே ஒருகால் இரையாகவும் கொள்ளலாம்!'' என்று சொல்லிக்கொண்டே தினகரன் மேடையை விட்டு இறங்கி நடக்கலானான்.

சேகரனும் அவனைத் தொடர்ந்து சென்றான்.

## 14

அன்று இரவு சேகரன் மஞ்சுவை அழைத்து வருவதற்காகக் கோவிந்தன் வீட்டுக்குப் போனான்.

அப்பொழுது அவர், "மணியம் உங்களுக்கு வேலை கொடுக்கத் தயாராக இருக்கிறார், சேகர்! இன்று நான் கோர்ட்டிலிருந்து திரும்பி வரும்போது அவரிடம் பேசினேன்" என்றார்.

"என்ன சம்பளம் கொடுப்பதாகச் சொல்லுகிறார்?"

"நூறு ரூபாய் கொடுப்பார். தினமும் இரண்டு மணி நேரம் நீங்கள் ஆபீசில் போய் வேலை செய்யவேண்டியிருக்கும். ஆனால் ஒரே ஒரு நிபந்தனை: நீங்கள் எழுதுவதில் அவர் எதை மாற்றினாலும் நீங்கள் சிறிதும் முணுமுணுக்கக் கூடாது."

"முணுமுணுக்காமல் இருப்பது மனித இயல்புக்கே மாறானது, மிஸ்டர் கோவிந்தன்! நான் அவரோடு சச்சரவு செய்ய மாட்டேன் என்று ஒப்புக்கொள்கிறேன்" என்று சொல்லிச் சேகரன் சிரித்தான்.

"அப்படியானால் நாளை முதல் வேலைக்குப் போகிறீர்களா? நான் காலையில் அவருக்கு டெலிபோனில் சொல்லிவிட்டு, பகல் இரண்டு மணிக்கு உங்களை ஆபீசுக்கு அழைத்துப் போகிறேன்."

"சரி, நானே உங்களிடம் அவரை எனக்கு அறிமுகப்படுத்தும்படி சொல்வதாக இருந்தேன். இது நீங்கள் எனக்குச் செய்யும் பெரிய உபகாரம்."

"இது உபகாரமே அன்று, சேகர்! நான்தான் முந்தாநாள் சொன்னேனே, அந்தப் பத்திரிகைக்கும் எனக்கும் நெருங்கிய தொடர்பு இருக்கிறது; ஆகையால் உங்களைப் போன்ற நல்ல எழுத்தாளர் அதில் எழுத வேண்டும் என்றுதான் நான் விரும்புகிறேன்."

சேகரன் நேரம் கழித்தே வந்ததனால் அவனும் மஞ்சுவும் அங்கேயே சாப்பிட்டுவிட்டு இரவு பத்து மணிக்கு வீடு திரும்பினார்கள்.

மறுநாள் காலையில் எட்டு மணிக்குத் தினகரன் அவனிடம் வந்தான். அப்பொழுது சேகரன் தான் புதிய வேலையொன்றை

ஒப்புக்கொண்டதை அவனுக்குத் தெரிவித்து, "அறிவுச் சுரண்டலைப்பற்றி நான் எழுதி வந்ததை நீங்கள் புகழ்ந்திருக்கிறீர்களே; நான் இப்போது என் விருப்பத்தோடு அதற்கே ஆளாகி விட்டேன். இன்று வரைக்கும் நான் கூலிக்கு எழுதியதில்லை; இனிமேல் நாள்தோறும் அதைத்தான் செய்யப் போகிறேன்" என்றான்.

"இனிமேல் நீங்கள் கூலிக்கு எழுதப் போகிறீர்கள் என்பது எனக்கு ஆச்சரியமான விஷயம் அன்று, சேகர். இவ்வளவு நாள் கழித்து அதற்கு வந்தீர்களே என்பதுதான் ஆச்சரியம். இன்று நம் நாட்டில் எழுத்துக் கலை பணம் கொடுக்கத் தொடங்கி யிருக்கிறது. ஒரு கலை பணம் கொடுக்கிறது என்று தெரிந்ததுமே அதைப் பயன்படுத்திக் கொள்ள முன்வருவது முதலாளிகள் வரன்முறை. கூலிக்கு எழுதும் சந்தர்ப்பம் இதற்கு முன்னாலேயே உங்களுக்கு ஏற்பட்டிருக்க வேண்டும். நம நாட்டுப் பணக்காரர்களுக்கு வியாபார முறை அதிகமாகத் தெரியாது. ஆகையால் இன்று பத்திரிகைகளும் புத்தகங்களும் வெளியிடும் தொழில் குறுகிய நோக்கமும் கஞ்சத்தனமும் உடைய சில பேரிடம் சிக்கிக்கொண் டிருக்கிறது."

டீ குடித்ததுமே அவர்கள் இருவரும் ஆபீசுக்குப் புறப்பட்டார்கள். ரஜனி அவர்களுக்கு முன்பே அங்கு வந்து உட்கார்ந்திருந்தாள். அவள் அவர்களைப் பார்த்ததுமே முகம் மலர்ந்து, "உங்கள் இருவரையும் ஒன்றாகப் பார்த்தால் ஏதோ ராஜ்யத்தைக் கைப்பற்றுவதற்காகச் சூழ்ச்சியில் முனைந்திருப்பது போலத் தோன்றுகிறது!" என்றாள்.

அவள் வேடிக்கையாகப் பேசியதைக் கேட்டதும் சேகரனுடைய முகம் மாறிவிட்டது.

ஆனால் தினகரன் சிரித்துக்கொண்டே, "அப்படி யாராவது நினைத்தால் நான் அவர்களை மனமாரப் பாராட்டுகிறேன். அரசைக் கைப்பற்றி நடத்துவது என்பது நமக்குப் புதுமையாகத் தான் இருக்கிறது. நாம் அதற்கு லாயக்கா என்ற சந்தேகமே இன்னும் தெளியவில்லை" என்றான்.

பிறகு அவர்கள் மூவருமாக உட்கார்ந்து, நாகபுரியில் நடத்த வேண்டிய கம்பெனி வேலைத் திட்டங்களைப்பற்றி

ஆராய்ந்து பேசினார்கள். ஒன்பதரை மணிக்கு ரஜனி அவர்களிடம் விடைபெற்றுச் சென்றாள்.

அவள் போனதும் தினகரன் சேகரனைப் பார்த்து, "நீங்கள் அவளிடம் மிகவும் ஜாக்கிரதையாக நடந்துகொள்ள வேண்டும், சேகர். அவள் மிகவும் கெட்டிககாரி. பொதுவாகவே, ஆண்களின் உள்ளத்தை அறியும் நுண்ணிய பார்வை பெண்களுக்கு உண்டு. ஆண் எவ்வளவுதான் பேசாதவனாகவும் நெஞ்சுறுதி உடையவனாகவும் இருந்தாலும், பெண்ணின் கனிந்த பார்வையிலுள்ள 'எக்ஸ்–ரே' அவனுடைய உள்ளத்தில் ஊடுருவிச் சென்று, அவனைத் தன்னை அறியாமல் பேசச் செய்துவிடும். எனக்கு மஞ்சு அம்மாளிடம் துளியும் பயமில்லை. அவள் குடும்பப் பார்வையோடுதான் உங்களைக் கவனிக்கிறாள். ஆனால் இந்த ரஜனி அப்படியல்ல. அவள் உங்களைப் பார்க்கும் பார்வையும் அவளுக்கு உங்களிடம் உள்ள பரிவும் தனியானவை. உங்களது செயல் எதுவும் அந்தப் பார்வைக்குத் தப்பி மறைந்திருகக முடியாது" என்றான்.

சேகரன் மௌனமாக இருந்தான். சிறிது நேரம் கழித்து, "நீங்கள் சொல்வது சரி, தினகர்! ஆனால் ரஜனி என் செயலைக் கவனித்தாலுங்கூட அவளால் நமக்குச் சிறிதும் பயமில்லை" என்றான்.

அவன் பேச்சில் இருந்த ஆவேசத்தைத் தினகரன் தெரிந்து கொண்டான். "அப்படியானால் ஏன் அவளை நம்பிக்கையோடு நம் செயலில் சேர்த்துக்கொள்ளக் கூடாது? உங்களுக்கு அவளிடம் நம்பிக்கை இருந்தால் எனக்குத் தடையில்லை" என்றான்.

"நம்முடைய செயல் முறையை அவள் ஒப்புகொள்வாளா என்பதில் எனக்குச் சந்தேகம். நான் முதலில அவளிடம் பேசிப் பார்த்து உங்களுக்குத் தெரிவிக்கிறேன்."

"சரி, நீங்கள் மணியத்தின் வேலை முடிந்ததும் உடனே இங்கு வாருங்கள். நான் பிறகு ஸ்டேஷனுக்குப் புறப்படுகிறேன்."

கிளைக் காரியாலயத் திறப்புவிழா அன்று சேகரன் பார்த்த அந்த மணியமாக இன்று அவர் இருக்கவில்லை. அவருடைய உடம்பில் இன்று மேல்நாட்டு உடை எதுவும் இல்லை. நீலப்

பட்டுக்கரை போட்ட வெள்ளைவேட்டியை அவர் சுற்றியிருந்தார். அதே மாதிரியான அங்கவஸ்திரம் அவருடைய மார்பையும் தோளையும் மறைத்துக்கொண்டு நாற்காலியில் தொங்கியது. அவருடைய மூக்கு ஒரே பொடிமயமாக இருந்தது. வெள்ளிப் பொடி டப்பியும், பட்டுக் கைக்குட்டையும், பத்திரிகைகளின் கட்டும், தபாற் கடிதங்களின் குவியலும், திருச்சிராப்பள்ளியில் செய்த நீண்ட சுருட்டுகள் அடங்கிய பெட்டியும் அவர் மேஜை மேல் இருந்தன.

கோவிந்தன் சேகரனை அழைத்துக்கொண்டு நேராக அவர் எதிரே போய் நின்றார். "மிஸ்டர் மணியம், இவர்தான் என் நண்பர் சேகர்" என்று அறிமுகப்படுத்தினார்.

கையில் இருந்த பத்திரிகையைக் கீழே எறிந்துவிட்டு, மூக்குக் கண்ணாடியை நெற்றியில் ஏற்றிக்கொண்டு மணியம் சேகரனைப் பார்த்தார்.

"வாருங்கள், உங்கள் வரவைத்தான் எதிர்பார்த்துக் கொண்டு இருக்கிறேன். இவர்தான் சேகரா?" என்று கூறிப் புன்னகை பூத்தார்.

கோவிந்தனும் சிரித்துக்கொண்டே, "இவர்தான் இன்று முதல் இங்கு வேலை செய்வார். பெரிய எழுத்தாளர். ஆங்கிலத்தில் நன்றாக எழுதுவார்" என்றார்.

"இவருடைய உதவி கிடைப்பதற்கு எனக்கு மிகவும் சந்தோஷம். ஆனால் தினசரிப் பத்திரிகைக்கு இலக்கியப் பண்புகளால் அதிகம் பயன் இராதே!"

"இவர் சர்வதேச அரசியலை நன்றாகப் பயின்றவர். அதிலும் கம்யூனிஸத்தில் ஆழ்ந்த பயிற்சி உடையவர்." பத்திரிகைத் தொழிலுக்குப் பயன்படும் என்ற நோக்கத்தோடுதான் கோவிந்தன் இதைச் சொன்னார்.

"ஹூம்! கம்யூனிஸத்தை இந்தக் காலத்தில் யார் கேட்கிறார்கள்? ஜெர்மனியில் என்ன நடக்கிறது? இத்தாலியில் என்ன நடக்கிறது? ருஷியாவில்தான் என்ன வாழ்ந்தது? அங்கே மக்களுக்கு எவ்வித உரிமையும் கிடையாது" என்று சொல்லிவிட்டு, மணியம் வேலைக்காரனைக் கூப்பிட்டார். "ஐயாவுக்குக் காபியும் வெற்றிலை பாக்கும் வாங்கிவா" என்றார்.

"இதோ பாருங்கள், சேகர்! கோவிந்தனே உங்களிடம் சொல்லியிருப்பார். இந்தக் காலத்தில் எந்த இலக்கியத்திலும் எனக்கு நம்பிக்கை கிடையாது. ஐம்! விவகார அறிவோடு நாம் நடந்துகொள்ள வேண்டும். நம் தினசரியின் புகழுக்கே அதுதான் காரணம்" என்று கூறிய மணியம், பொடி டப்பியைக் கோவிந்தனிடம் கொடுத்தார். கோவிந்தன் சிறிது பொடியை எடுத்து உறிஞ்சினார். சேகரன் சும்மா இருந்தான்.

"என்ன, மிஸ்டர் கோவிந்தன்! நான் சொன்னது சரி தானே? இவர்தான் என் பகுத்தறிவுக் காவலாளி, சேகர்! எவ்வளவோ இக்கட்டான நிலைமைகளில் இவர் எனக்கு உதவி செய்திருக்கிறார். இந்தக் காலத்து உலகமே எதிலும் அதியாகப் போகிறது. யாருக்கும் எதிலும் ஒரு மிதமோ கட்டுப்பாடோ கொஞ்சமும் இல்லை. எல்லாக் கட்சிகளும், எல்லாக் கொள்கைகளும் ஒன்றை ஒன்று எதிரியாகப் பாவிக்கின்றன. ஆகையால் நான் தீர்மானித்துவிட்டேன்: நாட்டின் நன்மை ஒன்றையே கவனத்தில் கொண்டு நாம் பத்திரிகை நடத்துவது என்று. ஐம்!"

அவர் பேச்சில் இந்த 'ஐம்' வருவது சேகரனுக்கு வேடிக்கையாக இருந்தது. ஆனால் பத்திரிகாசிரியர் தோரணைப்படி அதற்கு ஒரு மகிமை இருந்தது. ஆயினும் அவன் சற்றுத் துணிச்சலோடு, "உங்களுக்கென்று ஒரு குறிப்பிட்ட கொள்கை இருக்குமே?" என்றான்.

"குறிப்பிட்ட கொள்கையா? ஐம்! உங்கள் கேள்வி எனக்கு விளங்குகிறது. எந்தக் கட்சியிலும் நமக்குப் பற்றில்லை என்பது நம்முடைய கொள்கையின் முதல் விசேஷம். இரண்டாவது, நமக்கு நாட்டினிடம் மட்டுமே பற்று உண்டு. ஆகையால் நாட்டின் நன்மைக்கு ஏற்றதையே நாம் எழுத வேண்டும்."

மணியம் இப்படித் தம் கொள்கையை விளக்கிக்கொண்டிருந்தபொழுது காபி வந்துவிட்டது. எல்லாரும் காபி அருந்தினார்கள்.

"இவர் இன்றே வேலையைத் தொடங்கலாம் அல்லவா? வேறு ஏதாவது சொல்ல வேண்டுமா?" என்று கோவிந்தன் மணியத்தைக் கேட்டார்.

"விசேஷமாகச் சொல்ல வேண்டியது எதுவும் இல்லை. இவர் நம்முடைய ஆசிரியர் குழுவில் முறைப்படி சேர்ந்தவரல்ல என்றாலும், நகரத்தில் எங்காவது கூட்டமோ பார்ட்டியோ நடந்தால் அதற்கு என்னோடு வர வேண்டும்."

சேகரனுக்கு அவரோடு இப்படி வெளியிலே திரியும் யோசனை பிடிக்கவில்லை. ஆதலால், "இவர் பேசுவதன் கருத்து எனக்குப் புரியவில்லை" என்றான்.

"இம்மாதிரி தனிப்பட்ட கூட்டங்களுக்குப் போவதனால் பல பெரிய மனிதர்களைச் சந்திக்க முடியும். அவர்கள் பேச்சிலிருந்து நுணுக்கமான பல சிக்கல்கள் கிளம்பும். அவர்களோடு வாதாடுவதனால் வெவ்வேறு பிரச்னைகளின் உள் விவரங்கள் தெரியும். உண்மையில் அரசியலின் உள் ஆழத்தைப் பார்க்க வேண்டுமானால் இம்மாதிரியான விவாதங்களையோ கூட்டங்களையோ தவறவிடக் கூடாது. பத்திரிகைத் தொழிலைக் கற்பிக்கும் சரியான பள்ளிக்கூடங்கள் இவைதாம். நம் பத்திகையில் 'போகிற போக்கில்' என்ற ஒரு பகுதி வருகிறதே அதில் இப்படிப் பல அந்தரங்க விஷயங்கள் இருக்கும். ஜனங்கள் அதைப் புதிய செய்தியைப் போலவே பெரிதும் விரும்புகிறார்கள். அதனால்தான் சொல்கிறேன், நீங்கள் என்னோடு வர வேண்டும் என்று."

"ஆனால் அவருக்குத் தனி அழைப்புக் கிடைக்காமல் எப்படி வருவார்? அவருக்கு அழைப்பு வர நீங்கள் ஏற்பாடு செய்ய வேண்டும்" என்றார் கோவிந்தன்.

"சரி, சனிக்கிழமை இரவு, ஹீராலால்ஜியின் பங்களாவில் புதிய கமிஷனரை வரவேற்பதற்காக விருந்தும் நடனக் கச்சேரியும் நடக்கின்றன. அங்கே பல சர்க்கார் அதிகாரிகளும், ஊர்ப் பெரிய மனிதர்களும் வருவார்கள். ஹீராலால்ஜிக்கு போன் செய்து உங்களுக்கு அதற்கு அழைப்பு அனுப்பச் சொல்கிறேன். இதிலிருந்தே உங்கள் பத்திரிகைத் தொழிற் கல்வி ஆரம்பமாகட்டும்" என்று சொல்லி மணியம் கலகலவென்று சிரித்தார்.

கோவிந்தன் அவரிடம் விடைபெற்றுச் சென்றார். சேகரன்

13

பல புதிய பத்திரிகைகளை எடுத்து வைத்துக்கொண்டு தன் வேலையைத் தொடங்கினான்.

அவன் சுமார் மூன்று பத்திகள் ஆசிரியர் குறிப்பு எழுதினான். மணியம், புரூபிலே அவற்றைப் பார்த்துச் சந்தோஷப்பட்டு, ஆனந்தமாகப் பொடி போட்டுக்கொண்டு, "ஐம்! நீங்கள் நன்றாகத்தான் எழுதுகிறீர்கள். பத்திரிகைத் தொழிலில் சீக்கிரமே புகழ் சம்பாதிப்பீர்கள்!" என்றார்.

அந்த வேலை முடிந்ததும், சேகரன் நான்கு மணிக்குத் தன் ஆபீசுக்கு வந்தான். தினகரன் அவன் வரவை எதிர்பார்த்து நின்றிருந்தான். சேகரன் வந்ததுமே அவன் தேநீர் வரவழைத்தான். இருவரும் அறைக்குள்ளே போய் உட்கார்ந்தார்கள்.

பகலில் நடந்த விஷயங்களைச் சேகரன் தினகரனிடம் சொன்னான். அதைக் கேட்ட தினகரன் அமைதியாக, "வேலையை விடும்போது, நாலு நாளைக்குள் மறுபடி நிலைத்துவிடலாம் என்று நீங்கள் எண்ணியிருக்கவே மாட்டீர்கள். துணிசசலாக எதையும் ஆரம்பிக்கும்போது மனம் தயங்கும். ஆனால் மனத்தைத் திடப்படுத்திக்கொண்டால் பிறகு வழி தானாக ஏற்பட்டு விடும். சேகரன், நான் உங்களுக்கு எழுதும் கடிதங்கள் யாருக்கும் – மஞ்சு அம்மாளுக்குக் கூடத் தெரியக்கூடாது" என்றான்.

"அது கொஞ்சம் கஷ்டம். இன்று வரைக்கும் நான் அவளிடமிருந்து எதையும் ஒளித்து வைத்ததில்லை."

"ஆனால் இனி நீங்கள் அவளிடமிருந்து ஒளிக்கப்போகும் விஷயத்தில் அவளுக்கு ஏதும் தொடர்பு இல்லை. உங்களுடைய வாழ்வின் இந்தச் செயலில் எந்தப் பெண்ணுக்கும் இடம் இல்லை."

அதற்குள் ரஜனி அறை வாசலில் தயங்கி நின்றபடியே, "நான் உள்ளே வர உத்தரவு உண்டா? ஏதாவது ரகசியப் பேச்சாக இருந்தால் அது முடியும் வரைக்கும் வெளியிலேயே இருக்கிறேன்" என்றாள்.

அவர்கள் இருவரும் அவளுடைய வரவை எதிர்பார்த்துக் கொண்டுதான் இருந்தார்கள். ஆயினும் அவள் கேள்வியைக் கேட்டதும் சேகரன் திடுக்கிட்டான்.

தினகரன் சிரித்துக்கொண்டே, "வாருங்கள், வாருங்கள்; உங்களிடம் மறைக்க வேண்டிய ரகசியம் எங்களிடம் எதுவும் இல்லை, ரஜனியம்மா! உங்கள் வரவை நாங்கள் எதிர்பார்த்துக் கொண்டுதான் இருந்தோம்" என்றான்.

அவன் மூன்றாவது நாற்காலியை எடுத்துப் போட்டதும் ரஜனி உள்ளே வந்து உட்கார்ந்தாள்.

ஆனால் அவர்களுடைய அந்தரங்கப் பேச்சு, பிறகு தொடரவில்லை.

தினகரன் அவளை அகோலாவுக்கு ஒரு தடவை வரச் சொல்லிவிட்டு, பெண்களிடையே எப்படிப் பிரசாரம் செய்ய வேண்டும் என்பதைப் பற்றிச் சில குறிப்புகள் பேசினான்.

டீ குடித்ததும், தினகரனும் சேகரனும், ஜட்காவில் அமர்ந்தார்கள். ரஜனி சைக்கிளில் வீட்டுக்குச் சென்றாள்.

அவள் மறைந்ததும், தினகரன், "இவளிடம் ஒரு தனிப் பண்பு இருக்கிறது, சேகர்! மற்றப் பெண்களைப்போல இவள் இல்லை. அதனால்தான் இவளிடம் எனக்குப் பயமாக இருக்கிறது" என்றான்.

"பயப்படுவதற்குக் காரணம்?"

"இவளுடைய அந்தக் கூர்மையான பார்வையைப் பார்த்தால், எதுவும் இவளிடமிருந்து மறைந்திருப்பதோ, எதையும் மறைத்து வைப்பதோ அசாத்தியம் என்று தோன்றுகிறது."

சேகரன் ஒன்றும் பதிலே சொலலவிலலை.

மறுநாள் காலையில் சேகரன் ஆபீசுக்குப போனதும் அன்றைத் தபால்களைப் பார்த்தான். சனிக்கிழமையன்று விருந்துக்கு அவனுக்கு அழைப்பு வநதிருநதது. பகலில் மணியனைக் கண்டதும் தனக்கு அழைப்பு வநதிருப்பதை அவன் அவருககுத் தெரிவித்தான்.

"நான் நேற்றிரவு ஹீராலால்ஜிக்கு போன் செய்தேன். அவர் வேலை எவ்வளவு ஜரூராக நடக்கிறது, பாருங்கள்! நீங்கள் இந்த விருந்துக்குக் கட்டாயம் வர வேண்டும்."

"விருந்துக்கு வந்தால் நடனத்துக்கும் இருக்க வேண்டுமோ?"

"இருந்தால் என்ன? அதில் என்ன தவறு? பம்பாயி

லிருந்து ஒரு பிரசித்த ஸினிமா நடிகை நாட்டியமாட வருகிருள். அவள் நன்ருகப் படித்தவள், மணமானவள்.''

இதற்கு என்ன பதில் சொல்வதென்று சேகரனுக்குத் தெரியவில்லை. உயர்குலத்துப் பெண்கள் ஆடல் பாடல் கற்றுக் கச்சேரிகள் செய்வது இப்போது வழக்கமாகி விட்டது. ஜனங்களும் அதை விரும்புகிருர்கள். தத்துவ ரீதியாக அதை எதிர்த்துப் பேச ஒரு காரணமும் இல்லை. ஆதலால் அவன் மென்று விழுங்கிக்கொண்டே, "அப்படியானுல் உங்களோடு நானும் வருகிறேன்'' என்ருன்.

"ஆமாம், நான் என் காரோடு உங்கள் வீட்டுக்கு வந்து விடுகிறேன்.''

சனிக்கிழமை இரவு எட்டு மணிக்கு மணியம் தமது பச்சை நிற பேபி காரை எடுத்துக்கொண்டு சேகரனுடைய வீட்டுக்கு வந்தார். பச்சைக் கரை ஜரிகை வேட்டியும், காலரோடு நீண்ட கறுப்புக் கோட்டும், வெள்ளைத் தலைப்பாகையும் அணிந்து அவர் வந்திருந்தார். சேகரன் எப்போதும் போன்ற உடையோடு புறப்பட்டான். இருவரும் ஹீராலால்ஜியின் பங்களாவுக்குப் போய்ச் சேர்ந்தார்கள்.

அழகிய பந்தல் போட்டு, பலவர்ண மின்சார விளக்குகளால் அதை அலங்கரித்திருந்தார்கள். சோலையில் செடிகளைக் கத்தரித்து ஒழுங்குபடுத்தி, அவற்றிலும் சில விளக்குகள் போட்டிருந்தார்கள். பந்தலுக்குள் நுழையும் வழியில் மென்மணல் பரப்பியிருந்தது. வளைவாக இருந்த முன்வாசலில் நின்று, கிழவர் ஹீராலால்ஜி விருந்தினர்களை ஆனந்தமாக வரவேற்ருர். அறுபதுக்கு மேல் வயதாகியும் வெற்றிலைச் சாறு படிந்த அவருடைய பொய்ப் பற்கள் மின்சார விளக்கில் பளபளத்தன. மேல்நாட்டு நாகரிகம் எங்கும் பரவிய இந்தக் காலத்திலும் இடைக் காலத்து ஜமீன்தார்களின் போக விலாச வாழ்க்கை அங்கே குடிகொண் டிருந்தது.

சோலையில் போட்டிருந்த சோபாக்களிலும் நாற்காலிகளிலும் எல்லாரும் வந்து உட்கார்ந்தார்கள். அங்கங்கே நின்ற வேலையாட்கள் லெமன், ராஸ்பெரி முதலிய பானங்களும் சிகரெட்டுகளும் கொணர்ந்து தந்தார்கள். மணியம் சேகரனை

ஹீராலால்ஜிக்கு அறிமுகம் செய்வித்தார். பிறகு அவர்கள் இருவரும் கோவிந்தன் அருகில் போய் உட்கார்ந்தார்கள்.

சரியாகப் பத்தரை மணிக்குக் கமிஷனரும் மற்றச் சர்க்கார் உத்தியோகஸ்தர்களும் வந்துவிட்டார்கள். உடனே விருந்து தொடங்கியது. விருந்து நம் நாட்டு முறையிலேயே இருந்தது.

விருந்து முடிந்ததும், வெற்றிலை பாக்கு, பூமாலை, அத்தர், ஸெனடு முதலியன கொடுத்தானதும், எல்லாரும் பந்தலில் வந்து அமர்ந்தார்கள். மேடைக்கு முன்னுல் கமிஷனரும், ஹீராலால்ஜியும், பெரிய சர்க்கார் அதிகாரிகளும், சில கோடீசுவரர்களும் உட்கார்ந்தார்கள். மற்றவர்கள் அழகிய ஜமக்காளத்தில் இரு புறமும் வரிசையாகப் போட்டிருநத வெணமெத்தையில் சாய்ந்துகொண்டு உட்கார்ந்தார்கள்.

முக்கிய விருந்தினர்களுக்குச் சிறிது தூரத்தில் நடனக் கோஷ்டியார் உட்கார்நதிருநதார்கள். கமிஷனரும், ஹீராலால்ஜியும், மற்ற முக்கிய விருந்தினரும் வந்தவுடனே நடனக் கோஷ்டியார் எழுந்து வணக்கம் செலுத்திஞர்கள். அவர்கள் உட்கார்ந்ததும், வீணையிலிருந்து பைரவியின் இன்னிசை பரவியது. அந்த இசையில் எல்லாருடைய மனமும் லயித்திருக்கும் போது ஒரு பாடகி, "இன்னும் வரக் காணேனே" என்ற பாட்டை அருமையாகப் பாடிஞள்.

அது முடிந்ததுமே பந்தலின் ஒரு மூலையிலிருந்து திரைக்குப் பின்னுலிருந்து விரிந்த கூந்தலோடு வெண்ணுடை யணிந்த நடன ராணி ஒய்யாரமாகப் பாடிக்கொண்டே வெளிவநதாள். அவளுடைய செழித்த செங்கரங்களில் பொன் வளையல்கள் மிளிர்ந்தன. முத்துமாலை அவளுடைய மார்பில் அழகாக அசைந்தது. அவளுடைய இரு கைகளும் புகலற்ற தன்மையை விளக்குவன போல் முன்னுல் பரந்திருந்தன. அவளுடைய கருநெடுங் கண்களில் விரக தாபம் உருவெடுத்திருநதது. ஆலாபனத்தோடு அவளுடைய அபிநயங்கள் இசைந்து ரசிகர்களின் உள்ளத்தைப் பொங்க வைத்தன. வெண்ணிலவு போன்ற அவளுடைய உடையும், நீண்டு முதுகிலே புரண்ட அந்தக் கருங் கூந்தலும், ஜொலித்த வண்ணம் கழுத்திலே புரண்ட முத்து

மாலையுமாக அவள் வடிவம் அவர்கள் உள்ளத்திலே பதிந்து விட்டது.

அந்தக் காட்சி முடிந்ததும் அவள் உள்ளே சற்று ஓய் வெடுத்துக்கொள்ளச் சென்றாள்.

உடனே விருந்தினர்களின் வெறியுணர்ச்சி நாட்டியமாடி யது. லெமன் ஸ்குவாஷும், சோடா பாட்டில்களும் 'டப் டப்' என்று உடைந்தன.

"ஹீராலாலஜி, பலே பேஷ்! இன்னும் சில காட்சிகள் இருக்குமென்று நினைக்கிறேன்" என்றார் கமிஷனர்.

அதற்குள் சிலம்பொலிக்கு ஏற்ப அசைந்துகொண்டே நடன ராணி திரைக்கு வெளியே வந்தாள். இப்பொழுது அவள் மயில் தோகையைப்போல் சேலையை அணிந்திருந்தாள். மின்சார வர்ண விளக்குகளில் மயில் கண்கள் பளிச்சென்று மின்னின. மெல்ல மெல்ல ஒய்யாரமாக அடியெடுத்து வைத்து அவள் முன்வந்தபோது மயிலே வருவதுபோல ரசிகர்களுக்குத் தோற்றியது. இப்படிச் சிறிது தூரம் வந்ததும், அவள் தன் இடையில் வைத்திருந்த கையை இளங்கொடிபோல நீட்டினாள். பிறகு கிர்ரென்று ஒரு சுழற்றுச் சுழற்றி, சேலையை இருபுறமும் சடக்கென்று மேலே உயர்த்தினாள். நீலக்கல் பதித்த சுட்டியின் ஒளிவீச, தலையைச் சிறிது தாழ்த்தி, மயில் நாட்டியம் ஆடத் தொடங்கினாள். தோகைகளின் அழகைப் பார்ப்பதா, அவ ளுடைய தலையசைவிலே இருக்கும் உணர்ச்சிகளைக் கவனிப் பதா, களியூறிய அவள் கண்ணிலிருந்து பெருகும் ஆனந்த வெள்ளத்தில் மூழ்குவதா – இன்னது செய்வது என்று தெரியா மல ரசிகர்கள் தவித்தார்கள்.

பத்து நிமிஷ நேரந்தான் அவள் அந்த நாட்டியம் ஆடியிருப் பாள். ஆனால் அதை முடித்துவிட்டு உள்ளே சென்றபோது, "பேஷ், பேஷ்!" என்று எல்லா முகங்களும் முழங்கின.

ஒரு பிரமுகர் வெறும் பாராட்டோடு நிற்கவில்லை. தம் முடைய கம்மிய குரலில் வெறியோடு ஒரு பாட்டும் பாடலானார்.

அந்தப் பாட்டு முடிவதற்கும் நடனராணி மறுபடி வெளி வருவதற்கும் சரியாக இருந்தது. இப்பொழுது அவள் ஜரிகைப் பொட்டுகள் பதித்த மெல்லிய மஞ்சள்நிறச் சேலையை உடம்

போடு ஒட்டியபடி அணிந்திருந்தாள். அவளுடைய ரோஜா நிறக் கன்னமும், வெற்றிலைச் சாற்றினால் சிவந்த இதழும், கால்களில் ஊட்டிய செம்பஞ்சுக் குழம்பும், மலர்போன்ற செங்கையும் இளமைக் களிப்பை எங்கும் பரப்பின. அதனால் அவளுடைய நாட்டியத்தைவிட அவளுடைய இளமையில்தான் எல்லாரும் மயங்கிக் கிடந்தார்கள்.

இப்பொழுது அவள் வானத்திலே பட்டம் பறப்பதுபோல அபிநயித்தாள். அந்தப் பட்டத்தோடு கூடவே ரசிகர்களின் உள்ளமும் ஊசலாடியது.

பட்டம் அறுந்ததுபோலக் காட்டி அவள் கீழே உட்கார்ந்து தலையில் கையை வைத்துக்கொண்டாள்.

"அடடா! பட்டம் அறுந்துவிட்டது. அந்தத் தேவமங்கைக்கு யாராவது ஆறுதல் கூறுங்கள், ஐயா!" என்று கூவினார் ஒரு பெரியவர்.

கிழவர் ஹீராலால், ஒரு ராவ்பகதூர் அதிகாரியைப் பார்த்து, "நீங்கள்தான் ஆரம்பித்து வைக்கவேண்டும்!" என்று வேண்டினார்.

அவர் அதை ஒப்புக்கொள்ள மாட்டார் என்று எண்ணிய சேகரன், தன் கருத்தைக் கோவிந்தனுக்குத் தெரிவித்தான். அதற்குக் கோவிந்தன், "இன்று நீங்கள் பேசாமல் பார்த்துக் கொண்டிருங்கள், சேகர்! இது நாமெல்லாரும் பேசக்கூடிய இடமே அல்ல. ராவ்பகதூரின் நரைத்த தலையையும் உலகப் புகழையும் பார்த்து நீங்கள் ஒன்றும் முடிவு கட்ட வேண்டாம்" என்றார்.

அதற்குள் அந்த ராவ்பகதூர், "தங்களுடைய உத்தரவு அப்படியென்றால் நான் கீழ்ப்படிந்துதான் ஆக வேண்டும். ஆனால் இந்தத் தெய்வ அழகிக்கு ஏழையான நான் என்ன மரியாதை செய்ய முடியும்?" என்றார்.

அவர் ஜாடை காண்பித்ததும் அந்த நடனராணி அன்னம்போல அசைந்து அவரை அணுகினாள். அவர் கலகல வென்று சிரித்துக்கொண்டே தமது மூடிய கையை அவளிடம் நீட்டினார்.

"ராவ்பகதூர் அழுத்தமான கைக்காரர்!" என்றார், பக்கத்

தில் இருந்த ஒரு கோடீசுவரர்.

ராவ்பகதூரின் கையை அந்த அழகி தொட்டதுமே அவர் கையைத் திறந்துவிட்டார். அவர் தந்த ஒரு ரூபாயை நடன ராணி எல்லாருக்கும் காட்டினாள்.

அருகில் இருந்த கமிஷனர், "இது உங்கள் மதிப்புக்கு ஏற்றதல்ல!" என்றார், ராவ்பகதூரைப் பார்த்து.

உடனே நடனமங்கை கமிஷனரை நெருங்கினாள். அவர் கையைக் கெட்டியாக மூடிக்கொண்டார். அவருடைய முரட்டுக் கைக்கும், மங்கையின் கரத்துக்கும் குஸ்தியே நடந்தது என்று சொல்லலாம். மங்கை அவரைக் கண்ணைச் சுழற்றிச் சுழற்றிப் பார்த்தாள். அவர் மசியவில்லை. கடைசியில் வேறு வழி தோன்றாமல், "இது மரியாதையல்ல, பெரியவரே! இது குஸ் திச் சண்டை!" என்று அந்த மங்கை மொழிந்தாள். "சபாஷ்! சபாஷ்!" என்று எல்லாரும் ஆரவாரம் செய்தார்கள். கமிஷ னர் தம் கையை விடுத்தார். அவர் கையில் இருந்த பத்து ரூபாய் நோட்டை எடுத்து நடனக்காரி எல்லாருக்கும் காண் பித்துத் தன் பையில் செருகிக்கொண்டாள்.

"இப்பொழுது உங்கள் முறை, ஹீராலால்ஜி!" என்று சிரித்துக்கொண்டே சொன்னார் கமிஷனர்.

"இதோ நான் தயார்!" என்று சொல்லி, ஹீராலால்ஜி வெள்ளித் தட்டிலிருந்து வெற்றிலை பாக்கை எடுத்து, அதற்குள் ஒரு நூறு ரூபாய் நோட்டைச் சுற்றி, அதை உதட்டால் அழுத் திக்கொண்டார். விருந்தினர்கள் அனைவரும் உற்சாகத்தோடு கைகொட்டினார்கள்.

நடனராணி நகைத்துக்கொண்டே கமிஷனரிடமிருந்து புறப் பட்டு ஹீராலால்ஜியிடம் சென்று, அவர் முதுகில் இரண்டு கையையும் சாய்த்துக்கொண்டு அவர் உதட்டில் தன் இதழ் களைப் பொருத்தினாள்.

"இது முறையல்ல!" என்று விமரிசனம் செய்தார் கமிஷனர்.

"பின்னே என்ன செய்ய வேண்டும்?" என்று மிழற்றி னாள் கிளிமொழியாள்.

"அவருடைய மடியிலே சாய்ந்து தோள்களில் கையைத்

தாங்கிக்கொண்டு, இதழ்களால் தாம்பூலத்தைப் பற்ற வேண்டும்.''

நடிகை அப்படியே செய்தாள். ஆனால் ஹீராலால்ஜியின் வாயிலிருந்து தாம்பூலச் சுருள் பெயரவில்லை.

இரண்டு மூன்று நிமிஷம் அவள் தன் இதழ்களால் போராடினாள். அது பயன்படாமற் போகவே அவள் தன் கூரிய பல்லால் ஹீராலால்ஜியின் உதட்டை மெதுவாக அழுத்தினாள். உடனே அவர் அவளைக் கடைக்கண்ணால் பார்த்து நகைத்தார். தாம்பூலச் சுருள் அவள் இதழுக்குப் போயிற்று.

அவள் அந்தச் சுருளைப் பிரித்து அதில் இருந்த நோட்டை உயர்த்தி எல்லாருக்கும் காண்பித்து, நெற்றியில் தொட்டு, அதை எடுத்துக்கொண்டு ஒய்யாரமாகச் சென்று நடனக் கோஷ்டியோடு அமர்ந்தாள்.

சேகரனுக்கு இந்தக் காட்சி முழுவதும் விசித்திரமாக இருந்தது. பணக்காரர்களின் பலவித விளையாடல்களைப் பற்றி அவன் கதைகளில் படித்திருந்தான். சிலவற்றைக் காதால் கேட்டிருந்தான். இந்தச் சம்பவமோ எல்லாவற்றையும் மிஞ்சி விட்டது.

அவன் வீடு திரும்பியபோது கோவிந்தனிடம், ''பெரிய அதிகாரிகளும் பணக்காரர்களும் இப்படிச் சோதாத்தனமாக நடந்துகொள்வார்கள் என்பது எனக்கு இதுவரைக்கும் தெரியாது'' என்றான்.

''அதிகாரியாக இருந்தாலும் பணக்காரனாக இருந்தாலும் அவனும் மனிதன்தானே, சேகர்! மனிதன் எவ்வளவு பெரியவனாக இருந்தாலும், சாவுக்கு முன்னால் அவனுடைய பெருமை மறைந்துவிடுவது போல, மன்மதனுக்கு முன்பும் அவன் வசமிழந்துவிடுகிறான். மதனவேளின் ராஜ்யத்தில் நுழைந்ததும் மனிதனுடைய உடல் மட்டுமல்ல, மனமும் அம்மணமாகி விடுகிறது. உலகத்திலே எவ்வளவு மதிப்பும் பெருமையும் பெற்றவனாக இருந்தாலும், அவன் இதற்கு விலக்கானவன் அல்ல!'' என்று அவர் அவனுக்குச் சமாதானம் கூறினார்.

ஆனால் அந்தச் சமாதானம் அவனுடைய உள்ளத்தில் பதியவே இல்லை.

## 15

அந்த மாதக் கடைசியில் ரஜனியின் வற்புறுத்தலால் சேகரன் வீட்டை மாற்றினன்.

மஞ்சு பழைய இடத்தை விட்டுப் போகத் தயாராக இல்லை. அவ்வளவு குறைந்த வாடகையில் அவ்வளவு வசதியான இடம் கிடைக்காது என்று அவளுக்குத் தோன்றிற்று. அவள் நினைத்ததும் சரியாக இருந்தது. ஹம்ப்யார்டு ரோடில் ஒரு புதிய பங்களாவில் சேகரன் குடிபோனன். அந்த இடத்திற்கு வாடகை மிகவும் அதிகந்தான். அங்கிருந்து சேகரனுடைய ஆபீஸ் வெகு தூரத்தில் இருந்தாலும் சரளாவின் பங்களா அருகிலேயே இருந்தது. ஆபீஸ் வேலையாகத் தான் இனிமேல் அடிக்கடி வெளியூர் போகவேண்டி இருக்குமாகையால் சரளாவின் வீட்டருகில் மஞ்சு இருப்பது வசதியாக இருக்கும் என்று அவன் நினைத்தான்.

கோவிந்தன் பக்கத்தில் இருப்பது தனக்கு அவ்வளவாக நன்மை இல்லை என்று அவனுக்குச் சந்தேகமாக இருந்தது. ஆனல் மஞ்சு கவலையில்லாமல் இருந்தால் போதும் என்ற எண்ணத்தோடுதான் வாடகை அதிகமாக இருந்தும் அவன் அந்தத் தூர இடத்தைப் பிடித்தான்.

ரஜனியின் பங்களாவுக்கு அருகில் ஓர் இடம் காலியாக இருந்தது. அது அவனுக்குப் பிடித்தும் இருந்தது. ஆனல் அவள் பக்கத்தில் வசிக்க மஞ்சு விரும்புவாளோ மாட்டாளோ என்று அவனுக்குச் சந்தேகம். மேலும் ஆபீசில் அவனும் ரஜனியும் நெருங்கிப் பழகி வந்ததனல் ஜனங்கள் அவர்களுடைய நடவடிக்கையைக் கவனித்து வந்தார்கள். இந்த நிலையில் அருகிலே குடியும் இருந்தால் என்ன என்ன இடையூறு நேருமோ? அதனல் அவன் அந்த இடத்தை வேண்டாம் என்று மறுத்துவிட்டான்.

புது இடத்துக்கு வந்ததும் மஞ்சுவின் போக்கில் எதிர்பார்த்த மாறுதல் ஏற்பட்டது. சரளாவிடம் அவளுக்கு எப்பொழுதுமே அன்பு அதிகம். அதிலும் அவள் இப்போது விடுமுறையில் இருந்ததனல் தோழிகள் இருவரும் மிகவும் ஆனந்த

மாய்ப் பொழுது போக்கினார்கள். கோடைக்காலத்தில் மலைக்குப் போக வேண்டும் என்று சரளா திட்டம் போட்டாள். மஞ்சுவும் தன்னோடு வர அவள் ஆசைப்பட்டாள். ஆனால் சேகரனை நாகபுரியில் தனியாக விட்டுச் செல்ல மஞ்சு விரும்பவில்லை. சரளா தன் திட்டத்தை ரத்து செய்துவிட்டாள். கோவிந்தன் மட்டும் பம்பு ஸெட்டை அழைத்துக்கொண்டு பச்மடி மலைக்குப் போனார். ஆகையால் தோழிகள் இருவரும் அந்தப் பங்களாவில் தடங்கல் ஏதுமில்லாமல் பழக முடிந்தது.

காலையில் அவர்கள் தினமும் ஏரியில் நீந்தச் செல்வார்கள். மாலையில் பாட்மிண்டன் விளையாடுவார்கள். சரளா அப்போது கர்ப்பமாக இருந்தாள். அவள் முகம் எப்போதும் மலர்ந்திருந்தது. அவளும் மஞ்சுவும் வேடிக்கையாகவும் இனிமையாகவும் பேசுவார்கள்.

மணமானதிலிருந்து மஞ்சு எப்பொழுதும் சேகரனை விட்டுப் பிரிந்தது இல்லை. ஆகையால் கோவிந்தன் பச்மடிக்குப் போனதிலிருந்து சரளா உற்சாகமாக இருந்ததைக் கண்டு அவளுக்கு ஆச்சரியமாக இருந்தது.

சரளாவிடம் அவளுக்கு அன்பு இருந்தது. அதையும் விட அதிகமாகத் தன் குழந்தைகளிடம் அன்பு இருந்தது. தோழிகளையும் குழந்தைகளையும் விடக் கணவனிடம் மிகுந்த அன்பு இருந்தது. அவன் ஒரு நாள் வெளியூர் போனாலே அவளுக்குத் தன் வாழ்க்கை வெறிச்சென்று தோன்றும்.

ஆதலால் சரளா தனிமையாக வாழ்வதில் மகிழ்ச்சி கொண்டது அவளுக்கு அதிசயமாகத்தான் இருந்தது. 'அவர் இல்லாமல் உனக்கு எப்படிப் பொழுது போகிறது?' என்று அவளைக் கேட்க வேண்டும் என்றுகூடப் பல தடவை நினைத்தாள். ஆனால் அதைக் கேட்கும் துணிச்சல் அவளுக்கு இல்லை.

ஒரு நாள் மாலையில் பாட்மிண்டன் ஆடிய பிறகு அவர்கள் இருவரும் வெளி வராந்தாவில் உட்கார்ந்து ஆரெஞ்சு கிரஷ் குடித்துக்கொண் டிருந்தார்கள். அப்பொழுது மஞ்சு, "நீ பச்மடிக்குப் போகப்போவதில்லையா, சரளா?" என்று கேட்டாள்.

"பச்மடி மலைக்கா? ஏதுக்குப் போகவேண்டும்?"

"ஏதுக்கு என்று கேட்கிறாயே! இங்கே வெயில் இவ்வளவு

கடுமையாக இருந்தும் கோவிந்தன் அழைத்துப் போகாமல் இருப்பது எனக்கு ஆச்சரியமாகத்தான் இருக்கிறது. இந்த வெயிலில் நீ எவ்வளவு இளைத்துப் போயிருக்கிருய், தெரியுமோ?''

சரளா தன் இளைத்த உடம்பை ஒரு தடவை பார்த்துக் கொண்டாள். சிறிது நேரம் அவள் பேசாமல் இருந்தாள். பிறகு நெற்றியில் விழுந்த கூந்தலைப் பின்னுக்குத் தள்ளிக் கொண்டே, ''நான் பச்மடிக்குப் போவதாக இருந்தால் நீயும் என்னேடு வருகிருயா, மஞ்சு?'' என்று கேட்டாள்.

''இவரை இந்த வெயிலில் இங்கே தனியாக விட்டு நான் எப்படி உன்னேடு வருவது?''

''ஏன், வந்தால் என்னவாம்? பத்துப் பதினைந்து நாளைக்கு நீ இல்லாமல் அவர் தனியே இருக்க முடியாதென்று நினைக் கிருயா?''

''தனியே இருப்பது இருக்கட்டும். ஹோட்டல் சாப்பாடு அவருக்கு ஒத்துக்கொள்ளாதே!''

''நாம் திரும்பி வரும் வரைக்கும் அவர் ரஜனியின் வீட்டில் சாப்பிடட்டுமே!''

இதை மெதுவாகச் சொல்லிவிட்டு, சரளா மஞ்சுவின் முகத்தை உற்றுப் பார்த்தாள்.

''ரஜனியின் வீட்டுக்குச் சாப்பிடப் போக அவருக்குப் பிடிக் காது. நீயும் நானும் இவ்வளவு வருஷங்களாய்ப் பழகி அக்கா தங்கைகள் போல இருந்தும் உன் வீட்டுக்கு வர அவர் எவ் வளவு சங்கோசப்படுகிருர், தெரியுமா?''

''நான் உனக்குத்தானே தோழி, மஞ்சு! அவருக்குத் தோழி அல்லவே!''

இதைச் சொன்னதும் அவள் மறுபடியும் மஞ்சுவைக் கூர்ந்து பார்த்தாள். அவளுடைய மலர்ந்த முகத்தில் மாறுதல் சிறிதும் தெரியவில்லை.

''ரஜனியோடு அவர் இன்று ஆபீசில் வேலை செய்கிருர் என்பதனுலேயே அவள் வீட்டுக்கு அவர் சாப்பிடப் போய்விட மாட்டார், சரளா!'' என்று மஞ்சு பெருமிதத்தோடு பேசினுள்.

''உனக்குத் தெரியுமா, மஞ்சு? இந்த வேலை அவளால்

தான் அவருக்குக் கிடைத்திருக்கிறது. 'அவரை முக்கிய ஏஜெண்டாக நியமித்தால்தான் நான் வேலையில் சேர முடியும்' என்று அவள் கம்பெனிக்கு நிபந்தனை விதித்தாளாம்!"

"எனக்குத் தெரியாதே, இந்தத் தகவல் எல்லாம். இப்போது நீ சொல்லித்தான் முதல் முதலாகக் கேட்கிறேன்."

"உனக்கு இது தெரியாமலிருக்கக் காரணம் இருக்கிறது, மஞ்சு! நீ வெளுத்ததெல்லாம் பால் என்று நினைக்கிறாய். சேகரனையும் அப்படியே நினைக்கிறாய். அதனால்தான் பிறருக்கு எளிதில் தெரியும் விஷயங்கள் உனக்கு இன்னமும் தெரியவில்லை!"

"பிறருக்கு இவரைப்பற்றி அப்படி என்ன என்ன விஷயங்கள் தெரிந்திருக்கின்றன, சரளா?"

"பிறருக்குத் தெரிவானேன்? நானே என் கண்ணால் பார்த்ததைச் சொல்கிறேனே. இரண்டு மாசத்துக்கு முன்னால் நானும் என் கணவரும் உலாவிவிட்டுச் சுமார் பதினொரு மணிக்கு வீடு திரும்பினோம். அப்பொழுது ஜெயில் ரோடில் சேகரனும் ரஜனியும் போய்க்கொண் டிருந்தார்கள்."

"அதுவா! அவரே அதை என்னிடம் மறுநாள் சொன்னாரே! அவர் உலாவப் போனபோது திடீரென்று ரஜனி எதிரே வந்தாளாம்."

"நீ என்ன பச்சைக் குழந்தையாக இருக்கிறாயே, மஞ்சு! வழியிலே திடீரென்று சந்திப்பதற்காக இப்படிப் பெண்கள் நடு நிசியில் எங்கேயாவது தனியே உலாவப் போவது உண்டா? சேகரன் சொன்னாலும் நீ அதை உண்மை என்று நம்புகிறாயே!"

"அப்படியானால் நீ என்ன சொல்கிறாய், சரளா? அன்றைய தினம் அவர் ரஜனியை அழைத்துக்கொண்டு உலாவப் போனார் என்கிறாயா?"

"நான் ஒன்றுமே சொல்லவில்லை. என் கண்ணுக்குப் புலப்பட்டதை உனக்குச் சொன்னேன். அன்று நிலவிலே அவர்கள் உலாவியதும், ரஜனி இன்ஷ்யூரன்ஸ் வேலையில் சேர்ந்தபோது விதித்த நிபந்தனையும், காலையும் மாலையும் ஆபீசில் அவர்கள் கூட்டம் போடுவதும் — இவையெல்லாம் உனக்கு மிகவும் சாதாரண விஷயங்களாகத் தோன்றுகின்

றனவா, மஞ்சு?"

"நீ அவரைப்பற்றி மீதி எது சொன்னாலும் கேட்டுக்கொள்வேன், சரளா. இந்த மாதிரியான சந்தேகத்துக்கு நான் இடமே கொடுக்க மாட்டேன். அவர் இப்படியெல்லாம் ஒரு பொழுதும் நடந்துகொள்ளவே மாட்டார்."

"மஞ்சு, நீ எதற்காக என்னை இப்படி அடித்துப் பேசுகிறாய்? இந்த ஆண்களை ஒரு பொழுதும் நம்பவே கூடாது என்று தான் எனக்குத் தோன்றுகிறது. இதைச் சொன்னபோது சரளாவின் வெண்முகத்தில் வருத்தமும் கொடுமையும் கலந்த ஒரு புன்னகை தோன்றி மறைந்தது.

"உன்னுடைய அநுபவம் ஒருவேளை அப்படி இருக்கலாம், சரளா? ஆனால் நீ சொல்வதை என் வரைக்கும் நான் நம்பவே முடியாது."

"என் பேச்சைக் கவனித்துக் கேள், மஞ்சு! வீட்டைவிட வெளியில்தான் ஆண்கள் அதிக நேரம் போக்குகிறார்கள். அவர்களுடைய வாழ்க்கையும் வீட்டுக்கு வெளியேதான் அதிகமாக நிகழ்கிறது. சேகரனுக்கு உன்னிடம் அன்பு இல்லை என்று நான் சொல்லவில்லை. ஆனால் உன்னோடு அவர் எத்தனை மணி நேரம் வாழ்கிறாரோ அத்தனை மணி நேரம் வேறொரு பெண்ணுடனும் தினமும் வாழ்கிறார் என்பதை மறந்துவிடாதே. நாம் இப்பொழுது இங்கே இவ்வளவு நேரமாக வம்பளந்துகொண் டிருக்கிறோம். அவரும் இப்பொழுது ஆபீசில் ரஜனியோடு வம்பு பேசிக்கொண்டு இருக்கலாம்!"

"ஓர் ஆபீசில் வேலை நிமித்தமாக ஆணும் பெண்ணும் தினமும் பழகுகிறார்கள். அதற்காக அவர்களை உடனே சந்தேகிக்க வேண்டுமா?"

"அப்படி நான் சொல்லவில்லை, மஞ்சு! நிலவரம் இப்படி இருக்கிறது என்று உனக்குச் சொல்கிறேன். எந்தக் கெட்டிக்கார மனைவியும், கணவன் தன்னிடத்தில் அன்பாக இருக்கிறான் என்பதைக் கொண்டு மட்டும் களித்துவிடக் கூடாது. ஆண் மகன் ஒரே சமயத்தில் பல பெண்களிடம் அன்பு செலுத்தலாம். அதுவும் ஒரே அளவாக!"

"உன்னுடைய இந்த விந்தையான விதி பெண்களுக்கும்

பொருந்தாதோ?" என்று மஞ்சு சிரித்துக்கொண்டே கேட்டாள்.

சரளாவின் முகம் உடனே மாறியது. அவள் அடுத்த கணமே சமாளித்துக்கொண்டு அமைதியாக, "பெண்களுக்கும் அது பொருந்தும்; ஆனால் வேறு விதமாக!" என்றாள்.

"அது எப்படி?" என்று மஞ்சு ஆவலோடு கேட்டாள்.

"பெண் ஒரே சமயத்தில் பல ஆண்களிடம் அன்பு செலுத்த முடியாது. பெண் ஒருவனிடம் ஆசை வைக்கும்போது அவனைத் தவிர வேறு யாரையும் அவள் நினைக்கமாட்டாள்; விரும்பவும் மாட்டாள். தன்னிடம் இருக்கும் அனைத்தையும் அவனுக்குக் கொடுத்துத் தானும் முழுக்க முழுக்க அவனுடைய வளாகிவிடுவாள். ஆனால், ஏதாவது ஒரு காரணத்தினால் அவனிடம் வெறுப்பு ஏற்பட்டால், அப்பொழுது வேறொருவனிடம் திரும்புவாள். ஆண்களின் நிலைமை அப்படியன்று. ஆண் ஒரே சமயத்தில் பல பெண்களிடம் ஆசை வைப்பான். அதற்குக் காரணம் சுவை வேறுபாடு. ஏமாற்றமோ அதிருப்தியோ ஏற்பட்டால்தான், பெண் ஓர் ஆணை விட்டு மற்றொருவனை நாடுவாள். பெண்ணின் அன்பில் தன்னை அர்ப்பிக்கும் உணர்ச்சி இருக்கிறது. அந்த அன்பு நிலையானது. ஆணின் அன்பிலோ விளையாட்டும் சுய திருப்தியுமே நிறைந்திருக்கும்."

சரளா ஆவேசத்தோடு பேசியது மஞ்சுவுக்கு மிகவும் ஆச்சரியமாக இருந்தது. 'இவளுடைய சொந்த அநுபவத்தின் கசப்பு இந்தப் பேச்சிலே கலந்திருக்குமோ? இவளுடைய மனம் கோவிந்தனை வெறுத்துவிட்டதோ? அப்படியானால் இவளுடைய ஆசைக்கு உரியவர் யாராக இருப்பார்?' என்று அவள் நினைக்கலானாள்.

ஆனால் தன் அந்தரங்கத் தோழியைப் பற்றி இப்படி எண்ணியதும் அவளுக்கு வெட்கம் வந்துவிட்டது.

சரளா அவள் தோளை அன்பாகத் தட்டிக்கொண்டே, "ஏன் மஞ்சு, நீ பேசாமல் இருக்கிறாய்? நான் சொன்னது உனக்குக் கோபமா?" என்றாள்.

மஞ்சு நாற்காலியில் நேராக உட்கார்ந்துகொண்டு, "இதில் கோபித்துக் கொள்வதற்கு என்ன இருக்கிறது, சரளா? ஆனால் இப்போது நீ பேசியதெல்லாம் எனக்குப் புதுமையாகத்தான்

இருக்கிறது. இம்மாதிரி விஷயங்களைப் பற்றி இதுவரைக்கும் நான் சிந்தித்ததே இல்லை.''

''அதனால்தான் நீ சுகமாக இருக்கிறாய், மஞ்சு!'' என்று சொல்லிய சரளா நீண்ட பெருமூச்சு விட்டாள். ''ஆனால் இனிமேல் இதைப்பற்றி நீ சிந்திக்க வேண்டி யிருக்கும்!'' என்றாள்.

மஞ்சு ஒன்றும் பதிலே சொல்லவில்லை. சேகரனும் ரஜனியும் பழகுவதைப்பற்றிச் சரளா சொல்லியதை அவள் ஒப்புக் கொள்ளாவிட்டாலும், அவளுடைய மனம் சலித்தது. உடம்பில் ஊமைக் காயம் பட்டால் நோவதுபோல அவளுடைய மனம் வருந்தியது.

அந்தத் தவிப்பை அவளால் பொறுக்க முடியவில்லை. ''சரி, நான் வீட்டுக்குப் போகிறேன், சரளா! நந்துவைச் சற்று நேரம் கழித்து வேலைக்காரனோடு அனுப்பிவிடு'' என்று சொல்லிப் புறப்பட்டாள்.

''நான் பச்மடிக்குப் போனால் நீயும் என்னோடு வருகிறாயா?'' என்று சரளா நகைத்துக்கொண்டே கேட்டாள்.

''இன்று நான் அவரைக் கேட்டுப் பார்க்கிறேன்!''

வீட்டுக்கு வந்ததும் மஞ்சுவுக்குத் தன் மேலேயே கோபம் வந்தது. சரளாவிடம் தான் அப்படிப் பதில் சொல்லியிருக்கக் கூடாது என்று அவள் நினைத்தாள். மணமாகிய பின்பு கடந்த ஏழு வருஷங்களாக அவள் சேகரனுடைய நடத்தையைப்பற்றித் துளியும் சந்தேகப்பட்டதே இல்லை. இன்று சரளா ஏதோ ஒன்றை அரைகுறையாகப் பேசியதும் அவளுடைய மனம் ஏன் இப்படிக் கலங்குகிறது?

அவளுக்குத் தன்னிடம் மட்டுமன்று; சரளாவிடமும் கோபம் வந்தது.

சரளாவின் மணவாழ்க்கை இன்பகரமாக இல்லை என்பது அவளுக்கு இப்போது தெளிவாகத் தெரிந்துவிட்டது. 'தன் சொந்த வாழ்க்கையில் அதிருப்தி கொண்ட சரளா, இப்போது நம்முடைய மணவாழ்க்கையில் சந்தேகமென்னும் விஷத்தைக் கலக்கிறாளோ?'

இந்தக் கேள்வி மஞ்சுவைத் திடுக்கிட வைத்தது. கணவ

னிடமும் தோழியினிடமும் ஒரே சமயத்தில் சந்தேகம் தோன்றும்படியான இப்படிப்பட்ட கெட்ட நாள் தன் வாழ்விலேயே இதுவரையில் வரவில்லை என்பதை அவள் உணர்ந்தாள்.

அவள் வந்த சிறிது நேரத்துக்கெல்லாம் சேகரனும் ஆபீசிலிருந்து திரும்பி வந்தான். முற்றத்தில் இருந்த சாய்வு நாற்காலியில் அப்பாடா என்று சாய்ந்துகொண்டான்.

"இன்றைக்கு என்ன, சீக்கிரம் வந்துவிட்டீர்களே!" என்றாள் மஞ்சு.

"உடம்பு சரியில்லை" என்று அவன் சுருக்கமாகப் பதில் சொன்னான்.

அவள் அவனுடைய நெற்றியைத் தொட்டுப் பார்த்தாள். நெருப்பாகக் கொதித்தது. அவள் ஓர் ஈரத் துணியைக் கொண்டுவந்து நெற்றியில் மடித்து வைத்தாள். அவனிடம் அவளுக்கு மிகுந்த அநுதாபம் உண்டாயிற்று. ஆனால் அவள் குரல் மாறியிருந்தது.

"சரளா இப்போதுதான் என்னைக் கேட்டாள்—" என்று சொல்லி அவள் தயங்கினாள்.

"என்ன கேட்டாள் சரளா?"

"அப்படி ஒன்றும் பெரிய விஷயமன்று. பச்மடிக்கு என்னோடு வருகிறாயா என்று கேட்டாள்."

"உன் கணவனையும் அழைத்து வா என்று அவள் சொன்னாளா?"

"அதெல்லாம் அவள் ஏன் சொல்வாள்!"

"பின்னே எனக்கு என்ன வசதி செய்வதாக இருக்கிறாய்?"

"உங்கள் வசதிக்கு, அவள் சொன்னாள்—" மேலே பேச மஞ்சுவுக்குத் துணிச்சல் வரவில்லை.

"அவள் என்ன சொன்னாள்? நீ இன்று எப்போதும்போல மலர்ந்த முகத்துடன் இல்லையே? என்னவோ தயங்கித் தயங்கிப் பேசுகிறாய்!" என்று சொல்லிக்கொண்டே, சேகரன் அருகில் இருந்த அவள் கையை அன்போடு அழுத்தினான்.

அவனுடைய கேள்வி அவளுடைய உள்ளத்தில் உறைத்தது.

14

"சரளா என்னதான் சொன்னுள்? என்னிடம் சொல்லக் கூடாதா?"

"நான் அவளோடு பச்மடிக்குப் போனல், ரஜனியம்மாளின் வீட்டில் நீங்கள் சாப்பிடலாமே என்று அவள் சொன்னுள்."

"அவள் இதைப் பற்றி ரஜனியம்மாளிடம் பேசி எல்லாம் முடிவு செய்திருக்கிருளோ?"

இந்தக் கிண்டலான கேள்வி மஞ்சுவைச் சங்கடத்தில் ஆழ்த்தியது. ஆனல் அவளுடைய வேதனை மறைந்தது. உள்ளூறும் இன்பத்தோடு அவள் மென்முறுவல் பூத்து, "சேச்சே! அவள் எதற்காக ரஜனியைப் போய்க் கேட்பாள்? இப்படிச் செய்யலாமே என்று ஆலோசனை சொல்கிருள். ரஜனியம்மாள் உங்களோடு வேலை செய்கிருளே, அதனல்—" என்று நிறுத்தினுள்.

"பள்ளிக்கூடத்தில் என்னேடு எத்தனையோ வாத்தியார்கள் வேலை செய்தார்கள். நீ ஆஸ்பத்திரியில் பிரசவித்த போதோ வேறு ஆபத்துகளிலோ நான் அவர்களில் யாருடைய வீட்டுக்காவது ஒரு நாளாவது சாப்பிடப் போனது உண்டா?"

சேகரன் இந்தக் கேள்வியைச் சட்டென்று கேட்டுவிட்டானே தவிர, அவனுடைய எண்ணம் வேறுவிதமாக இருந்தது. 'ரஜனியைப்பற்றி நான் இப்படிப் பேசுவது சரிதானு? மஞ்சுவை நான் இதனல் ஏமாற்றவில்லையா? ரஜனியின் வீட்டில் சாப்பிடப் போவது எனக்குப் பிடிக்காமல் இருக்கலாம். ஆனல் பள்ளிக்கூடத்தில் மற்ற வாத்தியார்களோடு பழகியது போலவா இப்பொழுது நான் ரஜனியோடு பழகுகிறேன்? அதைப் போன்ற வறண்ட தாற்காலிகமான பழக்கமா இது?' என்று அவன் தன்னைத் தானே கேட்டுக்கொண்டான்.

ஆனல் அவனுடைய இந்தக் கேள்வியினல் மஞ்சுவின் கலங்கிய மனம் தெளிந்தது. அவள் அவனுடைய நெற்றியை ஈரத் துணியால் துடைத்துக்கொண்டே, "நான் சொன்னது தவறுதான்" என்ருள்.

"இது உன் தவறு அன்று, மஞ்சு! உன் தோழியின் மனம் சரியாக இல்லை!"

அந்தப் பேச்சில் இருந்த கசப்பை அவள் நன்ருக உணர்ந்தாள்.

"அது எப்படி?" என்று கேட்டாள்.

"அதெல்லாம் நான் சொல்ல மாட்டேன். நீயே உன் மனத்தைக் கேட்டுப் பார். உனக்கே பதில் நன்ருக விளங்கும்" என்று சொல்லிவிட்டு அவன் திடீரென்று சாய்வு நாற்காலியிலிருந்து எழுந்து நின்ருன்.

"சரளாவைப்பற்றி நினைக்கும்பொழுது, மஞ்சு, எனக்குச் சகதேவன் வாக்கு நினைவுக்கு வருகிறது. துரியோதனனுடைய மனைவியைப்பற்றிப் பேசியபோது அவன் ஓர் உவமை சொன்னுன். எவ்வளவுதான் நல்ல கொடியாக இருந்தாலும் அது விஷ மரத்தைச் சூழ்ந்து படர்ந்தால் தானும் விஷக்கொடி ஆகிவிடும். உன் பணக்காரத் தோழியும் அப்படித்தான் ஆகிவிட்டாள்" என்ருன்.

மஞ்சு வாயையே திறக்கவில்லை. தன் தோழியைப் பற்றிய அந்தக் கசப்பான பேச்சு இன்றுதான் அவளுக்கு இனிமையாக இருந்தது.

ஆனல், அவன் சரளாவைப் பற்றி இப்படிக் கடுமையாகப பேசிக்கொண் டிருந்த தருணத்தில், ரஜனியும் சரளாவும் அன்றிரவு சந்தித்தபோது பேசிய பேச்சு அவளுக்கு ஞாபகம் வந்தது. அவன் எழுதிய கதைப் படத்தில் ரஜனி நடிக்கப் போவதாக அவர்கள் பேசினர்கள். அது அவள் மனத்தை மீண்டும் கலக்கியது.

பிறகு சேகரன் சிறிது களைப்படைநத குரலில், "நான் இன்று மிகவும் சோர்வுற்று வந்திருக்கிறேன். நீ உன் தோழியின் வீட்டில் சாப்பிட்டு வந்திருப்பாய். ஆனல் நான் சாப்பிட வேண்டும் என்பதை மறந்துவிடாதே!" என்ருன்.

"நான் ஒன்றும் சாப்பிட்டுவிட்டு வரவில்லை. நான் பேசியது உங்களுக்குக் கோபமா?" என்று அவனை நெருங்கிக் கேட்டாள்.

அவன் தன் வலுத்த கையினல் அவளை இறுக அணைத்து, ஆவலுற்ற அவள் கண்களோடு, வருத்தமுற்ற தன் கண்களை இணைத்து, "உன்னிடம் கோபங் கொண்டால் எப்படி நடக்கும்,

மஞ்சு? எனக்கு உலகில் தலை சாய்க்க வேறு இடம் எங்கே இருக்கிறது?'' என்றான்.

அவனுடைய தீனக் குரல் அவள் நெஞ்சை உருக்கியது. அவளுடைய கண் கலங்கிற்று. அவள் பொங்கி வந்த அழுகையை அடக்கிக்கொண்டே, "கொஞ்சம் பானகம் வேண்டுமா? ஐஸ் போட்டு இப்போதே தயார் செய்து கொடுக்கிறேன். இன்னும் அரை மணிக்குள் இதோ சமையல் ஆகிவிடும்'' என்றாள்.

அவன் மௌனமாக இருந்தான்.

அவள் ஒரு கண்ணாடிக் கிண்ணத்தில் பானகத்தைக் கொண்டு வந்து வைத்தாள். அதை அவன் குடித்துவிட்டு, "நான் போய்ச் சற்று இளைப்பாறுகிறேன். சமையல் ஆனதும் என்னைக் கூப்பிடு'' என்றான்.

அவர்கள் அன்று எப்போதும்போல ஆனந்தமாகச் சாப்பிடவில்லை. அவள் அவனோடு எவ்வளவோ பேச முயன்றாள். அவள் கேட்ட கேள்விகளுககு அவன் சுருக்கமாகப் பதில் சொல்லி மௌனம் சாதித்தான்.

அவனுக்கு மிகவும் பிடித்தமான மைசூர் ரசத்தை அன்று அவள் வேண்டுமென்றே சமைத்திருந்தாள். சாதம் சாப்பிட்டுவிட்டு அந்த ரசத்தைக் குடித்தபோது ஏனோ அவனுக்குத் திடீரென்று ராமநாதனுடைய ஞாபகம் வந்தது.

"உன் அண்ணன் வெகு நாளாக இந்தப் பக்கம் தலை காட்டுவதே இல்லையே!'' என்றான்.

"முந்தாநாள் அண்ணி வந்திருந்தாள். அநுமார் கோவிலில் ராமாயண பாராயணம் நடக்கிறதாம். அதில் அவன் மும்முரமாக ஈடுபட்டிருக்கிறானாம். இன்று என்ன, திடீரென்று உங்களுக்கு அவன் ஞாபகம் வநதது?''

"ஞாபகம் வருவதற்குக்கூட ஏதாவது காரணம் வேண்டுமா, மஞ்சு? மனம் எப்போதும் அலை பாய்வது. அது எப்போது எங்கே ஓடும் என்று சொல்ல முடியாது.''

அவன் இப்படிப் பேசியது முழு உண்மையாகத்தான் இருந்தது. ராமநாதனுடைய நினைவு தனக்குத் திடீரென்று ஏன் வந்தது என்பது அவனுக்கு விளங்கவில்லை

சாப்பாடு ஆனதும் அவன் மாடிக்குப் போய், கட்டிலில் படுத்துக்கொண்டான்.

வெண்மதி அப்பொழுது தலைக்கு நேரே தண்கதிர்களை வீசியது. ஜோராக வீசிய காற்றில் கொசுவலை அசைந்து ஆடிப் படபடத்தது. எதிரே தெருவில் இருநத பெரிய அரச மரத்து இலைகள் நிலவில் பளபளத்தன. காற்றில் அந்த மரத்துக் கிளைகள் சலசலவென்று அசைந்தன. முற்றத்தில் வானத்தை எட்டிப் பார்த்த சண்பக மலர், நிலவிலிருந்து பொழியும் அமுதத் துளிகளை ஏந்திக் கொள்வதுபோல இதழ் விரிந்திருந்தது. மாடியில் பூந்தொட்டியில குலுங்கிய முல்லை மலர்கள் எங்கும் நறுமணத்தை அள்ளி வீசின. சாலையில் இருந்த புளியமரம் பூத்திருந்ததனால் அதன் மணமும் நிலவிலே கலந்திருந்தது. நீலவானில் வியாழனும் சனியும் இணைந்திருந்தன. மிருகசீர்ஷ நட்சததிரம் ரோகிணியின் பின்னால் பாய முயன்றது.

அந்த நிலவும் நறுமணமும் சேகரனுடைய கலங்கிய நெஞ்சத்தைப் பின்னும் அலைத்தன. உடனே போய் ரஜனியைக் காண வேண்டுமென்ற ஆசை அவனுக்குத் தீவிரமாக எழுந்தது.

மாலையில் ஐந்து மணிக்கு அவர்கள் இருவரும் ஆபீஸை விட்டுப் புறப்பட்டபோது அவள் அவனிடம், "நீங்கள் என் வீட்டுக்கு எப்போது வரப்போகிறீர்கள்? நான் உங்களிடம் நிறைய விஷயம் சொல்ல வேண்டும்!" என்றாள்.

அவளுடைய அந்தச் சொல் நினைவுக்கு வரவே, அவன் உடனே எழுந்து போய் அவளைப் பார்க்க விரும்பினான். அந்த எண்ணத்தோடு அவன் படுக்கையை விட்டு எழுந்தான்.

அதே சமயத்தில் மஞ்சு மாடியறைக்கு வந்தாள்.

"ஏன், எங்காவது வெளியே போகப் போகிறீர்களா?" என்று கேட்டபடி அவள் தன் கரத்தால் அவன் கழுத்தை வளைத்துக்கொண்டாள்.

"போவதாக இருந்தேன். இனிமேல் போகப் போவதில்லை" என்று சொல்லி, அவன் மறுபடி படுக்கையில் உட்கார்ந்தான் "நீ இப்பொழுது வராமலிருந்தால் நான் வெளியே போயிருப்பேன்" என்றான்.

''அப்படியானால், சரியான சமயத்தில்தான் இங்கு வந்திருக்கிறேனா. உங்கள் கோபம் இன்னும் போகவில்லை என்று சொல்லுங்கள்!'' அவள் அவன் உடல்மீது மெதுவாகச் சாய்ந்தாள்.

''சேச்சே! அதில் கோபித்துக்கொள்ள என்ன இருக்கிறது, மஞ்சு?''

அவள் ஒன்றும் பதில் சொல்லாமல் அவனுடைய பரந்த மார்பில் முகத்தைப் புதைத்துக்கொண்டாள்.

அவளுடைய அந்த உறுதியான, மென்மையான ஸ்பரிசம் பட்டதும் ரஜனியைப் பற்றிய சிந்தனைகள் யாவும் அரைக் கணத்தில் அவனுடைய உள்ளத்திலிருந்து மறைந்தன. அவன் இரு கைகளாலும் அவளைச் சேர்த்து அணைத்துக்கொண்டே, ''மஞ்சு, இன்று வரைக்கும் நம் வாழ்க்கை இன்பமாகவும் சுகமாகவும் நடந்தது போல இனிமேல் இராது என்று எனக்குத் தோன்றுகிறது'' என்றான்.

அவனுடைய மோவாய் அவள் தலையைச் சார்ந்திருந்தது. அவள் கூந்தலில் சூடியிருந்த முல்லை மலரின் நறுமணம் அவனை மயக்கியது.

மஞ்சு ஒன்றும் பேசவில்லை. அவளுடைய சூடான கண்ணீர் அவன் கையில் விழுந்தது. அவன் திடுக்கிட்டுப் போய், பொங்கி வந்த ஆர்வத்தோடு அவளை அணைத்துக் கொண்டான். அந்த அணைப்பு அவளுக்கு மிகப் பெரிய ஆறுதலாக இருந்தது.

அதே சமயத்தில் ஓர் இன்னிசை காற்றில் மிதந்து வந்தது. நெஞ்சை உருக்கிய அந்த இசையைக் கேட்டதும் சேகரனுக்கு மீண்டும் ரஜனியின் நினைவு வந்தது. மஞ்சுவை அணைத்திருந்த அவன் கை தளர்ந்தது.

''எதைப்பற்றி நீங்கள் சிந்திக்கிறீர்கள், சேகர்?'' என்று அவள் கேட்டாள்.

அந்தக் கேள்வியைக் கேட்டதும் அவன் திகைத்து நின்றான். ஏதாவது பதில் சொல்ல வேண்டுமே என்று, ''ஒன்றுமில்லையே!'' என்றான்.

அவள் மென்மையான தன் விரலால் அவனுடைய கையை அழுத்தினாள். அவனுடைய உதடு துடித்தது. அவன் மிகுந்த

ஆவேசத்தோடு அவள் கையைப் பிடித்து, "நான் வேறு ஏதோ நினைத்தேன் என்பது உண்மை. ஆனால் உன் ஸ்பரிசம் பட்டதும் எல்லாவற்றையும் மறந்தேன், மஞ்சு!" என்றான்.

"இது உண்மையன்று. முன்பெல்லாம் இந்தப் பேச்சு உண்மையாக இருந்திருக்கலாம். இன்று உங்கள் ஸ்பரிசத்தில் உள்ள வித்தியாசமும், உங்கள் உணர்ச்சியின் போக்கும் உங்கள் மனத்தில் ஏதோ நிகழ்வதை எனக்குத் தெரிவிக்கின்றன."

"நான் மறந்ததை நீ மறுபடி ஞாபகப்படுத்துகிறாயே?"

மேற்கே சாய்ந்த வெண்மதியின் ஒளி அவள் முகத்தில் விழுந்தது. அவளுடைய இமைகளில நீர் படிந்திருந்தது. அவள் மூச்சு வேகமாக ஓடியது.

அவன் தன் இரு கைகளாலும் அவளுடைய முகத்தைத் தாங்கிக்கொண்டு உள்ளே எழும வேதனை வெளியே பீரிட்டு வர, "மஞ்சு, மஞ்சு!" என்று கொஞ்சலாக அழைத்தான்.

அவனுடைய அந்த அழைப்பு அவளுடைய மூச்சில் கலந்து மறைந்தது.

## 16

ரஜனி சேகரனை மிகவும் ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள்.

ஆனால் சேகரன் நேரில் வந்ததும் அவனைத் தான் கேட்க விரும்பிய கேள்வியைக் கேட்பதா வேண்டாமா என்று தவித்தாள்.

முதல்நாள் மாலை அவன் ஆபீசுக்குச் சிறிது தாமதமாக வந்தான். ஆசிரியர் குறிப்புக்களை எழுதி முடித்துவிட்டு வர அவனுக்கு நேரமாகிவிட்டது. ஆதலால், வேலைக்காரன் மேஜை மேல் வைத்த புதுத் தபால்களை அவளே பிரித்துப் பார்த்தாள். அவற்றில் முதலில் நாலைந்து கடிதங்கள் வழக்கமாக வியாபாரத்தைப் பற்றி இருந்தன. ஆனால் கடைசிக் கடிதத்தைப் படித்ததும் அவள் மனத்துக்கு அதிர்ச்சி ஏற்பட்டது. அது தினகரன் சேகரனுக்கு எழுதிய கடிதம்.

அன்பார்ந்த சேகர்,

நான் நேற்றுத்தான் பம்பாயிலிருந்து திரும்பி வந்தேன். பம்பாயில் இந்தத் தடவை நாங்கள் எல்லாரும் ஒன்றுகக் கலந்து ஆலோசித்தோம்.

கார் ஓட்டுவதிலும், துப்பாக்கிப் பயிற்சியிலும் நீங்கள் எவ்வளவு தூரம் முன்னேறி யிருககிறீர்கள்? நீங்கள் குறி பார்த்துச் சுடுவதில் வல்லவராக இருப்பதாக, குருசரணன் தன் கடிதத்தில் குறிப்பிட்டிருக்கிறுன். கார் ஓட்டுவதற்கு நீங்கள் பம்பு சேட்டின் வண்டியைப் பயன்படுத்துவது தெரிந்தது.

திருமண முகூர்த்தம் ஏப்ரல் கடைசி வாரத்தில் வைத்துக் கொள்வதாக இருக்கிருேம். நீங்கள் அந்தச் சமயத்தில கட்டா யம் வரவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். நடைமுறை யில் நீங்கள் எதுவும் செய்ய வேண்டியிராது. நாள் தீர்மான மானதும் உங்களுக்குத் தெரிவிக்கிறேன். —தினகரன்.

ரஜனி இந்தக் கடிதத்தைப் படித்தாள்; திருப்பித் திருப்பிப் படித்தாள். கடிதத்தின் விஷயம் அவளுக்கு விளங்கவே இல்லே. துப்பாக்கிப் பயிற்சிக்கும் திருமணத்திற்கும் என்ன தொடர்பு? இந்தத் திருமணம் யாருக்கு? நடைமுறையில் எதுவும் செய்ய வேண்டாம் என்பதற்கு என்ன அர்த்தம்? அவளுக்கு எல் லாம் ஒரே புதிராக இருந்தது. ஆனுல் இது வழக்கமாக வரும் வியாபாரக் கடிதம் அல்ல; இதில் ஏதோ ரகசியம் இருக்கிறது என்பதை மட்டும் அவள் தெரிந்துகொண்டாள்.

சேகரன் ஒரு நாள் பேச்சுவாக்கில் தன்னிடம் சொன்னது அவளுக்கு ஞாபகம் வந்தது. "நான் காலேயில் அரைமணி நேரந்தான் ஆபீசுக்கு வருவேன். நீங்கள்மட்டும் சற்றுச் சீக்கிரம் வந்து, வேலேகளேக் கவனித்துக்கொள்ளுங்கள்" என்று அவன் சொல்லியிருந்தான். காலேயில் அவன் தாமதமாக வருவதற்குக் காரணம், அவன் துப்பாக்கிச் சுடப் பழகுவதுதாஞே? அவன் எங்கே பழகுகிறுன்? குருசரணன் அவனேப் பார்ப்ப தற்கு நாலேந்து தடவை ஆபீசுக்கு வந்திருந்தான். அவனுடைய பேச்சிலிருந்து, ஒருவேளே அவன் வீட்டுக்குத் தினமும் சேகரன் போகிருனே என்று தோன்றிற்று. இதில் ஓர் ஆச்சரியம்

என்னவென்றால், ஆபீசில் வருகிற ஒவ்வொருவரையும் அவளுக்கு அறிமுகப்படுத்தும் சேகரன், அவனை மட்டும் அவளுக்கு அறிமுகப்படுத்தவில்லை.

செக்கச் செவேலென்று உயரமும் பருமனுமாக நின்று, கையில் 'கிருபாணத்'தோடும், மை தீட்டிய கண்ணோடும் உலகை மிடுக்காய்ப் பார்க்கும் அந்தச் சீக்கியனைக் கண்டாலே அவளுக்கு விந்தையாக இருக்கும். அவனிடந்தான் சேகரன் தினமும் துப்பாக்கிச் சுடப் பழகுகிறானா?

எதற்காக?

இந்தக் கேள்விக்குப் பதில் அவளுக்குத் தெரியவில்லை. இந்தக் கேள்வியைக் கேட்கும் நோக்கத்தோடுதான் இன்று அவள் சேகரனைக் கூப்பிட்டிருநதாள். ஆயினும் இதைக் கேட்பதா வேண்டாமா என்று அவள் மனம் அலைபாய்ந்தது.

தினகரனுடைய கடிதத்தைப் பிரித்ததில் தான் ஒன்றும் தவறு செய்ததாக அவளுக்குத் தோன்றவில்லை. "எனக்காகக் காத்திராமல், வரும் தபால்களை எல்லாம் நீங்கள் பிரித்துப் பார்த்து, வேண்டியதைச் செய்யுங்கள்" என்று அவன் அவளிடம் பல முறை சொல்லியிருந்தான். அந்தக் கடிதத்தின் உறையில் 'சொந்த விஷயம்' என்று எழுதியிருந்தும், அவள் அந்தக் கடிதத்தைப் பிரித்துப் படித்துவிட்டாள். சேகரனும் அதைப்பற்றி அவளை ஒன்றுமே கேட்கவில்லை. இவ்வளவும் இருந்தும், அந்தக் கடிதத்து விவரத்தை அவனிடம் கேட்பது சரியா என்று அவள் மனம் தியங்கியது.

அமைதியற்ற அந்த மனநிலையில் அவள் முற்றத்தில் குறுக்கும் நெடுக்குமாக உலாவினாள்.

நிலவு போன்ற வெண்மையான வெண்பட்டை அவள் உடுத்திருந்தாள். நிலவைப் பழிக்கும் முல்லை மலர்ச் செண்டைக் கூந்தலில் சூடியிருந்தாள். அவளுடைய மாநிறத்தையும் பின்னலின் கரு நிறத்தையும் பார்த்தால், கருந்தரையில் நிலவு வீசுகிறதோ என்றுதான் தோன்றும்.

சேகரன் வருவதற்கு இன்னும் கால் மணி நேரந்தான் இருந்தது; ஆனால் ஒவ்வொரு கணமும் அவளுக்கு ஒரு யுகமாக இருந்தது.

"நான் வருவதற்குக் கொஞ்சம் நேரமாகிவிட்டதோ?" என்று சைக்கிளை நிறுத்திக்கொண்டே கேட்டான் சேகரன். அவன் முகத்தில் லேசான சிரிப்புத் தோன்றியது.

"நீங்கள் வருவீர்களோ மாட்டீர்களோ என்று நினைத்தேன். கொஞ்சம் ஆரஞ்சு ஷர்பத் எடுத்துக்கொள்கிறீர்களா?" என்று சொல்லிவிட்டு அவள் விர்ரென்று உள்ளே போனாள். முற்றத்தில் இருந்த நாற்காலியில் அவன் உட்கார்ந்தான்.

அவள் இரண்டு கிண்ணம் ஷர்பத் எடுத்து வந்து, ஒரு கிண்ணத்தை அவன்முன்பு வைத்தாள்.

"ஷர்பத் குடித்ததும் நாம் வெளியே உலாவப் போகலாம்!" என்றாள்.

"ஏன், இங்கே உட்கார்ந்து நாம் பேச முடியாதோ?"

"இங்கே தனிமை போதாது. ஏன், உலாவப் போவதில் உங்களுக்கு ஏதாவது தடை உண்டோ?"

"தடை என்ன இருக்கிறது? ஆனால் நாம் உலாவப் போய், அன்றைப் போல வழியில் கோவிந்தன் நம்மைச் சந்தித்தால்...?" என்று அவன் சிரித்துக்கொண்டே கேட்டான். பிறகு ஏதோ ஆழ்ந்த சிந்தனையுடன், "நான் வராமல் மறுப்பதற்குக் காரணம் இருக்கிறது, ரஜனியம்மாள்!" என்றான்.

பச்மடிக்குப் போவது பற்றி மஞ்சுவுக்கும் தனக்கும் நிகழ்ந்த சம்பாஷணையை அவன் அவளுக்குத் தெரிவித்தான்.

"நீங்கள் என்னிடம் வரப்போவதை மஞ்சு அம்மாளிடம் சொல்லிவிட்டுத்தான் வந்தீர்களோ?"

"இல்லை......"

"நீங்கள் சொல்லிவிட்டு வந்திருந்தால் நல்லது என்று எனக்குத் தோன்றுகிறது. நமக்கு மிகவும் நெருங்கியவர்களை எப்பொழுதும் எந்த விஷயத்திலும் ஏமாற்றக் கூடாது."

சேகரன் ஒன்றும் பதில் சொல்லவில்லை.

"நாம் இங்கே உட்கார்ந்து நிம்மதியாகப் பேச முடியாது அம்மா இப்பொழுது இங்கே தூங்க வந்துவிடுவாள்."

"அப்படியானால் நாம் வெளியே உலாவப் போவோம். ஒரு மணி நேரத்துக்குள் திரும்பிப் போக வேண்டும்."

அவர்கள் இருவரும் உடனே எழுந்து வெளியே புறப்பட

டார்கள். சிறையைத் தாண்டிச் சிறிது தூரம் சென்றதும் சேகரன், "இங்கே எங்காவது வயல் வெளியில் உட்கார்ந்து பேசலாம். இல்லாவிட்டால் நடப்பதிலேயே முழுப் பொழுதும் போய்விடும்!" என்றான்.

நடு வானத்தில் சந்திரன் பவனி வந்தான். சுற்றுப்புற மெங்கும் நிலவு பரந்திருந்தது. தூங்கும் குழந்தையின் பெரு மூச்சைப்போல, காற்று இடையிடையே வீசியது.

சாலைக்கு அருகே ஒரு கிணற்றுப் பக்கத்து மேடையில் அவர்கள் உட்கார்ந்தார்கள். நடந்து வரும் வரைக்கும் ரஜ னிக்கு எவ்விதக் கூச்சமும் உண்டாகவில்லை. ஆனால் அந்தக் கேள்வியை இப்பொழுது அவனிடம் எப்படி எடுப்பது என்பது அவளுக்குச் சிக்கலாக இருந்தது.

"என்ன சொல்வதற்காக என்னைக் கூப்பிட்டீர்கள்?"

"நேற்று மாலையில் உங்களுக்கு வந்த தினகரனுடைய கடிதத்தை நான் பிரித்துப் பார்த்ததைக் கவனித்தீர்களா?"

"கவனிக்காமல் என்ன? நான் வர நேரமானால் நீங்கள் எல்லாத் தபாலையும் பிரித்துப் பார்ப்பதுதான் வழக்கமாயிற்றே என்று நினைத்தேன்."

"அது சரி. ஆனால்—"

அவள் சற்றுத் தயங்கினாள். அடுத்த கணமே சமாளித்துக் கொண்டு, "கடிதத்தின் உறைமேல 'சொந்த விஷயம்' என்று எழுதியிருந்ததைப் பிரித்த பிறகுதான் கவனித்தேன். இது நான் செய்த தப்பு" என்றாள்.

"தப்பா? நீங்கள் ஏன் இப்படிப் பேசுகிறீர்கள்? நான் உங்களை முதல்முதலில சந்தித்த நாளிலிருந்து இன்று வரைக் கும் எதையாவது மறைத்து வைத்தது உண்டா?"

"அந்தக் கடிதத்தைப் படித்துங்கூட என்னால் ஒன்றுமே புரிந்துகொள்ள முடியவில்லை" என்றாள்.

"அதைப் பற்றித்தான் என்னைக் கேட்கப் போகிறீர்களா?"

"ஆமாம்; நீங்கள் சொல்லத் தடை இல்லையென்றால்......"

"இன்று சந்தர்ப்பம் நேர்ந்திருப்பதால் தெளிவாகச் சொல்லிவிடுகிறேன், ரஜனியம்மாள்! அன்றிரவு முதல் நாள் உங்களைச் சந்தித்தது முதலே உங்களிடம் எனக்கு விந்தை

யான கவர்ச்சியும் பரிவும் ஏற்பட்டுவிட்டன. உலகத்தார் சொல்கிறபடி அவற்றுக்கு ஒரு பெயரிட நான் விரும்பவில்லை. ஆனால் தினகரனிடம் அதைத் தெளிவாகச் சொன்னேன். உங்களிடம் நான் எதையும் மறைகக வேண்டியதில்லை.''

இதைச் சொன்னபோது தன் குரலில் உண்டான ஆவேசத்தை அவன் கவனித்தான். அவன் சிறிது சாந்தமாக, ''நீங்கள் நினைப்பது போலவே அது விசித்திரமான கடிதந்தான். நான் கார் ஓட்டவும் துப்பாக்கிச் சுடவும் பழகுவதை அதிலிருந்து தெரிந்துகொண் டிருப்பீர்கள்'' என்றான்.

''கொரியாச் சண்டைக்குப் போவதாக உங்களுக்கு உத்தேசமா?''

''சண்டைக்கு ஏன் போகிறேன்?''

''நீங்கள் ஜனநாயகத்தை ஆதரிப்பவர்களாகையால், எப்பொழுதாவது சண்டைக்குப் போக வேண்டியிருக்கும் என்பதற்காக, இப்பொழுதே இவையெல்லாம் கற்றுக்கொள்கிறீர்களோ?''

''தற்காப்புக்காகவாவது நாம் இவற்றைக் கற்றுக்கொள்ள வேண்டும். வெளிநாடு ஏதாவது நம்மை எதிர்த்தால் நாம் ஆட்டுமந்தைகளைப் போலச் சாகமாட்டோம், ரஜனியம்மாள். நாம் எதிரிகளை எதிர்த்து நின்றால்தான் உலகில் நம்முடைய மதிப்பு வளரும்.''

''மதிப்பும் வளரும்; நம்மிடம் அநியாயமும் செய்வார்கள்!''

''இம்மாதிரியான நெருக்கடியான காலத்தில் நீங்கள் எப்படியும் அநியாயத்தைத் தவிர்க்கவே முடியாது, ரஜனியம்மாள்!''

''அப்படியானால் நீங்கள் மக்களை ஒரு பெரிய புரட்சிக்குத் தயார் செய்யப் போகிறீர்களா?''

''கட்டாயம்!''

''அதற்கு உங்களுக்கு நிறையப் பணம் வேண்டுமே?''

''வேண்டிய பணம் கிடைக்கும். எந்த வழியிலாவது நாங்கள் பணத்தைத் திரட்டுவோம். அநியாயமாக இந்த நாட்டில் திரண்டு கிடக்கும் செல்வம் எவ்வளவோ இருக்கிறது. அவற்றையெல்லாம் நாங்கள் எங்கள் திட்டத்துக்குப் பயன் படுத்துவோம்.''

"அப்படியானால் நீங்கள் கொள்ளையடிக்கப்போகிறீர்களா?" என்று ரஜனி துணுக்குற்றுக கேட்டாள்.

அவன் பேசவே இல்லை. அவன் கைகள் மட்டும் நடுங்கின.

அவள் அவனுடைய கையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு, "இந்தக் கொள்ளையடிக்கும் திட்டத்திலே என்ன நியாயம் இருக்கிறது, சொல்லுங்கள்!" என்றாள்.

"என் பேச்சை நிதானமாகக் கேளுங்கள். புரட்சி வழி எப்பொழுதுமே பயங்கரமாகத்தான் இருக்கும். தன்னால் முடிநத அளவுக்குக் குறைவான அநியாயம் செய்வதுதான் அந்த வழியில் போகிறவன் செய்யக் கூடியது. ஆபரேஷன் செய்யும்போது என்னதான ஜாக்கிரதையாக இருந்தாலும் ரத்தப்போக்கு இருக்கத்தான் இருக்கும். பழைய உளுத்துப் போன சமூக அமைப்பை அழிக்கும்பொழுது சிறிது கடுமையும் அரக்கப்பான்மையும் வேண்டித்தான் இருக்கின்றன. அநியாய மாகக் குவிந்த செல்வத்தைத்தான் நாங்கள் பயன் படுத்துவோம்."

"ஆனால், சேகர், கொள்ளைத் தொழிலுக்கும் இதற்கும் என்ன வித்தியாசம் இருக்கிறது?"

"அவற்றின் தன்மையிலே வித்தியாசம் இல்லாமல் இருக்கலாம். ஆனால் நோக்கத்திலும் விளைவிலும் வேற்றுமை கள் இருக்கின்றன."

ரஜனி இதற்கு ஒன்றும் பதில் சொல்லவில்லை.

சேகரன் அவள் கையில் இருந்த கடிகாரத்தைப் பார்த்து விட்டு, "மணி பன்னிரண்டாகப் போகிறது. போக வேண்டியது தான்" என்றான்.

இருவரும் எழுந்து நடக்கலானார்கள்.

"உங்கள் குடும்பம் இதனால் என்னவாகும் என்று சிந்தித் தீர்களா, சேகர்?" என்று ரஜனி கேட்டாள்.

"சிந்திக்காமலா இதையெல்லாம் சொல்வேன்! நான் மஞ்சுவிடம் ஒரு நாளைக்கு எல்லாவற்றையும் விரிவாகச் சொல்லிவிடப் போகிறேன். அவளுக்குப் பிடித்தால் சரி; இல்லாவிட்டால்—"

"இல்லாவிட்டால் என்ன?"

"இல்லாவிட்டால் அவள் வீணுகத் தன் மனத்தைத் துன்புறுத்திக் கொள்ள வேண்டியதுதான். அதற்கு நான் என்ன செய்ய முடியும்? இனி இந்தப் புதிய யுகத்திலே அரசியல் ஒவ்வொரு மனிதனுடைய வாழ்க்கையையும் உருவாக்கப் போகிறது; ஆண் பெண் அடங்கிய குடும்பத்தை இயக்கப் போகிறது. இன்று 'ஓட்டுரிமை' என்ற பெயரால் அது நம் வீட்டில் புகுந்திருக்கிறது. இனி அது தன் ஆகுதியைக் கேட்க நம் வீட்டில் நெருப்புப்போல வரும். நம் நாட்டில் இனி ஒவ்வொருவரும் தமது கடமையை உணர்ந்து துணிச்சலோடு அந்தக் கடமையை ஆற்ற வேண்டும். இல்லாவிட்டால் நாடு முன்னேற்றமடையாது."

"நீங்கள் சொல்வது சரி, சேகர்! உணர்வுப்படி நடக்கும் துணிச்சல் சிலருக்குத்தான் உண்டு. உங்கள் வழி மஞ்சு அம்மாளுக்குப் பிடிக்கவில்லை என்ருல் அவளைப் பழிக்காதீர்கள்!"

"நான் ஏதுக்கு அவளைப் பழிக்கிறேன்? ஆனுல் அவளுக்காக நான் என் வழியை விடமாட்டேன். அவள் தன்னைத் தானே சமாளித்துக்கொள்ள முடியும். அதனுல்தான் நான் சிறிதும் தயக்கமின்றி இந்த வழியில் செல்லப் போகிறேன்."

"அவளிடம் உங்களுக்கு இருக்கும் அன்பு எனக்குத் தெரியும்!" இதைச் சொன்னபோது அவள் குரல் ஏனே கம்மியது.

"இந்த வழியில் நான் திரும்பியதற்காக நீங்கள் என்னைப் பழிக்க மாட்டீர்களே, ரஜனி? நீங்கள் எனக்குச் சார்பாக இருப்பதே மிகுந்த தெம்பை எனக்குத் தரும்."

இந்தப் பேச்சைக் கேட்டதும் அவளுக்கு மெய் சிலிர்த்தது.

"நான் சொல்கிறேன், சேகர்! நீங்கள் மஞ்சுவிடம் எதையும் மறைக்காதீர்கள்!"

"சில சமயம் மறைக்காமல் நடப்பதில்லை. ஆனுல் நான் அவளிடம் எதுவும் பொய் சொல்வது இல்லை."

ரஜனி தன் வீட்டு வாசலுக்கு வந்ததும், "நீங்கள் இனி எதையும் என்னிடம் மறைத்து வைக்கக் கூடாது. நான் கேட்கு முன்பே எல்லாவற்றையும் சொல்லிவிட வேண்டும்" என்ருள்.

அவன் உணர்ச்சி வேகத்தோடு அவளுடைய கையைத் தாங்கினுன். "மஞ்சு உங்கள் வரவை எதிர்பார்த்துக்கொண்

டிருப்பாள், சேகர்! எனக்கு உங்களிடம் உள்ள மதிப்பைக் குறைக்கும்படியான எந்தச் செயலையும் நீங்கள் செய்யக் கூடாது'' என்ருள் ரஜனி.

சேகரன் அவளிடம விடை பெற்று நேரே வீட்டுக்கு வந்தான்.

## 17

மஞ்சு படுக்கையில் சாய்ந்து ஏதோ ஒரு புத்தகத்தைப் படித்துகெகாண் டிருந்தாள்.

அவனைப் பார்தததுமே அவள் புத்தகத்தை வீசி எறிந்து விட்டு எழுந்து நின்ருள்.

''நான வரச சிறிது நேரமாகிவிட்டது!'' என்று சொல்லிக் கொண்டே அவன் அவளை அணுகினன்.

''நீங்கள் எங்கே போயிருந்தீர்கள்?''

''ஒரு நண்பரைப் பார்க்கப் போயிருந்தேன்; எங்கள் கம்பெனி வேலையாக!''

''நீங்கள் பொய் சொல்கிறீர்கள். இப்போது நீங்கள் ரஜனி யோடு உலாவிவிட்டு வரவில்லையா?''

''யார் சொன்னது?''

''நீங்கள் முதலில் உண்மையை ஒப்புக்கொள்ளுங்கள். பிறகு யார் சொன்னது என்பதைத் தெரிவிக்கிறேன்.''

''ஆமாம், நான் போயிருந்தேன்.''

''நீங்கள் வெளியே போனதும், நான் வேலைக்காரியை விட்டு, சரளாவைக் கூப்பிட்டு வரச் சொன்னேன். அவள் வந்ததும் உங்களைப் பற்றிப் பேசினேன்.''

''அவள் என்ன சொன்ஞள்?''

''நீங்கள் கட்டாயம் ரஜனியிடந்தான் போயிருக்கிறீர்கள் என்று சொன்ஞள். அதை நான் நம்பாமல் மறுத்தேன். கம் பெனி வேலை விஷயமாகப் போயிருக்கிருர் என்றேன்.''

''அப்புறம்?''

'''இது உன் வீண் பிரமை; பந்தயம் போடுகிருயா?' என்று அவள் கேட்டாள்.''

"என்ன பந்தயம்?"

"நான் தோற்ருல் அவளோடு பச்மடிக்குப் போகவேண்டும் என்றும், அவள் தோற்ருல என்னிடமும் உங்களிடமும் மன்னிப்புக் கேட்க வேண்டும் என்றும் பந்தயம் போட்டுக் கொண்டோம்."

"பிறகு என்ன நடந்தது?"

"அவள் தன் வேலைக்காரனை ரஜனியின் வீட்டுக்கு அனுப்பினுள். அங்கே விசாரித்ததில், நீங்கள் அவளோடு உலாவப் போயிருப்பதாகத் தெரிந்தது!"

சேகரன் ஒன்றும் பேசத் தோன்ருமல் நின்ருன்.

அவள் அவனைப் பார்த்துச் சிரித்தாள். அப்படிப்பட்ட கடுமையான பயங்கரச் சிரிப்பை அவளுடைய அழகிய முகத்தில் இன்று வரைக்கும் அவன் பார்த்ததில்லை.

"இனி நான் பச்மடிக்குப் போனதும் நீங்கள் ஒரேயடியாக ரஜனியின் வீட்டிலேயே தங்கிவிடலாம்!" என்ருள்.

"மஞ்சு, மஞ்சு, நீ என்ன இப்படிப் பேசுகிருயே! நான் உன்னிடம் சத்தியமாகச் சொல்கிறேன்; ரஜனியிடம், நீ நினைப்பது போன்ற எந்தத் தொடர்பும் எனக்கு இல்லை! நீ என்னைத் துளியும் நம்ப மாட்டாயா? உன்னை இனி நான் எப்படி நம்ப வைப்பது?"

அவனுடைய தீனக்குரலைக் கேட்டு அவள் நெஞ்சம் சிறிது உருகியது. "போகும்போதே நீங்கள் என்னிடம் உண்மையைச் சொல்லியிருந்தால், நான் உங்களை நம்பியிருப்பேன். உங்கள் உள்ளத்தில் பாவம் இல்லையென்ருல், நீங்கள் ஏன் என்னிடம் அப்பட்டமான பொய் பேசினீர்கள்?" என்ருள்.

அவனுல் வாயையே திறக்க முடியவில்லை. மஞ்சுவை ஏமாற்றுகிர்கள் என்று ரஜனி சொன்னது அவனுக்கு ஞாபகம் வந்தது. அவன் வேறு புகலற்றவனுய் அவள் முன்னுல் கையை விரித்தான்.

உடனே மஞ்சு பின்னுக்கு நகர்ந்தாள். "உங்களோடு இனி எந்த விதமான விளையாட்டும் வேண்டாம்! என் வாழ்க்கையில் இன்பமான நாட்கள் யாவும் இன்ருேடு முடிந்து போயின!" என்ருள்.

அவள் படுக்கையில் தொப்பென்று சாய்ந்து விக்கி விக்கி அழலானாள். அவளுடைய அந்த நிலை சேகரனுடைய நெஞ்சைக் கலங்க அடித்தது.

சரளா பந்தயத்தில் வென்றுவிட்டாள்; ஆனால் அந்த வெற்றியை அவளால் கொண்டாட முடியவில்லை.

மறுநாள் காலையிலேயே அவள் கோவிந்தனுக்குக் கடிதம் எழுதினாள். ஐந்தாறு நாளில் தான் பச்மடிக்கு வருவதாகவும், கூடவே மஞ்சுவை அழைத்து வருவதாகவும் தெரிவித்தாள். அடுத்த தபாலிலேயே அவளுக்குப் பதில் வந்தது: "நாகபுரியில் மில் தொழிலாளிகள் வேலைநிறுத்தம் செய்யப் போவதாகத் தெரிவதால் நானே அங்கு வருகிறேன்." இதனால் மஞ்சு பச்மடிக்குப் போவது நின்றுவிட்டது.

இதற்கு நேர்மாறாக, சேகரனுக்கு அன்றுமுதல் ஒரு பயம் தோன்றிற்று. அன்றிரவு நடந்த சம்பவத்திலிருந்து, மஞ்சு உண்மையாகவே சரளாவோடு பச்மடிக்குப் போய்விடுவாளோ என்று அவன் நினைத்தான். அந்த ஒரு சம்பவம் அவனுடைய மண வாழ்க்கையில் இருந்த நேர்மை, இனிமை, அழகு ஆகிய அனைத்தையும் அழித்துவிட்டது. வீணையின் தந்தி அறுந்ததும் அதன் அபஸ்வரத்தைக் கேட்கச் சகிப்பதில்லை; கண்ணாடிக் கிண்ணம் உடைந்ததும் அதன் கோர வடிவத்தைக் காணச் சகிப்பதில்லை. அவனுடைய குடும்பத்தின் நிலையும் இப்பொழுது இப்படித்தான் இருந்தது.

அவர்கள் இருவரும் தனித்தனியே வருத்தப்பட்டார்கள்; தனித்தனியே கோபத்துடன் இருந்தார்கள். சேகரன் தன்னை ஏமாற்றிய சம்பவம், மஞ்சுவின் உள்ளத்தைத் தேள் கடி போலக் கொட்டியது. தோழியுடன் சேர்ந்து அவள் தன்னை அவமதிப்பதாக எண்ணிச் சேகரன் மனம் நைந்துபோனான்.

தினமும் பகலிலும் இரவிலும் ஆபீசிலிருந்து வீட்டுக்கு வந்ததும் அவன் அன்று சந்தித்த பலரைப் பற்றியும், உலக விஷயங்களைப் பற்றியும் அவளிடம் வேடிக்கையாகப் பேசுவதுண்டு. ஆனால் இந்தச் சம்பவம் நேர்ந்த பிறகு, ஆபீசைப் பற்றி அவன் ஒரு வார்த்தைகூடப் பேச முடியாமற் போயிற்று.

மறுநாள் காலையில் ஆபீசுக்குப் போனதும் நிகழ்ந்த செய்திகள் அனைத்தையும் அவன் ரஜனியிடம் சொன்னான்.

அவள் சிறிது நேரம் ஒன்றுமே பேசவில்லை. பிறகு, "சரளா இதையெல்லாம் வேண்டுமென்றே செய்திருக்கிறாள் என்று உங்களுக்குத் தோன்றவில்லையா?" என்றாள்.

"அதுதான் வெட்ட வெளிச்சமாகத் தெரிகிறதே. ஆனால் மஞ்சுவின் மனத்தைக் கலக்கி அவளுக்கு நம்மிடம் பகை உண்டாகச் செய்யும்படி, நாம் சரளாவுக்கு என்ன கெடுதல் செய்தோம்?"

"நீங்களும் நானும் அன்போடு பழகுவது சரளாவுக்குப் பொறுக்கவில்லை; அதனால்தான் அவள் இந்தத் தீய செயலை ஆரம்பித்திருக்கிறாள்" என்று ரஜனி பதில் சொல்ல நினைத்தாள்; ஆனால், அவள் தன்னை அடக்கிக்கொண்டாள்.

அவளுக்கு ஒரு சந்தேகம் பிறந்தது: 'நாமும் சேகரனும் பழகுவது சரளாவுக்கு ஏன் பிடிக்கவில்லை? மஞ்சுவின் நன்மையைப் பாதுகாக்கும் எண்ணம் ஒன்றுதான் இதற்குக் காரணமா? அல்லது வேறு காரணம் ஏதாவது இருக்குமா? ஒருவேளை சேகரனிடம் சரளாவுக்கு — கண்டதும் காதல் என்கிறார்களே, அப்படி ஏதாவது இருக்குமோ? அதனால்தான் அவள் என்மீது வீண்பழி சுமத்தி மஞ்சுவின் மனத்தைக் கலக்குகிறாளோ?' இப்படியெல்லாம் அவள் எண்ணினாள். ஆயினும் சேகரனிடம் அதைச் சொல்லும் துணிவு அவளுக்கு இல்லை.

"இதைச் சரிப்படுத்துவதற்கு என்ன வழி இருக்கிறது, சேகர்?" என்று அவள் கேட்டாள்.

"எனக்கு ஒன்றுமே தோன்றவில்லை."

"நீங்கள் முழுச் செய்தியையும் தெளிவாக மஞ்சு அம்மாளிடம் சொல்லிவிடலாமே?"

"எல்லாவற்றையுமே அவளிடம் சொல்லிவிடுவதாகத்தான் நேற்று இரவு நான் உங்களிடம் சொன்னேன். ஆனால் இப்போது அவளிடம் இதைச் சொல்வது பொருத்தமா என்று தயங்குகிறேன்."

"ஏன்? சொன்னால் என்ன?"

"நான் அவளிடம் எல்லாவற்றையும் மனம் விட்டுச் சொன்ன பிறகு, அவள் நாளைக்குச் சரளாவிடம அவ்வளவை யும் பேசினால் என்ன ஆகும்? அவளுக்கு என்னிடம் இப்போது துளியும் நம்பிக்கை இல்லை. இந்த நிலையில நான் அவளிடம் எதையும் பேச முடியாது."

ரஜனி மௌனமாக இருந்தாள். ஒரு கணம் பொறுத்து அவள் மென்று விழுங்கிக்கொண்டே, "நானே அவளிடம் நேரே போய்ப் பேசி, அவளுடைய சந்தேகத்தைப் போக்க முயன்றால் என்ன?" என்றாள்.

"அதனால் அவளுடைய சந்தேகம் போய்விடுமா? அவள் உங்களை அவமானப்படுத்தவும் பின்வாங்க மாட்டாள். சரளா விடம் அவளுக்குச் சிறிதாவது நம்பிக்கை குறைந்தால்தான், நாம் இனி அவளோடு தாராளமாகப் பழக முடியும்."

"அப்படியானால் இப்பொழுது என்ன செய்வது?"

"அதற்காக இவ்வளவு கலங்க வேண்டிய அவசியமே இல்லை. எனக்கு இதனால் ஒரே ஒரு வருத்தந்தான்: வீடு என்று தலை சாய்ப்பதற்கு எனக்கு உரிமையான ஓர் இடம், நிம்மதியான ஒரு புகல் இருந்ததே, அதைச் சரளாவின் இந்தச் செயலால் நான் இழந்துவிட்டேன்."

அவன் குரல் தழுதழுத்தது. அவனுடைய நெற்றி நரம்பு சிந்தனை மிகுதியினால் புடைத்துக்கொண்டது. அவன் சற்றுக் கழித்து, "ஆனால் இப்படி நடந்ததும் ஒரு வகையில் நல்லது தான். இல்லாவிட்டால் மஞ்சுவின் பாசம் என்னைக் கணந் தோறும் மேலே அடியெடுத்து வைக்கவொட்டாமல் கலக்கி யிருக்கும்" என்றான்.

அவன் இப்படிப் பேசியபோது குருசரணன் ஆபீசுக் குள்ளே வந்தான்.

சேகரன் எழுந்து நின்று, "வாருங்கள் ஸர்தார் ஸாஹப்!" என்று அவனை வரவேற்றான். பிறகு ரஜனிக்கு அவனை அறி முகப்படுத்தினான்.

"ஸர்தார்ஜி, நம்முடைய துப்பாக்கிப் பயிற்சியைக் காண் பதற்காக இவரை ஒரு நாளைக்கு உங்கள் வீட்டுக்கு அழைத்து வரப்போகிறேன்" என்று சேகரன் சொன்னதுமே குருசரணன்

மையிட்ட தன் கண்களைச் சிறிது விரித்து அவனைப் பார்த்தான். உடனே சிரித்துக்கொண்டு, "கட்டாயம் அழைத்து வாருங்கள். பெண்களும் இனிமேல் தற்காப்புக் கலையைக் கற்றுக்கொள்ள வேண்டும். பெண்கள் துப்பாக்கிச் சுடப் பழகிக்கொண்டால் குண்டர்கள் அவர்களின் வழிக்கு வரவே துணியமாட்டார்கள்" என்றான்.

அவனுடைய அந்த வெள்ளை வெளேரென்ற பெரிய பற்களைக் கண்டதும், காட்டுவிலங்குகளின் உறுதியான, பளபளப்பான பற்களின் நினைவுதான் ரஜனிக்கு உண்டாயிற்று.

அதற்குப் பிறகு அவர்கள் இருவரும் அடுத்த அறைக்குப் போய் நீண்ட நேரம் என்ன என்னவோ தமக்குள் பேசிக்கொண்டு இருந்தார்கள்.

ரஜனியோ முதல்நாள் இரவு நடந்த சம்பவத்தைப் பற்றித் தனக்குள் ஆலோசிக்கலானாள்.

அந்த ஒரே இரவு அவளையும் சேகரனையும் மிகவும் நெருங்கியவர்களாக்கியது. அவர்களுக்கு இடையில் இனி எந்த விதமான கூச்சமும் வேற்றுமையும் இருக்கவில்லை. அவர்களுடைய கொள்கைகள் வேறுபட்டவை; பண்புகளும் வெவ்வேறானவை. ஆனால் அவர்களுடைய உள்ளங்கள் ஒன்றிவிட்டன; அந்தத் தொடர்பு இருவருக்கும் நன்மை தருவதாயிற்று.

ஐந்து மாதங்களுக்கு முன்னால் கோவிந்தனுடைய வீட்டில் அவர்கள் இருவரும் முதல் முதலில் சந்தித்தபோது, 'சேகரனோடு நமக்குத் தொடர்பு ஏற்பட்டால் நமது வாழ்க்கை எப்படி மாறிவிடுமோ?' என்று அவள் சந்தேகப்பட்டாள். அதனோடு, அவன் தன்னிடம் சிறிது எல்லை மீறி நடந்துகொண்டால் தன் மனத்தை அடக்கி வைத்துக்கொள்ள முடியுமா என்றும் அவள் பயப்பட்டாள். ஆனால், முந்திய இரவு அவள் சற்றுக் குறிப்பாகப் பேசியவுடனே அவன் அவளுடைய கையைச் சட்டென்று விட்டுவிட்டான். அதிலிருந்து அவனுடைய பண்பாடும் பெருந்தன்மையும் புலனடக்கமும் அவளுக்குப் புலப்பட்டன.

ஆனால் அவன் அவளுடைய கையைச் சடக்கென்று விட்டு விட்டதனால் உண்மையில் அவளுக்கு இன்பம் உண்டாயிற்றா?

அவன் அவளுடைய கையைத் தாங்கி நின்றபோது பயத்தி னலும் ஆவலினலும் அவள் நடுங்கினள். ரகுராமன் எத் தனையோ தடவை அவள் கையைப் பிடித்திருக்கிருன். ஆனல் அந்தத் தனிமையிலே, இன்பமூட்டும் இந்தப் பயமும் அதிசய மான இந்த ஆவலும் அவளுக்கு உண்டானதே இல்லை. சேகரன் அவளுடைய கையைத் தாங்கியதுமே சுற்றுப்புறத்து அந்த அழகிய நிலவில் அவளுடைய கனவு மலர்கள் கும் மென்று பூக்கலாயின. அமைதியான அந்த இரவிலே அவள் மெய் சிலிர்த்தது. அவள் சொன்னவுடனே அவன் கையை விட்டான். அப்போது அவளுடைய பயம் நீங்கியது. ஆனல் உள்ளம் எதையோ இழந்தாற்போல் வருந்தியது. சுற்றுப் புறத்தில் பரந்திருக்கும் நிலவின் எழிலும் அமைதியான அவ் விரவில் தன்னுடைய உள்ளத்தில் மிதந்த கனவுகளும் மறைந்துபோனதாக அவளுக்குத் தோன்றிற்று. அவன் கண் ணேடு தன் கண்ணைப் பிணைக்க முடியாமல் அவள் தரையை நோக்கினள். அவளுடைய கண் நீரைக் கக்கியது. சுற்றுப் புறத்து இயற்கைக் காட்சி அரைநொடியிலே இருண்டு விட்டது.

அந்தக் கணம், அந்த அநுபவம், அவளுக்கு மின்னல் வீச் சைப் போல் இருந்தது.

மின்னல் வீச்சிலுள்ள வேகமும் எல்லை கடந்த தன்மையும் அந்த அநுபவத்தில் இருந்தன. ஆனல் அதில் உள்ள எரிக்கும் தன்மை இல்லை. இனிமையும் வெறியும் கலந்த அழகிய ஒளி வீசிய கணம் அது! அதில் எரிப்பு இல்லை என்றுதான் எப்படிச் சொல்வது? அவன் அந்தக் கையை விட்டவுடனேயே அவள் மனம் எரிந்தது. அன்றிரவு முழுவதும் திருப்தியுருத அந்த உணர்ச்சி அவளை வாட்டி எடுத்தது. மறுநாளுங்கூட அவ ளுடைய கண் எரிந்தது. இந்த அநுபவத்தில் உள்ள எரிச் சலும் மின்னலின் எரிச்சல்தான். ஆனல் அவள் அதைப் பின்னல் உணர்ந்துகொண்டாள்.

ரகுராமனுக்கு அவளிடம் அன்பு இருந்தது என்பது உண்மை. அந்த அன்பில் மடுவைப் போன்ற ஆழம் இருந்தது. இந்த வேகம், இந்த அதிருப்தி, இந்த வெறி அதில் இல்லை.

வாழ்வில் புத்தம் புதிதான, வர்ணிப்பதற்கு அரிய இந்த அநுபவத்தை அந்த நடுங்கும் ஒரு கணம் அவனுடைய ஸ்பரிசத்தினுல் அவளுக்குக் கொடுத்ததே, உணர்ச்சியின் இந்தப் புது உலகை அவள் புறக்கணித்தது தவறுதானு? சாவைக் கொடுத்தும் பெறவேண்டிய இந்தத் தெய்விக இன்பத்தை அவள் ஏன் புறக்கணித்தாள்?

அதைப் புறக்கணிப்பதைத் தவிர அவளுக்கு வேறு வழி இல்லை; வேறு போக்கு இல்லை. அந்த அநுபவத்தோடு ஒன்றிப்போகும் ஆசையை அவள் அந்த நிமிஷத்தில் அடக்காமல் இருந்திருந்தால் அதனுல் அவனுடைய வாழ்க்கையும் சரி, அவளுடைய வாழ்க்கையும் சரி – இரண்டுமே சூதும் வஞ்சனையும் நிரம்பியதாகிவிடும். ஏனென்றால் அந்த இன்பத்தில் ஆரம்பத்திலிருந்தே வஞ்சனை விஷம் கலந்திருந்தது. வஞ்சனை இல்லாமல் அந்த அநுபவத்தின் சுவையை அவர்கள் நுகர முடியாது. வஞ்சனையை அடிப்படையாகக் கொண்ட வாழ்க்கை வாழ்வதைவிட, சாவதில் என்ன கெடுதி இருக்கிறது?

அவன் மணமானவன்; அவளும் தன்னை மணமானவளாகக் கருதுகிறவள். உயிரோடு இருப்பவர்களை நாம் ஏமாற்றினுல் அந்தப் பாவத்திற்கு அவர்கள் எந்த விதத்திலாவது நமக்குத் தண்டனை விதிப்பார்கள். செத்தவர்களையா ஏமாற்றுவது! அவர்களுடைய ஆத்மா வருந்துவதை நாம் ஒருபோதும் அறிய முடியாது. அப்படிப்பட்டவரிடமா நம்பிக்கைத் துரோகம் செய்வது? அந்த நம்பிக்கைத் துரோகத்தை அடிப்படையாகக் கொண்டு வாழ்வு வாழ்வதைவிடச் செத்துப் போவதில் என்ன கெடுதி இருக்கிறது?

பயம் கவ்விய வாழ்க்கை என்பது அடியோடு வாழ்க்கையே அன்று. வஞ்சனை என்று சொன்னுல் அதில் பயம் கட்டாயம் வந்தே தீரும். அவளுடைய தந்தை எத்தனையோ தரம் அவளிடம் சொல்லி இருக்கிருர். 'பாவமற்றவன் பயமற்றவனுக இருப்பான். பயமற்று வாழ்வது மனத்தின் ஆரோக்கியத்தையும் பாவமொழிந்து இருப்பதன் நன்மையையும் காட்டுகிறது' என்று அவர் சொல்லியிருக்கிருர். வாழ்வில் இந்த ஆரோக்கியம், இந்த நன்மை போய்விட்ட பிறகு பயத்

தோடு பாவ வாழ்க்கை வாழ்வதிலே என்ன சுவை இருக்கிறது?

சேகரனுக்கு அவளிடம் அன்பு இருப்பது இப்போது நன்ருக நிரூபணமாகிவிட்டது. ஆனல் அந்த அன்பில் ஆசை வைத்து அவள் மஞ்சுவின் வாழ்வைத் துன்பமயமாக்கலாமா? அவளுடைய குடித்தனத்தைத் தீயிட்டுப் பொசுக்கலாமா? ஒரு பெண் மற்ெருரு பெண்ணின் குடும்பத்தை மண்ணுக்குவதா? அப்படியானல் பெண்களின் முன்னேற்றத்தைப் பற்றிய பேச்சு ஏதுக்கு? அவளுடைய படிப்புக்கும் பண்பாட்டிற்கும் பின் என்னதான் பயன் இருக்கிறது?

தன்னிடம் சேகரனுக்கு இருக்கும் அன்பின் உருவத்தை அவள் இன்னமும் சரியாகத் தெரிந்துகொள்ளவில்லை. மஞ்சுவிடம் அவனுக்கு இருக்கும் அன்பைப்பற்றி அவளுக்கு நன்ருகத் தெரியும். அந்த அன்பின் தீவிரம் இன்னமும் அணுவளவும் குறையவில்லை. முந்திய இரவும் இன்றும் மஞ்சுவைப் பற்றிப் பேசியபொழுது அவன் குரலில் இருந்த நடுக்கமும், கண்ணில் ததும்பிய நீரும் எதைத் தெரிவிக்கின்றன? அந்த அன்பைச் சிதைப்பதற்கு ரஜனிக்கு என்ன உரிமை இருக்கிறது?

இன்று மஞ்சுவிடம் அவனுக்கு அலுப்பு ஏற்பட்டிருக்கலாம். அன்பு எவ்வளவுதான் எல்லையற்றும் ஆழ்ந்தும் இருந்தாலும் அதற்குத் தேய்பிறை ஒன்று உண்டு. இந்தத் தேய்பிறையையா அவள் பயன்படுத்திக் கொள்வது? சேச்சே! அப்படிச் செய்தால் ஆத்மா, வாழ்க்கை ஆகியவற்றிலே நேர்மையும் தூய்மையும் உயர்வும் எங்கிருந்து வரும்?

அவளுடைய தகப்பனர் அவளிடம் எப்பொழுதும் ஒரு விஷயம் சொல்வது உண்டு. "வேட்கைகள் ஒருபொழுதும் திருப்தி அடைவது இல்லை, அம்மா! அவற்றின் வேகத்தை நம்மால் எட்ட முடியாது. அவற்றின் பின்னல் ஓடும் மனமாயினும் சரி, ஆத்மாவாயினும் சரி, அது கடைசியில் கெட்டுப்போகும். நேர்மையான உன்னதமான விடுதலை பெற்ற ஆத்மா இருக்கிறதே, அந்த ஆத்மாவிலிருந்து சந்திர கிரணம் போன்ற ஆனந்த ஒளி வீசும். சிவபெருமானுடைய விஷ

எரிச்சலைத் தண்மதியின் கதிர்கள் தணித்தது போல, வேட்கை களினால் ஏற்படும் எரிச்சலை அந்த ஆத்தும ஆனந்தந்தான் தணிக்க வல்லது!'' என்று அவர் சொல்வார்.

சேகரன் இன்று மஞ்சுவிடம் கோபமாக இருக்கிறான்; அவளைக் கண்டாலே அவனுக்கு வெறுப்பாக இருக்கிறது. அதனாலும் அவன் ரஜனியின் பக்கம் திரும்பி இருக்கலாம். அவனுக்கு அவளிடம் இருக்கும் அன்பின் கரையோரத்து மோகம் எவ்வளவு இருக்கிறது? தேவையினால் ஏற்பட்ட கவர்ச்சி எவ்வளவு இருக்கிறது? மனோதர்மத்தின் ஒற்றுமை எவ்வளவு பயன் தந்திருக்கிறது? – என்பவையெல்லாம் இன்ன மும் ரஜனிக்குச் சரியாகத் தெரியவில்லை. கடல் பொங்கும் போது அழகிய அலைவீச்சைக் கண்டு மனிதன் அதில் நீச்ச லடிக்க விரும்பி இறங்குகிறான். உடனே தண்ணீர் வடிய ஆரம் பித்து, அவன் மூழ்கிப் போகும்படியான நிலை வந்துவிடு கிறது. அன்பாகிய அலையும் அதைப்போலத்தானே? மஞ்சு விடம் கோபங்கொண்டு இன்று அவன் இவளிடம் திரும்பி யிருக்கிறான். அந்தக் கோபம் குறைந்த பிறகு இவளிடம் இன் றைப்போலவே அவனுடைய உணர்ச்சி வேகம் நிலைத்திருக் குமா? அப்படியானால் வஞ்சனை நிரம்பிய அந்த மோகத்துக்கு இவள் ஏன் இரையாக வேண்டும்?

அந்த மோகத்துக்கு இவள் இரையாகாமலேயே வாழ லாமே. குடும்பத் தொந்தரவு என்னும் சுழலில் சிக்கி அவ னுடைய மதி மயங்கிவிட்டது. அந்தச் சமயத்தில் தினகரன் அவனைச் சந்தித்தான். இல்லாவிட்டால் இப்பொழுது அவன் திரும்பியிருக்கும் கடுமையான பாதையில் அவன் கால் வைத்திருக்கவே மாட்டான். உணர்ச்சி வேகந்தான் அவனை இப்படி ஆக்கியது. அவனுடைய நோக்கம் தூயதாக இருக்க லாம். புரட்சியைப் பற்றிய அவனுடைய கொள்கைகள் சரி யாக இருக்கலாம். ஆனால் அந்தப் புரட்சியை உண்டாக்க அவன் இறங்கியிருக்கும் வழி தவறானது. இந்தத் தவறு அவனுக்குத் தெரியும்போது தெரியட்டும். இன்று துன்பத் தினால் கலங்கிய அவனுடைய பயங்கொள்ளி மனத்துக்கு இவ ளுடைய உறவு – உயிரளிக்கும் இவளுடைய அன்பு – தேவை.

மஞ்சு அவனைப் புறக்கணிக்காமல் அவனுடைய வாழ்வில் இந்த நெருக்கடியான சந்தர்ப்பத்தில் அவனிடம் வீண்சந்தேகம் கொள்ளாமல் இருந்திருந்தால் அவனுக்கு இந்த உறவும் அன்பும் தேவையே இல்லாது இருந்திருக்கும். ஆனால் மஞ்சு அவனை விரட்டினாள். அவன் இவளிடம் வந்தான். அவனுடைய முறிந்த மனத்தை இவள் ஏமாற்றாமல் உறுதியாக ஒட்டவைக்க வேண்டும்.

ஆனால் அவனோடு இவள் மேன்மேலும் நெருங்கிப் பழக வேண்டி இருக்குமே; அது காதலாக முடியாமல் இருக்கும் என்று எப்படிச் சொல்ல முடியும்? அடக்கி வைத்திருக்கும் உணர்ச்சிகள், சற்று அஜாக்கிரதையாக இருக்கும் ஒரு கணத்திலே எல்லை மீறிப் போகமாட்டா என்று எப்படிச் சொல்ல முடியும்? மஞ்சுவின் அழகிலும் குணத்திலும் ஈடுபட்டிருக்கும் அவனுக்கு இன்று இவளிடம் அவ்வளவாக மோகம் இல்லாமலும் இருக்கலாம். அதனால்தானே அவன் முந்திய இரவு இவளுடைய கையைச் சட்டென்று விட்டுவிட்டான்! ஆனால் மஞ்சுவிடம் இன்றைப்போலவே அவனுக்குச் சந்தேக எண்ணம் நிலைத்திருக்குமானால், இந்த மோகம் ஒரு நாள் ஏன் பொங்கி வரக்கூடாது? அப்பொழுது அந்த மோகத்தின் முன்னால், உணர்ச்சி வேகத்தின் முன்னால், வலுவான கவர்ச்சியின் முன்னால், இவள் தன்னைக் கட்டுப்படுத்திக்கொள்ள முடியுமா?

இந்தச் சந்தேகம் யாவும் ரஜனிக்குத் தோன்றியவுடனே அவளுக்குத் தூக்கி வாரிப் போட்டது. அவன் புலனடக்கம் உள்ளவனாக இருந்தமையால் அவள் இதுவரைக்கும் தன்னை அடக்கிக்கொள்ள முடிந்தது. ஆனால் அவன் ஒரு கணத்தில் மனத்தை நெகிழவிட்டு அதே ஆத்திரத்தில் ஆவேசத்தோடு அவள் கையைப் பிடித்தானானால், அந்தக் கணமே அவளுடைய அடக்கமெல்லாம் பஞ்சாகப் பறக்கும். அவளுடைய மனமும் உடலும் அவன் வசமாகிவிடும். இது அவளுக்குத் தெரியும்.

சேகரன் மணமாகாதவனாக இருந்து அவளும் ரகுராமனுக்கு வாக்குறுதி கொடுக்காமல் இருந்திருந்தால், இந்தக் காதல் நிறைவேறுவதில் ஒரு தீமையும் இல்லை; எவ்வித வேறுபாடும் இல்லை. ஆனால் இப்போது அவனும் அவளும் இருக்

கும் நிலையில் அந்தச் செய்தி நடக்காது. அதை அவள் நினைப்பது கூடத் தகாது.

இந்த உணர்வு தோன்றியதும் அவளுக்கு வேறோர் எண்ணம் உண்டாயிற்று. 'தங்கள் காதலை நிறைவேற்றிக்கொள்வது மனிதர்களுடைய இயல்பான உரிமை. அந்த உரிமையை நுகர்வதிலதான் ஆண் பெண்களின் வாழ்க்கை நிறைவைப் பெறுகிறது. அந்த உரிமையை நாம் இழப்பதா? என் வாழ்க்கை, என் பெண்மை பாழாக வேண்டும் என்பதுதான் விதியின் விருப்பமா?

'ஆனால் வெறும் காதல் நிறைவில்தானா பெண்மையின் வெற்றி அடங்கி இருக்கிறது? தன் காதலனுக்கு உடலை அர்ப்பிப்பதைத் தவிர, பெண்ணின் காதல் நிறைவேறுவதற்கு வேறு வழியே இல்லையா? ஆண்டவனே, நீ சாவை வென்றாய்! மிருத்யுஞ்சயன் ஆனாய். ஆயினும் காமவேளை வெல்ல உன்னாலும் முடியவில்லை. அவனுடைய தொந்தரவு பொறுக்காமல் அலுத்துக்கொண்டு அந்தக் கோபத்தில் நீ அவனை எரித்து அனங்கனாக்கினாய். அவன் உடலற்றவன் ஆயினும் மனத்தில் பிறந்து மனத்திலே உலவுகிறவனாயினும் காமம் நிறைவேறுவது முழுக்க முழுக்க உடலைப் பொறுத்துத்தான் இருக்கிறது. மனிதன் தனது கற்பனை வலிமையினால் காமனுக்கு மிகவும் உயர்ந்த வடிவத்தைக் கொடுத்துக் காதலை உண்டாக்கினான். ஆனால் காமனைப் போலவே அந்த உன்னதமான தெய்விகக் காதலும் உடலைக் கொண்டே நிறைவை எய்துகிறது.

'காதல் நிறைவேறும் இந்த இன்பத்தை நான் என் வாழ்வில் ஒருபொழுதும் அநுபவிக்கக்கூடாது என்பது விதிபோலும்!'

இப்படி எண்ணியவுடனே தன் பாழான வாழ்க்கை அவளுக்குப் பயங்கரமாகத் தோன்றிற்று. அவள் நெஞ்சத்தில் துயரம் குடிகொண்டது.

அதே சமயத்தில் சேகரன் அறைக்குள்ளே அவளருகில் வந்து நின்றான். "அடுத்த வாரம் நான் எங்காவது இரண்டொரு நாள் போகவேண்டி இருக்கும், ரஜனி!" என்றான்.

"எங்கே?" என்று அவள் திகைத்துக் கேட்டாள். தன் துயரம் முழுவதையும் அவள் அந்தக் கணமே மறந்தாள்.

"நான் போகும்போது அதை உங்களுக்குச் சொல்கிறேன். நான் போன பிறகு ரகசியத்தை வெளியிடாமல் ஜாக்கிரதை யாக நீங்கள் எல்லாவற்றையும் பார்த்துக்கொள்ள வேண்டும். மஞ்சுவிடங்கூட எதையும் சொல்லக் கூடாது. இப்பொழுது நான் அவளிடம் எதையும் சொல்லும் நிலையில் இல்லை."

இதைக் கேட்டதும் அவள் ஒரு கணம் பிரமித்து நின்றாள்.

## 18

ரஜனி அடுத்த கணமே சமாளித்துக் கொண்டாள். "சேகர், நீங்கள் இன்னமும் சிந்தனை செய்து பாருங்கள்" என்றாள்.

"சிந்தனை செய்யும் சமயம் போய்விட்டது, ரஜனி! நான் உறுதிமொழி கொடுத்துவிட்டேன்."

"ஆனால் இதில் ஏதாவது ஆபத்து இருப்பதாக உங்களுக் குத் தோன்றுகிறதா?"

"ஆபத்து என்ன இருக்கப் போகிறது? தினகரன் இன்று வரைக்கும் மிகவும் சாமர்த்தியமாகப் பேசியிருக்கிறான்; போலீ சாருக்கு அவனிடம் துளியும் சந்தேகம் வரவில்லை. சாவு பக் கத்தில் வந்துவிட்டது என்று தெரிவதனாலே மனிதன் இன்ஷூ ரன்ஸ் செய்துகொள்வதில்லை; ஏதாவது ஆபத்து நேரக்கூடும், அதற்குத் தக்க வழி செய்ய வேண்டும் என்றுதான் இனஷ்யூ ரன்ஸ் செய்து கொள்கிறான். அதுபோலத்தான் நீங்கள் எல்லா விஷயத்தையும் கவனித்துக்கொள்ள வேண்டும்" என்று கூறி, அவன் சிரித்தான்.

ரஜனி ஒன்றுமே பேசவில்லை. ஆனால் அன்று வீடு திரும் பியபோது, 'சேகரனை இந்த வழியிலிருந்து திருப்ப ஒன்றும் உபாயமே இல்லையா?' என்று அவள் சிந்தித்தபடியே இருந்தாள்.

அன்று பிற்பகலில் சேகரன் வழக்கம்போல வேலைக்குப் போனபொழுது, மணியம் அவனிடம் ஒரு கடிதத்தைக் கொடுத் தார். அது கோவிந்தன் மணியத்துக்கு எழுதியிருந்த கடிதம். ஆயினும் அந்தக் கடிதம் சேகரனை எச்சரிப்பதாக இருந்தது.

கோவிந்தன் எழுதியிருந்தார்:

அன்புள்ள மணியம்,

இன்று வந்த பத்திரிகையில், ஆலேக்குள்ளே வேலே நிறுத்தத்தைப் பற்றி நீங்கள் எழுதியிருந்த தலேயங்கத்தைப் படித்தேன். அது எனக்கு மிகவும் திருப்திகரமாக இருந்தது. ஆலேத் தொழிலாளர் சங்கத்தின் அநுமதியைப் பெருமல் திடீரென்று ஆலேக்குள்ளே அமைதியாக உட்கார்ந்து தொழிலாளிகள் வேலேநிறுத்தம் செய்தது கட்டுப்பாட்டை மீறியதாகும் என்று நீங்கள் எழுதியது பொருத்தமானது. தொழிலாளர் இயக்கத்தைப்பற்றி இனி நீங்கள் இந்தக் கொள்கையையே கடைப்பிடிப்பீர்கள் என்று எதிர்பார்க்கிறேன்.

இப்போதைய குழப்பமான நாட்டு நிலேயில் வேலேநிறுத்தம் செய்வது பொது மக்களின் அமைதிக்குக் கேடு விளேவிப்பதாகும். தொழிலாளிகளுக்குப் போன வருஷந்தான் அதிகப் பஞ்சப்படி கொடுத்திருக்கிறது. அது கொடுத்து இன்னும் ஒரு வருஷங்கூட ஆகவில்லே. அதற்குள் அவர்கள் சம்பள உயர்வுக்காக இயக்கம் தொடங்குவது சரியன்று.

ஆகையால் நீங்கள் முழுதும் ஆலோசிக்காமல் இந்தப் பிரச்னேயைப்பற்றித் தீர்மானம் செய்ய மாட்டீர்கள் என்றும், எந்தக் கட்சியிலும் அநாவசியமாகச் சேர மாட்டீர்கள் என்றும் நம்புகிறேன்.

இன்னும் நாலேந்து நாளில் அங்கு வருகிறேன். நான் வந்ததும் ஆலோசித்து இந்தப் பிரச்னேயைப் பற்றிய நமது கொள்கைகளேத் தீர்மானிப்போம்.

தங்கள்—கோவிந்தன்.

இந்தக் கடிதத்தைப் படித்ததும் கோவிந்தன் இப்படி மறைமுகமாக உத்தரவு போட்டதைக் கண்டு சேகரனுக்குக் கோபம் வந்தது. ஐந்து நாளேக்கு முன்னுல் நாகபுரியில் ஒரு துணி மில் தொழிலாளிகள், தொழிலாளர் சங்கத்தின் அநுமதியைக் கேட்காமலே திடீரென்று ஆலேக்குள் அமைதியாக அமர்ந்து வேலே நிறுத்தம் செய்தார்கள்.

விலேவாசிகள் உயர்ந்ததும் அவர்கள் ஒரு தடவை வேலே நிறுத்தம் செய்தபோது அவர்களுக்குப் பஞ்சப்படி கிடைத்தது.

ஆனால் கடந்த நான்கு வருஷங்களாக ஆலையில் அபாரச் செலவு என்று காரணம் சொல்லி அவர்களுக்குச் சம்பள உயர்வு கொடுக்கவே இல்லை. பெரிய போராட்டத்தில் அவர்களுக்குக் கிடைத்த பஞ்சப்படியும், மேன்மேலும் ஏறிய விலைவாசிகளில் கட்டுப்படியாகவில்லை. ஆகையால் பஞ்சப்படியை உயர்த்தவும், சம்பளத்தைக் கூடிய அளவு உயர்த்தவும் அவர்கள் ஓயாமல் போராடி வந்தார்கள். இந்த நிலையில் மில் முதலாளிகள் உயர்தர அதிகாரிகளுக்கும் நடுத்தர உத்தியோகஸ்தர்களுக்கும் மட்டும் சம்பளத்தை உயர்த்தினார்கள். இந்தச் செய்தியை அறிந்ததுமே கொதிப்படைந்த தொழிலாளர்கள், தொழிலாளர் சங்கத்தைக் கேட்காமலே, ஒரு நாள் திடீரென்று ஆலைக்குள் வேலைநிறுத்தம் ஆரம்பித்தார்கள்.

தொழிலாளரின் இந்தச் செயல் சங்க அமைப்பு முறையில் கட்டுப்பாட்டுக்கு மீறியது; சட்ட முறையில் அவர்களுக்கு நஷ்டத்தைத் தரக் கூடியது. இந்த இரண்டு காரணங்களை வைத்துக்கொண்டு சேகரன் வேலைநிறுத்தத்தை மும்முரமாகத் தாக்கி எழுதியிருந்தான். ஆனால் துணி ஆலைகளுக்கு வெளி நாடுகளிலிருந்து நிறைய ஆர்டர் கிடைத்திருந்ததனாலும், இரவும் பகலும் ஆலையில் வேலை நடத்தி அதனால் உற்பத்தியும் லாப மும் பெருகியிருந்ததனாலும் முதலாளிகள் அந்த லாபத்தில் சிறு பகுதியையாவது தாமாக முன்வந்து தொழிலாளருக்குக் கொடுக்காதது மிகவும் பெரிய அநியாயம் என்றே சேகரனுக் குத் தோன்றியது. ஆதலால், தொழிலாளிகள் கட்டுப்பாட்டை மீறியதற்காகக் கண்டித்ததோடு நில்லாமல், முதலாளிகள் பொறுப்பற்ற முறையில் லாபத்தைத் தாமே அடித்துக்கொண்டு போகிறார்கள் என்றும் விளாசியிருந்தான்.

அந்தத் தலையங்கத்தை அவன்தான் எழுதியிருப்பான் என்பது கோவிந்தனுக்குத் தெரியும். அது பொதுவாகவே கம்யூனிஸ முறையில் இருப்பதை அவர் உணர்ந்தார். ஆயினும் அவர் நேராக அவனுக்குக் கடிதம் எழுதாமல் மணி யத்துக்கு எழுதினார். அந்தக் கடிதத்தில் வேலைநிறுத்தத்தைக் கண்டிப்பதை மட்டும் பாராட்டினார். தாம் பச்மடியிலிருந்து திரும்பி வரும் வரைக்கும் தொழிலாளர் இயக்கத்தைப் பற்றி

எந்தக் குறிப்பிட்ட கொள்கையோடும் எழுதக் கூடாது என்று குறிப்பாக உத்தரவு பிறப்பித்திருந்தார். கோவிந்தனுடைய தந்திரங்கள் யாவும் இப்படி வெளிப்படையாக இருந்தன. சேகரனுக்கு இதனால் அவரிடம் மிகுந்த வெறுப்பு உண்டாயிற்று.

காங்கிரஸ் மந்திரிகளின் அருளினால் பப்ளிக் பிராஸிக்யூடரான கோவிந்தன், தொழிலாளர் இயக்கத்தில் ஏன் இவ்வளவு மும்முரமாகக் கவனம் செலுத்த வேண்டும்? அதிலும் அவர் கொள்கை என் பிற்போக்காக இருக்க வேண்டும்? இந்த விஷயங்கள் சேகரனுக்கு விளங்கவில்லை.

ஆனால் அவன் மணியத்தை ஒன்றும் கேட்கவில்லை. தொழிலாளர்கள் சங்கம், ஏற்கனவே முதலாளிகளுக்கு வேலை நிறுத்த நோட்டீஸ் கொடுத்திருந்தது என்பது உண்மை. ஆனால், மே தினத்தன்று அவர்கள் வேலைநிறுத்தம் தொடங்குவதாகக் குறிப்பிட்டிருந்தார்கள். அதற்கு இன்னும் இரண்டு வாரம் இருந்தது. அதனால் அவன் ஒன்றுமே பேசாமல் அந்தக் கடிதத்தை மணியத்திடம் திருப்பிக் கொடுத்தான்.

மணியம் அதை மௌனமாக வாங்கிக் கொள்ளவில்லை. "நீங்கள் இப்போது வேலை நிறுத்தத்தைப் பற்றி எதுவுமே எழுதக்கூடாது; தெரிகிறதா சேகர்? கோவிந்தன் வந்ததும் அதைப்பற்றித் தீர்மானிப்போம்" என்றார்.

"வேலைநிறுத்த விஷயத்தில் கோவிந்தனுக்கு ஏன் இவ்வளவு அக்கறை என்பது எனக்குத் தெரியவில்லையே!"

"அடடா! இது புதுமையாக இருக்கிறதே! கோவிந்தனுடைய நண்பராக இருந்தும் இது உங்களுக்குத் தெரியாதா? ஐம்! ஆச்சரியமாகத்தான் இருக்கிறது! கோவிந்தன் நாகபுரியில் ஓர் ஆலையில் சட்ட ஆலோசகராக இருக்கிறார். அந்த ஆலை மானேஜர் அவருக்குத் தந்தி அடித்திருப்பார் என்பது நிச்சயம். இல்லாவிட்டால் அவருடைய இந்தக் கடிதம் நமக்கு வந்திராது!"

"ஆனால் கோவிந்தனுடைய ஆலோசனையைக் கேட்டுத் தான் நீங்கள் பத்திரிகையின் கொள்கையைத் தீர்மானிக்கப் போகிறீர்களா?"

"இதென்ன, இப்படிக கேட்கிறீர்களே, சேகர்? நான்தான் முதல்நாளே உங்களுக்குச் சொன்னேனே, என் பகுத்தறிவுக்கு அவர்தான் பாதுகாப்பாளர் என்று!"

"உங்களுககு ஆலே முதலாளிகளோடு சொந்தத் தொடர்பு ஏதும் இல்லேயே?"

"சேச்சே! நான் இந்த உலகிலே எவனுக்கும் கட்டுப் பட்டவன் அல்ல. ஐம்! இது என்னுடைய சொந்தப் பத்தி ரிகை!" என்று சொல்லிக்கொண்டே சுழலும் நாற்காலியில் ஒரு சுற்றுச் சுற்றிஞர்.

"அப்படியானுல் நீங்களே வேலே நிறுத்தத்தைப் பற்றி உங்கள் சொந்தக் கொள்கையை வைத்துக் கொள்வதுதானே? கோவிந்தன் ஆலே முதலாளிகளின் பக்கம் சேர்ந்தவர் என்பது வெளிப்படையாகத் தெரிகிறது. அவர் சொல்லும் ஆலோசனை முதலாளிகளின் நனமைக்குத்தான் இருக்கும்; தொழிலாள ருக்கு நலம் செய்வதாகக் கட்டாயம் இராது. இப்படி வெளிப் படையான ஒருதரப்பு ஆலோசனையை நீங்கள் ஏன் கேட்க வேண்டும்?"

"அதைக் கேட்டே ஆகவேண்டும் என்ற கட்டுப்பாடு நமக்கு அடியோடு இல்லே! ஆனுல் முதலாளிகள் கட்சியையும் நாம் சரியாகத் தெரிந்துகொள்ள வேண்டாமா? ஐம்! நம்மூர் ஆலே முதலாளியான ஸர் தின்ஷா ஏதல்ஜி துளியும் லாபம் இல்லாமலே யுத்தத்துக்குத் துணி சப்ளே செய்திருக்கிறுர். அந்தக் கம்பெனிக்குத்தான கோவிந்தன் ஆலோசகர். அந்த ஆலேக்கு அடியோடு லாபம் இல்லாதபோது அதன் முதலாளி எப்படித் தொழிலாளருக்குப் போனஸ் கொடுக்க முடியும்? ஆகையால் உண்மையான நிலேமை என்ன என்பதைத் தெரிந்துகொண்டு பிறகு நாம் நமது கொள்கையைத் தீர்மானிப் போம். எப்படியும் வேலேநிறுத்தம் தொடங்குவதற்கு இன் னும் பதினேந்து நாட்கள் இருக்கின்றன. அதுவரைக்கும் பொறுத்துப் பார்ப்பதில் தவறு என்ன?"

அவருடைய யுக்தியான பேச்சு உலக விவகாரத்தோடு பொருந்தி யிருப்பதைச் சேகரன் கவனித்தான். ஆயினும் அவன் வற்புறுத்தலோடு, "ஸர் தின்ஷா தமக்கு லாபமில்லா

மல் யுத்தத்துக்குத் துணி சப்ளை செய்ய ஒப்புக்கொண்டு தமது ராஜ பக்தியைப் புலப்படுத்தினார். அதில் ஒன்றும் பயன் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. இந்த வெளி வேஷத்தினால் சர்க்கார் ஏமாந்திருக்கும் என்றும் நான் நினைக்கவில்லை. நேரடியாகத்தான் லாபம் வரவேண்டும் என்பதில்லை. மறைமுகமாக லாபத்தைத் திரட்டுவதற்கு எத்தனையோ வழிகள் இருக்கின்றன. சரக்கு விலைசசலின் அடிப்படைச் செலவை இரண்டு மடங்காகக் காண்பித்தோ, மட்டமான பஞ்சுக்கு அதிக விலை வைத்தோ நேரடியாக ஒரு தம்படி லாபம் எடுத்துக்கொள்ளாமலே லட்சக்கணக்கான ரூபாயை ஏப்பமிட முடியும்! லாபமில்லை என்ற இந்தப் பேச்சை நான் ஒப்புக்கொள்ள முடியாது. இது தொழிலாளரை ஏமாற்றுவதற்கு ஒரு சூழ்ச்சி" என்றான்.

ஆவேசம் நிறைந்த அவனுடைய பேச்சைக் கேட்டு மணியம் தமக்குள் சிரித்துக்கொண்டார். நாற்காலியில் அழுந்திய தமது பெருத்த தொப்பையைத் தடவிக்கொண்டே, "நீங்கள் சொல்வது உண்மைதான், சேகர்! வியாபாரியின் தேசபக்தி யாகட்டும், ராஜபக்தி யாகட்டும், அதில் சுயநலம் எப்போதும் மறைவாக இருக்கத்தான் இருக்கும்! ஆயினும் நாம் சிறிது பொறுத்துப் பார்ப்பதில் ஒன்றும் கெட்டுவிடாது" என்றார்.

சேகரன் வாயே திறக்கவில்லை.

ஆனால் கோவிந்தன் இந்த ஆசிரியர் குறிப்பு எழுதும் வேலையை அவ்வளவு அக்கறையோடும் அவசரமாகவும் தனக்கு ஏன் கொடுக்கச் செய்தார் என்ற ரகசியம் இப்போது தான் சேகரனுக்கு அம்பலமாயிற்று.

* * *

"என்ன, சரியாக டீ குடிக்கும் நேரத்துக்கு வந்துவிட்டேனே?" திடீரென்று உள்ளே வந்த கோவிந்தன் இப்படிக் கேட்டார். அவர் அவ்வளவு அதிகாலையில் வருவார் என்று எதிர்பாராததனால் சேகரனுக்கும் மஞ்சுவுக்கும் அது வியப்பாகவே இருந்தது.

"ஊரிலிருந்து எப்போது வந்தீர்கள்?" என்று சேகரன் கேட்டான்.

"நேற்று இரவு வந்தேன். என்னை மன்னியுங்கள், மஞ்சு அம்மாள்! பச்மடிக்கு வரும் உங்கள் ஆசையை வீணாக்கிவிட்டேன். ஆனால் நான் என்ன செய்வது? இந்த வேலை நிறுத்தத்தினால் நான் இங்கு வருவது அவசியமாகிவிட்டது. இனி நல்ல வேளையாக வேலைநிறுத்தம் நடக்காமலே இருந்துவிடுமானால் நாம் எல்லாரும் சேர்ந்தே பச்மடி மலைக்குப் போவோம்."

சேகரன் அறையிலிருந்து வெளியே பார்த்தான். கோவிந்தனுடைய பிரம்மாண்டமான கார் வாசலில் நின்றிருந்தது. அவர் கிண்டலாகத்தான் பச்மடியைப் பற்றிப் பேசுகிறாரோ என்று எண்ணி அவன் அவரை உற்றுப் பார்த்தான். ஆனால் அவருடைய முகத்தில் எவ்வகையான மாறுதலும் தெரியவில்லை.

மஞ்சு ஒன்றுமே பேசவில்லை. அவள் புதிதாகத் தேநீர் தயாரிப்பதில் ஈடுபட்டிருந்தாள்.

"ராமநாதனுக்கு ஜெயிலுக்குப் போக ஆசையாக இருக்கிறதோ, மஞ்சு அம்மாள்?" என்று கோவிந்தன் கேட்டார்.

எவர்ஸில்வர் கிண்ணத்தில் தேநீரை ஊற்றிக்கொண்டிருந்த மஞ்சு இதைக் கேட்டதும் பயத்தோடும் ஆவலோடும், "ஏன் அப்படிச் சொல்கிறீர்கள்?" என்றாள்.

"ஆலைக்குள்ளே வேலை நிறுத்தம் தொடங்கியதிலிருந்து அவன் தொழிலாளர்களின் கூட்டத்தில் வாய்க்கு வந்தபடி பேசுகிறான். நீங்கள் இருவரும் அவனுக்குப் புத்திமதி சொல்ல வேண்டும். எதைப் பேசினாலும் ஜீரணித்துக் கொள்ளலாம் என்று அவன் நினைக்கிறான்; அது தவறு. அந்தக் காலமெல்லாம் மலையேறிவிட்டது. அவன் ஏதாவது பேசத்தான் வேண்டுமென்றால் ஜாக்கிரதையாகப் பேச வேண்டாமா?"

"அவனுக்கு யார் புத்தி சொல்வது! எங்கள் வீட்டுக்கு அவன் வந்து வெகு நாள் ஆகிறது. இந்த வேலை நிறுத்தச் சிக்கலில் அவன் மாட்டிக்கொண்டிருப்பான் என்று நான் நினைக்கவே இல்லை!" என்று சொல்லிக்கொண்டே இரண்டு

கப் தேநீரையும் இரண்டு பிளேட் ஆம்லெட்டையும் மஞ்சு அவர்கள் முன்பு வைத்தாள்.

"எங்களோடு நீங்களும் டீ குடிக்கவில்லையா?"

"இதோ வந்துவிட்டேன்; கொஞ்சம் டோஸ்ட் செய்கிறேன்" என்று கூறி அவள் பரபரவென்று ஸ்டவ்வில் டோஸ்ட் தயாரித்தாள். அதை அவர்கள்முன்னால் வைத்து விட்டு அவள் சேகரனுடைய அருகில் தேநீர்க் கிண்ணத்தோடு உட்கார்ந்தாள்.

"என்ன சேகரன், நீங்கள் ஏன் ராமநாதனிடம் சொல்லக் கூடாது?"

"சொல்லியும் பயன் இராது, மிஸ்டர் கோவிந்தன்!"

"நான் வேண்டுமென்று இதைச் சொல்லவே இங்கு வந்தேன். அடுத்த வாரம் உண்மையிலேயே எல்லா ஆலை களிலும் மொத்தமாக வேலைநிறுத்தம் ஆரம்பித்துவிட்டால், சர்க்கார் முதல்முதலில் வேலை நிறுத்தத்துக்குத் தூண்டியவர் களைத்தான் கவனிக்கும். ராமநாதனைப் போன்றவன் சிறைக் குப் போனால் பிறகு அவன் படும் பாடு நாயும் படாது. அப்புறம் அவனைத் தப்பவைக்க எல்லாரும் சேர்ந்து முயல் வதைவிட இப்போதே அணை போடுவது நல்லதல்லவா?"

"நீங்கள் சொல்வது உண்மைதான், மிஸ்டர் கோவிந்தன்! போன வாரம் ஒரு நாள் பகலில் அவன் ஆபீசுக்கு வந்து நான் வேலைநிறுத்தத்தைப்பற்றி விமரிசனம் செய்ததற்காக என்னைக் கண்டபடி தூற்றினான்!"

"அது சரி. நீங்கள் அந்தப் பத்திரிகையில் வேலை செய்வது அவனுக்கு எப்படித் தெரிந்தது? நீங்கள் இதைப்பற்றி என் னிடம் சொல்லவே இல்லையே!" என்று மஞ்சு அவனை ஆச்சரி யத்தோடு கேட்டாள்.

"உன்னிடம் சொல்ல எனக்கு ஞாபகம் இருக்கவில்லை. அவன் ஓயாமல் உளறிக்கொண் டிருந்தான். மணியம் சிரித்தார். நான் பேசாமல் என் வேலையைச் செய்தேன். கடைசியில் மணியம் தோசையும் காபியும் கொடுத்து அவனை வழியனுப்பி னார். இப்படிப்பட்டவனோடு யார் என்ன பேச முடியும்? பேசியுந்தான் என்ன பயன்?"

"அப்படியானால் அவனை நீங்கள் சிறைக்கு அனுப்பும்படி பார்த்திருக்கப் போகிறீர்களா?" என்று கோவிந்தன் பரிவோடு கேட்டுக்கொண்டே ஆம்லெட்டின் கடைசித் துணுக்கை வாயில் போட்டுக்கொண்டார்.

சேகரன் அவருடைய இந்தப் பரிவைப் பொருட்படுத்த வில்லை. மஞ்சு மட்டும் அமைதியற்றுத் தவித்தாள்.

கோவிந்தன் டீ குடித்ததும் சேகரனைப் பார்த்து, "உங்களுக்கு இன்று இரவு ஓய்வுதானே?" என்றார்.

"ஏன்?"

"விசேஷம் எதுவுமில்லை. இரவு எங்கள் வீட்டுக்குச் சாப்பிட வர முடியுமா?"

"இன்று யாருக்குப் பார்ட்டி கொடுக்கிறீர்கள்?"

"சேச்சே! பார்ட்டியோ விருந்தோ எதுவும் இல்லை. சும்மா வீட்டுச் சாப்பாடும் எப்போதும் உள்ள நண்பர்களும் தான். பச்மடியில், பார்ட்டிகளுக்குப் போய்ப் போய் எனக்கு அந்த மாதிரிச் சாப்பாடே அலுத்துப் போய்விட்டது" என்று சொல்லி அவர் புன்னகை பூத்தார். பிறகு, "இரவு வருகிறீர் கள் அல்லவா?" என்றார்.

சேகரன் ஆகட்டுமென்று தலையை அசைத்ததும், அவர் மஞ்சுவைப் பார்த்து, "நான் வேண்டுமென்றே உங்களை அழைக்க வில்லை, மஞ்சு அம்மாள்! இன்று எங்களுக்கு வீட்டில் முழு உரிமை வேண்டும்" என்றார்.

"அப்படியானால் சாப்பாடு ஆனதும் சரளாவை இங்கே அனுப்புங்களேன்" என்று அவள் சிரித்துக் கொண்டே சொன்னாள்.

"நான் வெளியூர் போயிருந்தபொழுது நீங்கள் தோழிகள் இருவரும் மிகவும் உல்லாசமாக இருந்தீர்களாமே!"

"பெண்களுக்கு என்ன உல்லாசம் இருக்கிறது? ஏரியில் நீந்துவதும், டென்னிஸ் விளையாடுவதும், அதிகமாகப் போனால் சினிமாவுக்குப் போவதுந்தான். உல்லாசம் என்பது ஆண் களுக்கே உரிய பொருள். பச்மடியில் இருந்த இருபத்தைந்து நாளைக்கு நீங்கள் இங்கே இரண்டு தடவை வந்து போனீர் களே!"

"என்ன செய்வது? என் தொழில் அப்படி இருக்கிறது. பச்மடியிலும் இந்தத் தடவை கோடை கடுமையாகத்தான் இருக்கிறது" என்று சொல்லி வெற்றிலை பாக்குப் போட்டுக் கொண்டு அவர் காரில் புறப்பட்டார்.

அவர் போனதும் மஞ்சு சேகரனைக் கண்டு ஆத்திரத்தோடு பேசலானாள். "அண்ணா வந்து உங்களிடம் பேசிப் போனதைப் பற்றி நீங்கள் ஒரு தடவைகூட என்னிடம் சொல்லவே இல்லையே?"

"எப்படிச் சொல்வது? நீ இப்பொழுதெல்லாம் என்னிடம் ஒரு வார்த்தையாவது பேசுகிறாயா? கல்யாணம் ஆகிவிட்டதனாலே நாம் ஒரே வீட்டில் இருக்கிறோம் என்பதைத் தவிர வேறில்லை."

சேகரன் சொன்னது உண்மையாகத்தான் இருந்தது. ஆகையால் அவள் ஏதும் பதில் சொல்லவில்லை.

ஆனால் அவளுடைய கவலையுற்ற மனம் அவளைச் சும்மா இருக்கவிடவில்லை. அடுத்த கணமே அவள், "அண்ணாவை நம் வீட்டுக்குக் கூப்பிட்டு நாலு நல்ல வார்த்தைகள் சொல்லலாம் என்று எனக்குத் தோன்றுகிறது. நான் இன்றே அண்ணிக்குச் சொல்லி அனுப்புகிறேன்" என்றாள்.

"அவனிடம் பேசி என்ன பயன்? அண்ணனும் தங்கையும் ஒரே அச்சுத்தான். ஒரு தடவை மனத்தில் ஒரு விஷயம் பதிந்துவிட்டால் பதிந்ததுதான். பிறர் பேச்சைக் கேட்டு அதைப்பற்றிச் சிந்திப்பவர்களாக இருந்தால் அவர்களோடு சகஜமாக நாலு நல்ல வார்த்தை பேசலாம். பிடிவாதமும் அகங்காரமும் கொண்டவர்களிடம் பேசுவதால் என்ன பிரயோஜனம்?"

அவனுடைய அந்தப் பேச்சு அவளுக்குச் சுருக்கென்றது. ஆனால் அண்ணனைப்பற்றிய கவலையில் அவள் தன்னை மறந்து மூழ்கியிருந்ததனால் அந்தப் பேச்சை மனத்தில் வைத்துக் கொள்ளாமலே, தீனக் குரலில் பேசலானாள்.

"இதோ பாருங்கள்; நாங்கள் அண்ணனும் தங்கையும் கெட்டவர்கள்தான். உங்கள் துரதிருஷ்டத்தினால் உங்களுக்கு எங்களோடு தொடர்பு ஏற்பட்டது. ஆனால் அதற்காக அண்

ணன் சிறைக்குப் போவதை நீங்கள் கண்ணுரைப் பார்த்துக் கொண்டிருப்பீர்களா? எனக்கு நம்பிக்கை உண்டு. நீங்கள் கண்டிப்பாகச் சொன்னால் அவன் கொஞ்சமாவது வழிக்கு வருவான். உங்கள் பேச்சுக்கு மட்டும் அவன் கட்டாயம் மதிப்புக கொடுப்பான்.''

''நீ அவனுககுச் சொல்லியனுப்பு. என்னால் முடிந்த வரைககும் உபதேசம் செய்து பார்க்கிறேன்.''

''எபபொழுது வரச் சொலலட்டும்?''

''எப்போது வேண்டுமானாலும் வரட்டுமே!'' என்று அவன் சிறிது விரகதியோடு சொல்லிவிட்டு, முகத்தைத் திருப்பிக் கொண்டான்.

## 19

ராமநாதனிடம் மஞ்சு அவ்வளவு அக்கறை கொண்டது சேகரனுக்குப் புதுமையாகத்தான் இருந்தது. ஏழெட்டு ஆண்டுகளாக அவள் ராமுவிடம் கண்டிப்பாக நடந்துகொள்வதைத்தான் அவன் பார்த்திருக்கிறான். இந்த வீட்டுக்கு வருவதென்றாலே ராமுவுக்கு யமகண்டந்தான்.

ஆனால் இன்று கோவிந்தன் 'ராமு கைதாகலாம் என்று தெரிகிறது' என்று சொன்னதுமே அவள் வற்புறுத்தலோடும், தீனக் குரலிலும் தன்னை வேண்டிக்கொண்டதுதான் சேகரனுக்கு வியப்பாக இருந்தது. பெண்களுக்கு எப்போதுமே பிறந்தகத்தில் பற்று உண்டு என்று சிறு வயது முதல் தான் கேள்வியுற்றது உண்மையே என்று அவனுககுத் தோன்றியது.

தாயின் அன்பைப் பற்றியோ தங்கையின் அன்பைப் பற்றியோ அவனுக்கு அடியோடு ஒன்றுமே தெரியாது. மனைவியின் அன்பை மட்டுமே அவன் ஒருவாறு உணர்ந்திருந்தான். காதலியின் மனத்தை எப்பொழுதும் திருப்தி செய்யாத வெறி பிடித்த அன்பையே அவன் கண்டிருந்தான்.

''நாம் இதுவரைக்கும் வாழ்க்கைக்கு அடிப்படை என்று எண்ணியிருந்த அன்பு வெறும் ஏமாற்றமா? மரத்தைச்

சுற்றி வளர்ந்த கொடி தன் அழகிய இலைகளால் மரத்தை மறைத்து அழகுபடுத்தினாலும், அதன் வேர் பூமியின் அடியில் தானே ஆழப் பதிகிறது? பெண்மனமும் அதைப் போன்றது தானா? கணவனையும் அவனுடைய வீட்டையும் மணமான பின்பு தன் பொருளாக எண்ணினாலும் பெண்ணின் பரிவு அந்த எண்ணத்தோடு கலப்பதில்லை. அயலார் வீட்டுக்கு வந்த அவளுடைய ரத்தம் கடைசிவரைக்கும தம்மவர்களிடமே பாய்கிறது. பெண தன் கணவனிடம் அனபுசெலுத்துவதற்குக் காரணம், அவன் தனக்கு ஆதாரமாக இருக்கிறான், அவனுககும் தனக்கும் கவர்ச்சி இருக்கிறது என்பதுதான். ஆனால் பிறந்தக மும், பிறந்தகத்து மனிதர்களும் அவளுக்குப் பிரியமாக இருப்ப தற்குக் காரணம் ரத்த சம்பந்தம். அன்பைவிட ரத்த சம்பந்தம் உறுதியாக நீண்டநாள் நிலைத்திருக்கிறது. கணவனது வீட்டில் பெண்மனம் நிலைத்து, கணவனிடம் அவளுக்குப் பிறகு பரிவு தோன்றுவதற்குக் காரணம்-குழந்தைகள். கண்ணுக்குத் தெரி யாத ரத்த சம்பந்தத்தை அந்தக குழந்தைகள் கணவன்மனைவிக் கிடையே உண்டாக்குகின்றன. அவர்களுக்கிடையில் இருந்த காமக் கவர்சசிக்குள்ளே ரத்தப் பரிவையும் அவை ஏற்படுத்து கின்றன. இன்றுவரைக்கும் அநியாயமாகவும பற்றுதல் இல் லாமலும் நடந்துகொண்ட அண்ணனிடம் மஞ்சுவுக்கு இவ் வளவு அன்பு - என்னிடம் இருப்பதைவிட மிகுந்த அன்பு - தோன்றுவானேன்?' என்று சேகரன் நினைக்கலானான்.

இந்த எண்ணம் தோன்றியதும் அவனுக்கு என்னவோ போல இருந்தது. மஞ்சுவுக்கு அண்ணனிடம் இருந்த அன் பைக் கண்டு அவனுக்கு எத்தனையோ தடவைகள் கோபம் வந்ததுண்டு. ஆனால், அந்தக் கோபம் நீண்டநேரம் நிலைப்ப தில்லை. இன்று அவனுக்கு முதல்முதலாக ஒரு புதிய எண் ணம் உதித்தது: 'மஞ்சுவிடம் எனக்குள்ள ஆழ்ந்த ஒப்பற்ற அன்பு அவளுக்கு என்னிடம் இருக்கிறதா? அவளுடைய அன் பில் சரளாவுக்குப் பங்கு உண்டு; குழந்தைகளுக்குப் பங்கு உண்டு. இந்த ராமநாதனுக்கும்-' சேச்சே! வெகுநேரம் வரைக்கும் இந்த எண்ணம் அவனை வாட்டி எடுத்தது.

பகலில் அவன் எப்பொழுதும்போல வேலைக்குப் போன

பொழுது மணியம், "கோவிந்தன் வந்து உங்களைப் பார்த்தாரா? காலையில் அவர் என் வீட்டுக்கு வந்திருந்தார்" என்றார்.

"அவர் என்ன சொன்னார்?"

"வேலை நிறுத்தத்தைப் பற்றி நம்முடைய கொள்கை எப்படி இருக்க வேண்டும் என்பதை விளக்கிக் கூறினார். நான் ஏற்கனவே நினைத்தது சரியாகிவிட்டது. மில் மானேஜர்தான் அவருக்குத் தந்தியடித்தவர்" என்று சொல்லி, பெருமிதத்தோடு மணியம் முறுவல் பூத்தார்.

"நீங்கள் அவருக்கு என்ன பதில் சொன்னீர்கள்?"

"நான் ஒன்றும் தீர்மானமாகச் சொல்லவில்லை. உங்களோடு கலக்காமல் நான் அவருக்கு என்ன பதில் சொல்வது? இன்றிரவு உங்களிடம் எல்லா விஷயங்களையும் விவரமாகச் சொல்லப்போவதாக அவர் என்னிடம் கூறினார்."

அவருடைய பேச்சைக் கேட்ட சேகரன் அவரை ஒரு தடவை உற்றுப் பார்த்தான். ஆனால் அவருடைய தந்திரக் கண்களின் ஆழத்தை அவனால் கண்டுபிடிக்க முடியவில்லை. அவர் இன்னதுதான் நினைக்கிறார் என்று தெரியவில்லை.

அவரை ஆழம் பார்ப்பதற்காக அவன், "இன்றுவரைக்கும் வேலைநிறுத்த விஷயத்தில் நீங்கள் என்ன கொள்கை வைத்திருக்கிறீர்கள்?" என்று கேட்டான்.

"ஐம்! நமது பத்திரிகையின் தேசீய நோக்கத்துக்குத் தகுந்தபடிதான் என் கொள்கையும் இருந்தது."

'தேசீய நோக்கம்' என்ற சொல் மிகவும் பரந்தது; ஏமாற்றத்துக்கு இடமானது. அந்தச் சொல்லுக்குள்ளே மணியம் தாம் விரும்பிய அனைத்தையும் நுழைக்க முடியும் என்று சேகரனுக்குத் தோன்றிற்று.

மணியம் தொடர்ந்து பேசினார்: "தொழிலாளரின் கோரிக்கையை நாம் பெரும்பாலும் ஆதரித்து வந்திருக்கிறோம். ஆனால் அவர்கள் அடிக்கடி வேலைநிறுத்தம் செய்வதனாலும் சம்பள உயர்வுக்காக வேலையில் மட்டம் போடுவதனாலும் இளம் பருவத்தில் உள்ள நம் நாட்டுத் தொழிலுக்குத் தீமைதான் விளைகிறது. இதைத்தான் நாம் தொழிலாளருக்கு அடிக்கடி சொல்லியிருக்கிறோம்."

அவருடைய இந்தப் பேச்சிலிருந்து நிச்சயமான கொள்கை எதுவும் புலப்படவில்லை. ஆனால் இதிலிருந்து சேகரன் வேறொரு விஷயத்தைத் தெரிந்துகொண்டான். மணியம் கோவிந்தனோடு ஏதோ அரசியல் சூதாட்டம் ஆடுகிறார் என்றும் அதில் அவர் தன்னையும் பயன்படுத்திக் கொள்கிறார் என்றும் அவனுக்குத் தோன்றிற்று. அதற்குப் பிறகு அன்றிரவு கோவிந்தனோடு பேசியபோது மணியத்தின் இந்தத் தேசீய நோக்கம் இனனது என்பது அவனுக்கு வெட்ட வெளிச்சமாகத் தெரிந்துவிட்டது.

இரவு எட்டு மணிக்குச் சேகரன் கோவிந்தனுடைய பங்களாவுக்குச் சென்றான். அப்பொழுது பம்பு ஸேட் தனியாகப் பசுஞ்சோலையில் ஒரு நாற்காலியில் உட்கார்ந்திருந்தான். சேகரனைப் பார்த்ததுமே அவன் சுருட்டுக் குழாயை வாயிலிருந்து எடுத்து, "என்ன ஐயா, கம்பெனியார் உங்களுக்கு எப்பொழுது கார் வாங்கிக் கொடுக்கப் போகிறார்கள்?" என்று கேட்டான்.

"நான் ஏஜென்ஸி எடுத்து ஆறுமாதங்கூட ஆகவில்லையே; இன்னும் கொஞ்ச நாள் போனால் அது நடக்கும். பச்மடியில் உங்கள் மலைவாசம் எப்படி இருந்தது?"

"மலை வாசமாவது! இருபது நாளைக்குள் கோவிந்தன் இரண்டு தடவை நாகபுரிக்கு வந்தார். மே மாதத்துக் கடும் வெயிலில் உஙகளுடைய இநத வேலை நிறுத்தம் ஆரம்பித்து விட்டது. நம்முடைய தொழிலாளர் தலைவர்கள் அத்தனை பேரும் மகா முட்டாள்கள். ஐரோப்பாவைப் போன்ற குளிர் நாட்டிலே மே தினம் என்பது தொழிலாளரின் நாளாகக் கொண்டாடப்படுவது பொருத்தமாக இருக்கிறது. அப்போது அங்கே இளவேனில் தொடங்குவதனால் எல்லாரும் உற்சாகமாக இருப்பார்கள். ஆனால் வெப்பம் மிகுந்த நம்முடைய நாட்டிலும் அந்த நாளையே இந்த அப்பாவித் தொழிலாளர்கள் கொண்டாட வேண்டும் என்று சொல்வது பெரிய விந்தையாகத்தான் இருக்கிறது!"

"நீங்கள் ஒரு விஷயத்தை மறந்துவிட்டீர்கள், பம்பு ஸேட்! தொழிலாளர்களின் இயக்கம் உலகம் முழுவதுக்கும் பொதுவான ஓர் இயக்கம். ஆகையால் அதைக் கொண்டாடும் தின

மும் உலக முழுவதும் ஒன்றாக இருக்க வேண்டும். வெப்ப நாட்டில் இருப்பவர்களுக்கு மே தினம் கொஞ்சம் அசௌகரிய மாக இருக்கலாம். ஆனால் முதல் முதலில் இந்த இயக்கம் ஆரம்பித்த மேல்நாடுகளில் இது வசதியாக இருந்தது. மற்ற நாட்டுத் தொழிலாளர்களும் உலக ஒற்றுமையை எண்ணி அதை ஒப்புக் கொண்டார்கள். மேலும் இளவேனிலானால் என்ன, கோடையானால் என்ன, தொழிலாளர்களுக்கு எல் லாம் ஒரே பருவந்தான். ஆலை வட்டாரத்துக்குள்ளே ஒரே ஒரு பருவந்தான் எப்பொழுதும் உண்டு: உடல் ஓயும்வரைக் கும், மூளை ஓடாது நிற்கும் வரைக்கும் வேலை செய்வது! அது கிடக்கட்டும், கோவிந்தன் எங்கே இருக்கிறார்?''

''மாலையில் ஆலை மானேஜரிடம் போனவர் இன்னும் திரும்பி வரவில்லை. இதோ இப்பொழுது வந்துவிடுவார். ஏன் சேகர், நீங்கள் அந்தப் பத்திரிகையில் ஆசிரியர் குறிப்பு எழுதுவதை விட்டு ஏன் சொந்தமாக ஒரு பத்திரிகை நடத்தக் கூடாது?''

''சொந்தப் பத்திரிகை நடத்த முதல் வேண்டாமா?''

''நான் முதல் கொடுக்கிறேன். ஒவ்வொரு பெரிய எழுத் தாளரும் இப்போது நம் நாட்டில் சொந்தப் பத்திரிகை வைத் துக்கொண் டிருக்கிறார். ஜனங்களின் காது புளிக்கும் வரைக் கும், மனம் அலுக்கும் வரைக்கும், தமது புகழைத் தம்பட்டம் அடிக்கும் வேலையை அவர்கள் செய்கிறார்கள். நீங்களும் பெரிய எழுத்தாளர். உங்களுக்கு ஒரு சொந்தப் பத்திரிகை வேண்டாமா?''

''வேண்டாம் ஐயா! அப்படிப்பட்ட பத்திரிகை வெளியிட எனக்கு விருப்பம் இல்லை. இப்போது நம் பத்திரிகைகள் எல்லாம் சினிமாக்காரர்களின் விளம்பரமாகவும் எழுத்தாளர் களின் போர்க்களமாகவும் இருக்கின்றன. எனக்கு உங்கள் முதலும் வேண்டாம். இப்படிப்பட்ட பத்திரிகையும் என்னால் நடத்த முடியாது.''

''இந்த மனப்பான்மையினால்தான் நீங்கள் முன்னுக்கு வராமல் இருக்கிறீர்கள். உங்களுக்குக் கொஞ்சங்கூடத் துணிச்சல் இல்லை.''

"யாரிடம் துணிச்சல் இல்லை?" என்று கேட்டார், ஸேட்ஜியின் பேச்சை மேலாகக் கேட்டுக்கொண்டு வந்த கோவிந்தன்.

"நம்முடைய இந்தச் சேகரனுக்குத்தான் துணிச்சல் இல்லை என்கிறேன்."

"நீங்கள் இதை எப்படிச் சொல்லலாம்? ஒவ்வொருவருடைய துணிச்சலும் வெவ்வேறு விதமாக இருக்கும். சேகரனிடம் துணிச்சல் இல்லை என்றால் அவரிடம் இவ்வளவு பண்புகள் இருந்தும் அவர் இன்று வரைக்கும் வறுமையோடு போராடிக்கொண்டு வாழ்ந்திருக்க முடியாது. உலக விவகாரத்தில் புகழ் பெறுவதற்கு வேண்டிய துணிச்சல் அவரிடம் அதிகமாக இல்லாதிருக்கலாம். சரி, சீக்கிரம் சாப்பிட வாருங்கள். நான் மறுபடி வெளியே போக வேண்டும்."

அவர்கள் மூவரும் உடனே உள்ளே சென்றார்கள்.

சாப்பாடு தயாராக இருந்தது. அவர்கள் இலையில் வந்து உட்கார்ந்ததுமே சரளா பரிமாறினாள். சாப்பாடு தொடங்கியது.

பம்பு ஸேட் தனியாகவே பேசிக்கொண்டிருந்தான். கோவிந்தனுக்கும் சிறிதும் மன அமைதி இல்லை. சேகரன் தன்னைப்பற்றிய சிந்தனைகளிலேயே மூழ்கியிருந்தான். பம்பு ஸேட் சொன்ன மலைவாச வேடிக்கைகளைச் சரளா ஆவலின்றிக் கேட்டுக்கொண்டு இருந்தாள்.

அப்பொழுது கோவிந்தன் திடீரென்று, "ராமநாதனுடைய பிரசங்கக் குறிப்புகளை இப்பொழுதுதான் நான் பார்த்தேன், சேகர்! அவன் மிகவும் விசித்திரமாய்ப் பேசியிருக்கிறான்" என்றார்.

"நானும் கேள்விப்பட்டேன். ஆனால் அவன் என்ன பேசுவான் என்பது எனக்குத் தெரியாது."

"அவன் ஓயாமல் தொழிலாளிகளிடம் சொல்லியிருக்கிறான்: 'இதுதான் நீங்கள் அடம் பிடிக்க வேண்டிய தருணம். நீங்கள் மும்முரமாக வேலைநிறுத்தம் செய்தால் சர்க்காருக்கு ஒரு முழம் துணி கிடைக்காது. ஆலை முதலாளிகள் சர்க்காருக்குத் துணி சப்ளை செய்வதாக ஒப்பந்தம் செய்துகொண்டிருக்கிறார்கள். இந்தச் சமயத்தில் நீங்கள் இடக்குச் செய்தால்

முதலாளிகளும் சர்க்காரும் உங்களுக்குப் பணிய வேண்டி யிருக்கும்' என்றெல்லாம் பேசியிருக்கிறான். மே தினத்தன்று வேலைநிறுத்தம் ஆரம்பித்தால் முதலில் ராமநாதன்தான் கைதாவான். சேச்சே! இந்த வேலை நிறுத்த்தை எப்படி யாவது நிறுத்தத்தான் வேண்டும்." அவருடைய குரலில் எப் போதும் இல்லாத ஆவேசம் இருந்தது.

"ராமநாதனைப் பொறுத்தவரைக்கும் அதைப்பற்றி அவ னுக்கு அக்கறையே இலலை. பாவம், மஞ்சுதான் உருகிக் கரைந்துவிடுவாள். ஏற்கனவே பாவம், அவளுக்குப் பல துன்பங்கள்!" என்று சரளா பரிவோடு கூறினாள்.

'அந்த ஆவேசமும் இந்தப் பரிவும்! உண்மையில் அவற்றில் கொஞ்சமாவது அன்பு 'இருக்குமா?' என்ற சேகரன் நினைத் தான். அவன் ஒன்றுமே பேசவில்லை.

சாப்பாடு முடிந்ததும், "நீங்கள் இபபொழுது எங்கள் வீட்டுக்குத்தானே போகிறீர்கள்?" என்று அவன் சரளா வைக் கேட்டான்.

"ஆமாம். நீங்கள் வர வெகுநேரம் ஆகுமோ?"

"அது இவருடைய வேலையைப் பொறுத்தது."

"சேச்சே! நேரமாகாது. ஒன்பதேகாலுக்கு நான் மறுபடி யும் வெளியே போக வேண்டும்" என்றார் கோவிந்தன்.

சரளா கொடுத்த வெற்றிலை பாககைப் போட்டுக்கொண்டு அவர்கள் வெளியே மேடையில் வந்து உட்கார்ந்தார்கள்.

கோவிநதன் ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துக்கொண்டே, "வேலை நிறுத்தத்தைப் பற்றி நீங்கள் என்ன முடிவு செய்திருக் கிறீர்கள், சேகர்?" என்று கேட்டார்.

"நான் யார், முடிவு செய்வதற்கு? உங்களுக்குத்தான் தெரியுமே, மணியம் சொல்வதை எழுத நான் கடமைப் பட்டவன்."

"ஆனால் அவர் இன்று காலையில் உங்களைக் கேட்காமல் ஒன்றும் உறுதியாகச் சொல்ல முடியாது என்றாரே!"

"அவர் தமது பகுத்தறிவுக்குக் காவலாளியாக என்னை எது முதல் வைத்துக்கொண் டிருக்கிறார்?" என்று சேகரன் சிரித்துக்கொண்டே கேட்டான்.

"நானும் அவரைக் காலையில் இந்தக் கேள்விதான் கேட்டேன். அவருக்கு நல்ல தட்சிணை கொடுத்தாலொழிய அவர் நமது கட்சிக்கு வரமாட்டார் என்பதுதான் இதற்கு அர்த்தம்."

"ஒவ்வொரு வேலை நிறுததத்தின் போதும் அவர் இப்படி நடந்துகொள்வது வழக்கமோ?"

"ஆமாம், இநத மணியம் ஒரு பச்சோந்தி. அவருடைய நிறம் எப்போது எப்படி மாறும் என்று சொல்ல முடியாது. இது அவர் எப்போதும் செய்யும் சூழ்ச்சிதான். வேலைநிறுத்தம் ஆரம்பமானதும முதலில் தொழிலாளிகளின் கட்சியில் இருப்பதாகக் காண்பிப்பார். நாங்கள் போய், தட்சிணை கொடுத்ததும் இது வேலைநிறுத்தம் செய்யும் சமயமல்ல என்று எழுதுவார். சர்க்கார் விசாரணைக் கமிட்டி நியமித்தால் அதை ஆதரிப்பார். அவருக்கு எப்போதுமே இப்படிப் பொதுவான கொள்கை உண்டு."

அவர் சிறிது நேரம் மௌனமாக இருந்தார். கையில் இருந்த சிகரெட்டை எறிந்து மற்றொன்றைப் பற்றவைத்தார்.

அவருடைய அமைதியின்மையைச் சேகரன் கவனித்தான். ஆயினும் பேசவில்லை.

சிகரெட் சாம்பலை உதறிக் கொண்டே கோவிந்தன் இனிமையான குரலில், "இனிமேல் என் பலம் உங்களிடந்தான் இருக்கிறது, சேகர்! நீங்கள் எங்கள் பக்கமாக எழுதினால்தான் எங்களுககுப் பலம்" என்றார்.

"அது எப்படி முடியும், ஸார்? உங்களுக்குத் தெரியுமே; நான் கொள்கையளவில் வேலைநிறுத்தத்தை ஆதரிப்பவன்."

"ஆனால் மணியம் நாளைக்கு உங்களை அதை எதிர்த்து எழுதச் சொன்னால் நீங்கள் எழுதுவீர்களா மாட்டீர்களா?"

"நான் எழுத மாட்டேன் என்றுதான் நினைக்கிறேன்."

அமைதியாக இதைச் சொன்னபோது அவனுடைய குரலில் கண்டிப்பு இருந்ததையும் கோவிந்தன் கவனித்தார். ஆனால் அவர் மிகவும் பணிவோடு, "எனக்காக நீங்கள் இதைச் செய்ய முடியாதா?" என்று கேட்டார்.

"நீங்கள் இதை வீணாகச் சொந்த விஷயமாக்குகிறீர்கள், ஸார்! நான் வேலைநிறுத்தத்தை எதிர்த்து எழுதுவதானால்

உங்களுக்கும் ஆலைக்கும் உள்ள விவகாரத் தொடர்பில் சிறிதும் மாறுதல் உண்டாகாது.''

இதைக் கேட்டதும் கோவிந்தனுக்கு மிகவும் கோபம் வந்தது. ஆயினும் அதை அவர் அடக்கிக்கொண்டு, "இதோ பாருங்கள், சேகர்; நான் இப்போது தெளிவாகச் சொல்லி விடுகிறேன். நீங்கள் வேலைநிறுத்தத்தை ஆதரிப்பதாக இப் போது பேசுகிறீர்களே; உங்களுடைய இந்தக் கொள்கை கடைசி வரைகதும் நீடித்திருக்குமா? இப்பொழுது, சர்க்காருக் குத் துணி வேண்டும். ஆகையால் இந்த வேலை நிறுத்தம் சட்ட விரோதமானது என்று அது தீர்மானிக்கும். அந்த நிலை யிலும் நீங்கள் வேலைநிறுத்தத்தை ஆதரிப்பீர்களா?'' என்றார்.

"கட்டாயம்! என் சொந்தப் பத்திரிகையாக இருந்தால், சர்க்கார் வேலைநிறுத்தத்தைச் சட்ட விரோதம் என்று தீர் மானித்த பிறகும் நான் வேலைநிறுததத்தை ஆதரித்தே எழுது வேன்.''

"உங்களுக்குச் சொந்தப் பத்திரிகை இல்லாத குறையை நான் நீக்குகிறேன், சேகர்! நான் இப்பொழுதே முதல் கொடுக்கிறேன். நாளையிலிருந்து உங்கள் சொந்தப் பத்திரி கையை ஆரம்பியுங்கள். பார்க்கலாம், உங்களுடைய பிரதாபத் தையும்!''

"நீங்கள் நடுவிலே பேசாதீர்கள், பம்புஸேட்! இப்போது இருக்கும் நிலையில் தொழிலாளிகளின் எந்த வேலைநிறுத்தமும் நிறைவேறாது, சேகர்! ஆலைக்குள்ளிருந்து வேலைநிறுத்தம் செய் வது சட்ட விரோதம் என்ற உத்தரவு இரண்டு மூன்று நாளைக் குள்ளே வெளிவரப்போகிறது. உங்களைப் போன்ற அறிவாளி கள் தொழிலாளர்களைப் பிடிவாதம் பிடிக்காமல் வேலைநிறுத் தத்தை விடும்படி உபதேசிப்பதுதான் சரியான வழி.''

"ஸார், நமது நோக்கத்தில் வேற்றுமை இருக்கிறது. உலகத்தின் முன்னேற்றத்துக்குக் காரணமான எத்தனையோ விஷயங்களைப் பைத்தியக்காரத் துணிச்சல் என்று முதலில் சிலர் சொல்வதுண்டு. தனக்குத் துணி வேண்டும் என்று தொழிலாளர்களை அடக்கும் சர்க்கார் அவர்களுக்குத் தகுந்த சம்பள உயர்வு கொடுக்க வேண்டும் என்று ஆலைமுதலாளி

களுக்கும் கட்டளை இடவேண்டாமா? சர்க்காரிடம் இவ்வளவு மனிதத்தன்மைகூட இல்லையென்றால் தொழிலாளிகள் பைத்தியக்காரத் துணிச்சல் கொண்டாவது அந்த மனிதத்தன்மையைச் சர்க்காருக்குக் கற்றுக் கொடுக்கத்தான் வேண்டும்.''

''சேகர், நீங்கள் என்றையிலிருந்து இந்தப் பைத்தியக்காரத் துணிச்சல் வழியில் சேர்ந்தீர்கள்? நான் உங்கள் நண்பன் என்ற முறையில் சொல்கிறேன். உங்களுடைய இந்த நோக்கம் வெற்றிபெறாது. மஞ்சு அம்மாளுக்கு அண்ணனும் கணவனும் சமமாகத்தான் வாய்த்திருக்கிறார்கள் என்று சொல்ல வேண்டும்!'' என்று கூறி அவர் கலகலவென்று சிரித்தார்.

அடுத்த கணமே அவர் முகம் வருத்தத்தைக் காட்டியது. ''சேகர், நீங்கள் எனக்கு உதவி செய்ய மாட்டீர்களா? நான் அந்தத் தந்திரக்காரக் கிழவனின் கையில் தட்சிணை வைக்க வேண்டும் என்பதுதான் இதற்கு அர்த்தம்'' என்றார்.

இதைச் சொல்லி அவர் சிரித்துக்கொண்டே எழுந்து நின்றார்.

சேகரன் அங்கிருந்து வீட்டுக்குத் திரும்பி வந்தபோது மஞ்சுவும் சரளாவும் படுக்கையில் உட்கார்ந்து வம்பளந்து கொண்டு இருந்தார்கள்.

அவன் அறைக்குள் நுழைந்ததும் நுழையாததுமாக, மஞ்சு எழுந்து வந்து, ''இப்பொழுதுதான் இந்தத் தந்தி வந்திருக்கிறது'' என்று சொல்லி, பிரித்த தந்தி ஒன்றை அவன் கையில் கொடுத்தாள்.

அது தினகரன் அடித்த தந்தி.

''கல்யாணம் நிச்சயமாயிற்று. உடனே புறப்படுக.''

சேகரன் தந்தியைப் படித்ததும் பேசாமல் சட்டைப்பையில் வைத்துக்கொண்டான். மஞ்சுவும் சரளாவும் அவனுடைய கலங்கிய முகத்தை ஆவலோடு பார்த்தார்கள்.

கடைசியில் மஞ்சு, ''இது யாருக்குக் கல்யாணம்?'' என்று கேட்டாள்.

''அநேகமாக, தினகரனுக்குக் கல்யாணமாக இருக்கலாம். எனக்கு ஒன்றும் நிச்சயமாகத் தெரியாது.''

"இப்பொழுதெல்லாம் கல்யாண முகூர்த்தமே இல்லையே?"

"முகூர்த்தம் எதற்கு, மஞ்சு? இது ரிஜிஸ்தர் கல்யாணமாக இருக்கலாம்" என்று சரளா குறுக்கே பேசினாள். கிண்டலான புன்னகையும் அவள் வதனத்தில் தோன்றியது.

சேகரன் அவர்களுடைய பேச்சைக் கவனிக்காமலே, "நான் கால்மணி நேரத்துக்குள் ரஜனியிடம் போய்வருகிறேன். அதுவரைக்கும் நீங்கள் இங்கே இருக்க முடியுமா, சரளா அம்மாள்?" என்று கேட்டான்.

"அவர் உங்களோடு அகோலாவுக்கு வரப்போகிறாரோ?"

"நான்தான் உன்னிடம் சொன்னேனே மஞ்சு, எனக்கு இன்னும் எதுவும் நிச்சயமாகத் தெரியாது."

"அப்படியானால் இப்போது அவளிடம் போக வேண்டிய அவசியம் என்ன?"

"விடிகாலை வண்டியில் நான் புறப்பட வேண்டும். ஆகையால் கம்பெனி வேலைகளைப்பற்றி ஏற்பாடு செய்ய வேண்டும்" என்று எரிச்சலோடு சொல்லிவிட்டு, அவள் பேச்சைக் கேட்கக் காத்திராமல் அவன் விர்ரென்று வெளியே போனான்.

அவன் ரஜனியின் வீட்டுக்கு வந்தபோது அவள் வராந்தாவில் உட்கார்ந்து படித்துக்கொண்டிருந்தாள். அவனைப் பார்த்ததும் அவள் ஆச்சரியத்தோடு எழுந்து நின்றாள். அவளுடைய கேள்விக்கு இடம் கொடுக்காமலே அவன் அந்தத் தந்தியை அவளிடம் கொடுத்தான்.

அதைப் படித்ததும் அவள் சிந்தனையிலே ஆழ்ந்தாள். அவள் நெற்றியில் வேர்வைத் துளிகள் தோன்றின.

"நான் காலை ஆறு மணி வண்டியில் அகோலாவுக்குப் போகிறேன்."

"எப்பொழுது திரும்பி வருவீர்கள்?"

"வேலை முடிந்தவுடனே."

இதைச் சொல்லிவிட்டு அவன் சுற்றுமுற்றும் பார்த்தான். சிறிது தூரத்தில் கட்டிலில் படுத்திருந்த ரஜனியின் தாயும் தங்கையும் ஏதோ மெதுவாகப் பேசிக்கொண்டிருந்தார்கள்.

அவன் நடுநடுங்கும் தன் கைகளை இணைத்து மார்போடு சேர்த்துக்கொண்டு, "நான் சீக்கிரமே திரும்பி வந்துவிடுவேன். என் மதிப்பைக் காப்பது உங்கள் கையில்தான் இருக்கிறது, ரஜனி!" என்றான்.

அவள் ஒன்றுமே பேசவில்லை.

அவனுடைய நடுங்கும் கைகளைப் பிடித்துக்கொண்டு, அவனை அங்கிருந்து நகராமல் செய்யவேண்டும் என்ற ஒரே எண்ணந்தான் அவளுடைய கலங்கும் உள்ளத்திலே, வெட வெடக்கும் உடலிலே எழுந்தது.

## 20

தினகரனை ஸ்டேஷனில் பார்த்ததுமே சேகரன் தன் கவலைகளை மறந்தான்.

முதல் நாள் இரவு முழுவதும் அவன் தூக்கமின்றித் தவி யாகத் தவித்தான். ரஜனியிடமிருந்து திரும்பி வந்ததும், அவன் பேசாமல் தன் படுக்கையில் போய்ப் படுத்தான். ஆனால் அவனுடைய கலங்கிய வருந்திய மனத்துக்குத் தேவை யாக இருந்த அமைதியை மஞ்சு துளியும் கிடைக்க விடவில்லை.

இரவில் அவன் ரஜனியிடம் புறப்பட்டபொழுதே, சரளா மஞ்சுவைப் பார்த்து, "நீ என்ன வேண்டுமானாலும் சொல்லிக் கொள், மஞ்சு! சேகரன் தனியாக அகோலாவுககுப் போக வில்லை" என்றாள்.

"அதுதான் வெளிப்படையாகத் தெரிகிறதே! அவர் அவளைக் கல்யாணம் செய்து கொண்டு கூடத் திரும்பி வருவார்!"

சரளா தனக்குள் சிரித்துக்கொண்டே, "எதையாவது பேசாதே, மஞ்சு!" என்றாள்.

"எதையாவது பேசுகிறேனாவது? இனிமேல் நான் அந்த விஷயத்தை எப்போதாவது கேட்கத்தான் போகிறேன்; அது ஒன்றுதான் இப்பொழுது பாக்கி இருக்கிறது!"

வெறுப்போடு இதைச் சொன்ன மஞ்சுவின் கண்களில் நீர் துளும்பியது. அவள் அழுதபடியே தன் துயரத்தைக் கொட்டி னாள்; "சரளா, நீ எவ்வளவோ சுகமாக வாழ்கிறாய். இவ்வளவு

நாளும் எனக்கு என் அண்ணனைப் பற்றிய கவலை இருந்தது. இப்போது அதனோடு இந்த ஜன்மாநதரத்துப் பாவமும் சேர்ந்து கொண்டது. அண்ணியின் குடும்பம் அப்படி நடக்கிறது! என் குடும்பம் இப்படி நடக்கிறது. பெண்ணுக்குப் பொருளா தாரச் சுதந்தரம் இருந்தால் அவள் சுகமாக வாழ முடியும் என்று நாம் சொல்கிறோமே? அண்ணியும் நானும் இந்த நிமிஷத்தில் எங்களை நாங்கள் தாங்கிக்கொள்ள முடியும். ஆனால் இந்தப் பொருளாதாரச் சுதந்தரத்தினால் என்ன பயன்?''

''இன்றைக்குத்தான் இது உனக்குத் தெரிகிறது, மஞ்சு! இந்த அநுபவம் எனக்குக் கல்யாணமான நாள் முதலே ஏற் பட்டுவிட்டது. நான் சுகமாக வாழ்வதாக நீ நினைக்கிறாய். சேகர் எவ்வளவுதான் ஏமாற்றுக்காரராக இருந்தாலும் என் வீட்டுக்காரருக்கு உறை போடக் காணமாட்டார்! கணவன் கெட்டவனாக இருந்தால், பழங் காலத்துப் பெண்கள் வீட்டில் பெரிய ரகளை செய்தும், பிறந்தகத்தில் முறையிட்டும், அக்கம் பக்கத்து வீடுகளில் அழுது ஆகாத்தியம் செய்தும் அதை விளம்பரப் படுத்திவிடுவார்கள். ஆனால் இந்தக் காலத்துப் படித்த பெண் தன் குடித்தனம் பாழாவதை இரண்டு கண்களா லும் பேசாமல் பார்த்துக்கொண் டிருக்க வேண்டியதுதான்! ஊம் கூட்டாமல் மன வருத்தத்தை அவள் பொறுக்கத்தான் வேண்டும். கணவனுடைய கேளிக்கை மனத்தைத் தன் வசப் படுத்துவதற்காக அவள் பைத்தியக்கார எண்ணத்தோடு அவனுடைய கெட்ட பழக்கங்களில் கலந்துகொள்கிறாள். கடை சியில் பார்க்கப் போனால் அவள் எல்லா விஷயங்களிலும் தன்னையே இழிவுபடுத்திக் கொள்கிறாள். பழைய குடும்பத் தில் ஒருவேளை காதல் இலலாமலிருக்கலாம்; ஆனால் உறுதி யான நம்பிக்கை இருந்தது. புதிய குடித்தனத்திலோ காதலும் இல்லை; உறுதியும் இல்லை; நம்பிக்கையும் இல்லை.''

''நான் சில நாளாக வேறு விதமாக நினைக்கிறேன், சரளா! பெண் தன்னைத் தானே நம்பி வாழ முடியுமானால் அவள் கணவனிடம் ஒட்டிக் கொண்டிருக்க வேண்டிய அவசியம் இல்லை என்று நான் நினைக்கிறேன்.''

"நீ எப்படி அதைச் சொல்கிருய், மஞ்சு? ஒரு கணவன் கெட்டவன் என்று அவனைத் துறந்து மற்ருெருவனைப் பற்றிஞலும், அந்த இரண்டாவது கூட்டாளி நல்லவனுகத்தான் இருப்பான் என்பது என்ன நிச்சயம்? அது தவிர, குழந்தைகளைப் பற்றிய சிக்கல் வேறு இல்லையா? அடிக்கடி புதுக் குடித்தனம் வைத்துக்கொள்ளும் பெண் தன் உடலையும் மனத்தையும் மட்டுமல்ல, தன் குழந்தைகளின் வருங்கால வாழ்வையும் நாசமாக்குகிருள். இன்று மண விஷயத்தில் பெண்களின் நிலை, 'சாப்பிட்டால் ஜீர்ணமாவதில்லை; எறிந்துவிட்டாலோ பசிக்கிறது' என்ற கணக்கிலே இருக்கிறது. ஆனல் வாழ்க்கையில் துணைவனே அடியோடு வேண்டாம் என்று நீ சொன்னல், அது வேறு விஷயம்!"

நந்துவைத் தட்டித் தூங்கப்பண்ணிக்கொண் டிருந்த மஞ்சு வாய் திறவாமல் இதைக் கேட்டாள்.

சரளா தொடர்ந்து பேசினுள்: "உண்மையில் என்னைவிட நீதான் சுகமாக வாழ்கிருய், மஞ்சு! சேகரன் ரஜனியிடம் வெறி கொண்டிருப்பதாகத் தோன்றிஞலும், இன்னமும் அவர் எல்லையை மீறிப் போய்விட்டதாக எனக்குத் தெரியவில்லை. அவருக்கு எப்பொழுதுமே மனம் நல்லது. நல்ல மனமுடையவர்கள் ஏதாவது காரணத்தால் இன்று மாறிஞலும், நாளடைவில் வழிக்கு வந்துவிடுவார்கள். இப்படிப்பட்ட கணவனைப் பற்றி நீயே வெறுத்துப் பேசினல், என்னைப்போன்ற நிலையிலுள்ளவர்கள் என்ன செய்வது?"

சரளா இப்படிப் பேசியதனல் மஞ்சுவுக்குச் சிறிது ஆறுதல் உண்டாயிற்று. ஆனல் சேகரன் வந்ததுமே, மறுநாள் ரஜனி அவனேடு அகோலாவுக்குப் போவாளோ என்னவோ என்ற சந்தேகத்தினல் மீண்டும் அவள் மனம் தவித்தது.

படுக்கையில் படுத்தபடியே அவள் தவித்ததை முதலில் சேகரன் கவனிக்கவில்லை. அவன் தன் சிந்தனையிலேயே ஆழ்ந்திருந்தான். ஆனல நள்ளிரவில் திடீரென்று எழுந்து வந்து, அவன் கையைப் பிடித்துக்கொண்டு, "என்னிடம் உண்மையை ஒளிக்காமல் ஒரு விஷயத்தைச் சொல்வீர்களா?" என்று கேட்டாள்.

"நான் இன்று வரைக்கும் உன்னிடம் எப்பொழுதுமே உண்மையை ஒளித்துப் பேசியதில்லை" என்று சொல்லி, அவன் அவளுடைய கையை வீசினான்.

அவனுடைய கோபத்தை உணர்ந்த மஞ்சு, "அதைப்பற்றி இப்போது விவாதம் வேண்டாம். போனதை யெல்லாம் மறந்துவிடுவோம். நான் கேட்கும் ஒரு கேள்விக்கு மட்டும் நேர்மையாகப் பதில் சொல்லுங்கள்" என்றாள்.

"கட்டாயம் சொல்கிறேன்."

"நாளைக் காலையில் நீங்கள் தனியாகத்தான் அகோலாவுக்குப் போகிறீர்களா? உண்மையைச் சொல்லுங்கள்."

"ஆமாம், நான் தனியாகத்தான் போகிறேன்."

ரஜனியின் பெயரைச் சொல்லி மறுபடியும் அதே கேள்வியைக் கேட்க வேண்டுமென்று அவள் நினைத்தாள்; ஆனால் ஏனோ அந்தப் பெயரைச் சொல்ல அவளுக்கு விருப்பமில்லை. அதனால் அவள், "இப்படி யெல்லாம் சொன்னால் எனக்குத் திருப்தியாக இருக்காது" என்றாள்.

அவள் அவனிடம் நெருங்கி வந்து அவன் கையை எடுத்துத் தன் கழுத்தோடு அணைத்துக்கொண்டு, "இப்போது என்னிடம் மறுபடியும் சொல்லுங்கள். நீங்கள் நாளைக்கு உண்மையிலேயே தனியாகத்தான் அகோலாவுக்குப் போகிறீர்களா?" என்றாள்.

"ஆமாம், தன்னந் தனியாகப் போகிறேன். இப்போது உனக்குத் திருப்திதானே?"

அவளுடைய கழுத்தின் மென்மையான சூடான பகுதி அவன் கையில் பட்டதால் அவன் வெறிகொண்டு அவளுடைய கன்னத்தையும் கண்ணையும் ஓயாமல் முத்தமிட்டான். அவளுடைய இரு கரங்களையும் அவன் கெட்டியாக அழுத்திப் பிடித்தான். கொழுத்த வலுவான அந்தக் கைகளுள் தன் கரம் நசுங்கி விடும்போல அவளுக்குத் தோன்றிற்று. அப்பொழுது கூட அவளுடைய கை நடுங்கியதை அவன் உணர்ந்தான். அவளது உடல் முழுவதும் அலையலையாகச் சிலிர்த்தது. அவன் வெறி பிடித்தவன்போல் அவளை முத்தமிட்டவண்ணம் இருந்தான். கொதித்த தன் முகத்தில், பனித்துளியால் சிறிது

நனைந்த பவழமல்லிகை மலர்கள் பொழிவதாக அவளுக்குத் தோன்றியது. ஆனால் அந்த இன்ப வெறி சில நிமிஷநேரந் தான் நிலைநின்றது. திருப்தியுறாத இரக்கமற்ற இந்த முத்தங் களின் பின்னாலேயே, அவன் கண்ணிலிருந்து முத்துப் போன்ற நீர் அவள் முகத்தில் விழுந்தது.

அவளது கண்ணிலும் நீர் வெள்ளமாகப் புரண்டது. தன் முகத்தில் சாய்ந்திருந்த அவனுடைய வதனத்தை அவள் மெதுவாக எடுத்துத் தன் மார்பினால் அழுத்திக் கொண்டு, அவனுடைய கேசத்தை அன்போடு கோதினாள்.

அவன் மனம் மிகுந்த பளுவோடு இருந்தது. தன்னிடம் அவளுக்கு இருந்த அன்பு துளியும் குறையவில்லை என்ற நம்பிக்கையினால், அவன் கண்ணில் துயரத்தோடு ஆனந்தக் கண்ணீரும் பொங்கியது.

அவளுடைய அழகிய மார்பின் நடுப்பகுதியிலே அவன் தன் முகத்தைப் புதைத்துக்கொண்டு, படபடக்கும் அவளது உள்ளத்துக்கு ஆறுதல் கூறுபவன்போல, "மஞ்சு, மஞ்சு!" என்று கொஞ்சினான்.

அவனுடைய தீனக்குரல் அவள் நெஞ்சைப் பிளந்தது. "என்ன சொல்லுங்களேன்!" என்றாள்.

"நம் வாழ்க்கையில் இனி இம்மாதிரியான இரவு வரப் போவதில்லை."

"ஏன் அப்படியெல்லாம் வீணாக நினைக்கிறீர்கள்?"

அவளுடைய இந்தக் கேள்வியைக் கேட்டதும், தான் அகோலாவுக்குச் செல்லும் உண்மைக் காரணம் முழுவதையும் அவளிடம் சொல்லிவிடலாமா என்று அவனுக்குத் தோன் றிற்று. ஆனால் ஒரே ஒரு கணப் பொழுதுதான் அந்த எண் ணம் நிலைத்திருந்தது.

முழு விஷயத்தையும் அவளிடம் சொன்னால் என்ன தீங்கு நேரும், எப்படிப்பட்ட நம்பிக்கைத் துரோகம் ஆகிவிடும் என் பதை அவன் அடுத்த கணமே உணர்ந்தான்.

தன்னுடைய அந்த எண்ணத்தை அறவே மறந்துவிட விரும்பியவன்போல் அவன் அவளுடைய மார்பில் பின்னும் நன்றாகத் தன்னை மறைத்துக்கொண்டான். தூங்க விரும்பும்

குழந்தை கண் கூசுவதால் ஒளியிலிருந்து தப்பித்துக் கொள்வதற்காகத் தாயின் மடியில் முகத்தைப் புதைத்துக் கொள்வது போல அவன் தன் முகத்தை மறைத்துக்கொண்டு அவளுடைய இரு கைகளாலும் தன்னை இறுகப் பிணைத்துக் கொண்டான். இந்த இன்பமான நிலையில் அவளுக்கு விரைவிலே தூக்கம் வந்தது. அவன் மட்டும் எதை எதையோ நினைத்துக்கொண்டு ஓயாமல் தவித்தான்.

மஞ்சு அதிகாலையில் எழுந்து மிகவும் சுவையான பலகாரம் செய்து அவனுக்கு மீண்டும் மீண்டும் வற்புறுத்தலோடு பரிமாறினாள்.

அவனுக்குத் தலை வலித்தது; கண்கள் எரிந்தன. ஆயினும் அவளிடம் சிரித்துக்கொண்டே, "நான் மறுபடி உன் கண்ணில் தென்படப் போவதில்லை போல் எண்ணி என்னை நீ இப்படி வற்புறுத்துகிறாயே?" என்றான்.

"எதையாவது தோனறியபடி பேசாதீர்கள். இன்பமான வேளையில் இப்படி எதையாவது பேசுவது உங்கள் சுபாவம்."

இதற்குப் பிறகு ரெயில் பிரயாணத்தில் அவன் நான்கு மணி நேரம் தூங்கினான். வண்டி பத்னேராவுக்கு வந்தபோது, அவன் எழுந்து குழாயடியில் போய் முகத்தை அலம்பிக் கொண்டான். அதிலிருந்து அகோலா வரும் வரைக்கும் இனிமேல் தான் என்ன என்ன செய்ய வேண்டும் என்ற சிந்தனையிலேயே அவன் மூழ்கியிருந்தான.

ஸ்டேஷனிலிருந்து சேகரன் தினகரனோடு பேசிக் கொண்டே அவனுடைய பங்களாவுக்கு வந்து சேர்ந்தான். பங்களா சிறியதாகத்தான் இருந்தது. ஆனால் நடுவில் அழகான ஹாலும் இரண்டு புறமும் வசதியான மூன்று அறைகளும் இருந்தன. சுற்றுப் புறத்தில் தோட்டம் எதுவுமில்லாமல் முட்செடிகள் நிறைய வளர்ந்திருந்தமையால் பங்களாவில் இருப்பவர்களையோ, நடப்பதையோ தெருவில் போகிறவர்களால் பார்க்க முடியாது. அதனால் அந்தப் பங்களா ஒரு பட்டிக்காட்டு வீடுபோல இருந்தது.

தினகரனும், அவனுடைய டிரைவர் அபய சிங்கும், பகலில் மட்டும் அங்கே இருந்துவந்த சமையற்காரனும் ஆகிய

மூன்று பேரே அந்தப் பங்களாவில் இருந்தார்கள். ஆதலால், முதல் தடவையாக அங்கே வந்திருந்த போதிலும், சேகரனுக்கு அங்கே எவ்விதமான கூச்சமும் உண்டாகவில்லை.

அவர்கள் இருவரும் வீட்டுக்கு வந்ததும் சாப்பாடு தயாராக இருந்தது. சேகரன் ஸ்நானம் செய்ததும் அவர்கள் சாப்பிட உட்கார்ந்தார்கள்.

சேகரன் வண்டியிலிருந்து இறங்கிய கணத்திலிருந்து அவனுடைய ஒவ்வோர் அங்க அசைவையும் முக மாறுதலையும் தினகரன் கூர்ந்து கவனித்துக்கொண் டிருந்தான். ஸ்டேஷனில் அவனுடைய சோர்ந்த முகத்தைக் கண்டதுமே, 'நாம் இவனை வீணுகத்தான் இந்த வேலையில் சிக்க வைத்தோமோ?' என்று அவனுக்குத் தோன்றியது.

ஆனால் வண்டியிலிருந்து இறங்கியதும் சேகரன் உல்லாசமாகக் கை குலுக்கவே, அவனுடைய சந்தேகம் தீர்ந்தது. ஆயினும் அவனுடைய உல்லாசத்திலும் துன்பம் மறைந்திருப்பதைக் கண்டதும், அவனைத் தனிமையில் சந்தித்து, மெதுவாக அவனுடைய துயரத்தை அறிய விரும்பினுன்.

ஆனல் பாதி சாப்பிட்டுக்கொண் டிருந்தபோது அவன் அன்புடன் சேகரனுடைய கையைத் தொட்டு, "என்னிடம் ஒரு விஷயத்தை மனம் விட்டுச் சொல்வீர்களா, சேகர்?" என்று கேட்டான்.

"என்ன?"

"நீங்கள் வந்தது முதல் நான் பார்க்கிறேன். உங்கள் மனம் அடியோடு அமைதியின்றி, ஏதோ துயரத்தில் ஆழ்ந்திருக்கிறது."

"ஆமாம், தினகர்; நீங்கள் சொல்வது உண்மை. நான் உங்களோடு நாகபுரியில் உலாவச் சென்றபோது, என் இன்ப நாட்கள் இனி முடிந்துவிட்டன என்று சொன்னேனே; அது உண்மைதான் என்று இப்போதெல்லாம் தோன்றுகிறது."

"அது எப்படி?"

சேகரன் தனக்கும் ரஜனிக்குமுள்ள நட்பைப்பற்றியும், மஞ்சுவுக்குத் தன்னிடமுள்ள சந்தேகத்தைப்பற்றியும் சுருக்கமாகச் சொன்னுன்.

தினகரன் சிறிது நேரம் சிந்தனையில் ஆழ்ந்திருந்தான். பிறகு சேகரனை உற்றுப் பார்த்து, "உங்களுக்கும் ரஜனிக்கும் பரஸ்பர அன்பு இல்லை என்றுதான் நீங்கள் உண்மையாக நினைக்கிறீர்களா?" என்று கேட்டான்.

"நான் அதை எப்படிச் சொல்ல முடியும்? எங்களுக்குப் பரஸ்பர அன்பு கட்டாயம் இருக்கிறது. ஆனால் அந்த அன்பின் உருவமும கோரிக்கையும் முற்றும் வேறானவை என்று நான் நினைக்கிறேன். அதற்கு அத்தாட்சி இதுதான்: ரஜனியிடம் எனக்கு எவ்வளவு அன்பு இருந்தாலும் மஞ்சுவிடமுள்ள பற்றுக் கொஞ்சமும் குறையவில்லை. உண்மையிலேயே தினகர், ரஜனியிடமுள்ள இந்த அன்பு என் வாழ்வில் புதுமையான விந்தையான அநுபவம்."

"உங்களுக்கு மஞ்சு அம்மாளிடம் பற்று இருப்பதால் ரஜனியிடமுள்ள உங்கள் அன்பை நீங்கள் வேறு விதமாக நினைக்கிறீர்கள். ஆனால் ரஜனிக்கு உங்களிடமுள்ள அன்பும் இவ்வாறே வேறு வகையானது என்று நீங்கள் கருதுகிறீர்களா?"

"ஆமாம், ஆண்பெண்கள் தமக்குள் கொள்ளும் காதலும் நட்பும் அடிப்படையில் என்னதான் காமக் கலப்பு இல்லாம லிருந்தாலும, இயற்கையின் வல்லமையினால் எந்த அஜாக்கிர தையான நிமிஷத்தில் அதில் காமம் வந்து சேரும் என்று நிலை சொல்ல முடியாது. ஆனால் ரஜனியிடம் எனக்கு ஒரு நம் பிக்கை உண்டு: நான் ஒருவேளை மோகவசப்பட்டுச் சிந்தனை யின்றி நடந்துகொள்ளலாம்; ஆனால் அவள் என்னை எல்லை மீறி ஒருபொழுதும் நடக்கவிட மாட்டாள்."

"உங்களைத் தவிர வேறு யாரிடமும் ரஜனி அம்மாளுக்கு அன்பு இல்லை அல்லது இருந்ததில்லை என்று நீங்கள் நிச்சய மாகச் சொல்ல முடியுமா?"

"முடியாது. இந்த எண்ணமே இதுவரைக்கும் எனக்குத் தோன்றியதில்லை."

"சேகர், நான் அவளை நமது கம்பெனியின் திறப்பு விழா வின்போது இரண்டொரு நாள் பார்த்ததுதான்; அவள் விசித் திரமான பெண் என்று அப்பொழுது எனக்குத் தோன்றிற்று.

ஏன் அப்படித் தோன்றிற்று என்பதை மட்டும் என்னால் சொல்ல முடியாது. அதிலும் அவளுடைய மலர்ந்த முகத்திலே அடிக்கடி ஒளிவீசும் அந்தக் கவலையற்ற சிரிப்பைப் பார்த்தால் உயரமான மலையிலிருந்து கீழே நுரையுடன் விழும் நீர் வெள்ளத்தைப் போல் இருக்கிறது.''

பிறகு அவன் சிறிது நேரம் பேசாமல் சாப்பிட்டான். சாப்பாடு முடிந்து எழுந்தபோது, ''சேகர், நான் கல்யாணமாகாதவன் என்பதுதான் உங்களுக்குத் தெரியுமே. பெண்ணின் இயல்பைப்பற்றி அநுபவ பூர்வமாக எனக்கு ஒன்றும் தெரியாது. பெண்மையின் மென்மை என் உள்ளத்தில் படக்கூடாது என்றுதான் விதி என்னைச் சிறு குழந்தையைப் போலவே படைத்துவிட்டது போலும்! இந்த நாட்டை முன்னேற்ற வேண்டும் என்ற வெறி கொண்ட என் தந்தை மறுமணம் செய்துகொள்ளாமல் தாமாகவே என்னை வளர்த்தார். ஆதலால் மண வாழ்க்கையைப்பற்றி நான் பேசுவது சரியல்ல. ஆனால் நான் ஒன்று சொல்ல முடியும்: ஒரு பெரிய செயலைச் சாதிக்க விரும்பும் எந்த லட்சியவாதியும் குடும்பப் பற்றிலிருந்து விலகித்தான் இருக்க வேண்டும்'' என்றான். அதற்குப் பிறகு அவன் மறுபடி அந்த விஷயத்தைப்பற்றி ஏதுமே பேசவில்லை.

சாப்பாடு ஆனதும் ஒரு மணி நேரம் இருவரும் ஓய்வு எடுத்துக்கொண்டார்கள். பிறகு பங்களாவின் இடப் புறத்திலுள்ள கடைசி அறைக்குத் தினகரன் அவனை அழைத்துச் சென்றான்.

அது அவனுடைய அந்தரங்க அறை. அவனைத் தவிர அந்த அறையைத் திறக்கவோ அதனுள் செல்லவோ யாருக்கும் அநுமதி கிடையாது.

உள்ளே போனதும் அவன், அந்த அறையை உள்ளிருந்து தாழிட்டுவிட்டு, மூலையில் இருந்த பெட்டியிலிருந்து ஒரு படத்தை எடுத்து மேஜைமேல் விரித்தான்.

கோடுகளால் வரைந்த அந்தப் படத்தில் அங்கங்கே சிவப்புப் புள்ளிகள் இருந்தன.

தினகரன் சிரெட்டைப் பற்றவைத்துக் குடித்துக்கொண்டே, அந்தப் படத்தைச் சேகரனுக்கு விளக்கிக் கூறினான்: ''சேகர்,

இங்கிருந்து ஏழாவது மைலில், சாலேயிலிருந்து நான்கு பர் லாங்கிலுள்ள ஒரு பங்களாவுக்கு இன்று நாம் போக வேண் டும். இதுதான் சாலே; இது பங்களாவுக்குப் போகும் மண் பாதை; இந்தப் பக்கமாகத்தான் நாம் பங்களாவுக்குள் நுழைய வேண்டும்.''

''இது யாருடைய பங்களா?''

''இந்த ஊரில் பிரசித்த சாவ்காரரான லாபராம் என்பவ ருடைய பங்களா இது. அவருக்கு டவுனில் ஒரு பெரிய வட் டிக் கடையும் பங்களாவும் இருக்கின்றன. ஆனல் அவருடைய வைப்பாட்டி இந்தப் பங்களாவில்தான் இருக்கிருள். அவர் தினமும் இரவில் இங்கே வருவார்.''

''ஆனல், வயல் வெளியிலுள்ள இந்தப் பங்களாவைச் சூறையிடுவதனல் நமக்கு உண்மையாக ஏதாவது கிடைக் குமா?''

''உங்கள் சந்தேகம் சரிதான். லாபராமைக் கொள்ளே யடிக்க வேண்டுமானல், அவருடைய இந்தப் பங்களாவைத் தான் முற்றுகையிட வேண்டும். அந்த வைப்பாட்டியிடம அவ ருககு உயிருக்குமேல் அனபு உண்டு. லட்சக்கணக்கான ரூபாய்க்கு அவளுக்கு நகை வாங்கிக் கொடுத்திருக்கிருர். இப் போதுதான் முந்தாநாள்கூட அவர் பம்பாயிலிருநது அவளுக் காக விலேயுயர்ந்த ஒரு நெக்லேஸ் வாங்கி வந்திருக்கிருர்!''

''அந்தப் பங்களாவுக்குப் பலமான காவல் இருக்குமே?''

'காவல் இல்லாமலா? ஸேட் சொந்தமாகவே துப்பாக்கி லேஸென்ஸ் வாங்கியிருக்கிருர். அது தவிர, இரண்டு காவ லாளிகளும் மற்ற வேலேயாட்களும் அங்கே எப்போதும் இருப் பார்கள்.''

''நாம் எத்தனே பேர் அங்கே போகிறேம்?''

''அதிகாரபூர்வமாக நாங்கள் ஆறு பேர்; தவிர நீங்கள் ஒன்று. நீங்கள் இன்று எங்களோடு வரப்போகும் செய்தி, அபயசிங்கைத் தவிர வேறு யாருக்கும் இன்னமும் தெரியாது. நாம் எல்லாரும் அங்கே போகும்போது மாற்று வேஷத்தில் செல்வோம். போவதற்கு முன்பு உங்களுக்கு நான் தக்க பயிற்சி அளிக்கப் போகிறேன்'' என்று சொல்லிச் சிரித்துக்

கொண்டே, தினகரன் அந்தப் பெட்டியின் அடியிலிருந்து சில பொருள்களை எடுத்தான்.

"வெற்றியைப் பற்றி உங்களுக்கு நம்பிக்கைதானு, தினகர்?"

"கட்டாயம். கடந்த இரண்டு வருஷங்களில் இது எங்களுடைய ஆருவது முயற்சி. ஆனல் இதுவரைக்கும் ஒரு தடவை கூடப் போலீசாருக்கு எங்களிடம் சந்தேகம் ஏற்பட்டதில்லை."

அவன் பெருமிதத்தோடு இதைச் சொல்லிவிட்டு, செந்நிறமுள்ள நீண்ட தாடியையும், பட்டாணியர் அணியும் உடைகளையும் சேகரன்முன்பு வைத்தான். பிறகு அந்தத் தாடியை அவன் முகத்தில் கட்டிவிட்டு, புன்னகையுடனே அவனைக் கண்ணுடியின் முன்பு நிற்க வைத்தான்.

அந்தச் சமயத்தில் 'கணகண'வென்று மணியொலி கேட்டது.

தினகரன் கோபத்தோடு கதவருகில் சென்று, "அபயசிங், யார் அது?" என்று கேட்டான்.

"வெளியே யாரோ அம்மாள் வந்திருக்கிருள். உங்களைப் பார்க்க வேண்டுமாம்."

"இன்று பார்க்க முடியாது என்று அவளிடம் சொல்வது தானே? உனக்குத் தெரியாதா? அவளை எப்படி உள்ளே வர விட்டாய்?"

"நான் முன்னமே சொன்னேன், உங்களை இன்று பார்க்கவே முடியாது என்று. அவள் பிடிவாதமாக உள்ளே வந்து, 'எனக்கு மிகவும் முக்கியமான வேலை இருக்கிறது. அவரைப் பார்க்காமல் இங்கிருந்து அசையவே மாட்டேன்' என்று சொன்ஞள். ஜட்காக்காரனுக்குச் சத்தத்தைக் கொடுத்து விட்டு, அவள் ஹாலில் வந்து உட்கார்ந்திருக்கிருள். பெண் பிள்ளையை நான் எப்படித் தடுப்பது, ஸார்?"

"சரி, இதோ நான் வந்து பார்க்கிறேன். நீ அவளைக் கவனித்துக்கொண்டிரு. பங்களாவில் அவளை எங்கும் உலாவ விடாதே!" என்று சொல்லிவிட்டு, தினகரன் உடையை மாற்றிக்கொண் டிருந்த சேகரனிடம் வந்தான். "இதோ, நான் சற்று வெளியே போய்விட்டு வருகிறேன். யாரோ அம்மாள்

வந்திருக்கிருளாம். ஏதாவது இன்ஷ்யூரன்ஸ் கிளெய்ம் தொந்தரவாக இருக்கும்!'' என்று அவனிடம் கூறிவிட்டு, தினகரன் அந்த அறையிலிருந்து வெளியே சென்ருன்.

## 21

தினகரன், நடுவே வாசற்படிகளில் இருந்த திரைகளை விலக்கிக்கொண்டு ஹாலில் நுழைந்தான். அப்பொழுதுதான் ரஜனி நாற்காலியிலிருந்து எழுந்து, ''வணக்கம்'' என்ருள்.

அவன் ஸ்தம்பித்துப் போனுன். ஆனுல் அது அரைக் கணந்தான். உள்ளத்திலே எழுந்த வியப்பை அவன் அடக்கிக்கொண்டு மேலாகச் சிரித்துக்கொண்டே, ''நீங்கள் ஒன்பதரை மணி வண்டியில் வந்தீர்களா?'' என்று கேட்டான்.

''ஆமாம்.''

''அப்படியானுல் புறப்படும்போது தந்தி அடித்திருக்கலாமே. நான் ஸ்டேஷனுக்குக் கார் எடுத்து வந்திருப்பேன்.''

''வண்டியில் உட்காரும் வரைக்கும் நான் வருவது நிச்சயமில்லாமலே இருந்தது. தவிர, நான் இப்போது திடீரென்று வந்துங்கூட உங்களைச் சந்திப்பதற்குச் சத்தியாக்கிரகம் செய்ய வேண்டியிருந்தது. நான் முன்னுல் தந்தியடித்திருந்தால், இந்தப் பங்களாவுக்குள் நான் கால் வைக்க முடியாதபடி ஏற்பாடு செய்திருப்பீர்கள்'' என்று அவள் வேடிக்கையாகச் சொல்லிவிட்டு, ''சேகரனைச் சற்றுப் பார்க்கவேண்டும். அவர் எங்கே இருக்கிருர்?'' என்று கேட்டாள்

''அவரை இன்று பார்ப்பது மிகவும் கஷ்டம்.''

''ஏன்? அவர் ஏதாவது வேலையாக இருக்கிருரா? இங்கே தானே அவர் தங்கியிருக்கிருர்?''

''இங்கேதான் தங்கியிருக்கிருர். ஆனுல் இப்பொழுது அவரைப் பார்க்க முடியாது.''

பாம்பைப்போல் தன்னை உற்றுப் பார்த்த அவன் கண்களை அவள் உறுத்துப் பார்த்தாள். பிறகு சிரித்துக்கொண்டே, ''நான் சேகரனைப் பார்க்க வந்திருக்கிறேன். அவரைப் பார்க்காமல் இங்கிருந்து அசைய மாட்டேன். உங்களைப் பார்க்க

நான் தொடங்கிய இந்தச் சத்தியாக்கிரகம், அவரைச் சந்திக்கும் வரைக்கும் தொடரும்" என்றாள். அவள் பேச்சில் இருந்த உறுதியை அவன் உணர்ந்துகொண்டான்.

சிறிது நேரம் அவள் பேசாமலே இருந்தாள். பிறகு அவள் அமைதியாக, "நீங்கள் சேகரனை இங்கு எதற்காகக் கூப்பிட்டிருக்கிறீர்கள் என்பது எனக்குத் தெரியும், தினகர்!" என்றாள்.

அவள் எந்த நோக்கத்தோடு இதைப் பேசினாளோ அது அவனைக் கிண்டுவது போல இருந்தது. அவன் தன் ஆத்திரத்தை உள்ளுக்குள்ளே அடக்கிக்கொண்டு, "உங்களைச் சந்திக்க முடியுமா, முடியாதா என்பதை நான் சேகரனைக் கேட்டுச் சொல்கிறேன்" என்றான்.

அவன் நேரே தன் அறைக்கு வந்தான். உடை மாற்றிக் கொண்டு நிலைக்கண்ணாடியின் முன்னால் நின்றிருந்த சேகரனைப் பார்த்து, "உங்களைப் பார்க்க ரஜனி வந்திருக்கிறாள், சேகர்!" என்றான்.

"யார்! ரஜனியா வந்திருக்கிறாள்?"

"ஆமாம். உங்களை இன்ன வேலைக்காக இங்கே கூப்பிட்டிருக்கிறேன் என்பதையும் அவள் இப்பொழுது சொல்லி விட்டாள்."—அவனுடைய குரலில் இருந்த கோபத்தின் வேகத்தைச் சேகரன் தெரிந்துகொண்டான்.

முகத்திலிருந்து அவன் தாடியை எடுத்துவிட்டு, "என் மேல் நீங்கள் கோபித்துக்கொள்ள வேண்டாம், தினகர்! எனக்குத் தோன்றினால் நான் அவளை முழுக்க நம்புவேன் என்று நான்தான் உங்களிடம் முன்னமே தெளிவாகச் சொன்னேனே!" என்றான்.

"இன்று நீங்கள் வந்ததுமே அதை எனக்குத் தெரிவிக்கவில்லையே!"

"ஆமாம், நான் செய்தது தவறுதான்."

அவனுடைய இந்த நேர்மையான பதில், தினகரனுடைய சினத்தை அடக்கிவிட்டது. "சரி, நாம் வெளியே போய் வருவோம். அவள் உங்கள் வரவை எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறாள்" என்றான் தினகரன்.

அவர்கள் இருவரும் ஹாலுக்கு வந்தார்கள்.

ரஜனியைப் பார்த்தவுடன், 'இவள் என் பின்னலேயே அகோலாவுக்கு வந்திருப்பது மஞ்சுவுக்குத் தெரிந்தால் எவ்வளவு பெரிய அனர்த்தம் நேரிடுமோ!' என்றுதான் சேகரனுக்குத் தோன்றிற்று.

உடனே அவன் முதல் நாள் இரவு மஞ்சுவிடம் அன்போடு கூறிய சொற்கள் நினைவுக்கு வந்தன. அவனுடைய உள்ளம் திடுக்கிட்டது.

அப்போது ரஜனி பேசலானள்: "என்னை இங்கே பார்த்ததும் உங்களுக்கு ஆச்சரியமாக இருக்கும். நேற்றிரவு நீங்கள் என்னைப் பார்த்துவிட்டு வந்ததிலிருந்து நான் ஓயாமல் சிந்தனை செய்தேன்; பிறகு இங்கே வருவதென்று முடிவு கட்டினேன்."

ஒரு கணம் அவள் மௌனமாக இருந்தாள். அவர்கள் இருவரும் திகைத்து நின்ருர்கள்.

"தினகர், உங்களிடம் எனக்கு மிகவும் கோபம் வந்தது. இதை உங்களிடம் சொல்ல எனக்கு எவ்வித உரிமையும் இல்லை. ஆனல் நீங்கள் சேகரனை வீணுக்குத்தான் இந்த வழியில் இழுத்திருக்கிறீர்கள்!"

"ரஜனியம்மாள், உங்களை விடச் சேகரன் அறிவிலே குறைந்தவர் என்று நீங்கள் நினைக்கிறீர்களா?"

"இது நான் நினைப்பதைப் பற்றிய கேள்வி அல்ல. இம்மாதிரியான சாகசச செயல புரிவதற்கு மனிதனுக்குத் தன்னை மீறிய ஒரு கடுமை வேண்டும். அது இவரிடம் இல்லை என்று நான் கருதுகிறேன்."

தினகரன் ஒன்றுமே பதில் சொல்லவில்லை. ஆனல் சேகரன் கோபம் மிகுந்தவனய், "இதை எங்களுக்குச் சொல்லத்தான் நீங்கள் இங்கு வந்திருக்கிறீர்களா?" என்ருன்.

"இல்லை, இதைச் சொல்ல நான் வரவில்லை. தினகரனைச் சிறிது எச்சரிக்கை செய்யத்தான் வந்திருக்கிறேன்."

"அப்படியானல் அந்த வேலை முடிந்துவிட்டது. நீங்கள் போகலாம்" என்று தினகரன் கோபத்தோடு சொன்னன்.

உடனே அவள் நாற்காலியிலிருந்து எழுந்து தினகரன் அருகில் வந்து, அவனுடைய தோளின்மேல் கையை வைத்துக்

கொண்டு, "நான் உங்கள் தங்கை என்று நினைத்துக்கொள்ளுங்கள், தினகர்! உங்கள் தங்கையிடம் நம்பிக்கை வைப்பது போல என்னிடமும் நம்பிக்கை கொள்ளுங்கள். நான் உங்களை எச்சரிக்கை செய்ய மட்டும் வரவில்லை. கூடுமான அளவு உதவி செய்யவும் வந்திருக்கிறேன்" என்றாள்.

எதிர்பாராத கள்ளங்கபடற்ற அவளுடைய அந்த ஸ்பரிசத்திலும் அதையும் விட அச்சமற்ற அவளுடைய கண்களிலும் தினகரனுடைய நெஞ்சம் கரைந்தது. "நீங்கள் எங்களுக்கு என்ன உதவி செய்ய முடியும், ரஜனியம்மாள்? நாங்கள் இன்று செய்யப்போகும் செயலிலே நீங்கள் பங்கு எடுத்துக் கொள்ள முடியாது" என்றான்.

"அதில் பங்கு எடுத்துக்கொள்ள எனக்கு விருப்பமும் இல்லை, தினகர்! ஆனால் இந்தத் துணிச்சல்களெல்லாம் எப்போது உங்களையே திருப்பிக்கொள்ளுமோ, சொல்ல முடியாது. துரதிருஷ்டவசமாக அம்மாதிரியான சந்தர்ப்பம் நேருமானால், அப்பொழுது உங்களை அந்தச் சிக்கலிலிருந்து விடுவிப்பதற்கு என்ன செய்யவேண்டி யிருக்கும் என்பதை மட்டும் என்னிடம் சொல்லுங்கள்."

தினகரன் பக்கென்று சிரித்து, "நீங்களா எங்களை விடுவிக்கப் போகிறீர்கள், ரஜனியம்மாள்?" என்றான்.

அந்தச் சிரிப்பில் இருந்த அசட்டையை அறிந்திருந்துங் கூட ரஜனி அதைப் பொருட்படுத்தாமல், "நான் பெண் என்று தானே நீங்கள் நகைக்கிறீர்கள், தினகர்? இதை மட்டும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளுங்கள்: உங்கள் இருவரையும் விடுவிப்பதற்காக என் உயிரையே கொடுக்கவேண்டி யிருந்தாலும் நான் சிறிதும் பின்வாங்க மாட்டேன்" என்றாள்.

அவளுடைய அந்தக் கண்டிப்பான பேச்சு அவர்களுக்குச் சம்மட்டி யடியைப்போல இருந்தது. தினகரனுடைய வேகம் குறைந்துவிட்டது. அவன் மென்மையான குரலில், "நீங்கள் சொன்னது சரி, ரஜனியம்மாள்! இம்மாதிரியான செயல்களில் எப்பொழுது என்ன சந்தர்ப்பம் நேருமென்று நிச்சயமாகச் சொல்ல முடியாதுதான். என்ன ஆனாலும் என் வரைக்கும் நான் போலீசாரிடம் சிக்க மாட்டேன். ஆனால் இவர்

கைதானல், பம்பாயில் என் நண்பரான வக்கீல் பிரபாகரர் இருக்கிறர்; அவரைக் கூப்பிட்டுக்கொள்ளுங்கள்'' என்றன்.

அவன் சற்றுப் பேச்சை நிறுத்தினன். பிறகு ஒரு சிகரெட்டைப் பற்றவைத்துப் புகையை இழுத்துக்கொண்டே, "நான் எப்போதும் வெளியே இம்மாதிரி செயலுக்குப் புறப்படும்போது ஒன்று செய்வது வழக்கம்: என்னிடமுள்ள எல்லாக் காகிதங்களையும் எரித்துவிடுவேன். கைதானலும் நான் குற்றத்தை ஒப்புக்கொள்ளவே மாட்டேன். அடுத்தபடி, சட்ட ரீதியாகத் தப்பிததுக்கொள்ள முயல்வேன். அதுவும் முடியாவிட்டால் சிறையிலிருந்து தப்பித்துககொள்ள முயல்வேன்'' என்றன்.

அவன் சிறிது நேரம் பேச்சை நிறுத்தி, மென்று விழுங்கிக் கொண்டே மறுபடி பேசலானன். "சேகரனுக்கு உண்மையான செய்தி எதுவும் இதுவரைக்கும் தெரியாது. இன்று அவருக்கு அநுபவம் ஏற்பட வேண்டும் என்றுதான அழைத்துப் போகிறேன்'' என்றன்.

"தினகர், நான் உங்களை ஒரு கேள்வி கேட்டால் கோபித்துக்கொள்ள மாட்டீர்களே?''

"கோபமென்ன? தாராளமாகக் கேளுங்களேன்!''

"உங்களுடைய இந்த வழியினல் நாட்டுககு நன்மை உண்டாகும் என்று நீங்கள் நினைக்கிறீர்களா?''

"இது வழியைப் பற்றிய கேள்வி அல்ல, ரஜனியம்மாள்; காலத்தைப் பற்றிய கேள்வி. இந்தக் காலத்திலே நாம் பெருமுயற்சி செய்தால்தான் நாடு முன்னேறும். இந்த முயற்சியிலே நம்மைப் போன்ற லட்சக்கணக்கான இளைஞர்கள பலியாகலாம். ஆனல் அதற்காகப் பின்வாஙகிவிடலாமா? நாட்டு நலனுக்காக வேள்வியிலே நாம் ஒரு சமிதையாகும் பேறு கிடைக்க வேண்டும்; புரட்சியை உண்டாக்கிய ருத்திர மூர்த்திக்கு நம்முடைய சிதையின் சாம்பலினல் வழிபாடு நடக்க வேண்டும் என்ற ஆவல் நம் இளைஞர்களுக்குத் தோன்றத வரைக்கும் இந்த நாடு முன்னேறவே முடியாது.''

இதைச் சொன்னபோது தினகரனுடைய ஆழ்ந்த கண்களில் பளிச்சென்று ஓர் ஒளி வீசியது.

அவள் அவனை வேண்டுகிற குரலில், "இதைத் தவிர வேறு வழியே இல்லையா, தினகர்?" என்று கேட்டாள்.

"வேறு வழி என்ன இருக்கிறது, ரஜனியம்மா? திரும்பித் திரும்பி, சத்தியாக்கிரக வழி ஒன்றுதானே இருக்கிறது? அந்த வழி இனிமேல் நமக்குப் பயன்படாது. ஒருபுறம் வாயாலே தீவிரமாகப் பேசுவதும், மறுபுறம் மக்களைச் செயல் இல்லாத படி செய்துவைப்பதுமே அதன் இயல்பு. கதர்ச் சட்டையும் காந்திக் குல்லாயும் அணிந்து காங்கிரஸில் சேர்ந்த சாதாரண முதலாளிகள் சென்ற யுத்தத்தில் தங்கள் ஆலைகளில் போருக்கு வேண்டிய சாதனங்களை உண்டாக்கினார்கள். இன்று கோடிக் கணக்கான லாபத்தைச் சம்பாதித்து வருகிறார்கள். காந்தியடிகளின் உபதேசத்தினால் சிறைபுகுந்து அங்கே நூல் நூற்பவர்களும் பலர் இருக்கிறார்கள். இப்படி ஒன்றுக்கொன்று முரணாக மக்களைச் செயலற்றவர்களாக்கும் வழியினால் நாடு எப்படி முன்னேறும்?"

"ஆமாம், உங்களுடைய கொடுமையான காபாலிக வழியினால்தான் அது முன்னேறும்! இல்லையா?"

"காபாலிக வழியா? உலகத்தில் இன்று எந்த இயக்கத்தில்தான் கொடுமை இல்லை? நீங்கள் பாராட்டுகிற அஹிம்சையிலே கொடுமை இல்லையா? எதிர்ப்பை அடக்கும்போதும் சாத்துவிக அஹிம்சையினால் எதிரியை அழிக்கும்போதும் என்ன என்ன சம்பவங்கள் நடக்கின்றன என்பதைச் சமீபகாலச் சரித்திரமே சொல்லிவிடும். புரட்சி என்பது ஒரு தீ. உலகத்தில் உள்ள எல்லாத் தீமைகளையும் சாம்பலாக்கும் பெருந்தீ. இயற்கையிலே இவ்வளவு தூய்மையான பொருள் உலகில் வேறு எது இருக்கிறது? உங்கள் வேதாந்த பரிபாஷையில் இந்தப் புரட்சியை ஒரு வேள்வி என்று சொல்லலாம். பொய்யையும் அநீதியையும் அழிக்கத் தோன்றிய சத்தியத்தின் பயங்கர வடிவந்தான் புரட்சி என்பது. புரட்சியின் இந்த விசுவரூபத்துக்கு அஞ்சுகிறவர்கள் ஒரு நாளும் தலைதூக்கவே முடியாது."

ஆவேசத்தில் பேசியபோது நெற்றியில் வழிந்த வேர்வையை அவன் துடைத்துக்கொண்டான். பிறகு அமைதி

யாக, "நாளைக் காலை எக்ஸ்பிரஸில் நீங்கள் இவரோடு திரும்பிப் போகலாம். ஆனால் இன்று இரவு இரண்டு மணி வரைக்கும் நீங்கள் இந்தப் பங்களாவில் தனியாக இருக்கவேண்டி இருக்கும்" என்றான்.

அவள் லேசாகப் புன்னகை பூத்து, "அதைப்பற்றி எனக்கு ஒன்றும் பயமில்லை" என்றாள்.

வராந்தாவுக்குப் பக்கத்தில் இருந்த இடப்புறத்து அறையில் அவளுக்கு வேண்டிய வசதிகளை அவன் செய்து கொடுத்தான்.

இரவு பன்னிரண்டு மணிக்கு அவர்கள் புறப்படத் தயாரானார்கள். தினகரனுடைய சிறிய காரில் அவனும், சேகரனும், அவனுடைய டிரைவர் அபயசிங்கும் அமர்ந்திருநதார்கள். பின்னால் இருந்த காரில் நாலைந்து பேர் இருந்தார்கள். அவர்களில் யாரையும் சேகரன் இன்னார் என்று அறிந்துகொள்ள முடியவில்லை.

அவர்களுடைய செயல்கள் யாவும் இருட்டிலே நடந்தன. இடையிடையே டார்ச்சின் வெளிச்சம் மங்கலாகத் தெரியும். அந்த வெளிச்சத்திலே தன்னைப் போல மாறுவேடம் பூண்ட பலர் இருக்கிறார்கள் என்பதை மட்டுமே சேகரன் அறிந்து கொண்டான். தினகரனுடைய காரின் வெளிச்சத்தின் முன்னால் காலபுருஷனுடைய கோரமான நீண்ட நிழல் மட்டுமே படிந்திருப்பதாக அவனுக்குத் தோன்றிற்று.

அவனும் தினகரனும் சென்று காரில் உட்கார்ந்ததும், ரஜனி அவர்களை நெருங்கி, "நீங்கள் இருவரும் ஒன்றாகத்தானே திரும்பி வருவீர்கள்?" என்று கேட்டாள்.

"இல்லை, சேகரனை முன்னால் அனுப்பிவிட்டுப் பிறகு நான் வருவேன்" என்றான் தினகரன். வண்டி புறப்பட்டது.

ரஜனி வராந்தாவில் இருந்த தன் படுக்கையில் வந்து சாய்ந்தாள். அவளுக்குக் கொஞ்சமும் தூக்கம் வரவில்லை. தன் அறையில் இருந்த விளக்கை அவள் ஏற்றி வைத்தாள். வராந்தாவில் பரவிய அதன் வெளிச்சத்தில் அவள் அடிக்கடி தன் கைக்கடிகாரத்தைப் பார்த்தாள்.

அந்தப் பயங்கரமான இரவு அசைவதாகவே அவளுக்குத் தெரியவில்லை. சுற்றுப்புறத்தில் இருந்த உயரமான மரங்கள் கோணல்மாணலான வடிவத்தோடு அந்த இரவின் பயங் கரத்தைப் பின்னும் அதிகமாக்கின. கிழக்கிலிருந்து மேற்கே மெல்ல மெல்ல ஊர்ந்து செல்லும் தாராகணங்களைக் கண்டு தான் அந்த இரவின் மெதுவான போக்கை ஓரளவு அறிய முடியும். ஆயிரமாயிரம் புள்ளிகள் உடலிலே மிளிர ஒரு பெரிய பாம்பு தரையிலே சோம்பலோடு ஊர்வதுபோல, அந்த இரவு அவள் கண்ணுக்குப் புலப்பட்டது. எங்கும் காற்று என்பதே இல்லை.

இவ்வளவு அமைதியின்மை அவளுக்கு என்றுமே இருந் ததில்லை. 'சேகரனுக்கு உதவி செய்ய நாம் இங்கே வந் தோம். ஆனால் இப்பொழுது போன இடத்தில் அவர் பிடி பட்டால் நாம் இங்கு வந்ததற்கு என்ன பயன்? தினகரன் நம்பிக்கையாகச் சொல்லியிருக்கிறான் என்பது வேறு விஷயம். சந்தர்ப்பங்கள் இப்படித்தான் நேரும் என்று முன்கூட்டியே சொல்ல முடியுமா?

'இன்று சேகரன் அங்கே சிக்கினாலோ அல்லது நாளைக்குக் கைது ஆனாலோ நாம் என்ன உதவி செய்ய முடியும்? சற்று நேரம் முன்பு தினகரன் நகைத்தபோது நமக்குக் கோபம் வந்தது. அந்த நகைப்பு ஒரு வகையில் சரிதான். நம்மிடம் பணம் இல்லை, மனித பலமும் இல்லை. நாம் என்ன செய்ய முடியும்? இங்கே யாரையும் நமக்குத் தெரியாது. நமக்குப் பரிந்து பேசுகிறவர் யாரும் இல்லை. நானோ ஒரு சாதாரணப் பெண். என்னால் சேகரனுக்கு என்ன உதவி செய்ய முடியும்?'

இப்படி எண்ணியபோது தன் சக்தியின்மையை அவள் உணர்ந்தாள். அவள் கண்ணில் நீர் துளும்பியது.

இந்த எண்ணச் சுழலில் மூழ்கியிருந்தபோது இரவு சுமார் இரண்டரை மணிக்குத் தினகரனுடைய கார் வந்தது. சேகரன் அதிலிருந்து இறங்கினான்.

அவனைப் பார்த்ததுமே அவளுக்கு ஆறுதல் உண்டாயிற்று. அவளுடைய கவலைப் பளு நீங்கியது.

சேகரன் இறங்கியவுடனே வண்டி திரும்பிப் போய்

விட்டது. அவன் அருகில் வந்ததும், "எல்லாம் சரியாக நடந்து விட்டதா?" என்று அவள் கேட்டாள்.

"பங்களாவில் இரண்டு பேருக்குக் காலில் குண்டுபட்டிருக்கிறது. மற்றப்படி எல்லாம் சரி" என்று சொல்லி, சேகரன் முகத்து வேர்வையைத் துடைத்துக்கொண்டான்.

"இதோ நான் ஸ்நானம் செய்துவிட்டுப் பத்து நிமிஷத்தில் வருகிறேன். அதற்குள் நீங்கள் தூங்கிவிட வேண்டும்" என்று கூறி அவன் விர்ரென்று உள்ளே போனான்.

ரஜனி கட்டிலில் உட்கார்ந்து அவன் வரவை எதிர்பார்த்திருந்தாள்.

காற்று இடையிடையே மெதுவாக வீசியது. அது வெப்பக் காற்றாக இருந்தும், வேர்வையில் நனைந்த அவளுடைய உடலுக்குச் சில்லென்று இருந்தது. பயப்படும் நெஞ்சத்திற்குப் பாதி விபத்தைத் தாண்டியதும் உண்டாகும் இன்பம் இதைப் போலத்தான் தோன்றுமா என்று அவள் நினைத்தாள்.

பதினைந்து நிமிஷத்துக்கெல்லாம் சேகரன் திரும்பி வந்து கட்டிலில் அவளருகில் உட்கார்ந்தான்.

ஸ்நானத்தினால் சருமத்தில் தோன்றும் இனிய நறுமணத்தை அவள் சேகரனிடத்திலே உணர்ந்தாள். அவளுடைய மெய் சிலிர்த்தது.

சுற்றுப்புறமெங்கும் இருள் அடர்ந்து சூழ்ந்திருந்தது. தாரகைகளின் மங்கிய ஒளியிலே தாங்கள் இருப்பதை அவர்கள் அறிந்தார்கள். உலகம் அனைத்தும் அந்த மோனக் காரிருளிலே லயித்துக் கிடந்தது.

தனிமையில் அவர்கள் இருந்ததும், அவனுடைய உடலிலிருந்து வீசிய மென்மையான நறுமணமும், மனப் புயலைத் தெரிவிக்கும் அவனுடைய மூச்சின் வேகமும் அவளைப் பேசத் தூண்டின.

"உங்கள் பின்னாலேயே நான் இங்கு வந்ததனால் உங்களுக்கு மிகவும் கோபம் வந்துவிட்டது; இல்லையா?" என்று அவள் கேட்டாள்.

"சேச்சே; எனக்குக் கோபம் இல்லை, பயந்தான் உண்டாயிற்று."

"பயமா? எதற்காக?"

"நேற்று இரவு உங்களிடமிருந்து திரும்பி வந்ததும் மஞ்சு என்னை மூன்று தரம் கேட்டாள், 'நீங்கள் தனியாகப் போகிறீர்களா அல்லது ரஜனியும் உங்களுடன் அகோலாவுக்கு வருகிறாளா?' என்று. நான் தனியாகவே இங்கு வருவதாக அவளுக்கு நம்பிக்கையோடு சொன்னேன். நீங்கள் இங்கு வந்திருப்பதாக அவளுக்குத் தெரிந்ததும், ஏற்கனவே சந்தேகம் கொண்ட அவள் என்ன நினைப்பாள்?"

"என்னுடைய நட்பினால் உங்களுக்குத் துன்பந்தான் உண்டாகிறது, சேகர்!"

"அதெல்லாமில்லை, ரஜனி! என் வாழ்க்கையில் நெருக்கடியான சமயத்தில் இந்த நட்புக் கிடைத்தது என் பாக்கியம்" என்று சொல்லிக்கொண்டே அவன் சடக்கென்று அவளுடைய இரு கைகளையும் பற்றி அவளை அணைத்துக்கொள்ள முயன்றான்.

அவளுடைய உடல் வெடவெடவென்று நடுங்கியது. நம் மனநிறையை இழந்துவிடுவோமோ என்ற பயம் அவளுக்குத் தோன்றிற்று. அடுத்த கணமே அவள், "வேண்டாம், சேகர்! இப்போதுதானே நீங்கள் சொன்னீர்கள், நான் இங்கு வந்ததனால் மஞ்சுவின் சந்தேகம் வலுப்படும் என்று? இப்போது என்ன இப்படிச் செய்கிறீர்கள்? உங்கள் பொறுப்பை நீங்கள் மறக்கக் கூடாது. நீங்கள் மணமானவர்கள். நானும் மணமானவள்" என்றாள்.

இதைக் கேட்டதுமே அவள் கைகளைப் பிடித்திருந்த அவனுடைய பிடி தளர்ந்தது. ஆழ்ந்த கிணற்றிலிருந்து பேசுகிறவன் போல வறண்ட குரலில் அவன், "மணமானவள்! ரஜனி, நீங்கள் மணமானவர்களா?" என்று கேட்டான.

"ஆமாம், சேகர். நான் மணமானவள். உடலால் இல்லாவிட்டாலும் மனத்தினாலே நான் மணமானவள்" என்று சொல்லி, ரகுராமனுக்கும் தனக்கும் இருந்த தொடர்பை அவள் விளக்கினாள்.

மங்கைப் பருவத்திலே பயனற்றுப் போன அந்தக் காதற் கதையைக் கேட்டதும் அவன் பிரமித்துப் போனான். அவன் மனத்திலே ஒரு சூனியத்தன்மை படர்ந்தது.

அவன் உடனே தன்னைச் சமாளித்துக்கொண்டு, "ரஜனி, தினகரன் சொல்வதுதான் உண்மை. நீங்கள் அற்புதமான அசாதாரணப் பெண் என்பதில் சந்தேகமே இல்லை" என்றான்.

"இல்லை சேகர்! என்னிடத்தில் அற்புதமான அசாதாரண மான தன்மை ஏதும் இல்லை. நான் உண்மையில் அசாதாரண மானவளாக இருந்தால் உங்களிடம் எனக்கு மோகமே ஏற்பட் டிருக்காது. அந்த மோகம் தோன்றி இருப்பதனாலும் அதை நான் நீக்காமல் இருப்பதனாலும் நான் ஒரு சாதாரண மனுஷி தான் என்பது நிதரிசனமாகிவிட்டது."

"இல்லை ரஜனி! இது மனிதத்தன்மையின் கொலை. அந்த மோகத்தை உங்களால் அடக்க முடிகிறது. மோகத்தில் என்னையே நான் மறந்துவிட்டபோது என் கடமையை நீங்கள் எனக்கு உணர்த்துகிறீர்கள். இதிலதான் உங்கள் அற்புதத் தன்மை, அசாதாரணத் தன்மை, தெய்வத் தன்மை அடங்கி இருக்கிறது."

ரஜனி இதற்கு ஒன்றும் மறுமொழி சொல்லவில்லை. அவள் கண்களிலிருந்து நீர்த்துளிகள் முத்து முத்தாகப் பெருகின.

## 22

நாகபுரி ஸ்டேஷனில் இறங்கியதும், சேகரன் வீட்டிற்குப் போகாமல் நேரே ஆபீசுக்குச் சென்றான். அகோலாவுக்குப் போகும்போது மணியத்தை நேரில் கண்டு லீவு பெற்றுக் கொள்ள அவனுக்கு ஓய்வு இருக்கவில்லை; ஒரு நாளை லீவுக்குக் கடிதம் எழுதி அனுப்பிவிட்டுப் போனான். ஆதலால் எக்ஸ்பிரஸிலிருந்து இறங்கியதுமே அங்கே போவது அவசிய மாக இருந்தது. இரண்டு இரவுகள் ஓயாமல் கண் விழித்ததனாலும், பகலில் வெயிலில் பிரயாணம் செய்ததனாலும் அவன் மிகவும் களைத்துப் போயிருந்தான். அவன் கண்கள் எரிந்தன. ஆயினும் இரண்டு மணி நேரமாவது ஆபீசில் வேலை செய்துவிட்டுத்தான் வீட்டுக்குப் போவதென்று தீர்மானித்தான்.

அவன் ஆபீசில் நுழைந்தபோது மணியம் அவனை எதிர்

பார்த்துக்கொண்டுதான் இருந்தார். "நீங்கள் அகோலாவுக் குத்தானே போனீர்கள்? அங்கே ஏதாவது விசேஷச் செய்தி உண்டா?" என்று கேட்டார்.

"அப்படி ஒன்றும் இல்லையே!"

"இப்போதுதான் பிரஸ் தந்தி வந்திருக்கிறது, பாருங்கள்."

மேஜைமேல் இருந்த அந்தத் தந்தியைச் சேகரன எடுத்துப் பார்த்தான்.

'அகோலா, 28-ம் தேதி: இங்கிருந்து ஏழு மைல் தொலைவி லுள்ள கிராமத்துப் பிரமுகரும், அகோலாவில் பிரசித்த பாங் கருமான லாபராம் என்பவருடைய பங்களாவில் நேற்றிரவு ஒரு மணிக்குக் கொள்ளை நடந்தது. கொள்ளைக்காரர்கள் காரில் வந்து இறங்கினார்கள். வண்டிக்கு நம்பர் இல்லை; விளக்கையும் அணைத்திருந்தார்கள். அவர்கள் மாறுவேஷம் போட்டுக் கொண்டிருந்ததாகவும் தெரிகிறது.

'உளவு தெரிந்துகொண்டே அவர்கள் வந்திருக்க வேண் டும். லாபராமும், அவருடைய நண்பர்களும் மேல்மாடியில் தூங்கினார்கள். அவர்களின் வாயில் துணியை அடைத்துக் கட்டிலில் பிணைத்து அவர்களைக் கொள்ளைக்காரர்கள். கட்டி னார்கள். காவலாள் ஒருவன் துப்பாக்கியால் சுட முயன்றான். அவனையும் உடனே கட்டிப் போட்டுவிட்டார்கள். மற்றொரு காவலாளும் வேலையாட்களும் ஓடி வந்தபோது, கொள்ளைக் காரர்கள் துப்பாக்கியால் சுட்டதனால் இரண்டு பேருக்குக் காலில் காயம்.

'ஸேட்ஜி இப்போதுதான் பம்பாயிலிருந்து வாங்கி வந்த நெக்லேஸும் வேறு நகைகளுமாகச் சுமார் அரை லட்சம் பெறுமான சொத்தைக் கொள்ளை யடித்திருக்கிறார்கள். பொழுது விடிந்ததும் ஸேட்ஜியே அகோலாவுக்கு வந்து போலீஸில் செய்தி கொடுத்திருககிறார். போலீசார் கடுமையாக விசாரணை செய்து வருகிறார்கள்.'

சேகரன் அதைப் பார்த்துவிட்டு மணியத்தினிடமே திருப் பிக் கொடுத்தான்.

"இதைப்பற்றி உங்களுக்கு ஏதாவது தெரியுமோ?" என்று கேட்டார் மணியம்.

"எனக்கு எப்படித் தெரியும்? நான் காலை எக்ஸ்பிரஸி லேயே புறப்பட்டுவிட்டேனே."

"இந்தத் தந்தியிலிருந்து நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?"

"என்ன நினைப்பது? அந்தப் பக்கங்களில் எப்போதும் நடக்கும் கொள்ளைகளைப் போலத்தான் இதுவும்."

"அப்படிச் சொல்ல முடியாது, சேகர்! இந்தக் கொள்ளை ஏதோ அரசியல் நோக்கத்தோடு நடந்திருக்கிறது என்று நினைக் கிறேன். நீங்கள் வர நேரமானதால், நான் தனியே செய்தி எழுதிக் கொடுத்திருக்கிறேன். நமது நிருபரின் அந்தச் செய்தி யைப் படித்துப் பாருங்கள்!"

"நாளைக்குப் போலீசார் இதைப் படித்ததும், உங்கள் நிரு பரின் விலாசத்தைக் கேட்டால் என்ன சொல்வீர்கள்? நான் நேற்று அகோலாவில் இருந்தபோதிலும் இந்தக் கொள்ளை யைப்பற்றி எனக்கு ஒன்றுமே தெரியாது. போலீசார் இதைப் பற்றிக் கேட்டால் நீங்கள் முன் நிற்பீர்களா?"

இதைக கேட்டதும் மணியம் அசந்துவிட்டார். "சரி, உங்களிடம் புரூப் வரும்போது அதை ஏற்றபடி மாற்றிவிடுங் கள். செய்தியை மட்டும் முதல் பக்கத்தில் போட்டுப் பெரிய தலைப்புகள் கொடுங்கள்" என்றார்.

சேகரன் ஒன்றும் பதில் சொல்லாமல் அந்தத் தந்தியைத் தன்னிடமே வைத்துக்கொண்டான்.

பிறகு ஆபீஸ் சேவகனைக் கூப்பிட்டு, தான் அகோலாவி லிருந்து திரும்பி வந்திருப்பதாகவும், இரண்டு இடத்து வேலை களையும் பார்த்துக்கொண்டு இரவு வழக்கம்போல் வீட்டுக்கு வருவதாகவும் மஞ்சுவுக்குச் செய்தி சொல்லி அனுப்பினான்.

பத்திரிகை வேலை முடிந்ததும், மாலை ஆறு மணிக்கு அவன் தன் ஆபீசுக்குச் சென்றான். அங்கே ரஜனி அவன் வரவை எதிர்பார்த்துக்கொண் டிருந்தாள். அவன் அந்தத் தந்தியை அவளிடம் கொடுத்தான்.

அவள் அதைப் படித்துத் திருப்பிக் கொடுத்துவிட்டு, "இதைப்பற்றி உங்களிடம் தினகரனுடைய கடிதம் எது இருந் தாலும் அதை உடனே எரித்துவிடுங்கள். தந்தியைக்கூட விட்டு வைக்காதீர்கள். இன்றைய முதல் வேலை இதுதான்"

என்று சொல்லி, ஒரு கட்டில் இருந்த ஆறு கடிதங்களை எடுத்துத் தனியே வைத்தாள். பிறகு, "அன்றிரவு உங்களுக்கு வந்த தந்தி எங்கே? அது இந்தக் கட்டில் இல்லையே?" என்று கேட்டாள்.

"அது வீட்டில் என் மேஜை டிராயரில் இருக்க வேண்டும்."

"வீட்டுக்குப் போனதுமே அதை எடுத்து எரித்துவிடுகிறீர்களா?"

"கட்டாயம்."

"ஞாபகம் இருக்குமா, அல்லது இரவு நான் வீட்டுக்கு வரட்டுமா?"

"இன்று நீங்கள் வீட்டுக்கு வந்தால், அந்தத் தந்தியை எரிப்பதற்கு முன்பு மஞ்சுவின் கோபம் உங்களை எரித்துவிடும். வீட்டில் எனக்காக என்ன சச்சரவு காத்திருக்கிறதோ என்று ஒரே பயமாக இருக்கிறது" என்று சொலலி அவன் சிரித்தான்.

இரண்டு நாளாக வந்திருந்த தபால்களுக்கு அவன் மடமட வென்று பதில எழுதினான்.

"சேகர், நேற்று வேலைமும்முரத்தில் உங்களிடம் ஒரு விஷயம் சொல்லவே இல்லையே! நேற்று நான் ரெயிலுக்குப் புறப்பட்டபோது சரளாவின் வேலைக்காரன் என்னிடம் வந்தான்."

"எதற்கு?"

"இரவு சாப்பிடுவதற்கு என்னை அவள் அழைத்திருந்தாள். நான் உஙகளோடு அகோலாவுக்குப் போகிறேனா இல்லையா என்பதைப் பார்க்கத்தான் அவள் அப்படிச் செய்திருப்பாள். கல்யாணத்துக்காக அகோலாவுக்குப் போவதால் நான் வர முடியாது என்று சொல்லி அனுப்பிவிட்டேன்."

"இனி நான் மஞ்சுவிடமும் அதைத்தான் சொல்லவேண்டியிருக்கும்."

"அப்படியே சொல்லுங்கள்" என்று கூறிவிட்டு, அவள் பக்கத்து அறைக்குப் போய், தினகரனிடமிருந்து வந்திருந்த கடிதங்களை எரித்துவிட்டாள். பிறகு சேகரனிடம் வந்து மறுபடி தந்தியைப்பற்றி ஞாபகப்படுத்தினாள்.

"நீங்கள் இருக்கும் வரைக்கும் எனக்குக் கவலை இல்லை, ரஜனி! நான் பிடிபட்டாலும் நீங்கள் என்னைக் காப்பாற்றுவீர்கள்."

"அந்தப் பம்பாய் வக்கீலின் விலாசத்தை எனக்குச் சொல்லுங்கள்."

"பிரபாகர் நமது கம்பெனியின் ஏஜெண்டுதான். ஆபீஸ் கட்டுகளில் அவர் விலாசம் இருக்குமே."

"தினகரன் அவரைப்பற்றிச் சொல்லியிருப்பதனால் நான் அதைக் கட்டாயம் தெரிந்துகொள்ள வேண்டும்" என்று சொல்லி, அவள் பல கட்டுகளைப் புரட்டி, அந்த விலாசத்தைத் தன் டயரியில் குறித்துக்கொண்டாள்.

அன்றிரவு சேகரன் வீட்டுக்குப் போனபோது, மஞ்சு வெளி அறையில் கட்டிலில் நந்துவைத் தூங்கப் பண்ணிக் கொண்டிருந்தாள்.

அவனைப் பார்த்ததுமே, "நீங்கள் இப்பொழுதுகூட வர மாட்டீர்களோ என்று பார்த்தேன். இரவு முழுவதும் வேலை இருப்பதால் காலையில் வருகிறேன் என்று சொல்லியனுப்புவீர்கள் என்று நினைத்தேன்" என்றாள்.

"உனக்குத் தோன்றியபடி பேசாதே, மஞ்சு!"

"நீங்கள் உங்களுக்குப் பிடித்ததையெல்லாம் செய்யலாம்; நான் மட்டும் ஒன்றும் பேசக் கூடாதாக்கும்?"

"எனக்குப் பிடித்ததை நான் என்ன செய்தேன்?"

"என்னிடம் பேசியபடி நீங்கள் தனியாகத்தானே அகோலாவுக்குப போனீர்கள்?"

"ஆமாம்!"

"சுத்தப் பொய். நீங்கள் போனவுடனே சரளா தன் வேலைக்காரனை ரஜனியிடம் அனுப்பினாள். அவள் அப்பொழுது தான் ஸ்டேஷனுக்குப் புறப்படத் தயாராக இருந்தாள். இந்த வேஷமெல்லாம் யாரிடம் போடுகிறீர்கள்?"

"உன்னிடம் நான் எவ்வளவுதான் சொல்லுவது, மஞ்சு? எங்கள் கம்பெனி ஏஜெண்டு ஒருவனுக்குக் கல்யாணம். அதற்கு ரஜனிக்கும் அழைப்பு வந்திருந்தது. அடுத்த வண்டியில் அவளும் வந்தாள். அதற்கு நான் என்ன செய்வது?"

"இது இன்ஷ்யூரன்ஸ் கம்பெனியா, கல்யாணம் செய்விக்கும் கம்பெனியா? எனக்கு ஒன்றுமே புரியவில்லையே!" என்று அவள் கிண்டலாக நகைத்தபடி பேசினாள்.

சேகரன் வாய் திறவாமல் உள்ளே போய், மேஜை டிராயரைத் திறந்து அந்தத் தந்தியைத் தேடினான். அதில் இருந்த எல்லாக் காகிதங்களையும் புரட்டிப் பார்த்த பிறகும் அந்தத் தந்தி கிடைக்கவில்லை. ஆதலால், சமையலறையில் வேலையாக இருந்த மஞ்சுவிடம் போய், "முந்தாநாள் இரவு வந்த தந்தியை நீ டிராயரிலிருந்து எடுத்தாயா? நான் மேலேதான் வைத்திருந்தேன்" என்றான்.

"நான் ஏன் அந்தத் தந்தியை எடுக்கிறேன்? உங்கள் டிராயரை நான் தொடக்கூட இல்லை!" என்று அவள் விடுவிடென்று பேசினாள்.

சேகரன் மறுபடியும் டிராயரை வெளியே எடுத்து நன்றாகத் தேடினான். தந்தி கிடைக்கவில்லை. ஸ்டேஷனுக்குப் போகும்போது அதில் தந்தியை வைத்தது அவனுக்கு நன்றாக நினைவு இருந்தது. "பின்னே அது எப்படிப் போயிற்று?"

அதற்குள் அங்கே நுழைந்த ராமநாதன், "நீங்கள் எப்போது அகோலாவிலிருந்து வந்தீர்கள், சேகர்?" என்றான். அவனுடைய குரலில் நடுக்கம் இருந்தது; முகம் களையிழந்து இருந்தது.

"நான் அகோலாவுக்குப் போனது உங்களுக்கு எப்படித் தெரியும்?" என்று சேகரன் கோபத்தோடு கேட்டான்.

"மணியம்தான் எனக்குச் சொன்னார். வேலைநிறுத்தத்தை நீங்கள் ஆதரிக்காவிட்டால் நாளைக்கு உங்கள் ஆபீசுக்குத் தொழிலாளர்களை அழைதது வரப் போகிறேன்."

சேகரன் அவனுக்கு ஏதோ சூடாகப் பதில் சொல்வதற்குள், மஞ்சு அங்கே வந்து, "காலை அலம்பிக் கொண்டு சாப்பிட வா, அண்ணா! இலை போட்டிருக்கிறேன்" என்றாள்

ராமநாதன் தான் கொண்டுவந்த பையை ஒரு பக்கமாக வைத்துவிட்டு ஸ்நான அறையை நோக்கிச் சென்றான். அப்பொழுது மஞ்சு, மேஜையின் அருகில் இருந்த சேகரனை அணுகி, "இதோ பாருங்கள், நான்தான் அண்ணனை இன்று வரச்

சொல்லியிருக்கிறேன். என்னிடம் இருக்கும் கோபத்தை எல்லாம் ஒதுக்கி வைத்துவிட்டு, அவனுக்கு அமைதியாகப் புத்திமதி சொல்லுங்கள்'' என்றாள்.

சேகரன் ஒன்றுமே பதில் சொல்லவில்லை. தந்தி கிடைக் காததால அமைதியை இழந்திருந்த அவன் ராமநாதனைக் கண்டதும் பின்னும் குழப்பமடைந்தான்.

ஆயினும் இலையில் உட்கார்ந்ததும் அவன் தன் சினத்தை அடககிக்கொண்டு, "ராமநாதன், நீங்கள் என் வார்த்தையைக் கேட்பதாக இருந்தால் ஒன்று சொல்கிறேன்'' என்றான்.

ராமநாதன் அவனை அசட்டையோடு பார்த்துவிட்டு, "மஞ்சு இன்று கூப்பிட்டதனால் இரண்டு மாதங் கழித்து இந்த வீட்டுக்கு வந்திருக்கிறேன். கோவிலுக்குப் போகக்கூட எனக்கு ஓய்வு இல்லை. நீங்கள் இன்று உபதேசம் செய்யப் போவதாகத் தெரிந்தால், தொழிலாளர் கூட்டத்திலிருந்து நான் இவ்வளவு விரைவில் வந்திருக்க மாட்டேன்'' என்றான்.

"அண்ணா, உனக்கு உபதேசம் செய்ய எங்களுக்கு என்ன உரிமை இருக்கிறது?'' என்றாள் மஞ்சு.

"நீங்கள் இப்போது வேலைநிறுத்தத்திற்குத் தூண்டுவது மிகப் பெரிய குற்றம்!'' என்றான் சேகரன்.

"இன்றைய நிலையிலே நீ சிறைக்குப் போக ஆசைப்படு கிறாயா, அண்ணா?''

"எப்பொழுதும் சாவு இருக்கிறது, மஞ்சு! இந்த இயக்கத் தில் சேர்ந்து சாவதில் என்ன கெடுதி? சேகரன் அந்த மணியத் திடம் வேலை செய்யப் போனதிலிருந்தே விவகாரம் பேச ஆரம் பித்துவிட்டார்!'' என்று ராமநாதன் கலகலவென்று நகைத் தான்.

"ராமநாதன், உங்கள் விருப்பப்படி சாவதற்கு நீங்கள் இந்த உலகில் தனியாக இல்லை. உங்களுக்கு மனைவி இருக் கிறாள், குழந்தைகள் இருக்கின்றன, தங்கை இருக்கிறாள்—''

"தங்கையின் புருஷர் இருக்கிறார். இந்த விஷயமாக இனி நீங்கள் என்னிடம் எதுவும் பேச வேண்டியதில்லை!''

"அவர் பேசாமல் யார் பேசுவார், அண்ணா? நாளைக்கு நீ சிறைக்குப் போனால் அவர்தானே உனக்காக அலைய வேண்டி

யிருக்கும்? தொழிலாளருக்கு நன்மை செய்யக் கிளம்பிய நீ உன் மனைவி மக்களை முதலில் கவனிக்க வேண்டாமா?''

''மனைவி மக்களைப்பற்றிய கவலையில் ஆழ்ந்தால், நான் இந்த ஜன்மத்தில் எந்த நற்செயலும் செய்ய முடியாது, மஞ்சு! இந்த மனப்பான்மையால்தான் சேகரன் மிகவும் அறிவாளி யாக இருந்தும் அவரால் நாட்டுக்குப் பயனில்லை!''

''உன்னால் நாட்டுக்கு என்ன பயன்? யார் வீட்டிலாவது போய், தண்டச்சோறு தின்பதும், ஊர் முழுவதும் பேசித் திரி வதுந்தானே உன் தேச சேவை?'' என்று மஞ்சு கோபத் தோடு கேட்டாள்.

''நீ சாப்பிடக் கூப்பிடவேதானே நான் வந்தேன்? இனி உன் சோறும் எனக்கு வேண்டாம்; உன் பேச்சும் வேண்டாம். இனிப் பட்டினி கிடந்து செத்தாலும் உன் வீட்டுக்கு வர மாட் டேன்'' என்று கையை உதறிவிட்டு, விர்ரென்று எழுந்து போய் ராமநாதன் குழாயடியில் வாயை அலம்பிக்கொண்டு வெளியே புறப்பட்டான்.

மஞ்சுவின் கண்ணீர் வெள்ளமாகப் பெருகியது. சேகரன் எவ்வளவோ சமாதானம் சொல்லியும் அவளுடைய அழுகை நிற்கவில்லை.

மறுநாள் காலையில் கோவிந்தனுடைய கார் வந்து நின்றது. டிரைவர் ஒரு கடிதத்தைச் சேகரனிடம் கொடுத்தான்.

''அன்புள்ள சேகர்,

மணியமும் நானும் உடனே உங்கள் வரவை எதிர்பார்க் கிறோம். வண்டியில் வர வேண்டும.

—கோவிந்தன்.''

மஞ்சுவிடம் சொல்லிவிட்டு அதே வண்டியில் உட்கார்ந்து சேகரன் ஆபீசுக்குச் சென்றான்.

கோவிந்தன் அவனைப் பார்த்ததும், ''உங்களைத் திடீ ரென்று கூப்பிட்டதற்கு மன்னிக்க வேண்டும், சேகர்! உங்களைக் கேளாமல் ஒன்றும் செய்யக் கூடாது என்று இவர் சொல்லி யிருக்கிறார்'' என்றார்.

''என்னைக் கேட்பானேன்? அவருடைய பத்திரிகையில் அவருடைய விருப்பம் போல் செய்யலாமே!''

"போன மாசம் சம்பள உயர்வும் மில்லுக்குக் கிடைத்த லாபத்திலிருந்து கொடுக்க வேண்டும் என்பது தொழிலாளி களின் கோரிக்கை. உண்மையில் மில்லுக்கு லாபமே இல்லை. நீங்கள் இந்த வேலைநிறுத்தத்தை எதிர்த்து எழுதுவீர்களா?"

"நான்தான் முன்னமே தெளிவாகச் சொல்லிவிட் டேனே!"

"உங்களுடைய மனநிலை எனக்குப் புரியவில்லை, சேகர்! இன்று இரவுக்குள் பேச்சு வார்த்தை சமாதானமாக நடக்கா விட்டால், நாளைக்கே ராமநாதனைக் கைது செய்வார்கள்!"

"இது நீங்கள் முன்பே சொன்னதுதானே?"

"உங்களுடைய கொள்கையை நான் பாராட்டுகிறேன், சேகர்! ஆனால் ஏழையினுடைய கொள்கைக்கும் தியாகத்துக் கும் உலகில மதிப்பு ஏது? நீங்கள் பணமும் மதிப்பும் சம்பாதிக்க வேண்டிய வயது இது. உங்களுடைய எழுத்துத் திறமையை எங்களுக்குப் பயன்படும்படி செய்தால் அதனால் உங்களுக்கு ஏராளமான லாபம் கிடைக்கும்."

அந்த இனிமையான சொல்லில் இருந்த விஷம் சேகர னுடைய மூளையைக் கலக்கியது. "மிஸ்டர் கோவிந்தன், உங்க ளைக் கொண்டு என்னை அளக்காதீர்கள். நான் எவ்வளவு ஏழையாக இருந்தாலும், பணத்துக்காக வேலை செய்யும் கலை யைக் கற்றுக்கொள்ளவில்லை!" என்று சினம் பொங்கச் சொல்லிவிட்டு, அவன் உடனே அங்கிருந்து புறப்பட்டான்.

பகலில் அவன் வழக்கப்படி ஆபீசுக்குப் போனபொழுது மணியம் அவனிடம் ஒரு புதிய தந்தியைக் கொடுத்தார்.

'அகோலா, 29-ம் தேதி: கொள்ளையைப் பற்றிய விசா ரணை ஜரூராக நடக்கிறது. அரசியல் காரணத்தினால் இது நடந்திருக்கிறது என்று போலீசார் சந்தேகிப்பதோடு, அதற் குச் சில ஆதாரங்களும் கிடைத்திருக்கின்றன.'

இந்தத் தந்தியைப் படித்ததும் தினகரனுடைய பழைய தந்தி இன்னமும் கிடைக்காதது சேகரனுக்கு ஞாபகம் வந்தது.

மணியம் அவனிடம், "நான் நேற்றே சொன்னேனே; இந்தக் கொள்ளையில் அரசியல் மர்மம் இருக்கிறது என்று!" எனத் தம்மைப் பீற்றிக்கொண்டார்.

அங்கே வேலை முடிந்ததும் சேகரன் ரஜனியிடம் ஆபீசுக்கு வந்து அந்தத் தந்தியைக் காண்பித்தான்.

"தினகரனுடைய பழைய தந்தியை எரித்துவிட்டீர்கள் அல்லவா?"

"அது கிடைக்கவே இல்லையே!"

"அது எப்படிக் கிடைக்காமல் போகும்? மஞ்சு அம்மாள் அதை எடுக்கவே இல்லை என்று உங்களுக்கு நிச்சயமாகத் தெரியுமா?"

"மஞ்சு என் டிராயரைத் தொடவே இல்லை என்கிறாள்."

ரஜனி சிறிது நேரம் யோசித்துவிட்டு, "அந்தத் தந்தி தொலையவில்லை. யாரோ அதை உங்கள் டிராயரிலிருந்து எடுத்திருக்க வேண்டும். இன்று வீட்டுக்குப் போனதும் மஞ்சு அம்மாளைக் கேளுங்கள்" என்றாள்.

அந்த விஷயந்தான் சேகரனையும் உறுத்தியது. வீட்டுக்குப் போனதுமே, அவன் மறுபடியும் மஞ்சுவைக் கேட்டான்.

"நான்தான் நேற்றே சொன்னேனே! அடிக்கடி ஏன் என்னைச் சந்தேகத்தோடு கேட்கிறீர்கள்?" என்று அவள் கோபித்துக்கொண்டாள். அதனுடன் அந்தப் பேச்சு நின்றது.

மறுநாள் காலையில் தொழிலாளர் சங்கத்துச் சேவகன் ஒருவன் சேகரனிடம் ஒரு கடிதத்தைக் கொண்டு வந்து கொடுத்தான். அது ராமநாதன் எழுதியது :

"அன்புள்ள சேகர்,

இன்று விடியற்காலையில் என்னைக் கைது செய்திருக்கிறார்கள். நான் முந்தாநாள் இரவு பேசியதையெல்லாம் மஞ்சுவை மறந்துவிடச் சொல்லுங்கள். இனியாவது வேலைநிறுத்தத்தை ஆதரியுங்கள்.

—ராமநாதன்."

சேகரன் அந்தக் கடிதத்தை மஞ்சுவிடம் கொடுத்தான். அதைப் படித்ததும் அவள் கண்ணீர் வடித்தாள். "இப்போது என்ன செய்வது? கோவிந்தன் ஏதாவது உதவி செய்வாரா?" என்று கேட்டாள்.

"அவர் ஒன்றும் செய்யமாட்டார். அவர் ஆலை முதலாளியின் வக்கீல் என்பது உனக்குத் தெரியாதா?"

"பின்னே என்ன செய்வது?"

"வேறு இடங்களில் முயன்று பார்க்கிறேன்" என்று சொல்லிவிட்டுச் சேகரன் வெளியே புறப்பட்டான்.

இரண்டோர் இடங்களில் சுற்றியபின்பு ஒன்பது மணிக்கு அவன் ஆபீசுக்கு வந்தான். ராமநாதனைக் கைது செய்திருந்த செய்தி ஏற்கனவே ரஜனிக்குத் தெரிந்திருந்தது. அதைப் பற்றி அவள் கேட்டதும், "நான் உடலுழைப்புககுப் பயப்படு கிறவன் அல்ல, ரஜனி! மஞ்சுவின் சநதேகத்தினுல் ஏற்படும் துயரத்தைத்தான் என்னுல் தாங்க முடியவில்லை" என்ருன்.

அவனுடைய பார்வையிலும் நடவடிக்கையிலும் ஏற்பட்டிருந்த மாறுதல் அவளுக்குப் பயத்தை விளைவித்தது. அவள் அவனை நெருங்கி, "எனக்கு நீங்கள் இன்று ஒரு சத்தியம் செய்து கொடுக்க வேண்டும்" என்ருள்.

"சத்தியமா? எதற்கு?"

"என்னைக் கேட்காமல் நீங்கள் சிந்தனையற்ற செய்கை எதையும் செய்யக் கூடாது!"

இதைக் கேட்டு அவன் சிறு குழந்தையைப் போல நகைத்தான். பைத்தியத்தின் சிரிப்புப் போல அது அவளுக்குத் தோன்றிற்று.

"என்ன, வாக்குறுதி கொடுக்கிறீர்களா?" என்று அவள் மறுபடி கேட்டாள்.

"என்னிடமுள்ள அனைத்தையும் நான் மஞ்சுவுக்குக் கொடுத்துவிட்டேன். உங்களுக்குக் கொடுக்கக் கூடியது என்னிடம் எதுவுமில்லை, ரஜனி. ஆனுல் நீங்கள் கேட்டதை நான் மறுக்க முடியாது" என்று சொல்லி, அவன் கையை நீட்டினுன்.

அவள் அந்தக் கையைக் கெட்டியாகப் பிடித்துக் கண்ணில் ஒற்றிக்கொண்டாள். அவளுடைய கண்ணீரினுல் அந்தக் கரம் நனைந்தது. சேகரன் ஏதோ சொல்ல நினைத்தான்.

அதற்குள் வேலையாள் உள்ளே வந்து, "ஸார், வெளியே போலீஸ் இன்ஸ்பெக்டர் உங்களைக் கூப்பிடுகிருர்" என்ருன்.

அதைக் கேட்டதும் ரஜனியின் முகம் மாறியது. அடுத்த கணமே அவள் கண்களில் ஒப்பற்ற ஒளி வீசியது. சேகரனேடு அவளும் வெளியறைக்கு வந்தாள்.

வாசலில் போலீஸ் கார் நின்றிருந்தது.

சப்-இன்ஸ்பெக்டர் சேகரனுக்கு வணக்கங்கூறிச் சிரித்துக் கொண்டே, "நான் உங்களைக் கைது செய்ய வந்திருக்கிறேன், சேகர்!" என்றார்.

## 23

பிரபாகரன் ஜட்காவிலிருந்து கீழே இறங்கியதும், ரஜனிக்கு அவரைப் பார்த்துக் கொஞ்சம் வியப்பு ஏற்பட்டது.

அவர் மிகவும் ஒல்லியாக இருந்தார். ஸூட் அணிந்திருந்தமையால் அவருடைய உயரம் மட்டுமே கண்ணில் பட்டது. அவருடைய சிரிக்கும் கண்களிலிருந்து அவர் மிகவும் உற்சாகமுள்ளவர் என்று தெரிந்தது.

"நீங்கள்தானே மிஸ் ரஜனி?" என்று அவர் அவளைப் பார்த்துக் கேட்டார்.

"ஆமாம்."

"உங்கள் தந்தியைப் பார்த்துவிட்டு, பம்பாயிலிருந்து இப்போதுதான் மெயிலில் வருகிறேன்."

ரஜனி தன் வேலைக்காரனைக் கொண்டு சாமான்களை இறக்கிவைக்கச் செய்தாள். "நீங்கள் புறப்படும்போதே தந்தியடித்திருந்தால் ஸ்டேஷனுக்கு வந்திருப்பேன்" என்றாள்.

"என்னை எப்படித் தெரிந்துகொண்டிருப்பீர்கள்?" என்று அவர் சிரித்துக்கொண்டே கேட்டார்.

"இப்போது வண்டி நின்றதுமே தெரிந்துகொண்டேனே, அதைப் போலத்தான்! நாம் ஆவலோடு ஒருவரை எதிர்பார்க்கும்போது, அவர் முன்னால் பார்த்தவரல்லாதவராக இருந்தாலும் சட்டென்று தெரிந்துகொள்ள முடியாதா? நீங்கள் எப்படி நேரே இந்த விலாசத்துக்கு வந்து சேர்ந்தீர்கள்?"

"தினகரன் எனக்குக் கடிதத்தில் உங்களைப்பற்றி முழுச் செய்தியையும் எழுதியிருக்கிறான்."

"அவர் எப்போது கடிதம் எழுதினார்?"

"மறைவதற்கு முன்பு. அவன் மறைந்தது உங்களுக்கு எப்பொழுது தெரியும்?"

"இன்று காலை பத்திரிகை படித்த பிறகுதான் தெரியும்."

இதற்குள் வேலைக்காரன் கொண்டுவந்த தேநீரை அவள் அவருக்கு ஊற்றிக் கொடுத்தாள்.

"தினகரன் உங்களுக்கு என்ன எழுதினார்?" என்று கேட்டாள்.

"அந்தக் கடிதமே இதோ இருக்கிறது" என்று சொல்லி, சட்டைப் பையிலிருந்து அதை அவர் எடுத்துக் கொடுத்தார்.

ரஜனி அதைப் படிக்கலானாள்:

"அன்புள்ள பிரபாகர், இன்று விடிகாலையில் நான் வேலை முடிந்து திரும்பி வந்தபோது, நான் ஒரு பிழை செய்திருப்பேன் என்று கனவிலும் கருதவில்லை. நான் ஸ்நானம் செய்ததும் தூங்கிவிட்டேன்.

பகலில் நான் என் கிழிந்த சட்டையைப் பார்த்தபோது அதில் ஒரு கடிதம் தொலைந்து போயிருப்பது தெரிந்தது. எப்போதும் போல நான் நேற்றிரவு அந்த இடத்தின் படத்தையும், என்னோடு வந்தவர்களின் லிஸ்டையும் எடுத்துக்கொண்டு போனேன். படம் இருக்கிறது; ஆறு பெயர்கள் அடங்கிய அந்த ஜாபிதா இல்லை.

அது எங்கே போயிருக்குமோ தெரியவில்லை. போலீசாரின் கைக்குக் கட்டாயம் கிடைக்கும் என்ற நம்பிக்கையும் இல்லை. எதற்கும் ஜாக்கிரதையாக இருப்பது நல்லதாகையால் என் ஆபீஸ் வேலையைத் துணைவரிடம் ஒப்பித்து உடனே ஒரு மாதகாலம் அஞ்ஞாதவாசத்தில் இறங்குகிறேன்.

என் கூட்டாளிகள் அனைவருக்கும் வேண்டிய எச்சரிக்கை செய்தாயிற்று. சேகரனுக்கு மட்டும் ஒன்றும் தெரிவிக்க முடியவில்லை. அவருக்கு அவ்வளவாக ஆபத்தும் நேராது. தொலைந்து போன ஜாபிதாவில் அவருடைய பெயர் இல்லை; என் கூட்டாளிகளில் யாருக்கும் அவரைத் தெரியவும் தெரியாது. நான் அவருக்குச் சந்தேகமாக அடித்த தந்தியைத் தவிர வேறு அத்தாட்சி எதுவும் அவருக்கு விரோதமாக இல்லை.

அந்தத் தந்தி ஒருவேளை போலீசுக்குக் கிடைத்து அவர் கைதானால், மிஸ் ரஜனி உங்களை நாகபூருக்குக் கூப்பிடுவாள்.

அவளுக்குத் தேவையான சட்டபூர்வமான உதவிகளை நீங்கள் கட்டாயம் செய்ய வேண்டும். அவள் என் சொந்தத் தங்கையைப் போல. அவளிடம் நீங்கள் கூச்சமோ அவநம்பிக்கையோ துளியும் கொள்ளவேண்டாம்.

இந்த நிகழ்ச்சி, சேகரனுடைய மனத்தை மாற்றி, அவருக்குக் கெடுதி விளைவிக்கலாம். இந்த மாதிரியான துணிச்சல் வாழ்க்கையில் இடுக்கண்களே நம் துணை என்று கொள்ள வேண்டும். ஆகையால் நான் மறைந்திருப்பதனால் அவர் ஏமாற்றமடைய வேண்டியதில்லை.

அவர் விரும்பினால் நான் இங்கிருந்தும், அவருடைய கூக்குரலுக்குப் பதில் கொடுப்பேன்; அவரைக் கைகொடுத்து இந்த அறியா உலகில் அழைத்தும் வருவேன். இந்த உலகை அவர் மேலெழுந்தவாரியாகத்தான் பார்த்திருக்கிறார். இந்த உலகில் அவர் வந்தால் வாழ்க்கையின் உக்கிரமான வடிவைக் காண முடியும். இனி முழுப் பொறுப்பையும் என் உயிர் நண்பனான உன்னிடம் ஒப்படைக்கிறேன். இந்தக் கடிதத்தைச் சேகரனுக்குக் காண்பி.

—தினகரன்."

ரஜனி இந்தக் கடிதத்தைப் படித்ததும் திருப்பிக் கொடுத்தாள்.

"போலீசாருக்கு என்ன அத்தாட்சி கிடைத்திருக்கிறது என்று உங்களுக்குத் தெரியுமா?"

"தெரியாது; அந்தத் தந்தி அவர்களுக்குக் கிடைத்திருக்கலாம் என்று நம்புகிறேன்."

"அது எப்படி அவர்கள் கைக்குப் போயிற்று?"

"அதுதான் தெரியவில்லை. நேற்றுச் சேகரன் கைதானதும் நான் அவர் வீட்டுக்குப் போயிருந்தேன். அப்பொழுது மஞ்சு அம்மாளை ஒன்றும் கேட்க முடியவில்லை. இன்று சாப்பாடு ஆனதும் நாம் அங்கே போகலாம்."

"முதலில் நான் போய் வந்துவிடுகிறேன்; பிறகு இருவருமாகப் போகலாம்."

சாப்பாடு ஆனதும் அவள் நல்ல வெயிலில் சைக்கிளிலே மஞ்சுவின் வீட்டுக்குப் போனாள்.

மஞ்சு அப்போது தனியே கட்டிலில் படுத்திருந்தாள். அவள் தன்னோடு மனம் விட்டுப் பேசுவாளோ மாட்டாளோ என்று ரஜனிக்குச் சந்தேகம். அண்ணனையும் கணவனையும் நான்கு மணி நேர வித்தியாசத்தில் கைது செய்ததனால் மஞ்சு கலங்கிப் போயிருந்தாள். அவளுக்குச் சரளாவிடம் முழு நம்பிக்கை இருந்தது. ஆனால் ராமநாதன் விஷயத்தில் கோவிந்தன் ஒன்றும் செய்ய முடியாது என்று சரளா அவளிடம் தெளிவாகச் சொல்லிவிட்டாள். சேகரன் விஷயத்திலும் அவர் சர்க்கார் வக்கீல் ஆதலால் எந்த உதவியும் செய்ய முடியாது என்று அந்தத் தோழி சொன்னாள். இதனால் மஞ்சுவுக்கு இடி விழுந்ததுபோல ஆகிவிட்டது.

காலையிலிருந்து அவளுடைய கண்ணீர் நிற்கவேயில்லை. அண்ணன், கணவன், குழந்தைகள்-இவ்வளவுதான் அவளுடைய உலகம். அண்ணன் தான்தோன்றி, பைத்தியக்காரன் என்று உலகம் சொன்னபோதிலும் அவள் அவனை ஒரு நாளும் வெறுத்ததில்லை. அவளுடைய கணவனுக்கு விவகாரம் தெரியாது; அவன் பிடிவாதக்காரன் என்று உலகம் சொல்லியது. ஆயினும் அவளுக்கு உலகத்தில் அவனைவிட அன்பானவனோ உயர்ந்தவனோ யாரும் இருக்கவில்லை. அவனுடைய அன்பைச் சில நாளாகக் கவர முயன்ற ரஜனியிடம் அவளுக்குக் கோபம் இருந்தது. குழந்தை இறந்துபோன துயரத்தில் இருந்த அவள், அண்ணன்மீதும் கணவன்மீதும் ஒரே சமயத்தில் இப்படிப் போலீசார் பாய்ந்ததைக் கண்டதும் கதி கலங்கிவிட்டாள். அதிலும் கணவனுடைய குற்றம் இன்னது என்பதும் அவனை விடுவிக்க இன்னது செய்ய வேண்டும் என்பதும் அவளுக்குத் தெரியவே இல்லை.

சாயந்தரம் ஐந்து மணிக்கு, கோவிந்தனும் பம்பு ஸேட்டும் அவளை விசாரிக்க வந்தார்கள். கோவிந்தன் இரண்டு வார்த்தை ஆறுதலாகப் பேசினார். பம்பு ஸேட் சேகரனுடைய அரசியல் கொள்கைகளைக் கண்டபடி திட்டினான். அதனால் அவள் மனம் வெறுத்துப்போய், அவர்களிடம் உதவி கேட்கவே விரும்பவில்லை. சரளா அன்று மாலை அவளைத் தன் வீட்டுக்கு வர அழைத்தபோதுகூட, "நீங்கள் சர்க்கார் அதிகாரிகள்.

என்னுல் உங்களுக்குத் தொந்தரவு ஏதுக்கு?" என்று பதில் சொல்லிவிட்டாள்.

மறுநாள் ரஜனி அவளைப் பார்க்க வந்தாள். சற்று முந்தி தான் வீட்டைச் சோதனை போட்டுவிட்டுப் போலீசார் போயிருந்தார்கள். அப்பொழுது சரளாவும் அங்கே இருந்த தனுல், மஞ்சு அதிகமாக ஏதும் பேசவில்லை. ஆனுல் இந்த ஆபத்தில் ரஜனிதான் தனக்கு உதவி செய்யக்கூடும் என்று அவளுக்குத் தெரிந்துவிட்டது.

"மஞ்சு அம்மாள்!" என்று பயந்துகொண்டே ரஜனி வந்து கூப்பிட்டதும், "வாருங்கள், உங்களைத்தான் எதிர்பார்க்கிறேன். நேற்றுமுதல் எனக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை" என்று மஞ்சு வரவேற்ருள்.

"மஞ்சு அம்மாள், உங்களிடம் மனம் விட்டுச் சொல் கிறேன். அவரை விடுவிக்கத்தான் நான் படாத பாடும் படு கிறேன். பம்பாயிலிருந்து பிரபாகரன் என்ற வக்கீல் இன்று வந்திருக்கிருர். சாயந்தரம் அவர் உங்களைப் பார்க்க வருவார். தினகரனுடைய தந்தி போலீசாருக்குக் கிடைத்ததனுல்தான் சேகரன் கைதாகியிருப்பதாக அவர் சொல்கிருர். அந்தத் தந்தி எப்படிப் போயிற்று? உங்களுக்குத் தெரியுமா?"

மஞ்சு ஒன்றும் பதிலே சொல்லவில்லை; அவள் கண்களி லிருந்து நீர் வெள்ளமாக ஓடியது. அவள் பேசுவதற்குச் சிறிது நேரம் ஆயிற்று.

"உங்களிடம் என்ன சொல்வது, ரஜனி! அன்று அவர் அகோலாவுக்குப் போனதும் ஒரு மணி நேரத்துக்கெல்லாம் சரளா இங்கே வந்தாள். நாங்கள் இருவரும் புலன் விசாரிக்க வேலைக்காரனை உங்கள் வீட்டுக்கு அனுப்பினேம். நீங்களும் அவர் பின்னுலேயே அகோலாவுக்குப் போனது தெரிந்ததும், நான்தான் என் கையால் டிராயரைத் திறந்து அதைச் சரளா விடம் கொடுத்தேன்."

"நீங்களாகக் கொடுத்தீர்களா, அல்லது சரளா கேட் டாளா?"

"நானுக ஏன் கொடுப்பேன், அம்மா? அவள் கேட்டதனுல் தான் கொடுத்தேன்."

"ஆனால் அந்தத் தந்தி எப்படிப் போலீசாரிடம் போயிற்று?"

"கோவிந்தன் கொடுத்திருப்பார்" என்று மஞ்சு அமைதியாகச் சொன்னாள்.

"கோவிந்தனா? அது எப்படி? இந்தக் கொடிய செயலில் சரளா ஈடுபட்டிருப்பாளா?"

"அப்படியல்ல, ரஜனியம்மா. அவள் சகஜமாக அந்தத் தந்தியை அவருக்குக் காண்பித்திருப்பாள். கொள்ளைச் செய்தியைப் படித்ததும் அவருக்குச் சந்தேகம் ஏற்பட்டு அதை அவர் போலீசுக்குக் கொடுத்திருப்பார். அவள் வேண்டுமென்று தீமை செய்கிறவள் அல்ல!"

தான் அந்தத் தந்தியைக் கொடுத்ததனால் தன் குடும்பமே நாசமானதை எண்ணியதும் மஞ்சுவுக்கு ஓயாத அழுகை வந்தது. "நான்தான் இவ்வளவுக்கும் காரணம்!" என்று சொன்னபோது அவள் உடல் முழுவதும் நடுங்கியது.

"இதில உங்கள் குற்றம் எதுவுமில்லை, மஞ்சு! உங்களிடம் எதையும் தெளிவாகச் சொல்லும்படியான சந்தர்ப்பமே சேகரனுக்குக் கிடைக்கவில்லை. அதனால் உங்கள் சந்தேகம் வளர்ந்தது" என்று தொடங்கி, நான்கு மாத நிகழ்ச்சிகளையும் ரஜனி அவளுக்குத் தெளிவாகக் கூறினாள். அவளிடம் எதையும் மறைத்து வைக்கவில்லை. கொள்ளை வழக்கில் சேகரன் மறைமுகமாகக் கலந்துகொண்டதையும் தெரிவித்தாள்.

மஞ்சு மிகவும் சோர்ந்துபோய், "இதிலிருந்து அவரைத் தப்ப வைப்பதற்கு வழியே இல்லையா?" என்று கேட்டாள்.

அதே சமயத்தில் சரளா அறைக்குள் நுழைந்தாள்.

அவளைப் பார்த்ததுமே மஞ்சு தன்னை மறந்து சினம் பொங்க, "எத்தனை நாளாக என்னை இப்படிக் கெடுக்க எண்ணியிருந்தாய், சரளா?" என்றாள்.

அவள் ஏன் இப்படிச் சொல்கிறாள் என்று விளங்காமல் சரளா அவளை வெறித்துப் பார்த்தாள்.

"அன்று என்னிடம் நீ தந்தியை வாங்கிக்கொண்டபோது கோவிந்தன் அதைப் போலீசுக்குக் கொடுத்து எங்கள் கழுத்தை அறுப்பாரென்று நான் கனவிலும் நினைக்கவில்லையே!" என்று மஞ்சு விக்கி விக்கி அழலானாள்.

சரளாவுக்கு இப்போதுதான் விஷயம் புரிந்தது. அவள் வருத்தத்தோடு தன் தோழியை அணைத்துக்கொண்டு, "மஞ்சு, மஞ்சு, இவ்வளவு இழிவான செயலை நான் செய்வேன் என்று நீ நினைக்கிறாயா? நான் அவரிடம் தந்தியைக் கொடுத்தது வாஸ்தவம். அவர் அதை இப்படிக் கெடுதலாகப் பயன்படுத்து வார் என்பது எனக்கு எப்படித் தெரியும்?" என்று சொல்லிக் கண்ணீர் வடித்தாள்.

இரண்டு தோழிகளின் துயரம் சற்று அடங்கியதும் ரஜனி அவர்களைச் சமாதானப்படுத்தினாள்.

மாலையில் அவள் மறுபடியும் பிரபாகரனோடு அங்கு வந்தாள். மஞ்சுவிடம் சற்று நேரம் பேசிவிட்டுப் பிரபாகரன் புறப்பட்டான். ரஜனி தன் வீட்டுக்குத் திரும்பினாள்.

அவள் வீட்டுக்கு வந்து சிறிது நேரத்துக்கெல்லாம் யாரோ வாசற் கதவைத் தட்டினார்கள். அவள் போய்க் கதவைத் திறந்ததுமே மதுவின் வாசனை கப்பென்று வீசியது. கோவிந்தனும் பம்பு ஸேட்டும் வாசற்படியில் நின்றிருந்தார்கள்.

வராந்தாவில் இருந்த விளக்கைப் போட்டு அவர்களை நாற்காலியில் உட்காரச் சொன்னாள் ரஜனி.

"நான் உங்களோடு கொஞ்சம் ரகசியமாகப் பேசவேண்டும். உள்ளே போனால் நல்லது என்று நினைக்கிறேன்" என்றார் கோவிந்தன்.

அவர்களை அவள் தன் படிக்கும் அறைக்கு அழைத்துச் சென்றாள்.

உள்ளே வந்து அமர்ந்ததும் கோவிந்தன் ஒரு சிகரெட்டைப் பற்றவைத்து ஊதிக்கொண்டே இனிமையான குரலில், "ரஜனியம்மா, நான் இன்று உங்களுக்கு நட்பு முறையில் ஓர் ஆலோசனை சொல்ல வந்திருக்கிறேன்" என்றார்.

"மிகவும் வந்தனம்."

"சேகரன் உங்களுடைய நண்பர். அவரை இந்த ஆபத்தில் நீங்கள் காக்க விரும்புவது இயல்பு. என்னால் முடிந்தால் நானே உதவி செய்திருப்பேன். ஆனால் இந்தக் கொள்ளை வழக்கு எவ்வளவு கடுமையானது என்பதைப் பத்திரிகைகளில் படித்திருப்பீர்கள். ஆகையால் இந்தத் தொந்தரவில் நீங்கள் மாட்டிக்

கொள்ள வேண்டாம் என்று அன்போடு வேண்டிக்கொள் கிறேன். இல்லாவிட்டால் அதன் முடிவு விபரீதமாகிவிடும்!''

''நீங்கள் கொஞ்சம் தெளிவாகப் பேசினால் நல்லது.''

''சேகரனுக்குப் பின்னாலேயே நீங்களும் அன்று அகோலா வுக்குப் போனீர்கள் அல்லவா? ஆதலால் போலீசாருக்கு உங்களிடமும் சந்தேகம் இருக்கிறது.''

''அது எனக்குத் தெரியும். ஆனால் அதைவிட நல்ல அத் தாட்சியை நீங்கள் எனக்கு எதிராகப் போலீசுக்குக் கொடுத் திருக்கிறீர்களே!''

''நான் உங்கள் நண்பன். நானா அப்படிச் செய்வேன்?''

''சேகரனுக்கும் நீங்கள் நண்பர்தான். ஆனால் தினகர னுடைய தந்தியைச் சரளாவிடம் வாங்கி நீங்கள்தானே போலீ சுக்குக் கொடுத்தீர்கள்?''

இந்தக் கேள்வியைக் கேட்டதும் பம்பு ஸேட்டுக்கு அபார மான கோபம் வந்துவிட்டது. ''ரஜனியம்மா, நீங்கள் இதை யாரிடம் பேசுகிறீர்கள் என்ற நினைவு இருக்கட்டும்! கோவிந்தன் நேற்று உங்களைப்பற்றி இரண்டு வார்த்தை சொல்லவில்லை என்றால் நீங்கள் இவ்வளவு நேரம் ஜெயிலில் இருந்திருப்பீர் கள்!'' என்றான்.

''அதற்காக உங்களுக்கு வந்தனம், மிஸ்டர் கோவிந்தன்!'' என்று சொல்லி அவள் கிண்டலாகச் சிரித்துவிட்டு, ''இன்னும் நீங்கள் என்னிடம் ஏதாவது சொல்ல வேண்டுமா?'' என்றாள்.

''ஒன்றுமில்லை!''

''அப்படியானால் நீங்கள் இப்பொழுது போகலாம். நான் கொஞ்சம் இளைப்பாற வேண்டும்.''

அவள் உடனே எழுந்து நின்றாள். அவர்கள் ஏதோ பேச நினைத்திருந்தும் அவள் எழுந்தமையால் தாங்களும் எழுந்து நின்றார்கள். அதற்குள் பம்பு ஸேட், ''நான் உங்களை ஒரு கேள்வி கேட்க வேண்டும்'' என்றான்.

''கேளுங்கள்!''

''அகோலாவில் நீங்கள் இருவரும் யாருடைய கல்யாணத் துக்குப் போயிருந்தீர்கள்?''

''அதில் உங்களுக்கு என்ன அக்கறை?''

"அக்கறை இருப்பதால்தான் கேட்கிறேன். நீங்கள் ஒரு பள்ளிக்கூடத்தின் தலைமை உபாத்தியாயினி. கோவிந்தனுடைய சிபாரிசினால் உங்களுக்கு வேலை கிடைத்திருக்கிறது. ஆதலால் உங்கள் ஒழுக்கத்தைப் பற்றி மக்களுக்கு நாங்கள் பதில் சொல்ல வேண்டியிருக்கும். அன்றிரவு கொள்ளை நடப்பதற்கு முன்பு நீங்கள ரகசியமாகச் சேகரனை மணந்து கொண்டதாக நாங்கள் கேள்விப்பட்டோம்."

பம்பு ஸேட் இதைச் சொன்னவுடனே ரஜனி பளீரென்று அவன் கன்னத்தில் ஓர் அறை கொடுத்தாள்.

அவன் திக்கு முக்காடிப் போய் நின்றபொழுது அவள் சிரித்துக்கொண்டே, "மிஸ்டர் கோவிந்தன், உங்கள் வீட்டுக்கு நான் முதல்முதல் விருநதுக்கு வந்த அன்றையிலிருந்தே பம்பு ஸேட்டின் ஹாஸ்யத்திற்குச சரியான மரியாதை செய்ய வேண்டுமென்று எண்ணியிருந்தேன். இன்று அந்தச் சந்தர்ப்பத்தை எனக்குக் கிடைக்கச் செய்ததற்கு உங்களுக்கு வந்தனம்."

அவள் அதைச் சொல்லிக்கொண்டிருக்கும் பொழுதே பிரபாகரன் அங்கு வந்தார். அவரைப் பார்த்த அவள் உற்சாகத்தோடு, "நீங்கள் சரியான சமயத்தில் வந்தீர்கள், பிரபாகர். இவர் இந்த ஊர் பப்ளிக் பிராசிகியூடர் மிஸ்டர் கோவிந்தன். இவர் பிரசித்த வியாபாரி பம்பு ஸேட். இவர்கள் இருவரும் சேகரனுக்கு மிகவும் நண்பர்கள்" என்றாள்.

ஆனால் அவர்கள் இருவரும பிரபாகரனை அறிந்துகொள்ள விரும்பாமல் விடை பெற்றுக்கொண்டு வெளியே போனார்கள்.

அவர்கள் போனதும் அவள் பிரபாகரனிடம் சற்று நேரம் முன்பு நிகழ்ந்ததையெல்லாம் கூறி, "அநேகமாக இவர்கள் தான் இந்த வழக்குக்குச் சாட்சியாக வருவார்கள்" என்றாள்.

பிரபாகரன் எவ்விதமாக இந்த வழக்கை நடத்த வேண்டும் என்பதைப்பற்றி அவளோடு பேசினார்.

தினகரன் மறைந்துவிட்டதனால் அகோலாவில் இந்த வழக்கு மிகவும் பரபரப்பை உண்டாக்கிவிட்டது.

கொள்ளை நடந்தபொழுது தினகரனுடைய பையிலிருந்து விழுந்த ஒரு காகிதம் லாபராமனுடைய வேலைக்காரனுக்குக்

கிடைத்தது. ஆனல் அதை முக்கியமில்லை என்று நினைத்து அதை அவன் ஸேட்டிடம் கொடுக்கவில்லை. மறுநாள் போலீசார் பங்களாவுக்கு வந்து வேலைக்காரனைச் சோதனை போட்ட போது அந்தக் கடிதத்தை அவன் காண்பித்தான். ஜாபிதாவில் இருந்த ஆறுபேர்களில் மூன்று பேரைப் போலீசார் பிடித்தனர். தினகரனுடைய பங்களாவையும் சோதனை இட்டார்கள். அங்கு அவர்களுக்கு ஒன்றுமே கிடைக்கவில்லை. ஓடிப் போனவர்களைச் சல்லடை போட்டுத் தேடினர்கள். சேகரனை நாகபுரியிலிருந்து அழைத்து வந்ததும் விசாரணை தொடங்கியது.

கோவிந்தன் கொடுத்த தந்தியின் ஆதாரத்தால் சேகரனைப் போலீசார் கைது செய்தபோதிலும், கொள்ளையில் அவன் சம்பந்தப்பட்டிருந்ததாக எவ்வித ஆதாரமும் கிடைக்கவில்லை. ஜாபிதாவில் அவனுடைய பெயர் இல்லை. ஸேட்டின் வேலைக்காரர்கள் எல்லாரும் ஆறுபேரையே தாங்கள் பார்த்ததாகச் சொன்னர்கள். 'ஐடெண்டிபிகேஷன் பெரேடி'ல் சேகரனை அவர்கள் யாரும் தெரிந்துகொள்ளவில்லை.

பம்பு ஸேட்டும் மணியமும் தங்கள் சாட்சியத்தில் சேகரனுடைய புரட்சி மனப்பான்மையைப் பற்றியும் வேலைநிறுத்த விஷயமாக அவனுக்கும் பத்திரிகைக்கும் ஏற்பட்ட சச்சரவுகளைப்பற்றியும் விரிவாகக் கூறினர்கள். பம்பு ஸேட் ரஜனியைப் பற்றி மட்டும் ஒரு வார்த்தைகூடக் குறிப்பிடவில்லை.

ஆனல் குறுக்கு விசாரணையில் பிரபாகரன் தினகரனுடைய தந்தியின்படி சேகரனுக்குப் பின்னல் ரஜனியும் அகோலாவுக்குச் சென்றதைப்பற்றியும் அன்று அவள் தினகரன் வீட்டிலேயே தங்கியதையும் ஸேட்டின் வாயிலிருந்தே வரவழைத்தார். கோவிந்தனும் ஸேட்டும் ரஜனியின் வீட்டுக்குச் சென்று அவளை இந்த வழக்கில் சம்பந்தப்படாதபடி பயமுறுத்தியதையும் அவன் வாயிலிருந்தே சொல்ல வைத்தார். சேகரனுக்கும் கோவிந்தனுக்கும் வேலைநிறுத்த விஷயமாகக் கொள்கையில் வேறுபாடு ஏற்பட்டு அவர் அவனைப் பயமுறுத்தியதையும் அவர் தமது மனைவியின் வாயிலாக அந்தத் தந்தியை மோசடியாகப் பெற்றுப் போலீசாரிடம் கொடுத்ததையும் பம்பு ஸேட்டின் வாயிலிருந்தே அவர் கக்க வைத்தார்.

அதற்குப் பிறகு சேகரன் தன் வாக்குமூலத்தில் தான் குற்றமற்றவன் என்றும், தினகரனுடைய தந்தி கிடைத்ததும் அகோலாவுக்குப் போயிருந்துங்கூட, கொள்ளைக்கும் தனக்கும் யாதொரு தொடர்பும் இல்லை என்றும் அந்த இடத்திற்கே தான் போகவில்லை என்றும் கூறினன்.

குறுக்கு விசாரணையில் ஒரே ஒரு கேள்விக்கு மட்டும் அவனல் சரியான பதில் சொல்ல முடியவில்லை. தந்தியில் கல்யாணம் என்ற சொல் ஒரு சங்கேதத்தைக் குறிப்பதால் அது என்ன என்று சர்க்கார் வக்கீல் அவனைக் கிண்டினர். அதற்கு அவன், "தினகரன் கல்யாணமாகாதவன். ஆதலால் அது அவன் கல்யாணத்தின் தந்தியாக இருக்குமென்று எண்ணி நான் அகோலாவுக்குப் போனேன்" என்றன்.

"அகோலாவுக்குப் போனதும் நீங்கள் தினகரனிடம் இந்தத் தந்திபற்றிக் குறிப்பிடவில்லையா? அவர் உங்களுக்கு என்ன பதில் சொன்னர்?" என்று சர்க்கார் வக்கீல் கேட்டார்.

"அவர் சிரித்துக்கொண்டே, 'உங்கள் இருவரையும் எத்தனையோ தடவை இங்கே கூப்பிட்டேன். நீங்கள் வரவில்லை. அதனல் வேடிக்கையாகத் தந்தி அடித்தேன்' என்றர். அவர் பல தடவை எங்களைக் கூப்பிட்டிருந்ததனல் அவர் சொல்வது சரிதானே என்று எனக்குப் பட்டது."

கொள்ளை நடந்த இடத்திற்குச் சேகரன் போகவில்லை என்பதற்கு வேறு அத்தாட்சிகள் பல இருந்தும், ரஜனியின் சாட்சியம் மிகவும் முக்கியமாக இருந்தது. அன்றிரவு தினகரன் காரில் வெளியே போனதும் சேகரனுடன் தனிமையிலே அன்றிரவு முழுவதும் தான் அந்தப் பங்களாவில் இருந்ததாக அவள் அமைதியோடு சொன்னபோது, கோர்ட்டில் பெரிய பரபரப்பு ஏற்பட்டது.

சர்க்கார் வக்கீல் தமது குறுக்கு விசாரணையில் திடுக்கிடும்படியான பல ரகசியங்களை வெளியே கொண்டு வரப் போகிறர் என்றுதான் ஜனங்கள் நினைத்தார்கள்.

"சேகரனேடு இரவு முழுவதும் தனிமையில் இருப்பது உங்களுக்கு அபாயகரமாகத் தோன்றவில்லையா?" என்று குறுக்கு விசாரணையில் சர்க்கார் வக்கீல் அவளைக் கேட்டார்.

"இல்லை."

"ஏன், அவரிடம் உங்களுக்கு அன்பு இருந்ததா?"

"இல்லை; அவர் மிகவும் நல்ல ஒழுக்கம் உடையவர் என்ற நம்பிக்கை எனக்கு இருந்ததனால்தான்."

"அவரிடம் உங்களுக்கு அன்பு உண்டா இல்லையா?"

"அன்பு என்ற சொல்லை நீங்கள் எந்த அர்த்தத்தில் பயன் படுத்துகிறீர்கள் என்று தெரிந்தால், பதில் சொல்வேன்."

"இளம் ஆண் பெண்களுடைய நட்புக்குத்தான் அன்பு என்று பெயர்."

"அந்த அன்பில் காமமும் இருப்பதாக நீங்கள் கருது கிறீர்களா?"

"அது இருப்பதும் இல்லாததும் அவரவர்களுடைய மனப் பான்மையைப் பொறுத்தது."

"அப்படியானால் நான் சொல்கிறேன்; எனக்கும் சேகர னுக்கும் அந்த மனப்பான்மை இல்லை. நாங்கள் இருவரும் எழுத்தாளர்கள்; ஒரே கம்பெனியில் வேலை செய்பவர்கள்; அதனால் நட்பு உண்டு."

"இந்த நட்பைச் சிலர் காதல் என்று கருதியதனால் நீங்கள் அகோலாவிற்குச் சென்று ரகசியமாக மணப்பதாக வதந்தி எழுந்தது அல்லவா?"

"அந்தச் செய்தி என் காதிலும் விழுந்தது; ஆனால் அதை நம்புவதாக இருந்தால், சேகரன்மீதுள்ள இந்த வழக்கைச் சர்க் கார் ரத்து செய்ய வேண்டியிருக்கும்."

"சேகரனுக்கும் உங்களுக்கும் நட்பு இருந்ததனால்தான், அவரோடு இரவில் நீங்கள் தனிமையில் இருக்கப் பயப்பட வில்லை என்பதுதானே நீங்கள் சொல்லும் காரணம்?"

"ஆமாம்; அதுவும் தவிர அவர் நல்லொழுக்கமுள்ளவர் என்ற பூர்ண நம்பிக்கை எனக்கு உண்டு. இப்படிப் பூர்ண நம்பிக்கையுள்ள எந்த ஆணுடனும் தனிமையில் இருக்க என் மனம் கூசாது."

அவளுடைய அச்சமில்லாத பதில் ஜட்ஜைத் திடுக்கிட வைத்தது. சேகரன் குற்றமற்றவன் என்று தீர்மானமாகி அவனை விடுவித்தார்கள்.

அன்று மாலை பிரபாகரன் சேகரனோடு வீட்டுக்கு வந்த போது, சேகரனுடைய வரவை எதிர்பார்த்துக்கொண் டிருந்த மஞ்சுவை நோக்கி ரஜனி சிரித்துக்கொண்டே, "மஞ்சு அம்மா, இனி நீங்கள் கணவரைச் சமாளித்துக் கொள்ளுங்கள். இந்தத் தடவை அவரை இவர் விடுவித்துவிட்டார். ஆனால் இனி அவர் குடும்பத்திலே நிலைத்திருப்பதும், நிலைக்காமலிருப் பதும் உங்களுடைய பொறுப்பு" என்றாள்.

மஞ்சு ஒன்றும் பதில் சொல்லவில்லை. அவள் ஆனந்தக் கண்ணீர் வடித்தாள்.

ஆனால் பிரபாகரன் சிரித்துக்கொண்டே, "நீங்கள் சொல் வது தவறு, ரஜனி அம்மா. கணவன் குடும்பத்தில் நிலைப்பதும், நிலைக்காமலிருப்பதும் மனைவியின் பொறுப்பிலே மட்டுமில்லை. கணவனை அடைத்து வைத்துக் காவல் காப்பதற்கு, குடித்தனம் என்பது கூண்டு அல்ல. துணிச்சலான கணவன் இன்ன நிமிஷத்திலே தன் குடும்பத்தை விட்டுப்போவான், அல்லது குடித்தனத்தைக் கலைத்துவிடுவான் என்று நிலைசொல்ல முடி யாது. இன்று நமது நாட்டின் நிலை அப்படி இருக்கிறது" என்றார்.

"நீங்கள் சொல்வது உண்மை, பிரபாகர். இனி நமது நாட் டில் புதிய குடித்தனத்திலே துணிச்சலும் ஆபத்தும் இருக்கும் என்பதை அறிந்துதான் ஒவ்வொரு பெண்ணும் நடந்துகொள்ள வேண்டும்!" என்று சேகரன் ஆவேசத்தோடு பேசினான்.

மஞ்சு அவனை ஆச்சரியத்தோடு பார்த்தாள். ஏதோ ஒரு விந்தையான முடிவினால் ஏற்பட்ட ஒளி அவனுடைய ஆழ்ந்த கண்களிலே பளபளத்தது.

பிரபாகரன் அன்றிரவே அகோலாவிலிருந்து பம்பாய்க்குத் திரும்பினார். போகும்போது அவர் சேகரனைத் தனியே கூப் பிட்டுத் தினகரனுடைய கடிதத்தைக் காண்பித்தார்.

சேகரன் அதை எழுத்து எழுத்தாகப் பார்த்துவிட்டு, "தினகரன் இப்போது எங்கே இருக்கிறார்?" என்றான்.

"எனக்கு நிச்சயமாகத் தெரியாது. எப்படியும் ராமநாத னுடைய வழக்குக்கு நான் இங்கே வருவேன். அதற்கு முன்பு அவசியம் நேர்ந்தால் எனக்குத் தந்தி அடியுங்கள்."

அன்றிரவு மெயிலில் அவர் போனதும் மறுநாள் காலையில் சேகரனும் மஞ்சுவும் ரஜனியும் நந்துவோடு நாகபுரிக்கு வந்து சேர்ந்தார்கள்.

சேகரன் இன்ஷ்யூரன்ஸ் வேலையைப் பழையபடி தொடங்கினான். மணியத்திடம் அவன் போகவில்லை.

ஆனால் மணியமே ஒரு நாள் அவன் வீட்டுக்கு வந்து, "என்னைத் தவறாக நினைத்துக் கொள்ள வேண்டாம், சேகர்! கோவிந்தன் வற்புறுத்தியதனால்தான் நான் சாட்சியம் சொல்ல நேர்ந்தது. அவருடைய வழக்கமான வியாபாரந்தான் இது!" என்றார்.

"இதில் உங்களைத் தவறாக நினைக்க என்ன இருக்கிறது? உண்மையாக நடந்ததைத்தானே நீங்கள் சாட்சியம் சொன்னீர்கள்!—சரி, நாளை முதல் நான் வேலைக்கு வரலாமா?" என்று கிண்டலாகக் கேட்டான்.

"இந்த வேலைநிறுத்தம் ஒரு வழியாக முடிந்துவிடட்டுமே! அதற்கு அப்புறம் நாம் சாவகாசமாக யோசித்துச் செய்யலாமே!"

சேகரன் காபி குடிக்க வேண்டியுங்கூட நிற்காமல் அவர் போய்விட்டார்.

கோவிந்தனும் பம்பு ஸேட்டும் மட்டும் அவனைப் பார்க்க வரவே இல்லை.

மஞ்சுவுக்கு இப்போது பல விஷயங்கள் புலனாயின. அவள் ஒரு புது உலகத்தையே கண்டாள். அந்தத் தந்தியைச் சரளாவிடம் கொடுத்ததற்காக அவள் சேகரனிடம் மன்னிப்பு வேண்டினாள்.

"நீ மன்னிப்புக் கேட்கவேண்டுமானால் ரஜனியிடம் கேள், மஞ்சு! என்னிடம் கேட்பது சரியல்ல."

"உங்களுக்கு அவளிடம் இருக்கும் அன்பை நான் தெரிந்து கொண்டேன். இந்த அன்புக்குக் குறுக்கே நான் வர விரும்பவில்லை. என்னைவிட அவளால் உங்களுக்கு அதிகப் பயன் உண்டு என்பது எனக்குத் தெரியும்."

"நீ சொல்வது சரியல்ல, மஞ்சு. அவளிடம் எனக்கு எவ்வளவுதான் அன்பு இருந்தாலும், அவள் இல்லாமல் நான்

வாழ முடியும். நீ இல்லாமல் என்னால் ஒருபொழுது இருக்க முடியாது. நீ என் உயிருக்கு உயிர்" என்று கூறி அவன் அவளை அன்போடு அணைத்துக்கொண்டான்.

கண்ணீர் நிரம்பிய தன் கண்களை அவள் மெதுவாக மூடிக் கொண்டாள். அவற்றின் மீது அவன் தன் இதழ்களைப் பதித்தான்.

"இனி நான் உங்களுக்கு வேண்டாதவள் ஆகிவிட் டேனா?" என்று அவள் வருத்தத்தோடு கேட்டாள்.

"மஞ்சு, நீ வேண்டாதவள் ஆகிவிடும் அன்றைக்கு, உலகி லுள்ள இன்பங்கள் எல்லாம் எனக்கு வேண்டாதவைகளாகி விடும். அன்று நான் இந்த உலகிலேயே முக்தியடைந்ததாகக் கருதுவேன். அந்த முக்தி எனக்கு இப்போது தேவைதான், மஞ்சு. ஆனால் அதைப் பெறும் துணிச்சல் எனக்கு எப்போது வருமோ, தெரியாது!"

அவனுடைய அன்பிலுங்கூட ஒரு பற்றற்ற தன்மை, ஒரு வைராக்கியம் இருப்பதை மஞ்சு நாளடைவில் உணர்ந்துதான் அதை ஒரு நாள் ரஜனியிடமும் சொன்னாள்.

"சிறையிலிருந்து வந்த அன்றே அவருடைய மனப் பான்மை மாறிவிட்டதை நான் கவனித்தேன். கடுமையான ஜுரத்திலிருந்து தப்பிப் பிழைத்த குழந்தையைக் காப்பது போல அவரை மிகவும் ஜாக்கிரதையாகக் கவனித்துக்கொள்ள வேண்டும்" என்றாள் ரஜனி.

அன்றிரவே சேகரன் திடீரென்று ரஜனியின் வீட்டுக்கு வந்தான். "நான் உங்களிடம் விடை பெற்றுக்கொள்ள வந் திருக்கிறேன், ரஜனி" என்றான்.

"இதென்ன? எங்கே திடீரென்று புறப்படுகிறீர்கள்?"

"எனக்கே தெரியாது."

"என்ன இப்படிப் பைத்தியம் போலப் பேசுகிறீர்கள்?"

"நான் பைத்தியமாகப் பேசவில்லை, ரஜனி! சிறையில் நான் எல்லாவற்றையும் சிந்தித்துப் பார்த்தேன். தினகர னுக்கு நான் வாக்குறுதி கொடுத்தபடி என்னால் முடிந்ததைச் செய்யவேண்டும் என்று தீர்மானித்துவிட்டேன். அதற்காக எந்தத் தியாகமும் செய்யப் பின்வாங்க மாட்டேன்."

"அது சரி, தினகரன் இப்போது எங்கு இருக்கிறார் என்று உங்களுக்குத் தெரியுமா?"

"தெரிவானேன்? நான் இந்தத் துறையில் இறங்கிய செய்தி தெரிந்ததுமே அவர் என்னைத் தேடி வருவார்."

"நீங்கள் இருட்டிலே குதிக்கிறீர்கள் என்பது ஞாபகம் இருக்கட்டும்!"

"இருக்கலாம், ரஜனி! ஆனால் இந்த இருட்டிலிருந்து நாங்கள் ஒளிக்கு வருவோம்; இந்த நாட்டின் புதிய ஒளியைக் காண்போம். இனி, அரசியலை விட்டுப் பழைய வாழ்க்கையில் என்னால் ஈடுபட முடியாது."

"மஞ்சு அம்மாளை நீங்கள் விட்டுவிட்டீர்களா என்ன?"

"இல்லை; அந்த ஒரே மோகத்தில்தான் என் மனம் இன்னமும் தவிக்கிறது. உன்னதமான கடமை என்னை அழைக்கிறது. அந்தக் கடமைக்காக இந்த மோகத்தை விட்டுவிட நான் முயல்கிறேன்."

ரஜனி ஒன்றும் பேசவில்லை. அவளையுமறியாமல் அவள் கண்ணீர் பெருகியது.

"உங்களை நான் தடுக்க விரும்பவில்லை, சேகர்! நான் தடுக்க விரும்பினாலும் அது வெற்றி பெறாது என்பது எனக்குத் தெரியும். மறுபடி உங்களை எப்போது காண முடியும்?"

"நாம் மீண்டும் சந்திக்கும்பொழுது இந்த நாடு முன்னேற்றப் பாதையில் இருக்கும்."

அவனுடைய பேச்சு அவள் காதில் ஏறவில்லை. கண்ணீர் அவள் கண்களை மறைத்தது. துயரத்தில் அவள் மனம் ஆழ்ந்திருந்தது. இருளில் பீதியோடு கூக்குரலிடுகிறவள் போல அவள், "சேகர், சேகர்!" என்று கூவினாள்.

ஆனால் அவளுடைய அந்த உருக்கமான கூக்குரலைக் கேட்க அங்கே சேகரன் இருந்தால்தானே!

முற்றும்

